உ

# தரும தீபிகை

மூலமும்—உரையும்.

( முதல் பாகம் )

---

ஆசிரியர்:
கவிராஜ பண்டிதர்
செகவீர பாண்டியனர்

மதுரை
மதராஸ், சி. வரதராஜுலு நாயுடு பிரஸில்
பதிப்பிக்கப்பெற்றன.

இரண்டாம் பதிப்பு

கர-ஆ சித்திரை-மீ
1951

# முகவுரை.

தருமதீபிகை என்னும் இந்நூல் அருமையான பல உறுதி நலங்களை யுடையது. இந் நில வுலகில் நிலவுகின்ற பலகோடி உயிரினங்களுள் மனிதன் மிகவும் தலைசிறந்து நிற்கின்றான். அந்நிலை உணர்வொளியால் நன்கு உறுதி பெற்றுள்ளது. தன் கண் எதிரே காணாதவற்றையும் கருதி யுணருந் திறம் மனித வுருவில் மருவி யிருக்கின்றது. சென்றதையும் நிகழ்வதையும் எதிர்வதையும் எண்ணி ஆராய்ந்து நுண்ணிய கருமங்கள் செய்து புண்ணியங்கள் புரிந்து புனித நிலையை அடைய மனிதன் இனிது முயல்கின்றான். முயன்றும் கருதியது கைகூடாமல் மறுகி யுழல்கின்றான். இன்பமே விரும்பும் இயல்புடைய மக்கள் துன்பமடைந்து துடித்தயர்கின்றனர். அதற்குக் காரணம் வினை என விளம்பி வெருண்டு நிற்கின்றார். வினை என்பது மனம் மொழி மெய் என்னும் மூன்று நிலைகளில் தோன்றி விளைகின்றது. இம் முக்கரணங்களும் நன்மையில் படிந்துவரின் நல்வினையாம்; தீமையில் தோய்ந்துவரின் தீவினையாம்; நல்வினை இன்பம் பயக்கும்; தீவினை துன்பம் விளைக்கும். ஆகவே இன்பம் வேண்டுவோர் துன்ப மூலங்களான தீய வினைகளை யாண்டும் தீண்டலாகாது. தூய செயல்களையே தொடர்ந்து பழகி வர வேண்டும். ஒருவனுடைய கருமம் புனிதமானால் அவன் தருமவானாய்த் தழைத்து இருமையின்பங்களையும் எளிதே எய்துகின்றான். இத்தகைய விதிவிலக்குகளை விளக்கி உயிர்களை உத்தம நிலையில் உய்த்தலால் அற நூல்கள் உயிர்க்கு உறுதியான உயர் நூல்களாக மதிக்கப்பட்டுள்ளன.

பெறுதற்கு அரிய சிறந்த மக்கட் பிறவியை அடைந்தும் இப்பேற்றின் அருமையை மறந்து வெம்மை நெறிகளில் உழந்து புன்மை புரிந்து தவிக்கும் மனுக்குலத்திற்கு இனித்த முறையில் செய்யும் திறங்களை விளக்கி உய்யும் வகைகளை யுணர்த்திக் கால நிலைகளுக்கு ஏற்ப நூல்கள் பல தோன்றி வருகின்றன.

அற நூல்களும் நீதி நூல்களும் பண்டு தொட்டே நமது தமிழ் மொழியில் மிகவும் பெருகி வந்துள்ளன. ஆயினும், இந்

# முகவுரை

நூல் இனியவளஞ் சுரந்து புதிய மணங் கமழ்ந்து அரிய நலங்கள் பல மலிந்து புத்தொளி மிகுந்து தத்துவ நோக்குடன் தலை சிறந்துள்ளது. இவ் வுண்மையை எவரும் இதனுள் உய்த்துணர்ந்து கொள்ளலாம். உணர்வின் அளவு உண்மை தெளிவாகி வருகிறது.

இந்த நூல் விளைந்து வந்த நிலையை எண்ணுந்தோறும் என் உள்ளம் இன்பமீதூர்கின்றது. திருக்குறட் குமரேச வெண்பா என்னும் அரிய பெரிய நூலை நான் எழுதி முடித்தபின் என் கருத்துள் தோன்றிய எண்ணங்களை ஒரு புண்ணிய நூலாகப் புனைந்து வந்தேன். மேற்குறித்த பெரு நூலை வெளியிடுங்கால் இதிலிருந்து சில பாடல்கள் அதனிடையே வெளி வர நேர்ந்தன. அவற்றைக் கண்ட அறிஞர் பலர் ஆர்வமுடன் உவந்து பாராட்டி நூல் முழுவதும் வேண்டும் என விழைந்து எழுதினர். ஏறக்குறையப் பத்தாண்டுகளாக இடையிடையே அந்த எழுத்துக்கள் அழுத்தமாய் வந்து கொண்டிருக்கின்றன. அந்த அன்பர்களுடைய உரிமையான வேண்டுகோள்களே இது பொழுது இந் நூல் உரையுடன் வெளி வருதற்குத் தூண்டு கோல்களாயின.

அற நலங்களை யுணர்த்தி அறிவொளி பரப்பி அறியாமையாகிய அக இருளை நீக்கி யாண்டும் உயர்வருளும் இயல்பினது ஆதலால் இது தரும தீபிகை என வந்தது. மனிதனிலை உடல்நிலை மனநலம் இனநலம் சீர்மை சீலம் முதலிய நூறு அதிகாரங்களை யுடையது. அதிகாரம் தோறும் பத்துப் பாக்கள் அமைந்தது.

இந்நூல் முழுவதும் நேரிசை வெண்பாவால் நிறைந்துள்ளது. கவிகளெல்லாம் நெளிவும் தெளிவும் உடையனவாயினும் கருத்துக்களின் அருமை பெருமைகளை அழகுற உணர்த்தி உள்ளுறை நயங்களைத் தெள்ளிதின் விளக்கிக் கலைநலங்கள் கனிந்துள்ளமையால் இவ் வுரை எல்லார்க்கும் இதமாய் இனிமை பயந்து வருமென்று நம்புகின்றேன்.

இந் நூலும் உரையும் ஞாலம் இன்புற நலம் பல தந்து என்றும் நின்று நிலவும்படி எம்பெருமான் திருவடி மலர்களைச் சிந்தித்து நிற்கின்றேன்.

திருவள்ளுவர் நிலையம்
மதுரை.

இங்ஙனம்,
செகவீரபாண்டியன்.

# இதில் அடங்கி யுள்ளவை.

## சிறப்புப்பாயிரம்.

புண்ணிய நூல் இதுவென்று புலவரெலாம்
புகழ்ந்தேத்தப் போத மேய
எண்ணியநல் வேதமென யாவருமே
போற்றிவர இனிமை ஓங்கி
விண்ணியலும் மண்ணியலும் விழியெதிரே
தெளிவாக விளங்கி நிற்கக்
கண்ணிய நூல் அருளினன் செகவீர
பாண்டியனும் கவிஞர் வேந்தே.

# தருமதீபிகை

## கடவுள் வாழ்த்து.

அன்பர் உளமேவி ஆருயிர்செய் நல்வினையோர்ந்
தின்பம் உதவி யிடர்களைந்து—தன்பதம்பின்
காணவருள் யானையைமுன் காட்டிவந்த பெம்மானைப்
பேணவரும் இன்பம் பெரிது. (1)

இதன் பொருள்

அன்பர்களுடைய உள்ளங்களில் அமர்ந்து, உயிர்கள் செய்கின்ற நல்வினைகளை அறிந்து, அவற்றிற்கு இயைய இன்பங்களை உதவி, இடர்களை நீக்கி, முடிவில் பரமபதமும் அருளுகின்ற யானைமுகனை முன்னவனாக்கி முதன்மை கொண்டுள்ள முருகப் பெருமானைப் பேணுவார் பேரின்பம் காணுவார் என்பதாம்.

(மேவி ஓர்ந்து உதவி களைந்து அருள் என்னும் ஐந்து வினைகளையும் யானைக்கும் பெம்மானுக்கும் தனித்தனியே கூட்டி நோக்குக. தன்பால் அன்பால் உருகினவர்க்கு அருள் புரிந்து இன்பம் உதவியும் அல்லாதார்க்கு அவரவர் வினையளவறிந்து பயன் நல்கியும் வரும் பரமர் என்க.

பெம்மான் என்பது பெருமான் என்றதன் செல்லப் பேர். இறைமையாளராய்த் தலைமை பெற்றுள்ள பெருமையுடையார் எவர்க்கும் முருகன் உரிமைச் செல்வமா யிருக்கும் அருமை கருதி வந்தது. பெரு மகிமைகளையுடையான் பெருமான் என நின்றான்.

பேண இன்பம் பெரிது வரும் என்றது பேண எண்ணிய வுடனேயே பேரின்பம் காணியாய்க் கண்முன் கைவரும் என்றபடி. இன்பத்தை இவர் விழையாமலே அது தானாகவே இவரை விழைந்து வரும் என்க.

இளையபெருமானை ஏத்த மூத்த பிள்ளையார் முன்வந்தருளினார்.

இன்ப மூர்த்தியாகிய முருகக் கடவுளை அன்பு கூர்ந்து வழிபடுகின்றவர் இம்மை மறுமை என்னும் இருமையிலும்

விழுமியரா யுயர்ந்து இன்பமீதூர்ந்திருப்பர் என்பது கருத்து. உண்மை தெரிந்து உரிமையுடன் உய்க என்பது குறிப்பு.

### வணக்கம்

வானும் கடலும் மலையும் நிலமுதலா
ஊனும் உயிரும் உளவெல்லாம்—பானுமதி
கண்ணாக நின்ற கருணைப் பரமனென
எண்ணாக இன்பம் எழும். (2)

இ—ள்

சூரியனையும் சந்திரனையும் கண்களாகக் கொண்டுள்ள பரம்பொருள் வான் ஆதி எல்லாப் பொருள்களுமாய் எங்கும் பரவியுள்ளது; அந்த உண்மையை உணர்ந்து வழிபடின் உலவா இன்பம் உடையனவாய் உயிர்கள் உயர்ந்து விளங்கும் என்க.

உண்மையாக ஓர்ந்து உணர்ந்து ஒழுக வுரிய விழுமிய நிலையை விழி தெரிய இது விளக்கியருளியது.

பானு = சூரியன். மதி = சந்திரன்.

இந்த இரண்டு ஒளிகளும் பரமனுக்கு இரு விழிகள் என உருவகம் செய்தது அகண்ட பரிபூரணனாய் அகிலமும் நிலவி நிற்கும் அவனது அற்புத நிலைமையை உய்த்து உணர.

ஆருயிர்கள் உய்யும்படி யாண்டும் பேரருள் செய்யும் பெருமான் ஆதலால் கருணைப் பரமன் என நின்றான்.

பரமன் விண்ணாதி பூதமாய் விளங்கியுள்ளான் என்னும் மெய்யுணர்வு தோன்றியவுடனே உயிரில் ஆனந்த ஆற்று ஓங்கி உயரும் என்பது, "எண் ஆக இன்பம் எழும்" என்றதனால் அறிய வந்தது. எண் என்றது இங்கே தத்துவக் காட்சியை.

தோன்றிய தோற்றங்கள் யாவினும் தோன்றாத் துணையான ஒரு தனிமுதல் இனிதமைந்துள்ளது; அதன் மகிமை அளவிடலரியது; அதனை உறுதியாக நம்பி எவ்வுயிர்க்கும் இனியனாய் ஒருவன் உரிமையுடன் ஒழுகிவரின் அவ்வொழுக்கம் கடவுளின் புனித வழிபாடாய்ப் புண்ணியம் பெருக்கிக் கண்ணியம் விளைத்து எண்ணரிய இன்ப நலன்களை இனிது பயந்து இறுதியில் அரிய உயர் கதியில் அவனைத் தனியே உய்த்தருளும் என்க.

இறைவன் எங்கும் நிறைந்து எல்லாப் பொருள்களிலும் தங்கியிருத்தலால் யாண்டும் யாதும் வெய்யன புரியாது தெய்வ சிந்தனை செய்து மனிதன் உய்ய வேண்டும் என்பது கருத்து.

### நூல் வந்த நிலை

*பூந்திரைசூழ் ஞாலம் புனிதமுறப் போதநலம்*
*ஏந்திசைகொண் டெங்கும் இனிதேற—மாந்தர்*
*மதிநலங்கண் டுய்ய வருமொருநூல் செந்தில்*
*அதிபதியால் கண்டேன் அகம். (3)*

இ—ள்

உலகம் புனிதம் அடையவும் ஞான நலம் மேன்மையுடன் எங்கும் பெருகி வரவும், உயிர்கள் உணர்வொளி பெற்று உய்தி யுறவும் செந்திற் பெருமான் திருவருளால் என் உள்ளே ஒரு நூலைக் கண்டு அதனை வெளியே கொண்டு வந்தேன் என்பதாம்.

புனிதம் உற=பாவ அழுக்கு நீங்கிப் பரிசுத்தம் அடைய. உய்யவரும் நூல் என்றதனால் இதன் உறுதி நலன் உணரலாகும்.

புதுமையும் அருமையும் தெரிய ஒரு வந்தது. செந்தில் அதிபதி என்றது திருச்செந்திலம்பதியில் எழுந்தருளியிருக்கும் முருகக்கடவுளை. உள்ளம் கவர்ந்து உயிருருக்கி என்னைக் கொத் தடிமை கொண்டுள்ள குலதெய்வம் ஆதலால் புத்தமிர்தனைய இந்த உத்தம நூலை என்னிடம் இனிதா உய்த்தருளியதென்க. ஈரிய அடிமையிடம் அரிய படிமையை அருளியுள்ளது.

திருவருளால் வந்துள்ளமையால் உலகமெல்லாம் நலமுற இந்நூல் என்றும் நின்று நிலவி இன்பம் அருளிவரும் என்பதாம்.

### நூலின் பெயர்

*உள்ளத் திருள்கடிந் தூனமிலா ஞானமெலாம்*
*அள்ளி யருளி அறம்விளக்கி—ஒள்ளியபே*
*ரின்பம் தரலால் இதுதரும தீபிகையென்*
*றின்பமுற வந்த திசைந்து. (4)*

இ—ள்

அஞ்ஞானமாகிய கொடிய இருளை நீக்கி, மெய்ஞ்ஞான ஒளியை இனிது பரப்பி, அறநலங்களைத் துலக்கி, அரிய பேரின்

பப் பேறுகளை ஆருயிர்களுக்கு நேரே அருளுதலால், இந் நூல் தரும தீபிகை எனப் பேர் பெற்றுச் சீருடன் வந்தது என்க.

இந் நூலுக்கு இட்டுள்ள பெயருக்குக் காரணம் காட்டிய படியிது. உண்மைப்பொருளை உணர ஒட்டாமல் மறைத்து உயிரைக் குருடுபடுத்தியிருத்தலால்அஞ்ஞானம் இருள் என வந்தது. இருண்ட மயக்கத்தில் உயிரினங்கள் புரண்டு உழலுகின்றன. ஊனம் இலா ஞானம்=ஐய விபரீதங்களில்லாத மெய் யுணர்வு. இவ் வுணர்வொளி ஓங்கி எழின் பிறவித்துன்பம் முதலிய ஊனங்கள் யாவும் ஒருங்கே ஒழிந்து போம் என்க.

பிறத்தலும் இருத்தலும் இறத்தலும் ஆகியசெய ல்கள் உலக இயல்புகளாய் ஓயாது உலாவி வருகின்றன. துன்பத் துடிப்புகளால் எவ்வழியும் சீவர்கள் தோய்ந்து மாய்ந்து சுழலுகின்றன. மாயச் சுழல்கள் மாயாது நிகழுகின்றன.

பிறந்து இருந்து மறைந்து போவது மாயா மருமங்களாய் மருவி நிற்றலால் அந் நிலைகள் அதிசய விசித்திரங்களாய்த் தோன்றுகின்றன.

பிறந்தவர் எவரும் இன்பம் பெறவே விரும்புகின்றனர். துன்பம் நேர்ந்து விடலாகாதே! என்று யாண்டும் யாவரும் அஞ்சி வருதலால் துன்பங்களோடு அவர் தொடர்ந்து தோய்ந்து வந்துள்ள நிலைமையை உணர்ந்து கொள்ளச் செய்கிறது.

தொலையாத துன்பங்கள் யாவும் தொலைந்து நிலையான பேரின்ப நிலையை அடைவதே உயர்ந்த மனிதப் பிறப்பின் சிறந்த பயனாய் அமைந்துள்ளது. பொறி புலன்களை அடக்கி நெறியே ஒழுகி உள்ளம் புனிதமாய பொழுதுதான் தெளிவான ஞானம் வெளியாகின்றது. அந்த ஞான ஒளியில் மனிதன் உண்மைகளை உணர்கிறான்; உணரவே உடையவனை நாடி உரிமையோடு உய்தி பெறுகிறான். அவ்வாறு பெற்ற ஒரு பெரியவர் ஈசனை நோக்கி எதிரே பேசியுள்ள நிலையை அயலே வருகிற பாசுரத்தில் நாம் ஆசையோடு காண வருகிறோம்.

"சோதிச் சுடரொளி ஆதித் தனிப்பொருள்
ஏக நாயக! யோக நாயக!
யான்ஒன்று உணர்த்துவது உளதே யான்முன்

நனந்தலை யுலகத்து அனந்த யோனியில்
பிறந்துழிப் பிறவாது கறங்கெனச் சுழன்றுழித்
தோற்றும் பொழுதின் ஈற்றுத் துன்பத்து
ஆயுறு துயரமும் யானுறு துயரமும்
இறக்கும் பொழுதின் அறப்பெருந் துன்பமும்
நீயலது அறிகுநர் யாரே? அதனால்
யான்இனிப் பிறத்தல் ஆற்றேன் அஃதான்று
உற்பவம் துடைத்தல் நிற்பிடித் தல்லது
பிறிதொரு நெறியின் இல்லை; அந்நெறிக்கு
வேண்டலும் வெறுத்தலும் ஆண்டொன்றிற் படரா
உள்ளம்ஒன் றுடைமை வேண்டும்; அஃதன்றி
ஐம்புலன் ஏவல் ஆணைவழி நின்று
தானலது ஒன்றைத் தான்என நினையும்
இதுஎனது உள்ளம் ஆதலின் இதுகொடு
நின்னை நினைப்பது எங்ஙனம்? முன்னம்
கற்புணை யாகக் கடல்நீர் நீந்தினர்
எற்பிறர் உளரோ? இறைவ! கற்பம்
கடந்தல்யான் பெறவும் வேண்டும், கடத்தற்கு
நினைந்தல்யான் பெறவும் வேண்டும், நினைத்தற்கு
நெஞ்சுநெறி நிற்கவும் வேண்டும், நஞ்சுபொதி
உறை எயிற்று உரகம் பூண்ட
கறைகெழு மிடற்றுஎம் கண்ணுத லோயே!"

பரமனை நோக்கிப் பட்டினத்து அடிகள் இவ்வாறு உரிமையோடு உருகி உரையாடி யிருக்கிறார். பிறவித் துன்பங்களைக் குறித்துக் காட்டிப் பிறவா நிலையைப் பெற வேண்டும் என்று அவர் பரிவோடு பேணி மூண்டுள்ளது பெரிதும் கருத வுரியது.

## நூலின் பயன்

அறங்கண்டேன் ஆன்ற பொருள்கண்டேன் இன்பத்
திறங்கண்டேன் வீடும் தெரிந்தேன்—நிறங்கொண்ட
செவ்வேளுட் கொண்ட செகவீரபாண்டியனார்
இவ்வே ளொருநூலால் இன்று. (5)

இ—ள்

ஒளிமயமாயுள்ள முருகனை உள்ளத்தில் கொண்டுள்ள செகவீரபாண்டியனார் அருளிய இந்நூலால் அறம் பொருள்

இன்பம் வீடு என்னும் அரிய பொருள்களைக் கண்டு பெரிய இன்பங்கள் பெற்றேன் என்பதாம்.

நிறம் கொண்ட என்றது சோதிசுடர்ப் பிழம்பாய் நிற்கும் அப் பெருமானது திருமேனியின் திவ்விய நிலைகருதி வந்தது. நிறம்—ஒளி. இனிய சோதி இன்ப ஒளி வீசியுள்ளது.

"பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு
ஓவற இமைக்கும் சேண்விளங் கவிரொளி"

நீலக்கடல்மேல் நிலாவிநிற்கும் பாலசூரியன் போல் கோல மயில்மேல் குமாரக்கடவுள் குலாவியிருக்கும் என நக்கீரர் இங்ஙனம் குறித்திருக்கிறார்.

வேள் என்பது மன்மதனுக்குப் பேர். அவன் கரியகோல மேனியனுதலால் செஞ்சோதித் திருமேனியனை முருகநாதன் செவ்வேள் என நின்றான். அளவிடலரிய அதிசய அழகும் அற்புதநிலையும் துதிசெய்ய வந்தன.

ஆயிரம் கோடிகாமர் அழகெலாம் திரண்டொன்றாகி
மேயின எனினும் செவ்வேள் விமலமாஞ் சரணந்தன்னின்
தூயநல் எழிலுக் காற்ற தென்றிடின் இணையதொல்லோன்
மாயிரு வடிவிற் கெல்லாம் உவமையார் வகுக்க வல்லார்?"

(கந்தபுராணம்)

என்றதனால் எம்பெருமானது ஒளிவளர் உருவும் இளமை நலனும் எழில் நிலையும் அதிசயமுடையன என்பது அறியலாகும். அவனது திவ்விய சவுந்தரியத்திற்கு யாண்டு யாரும் எல்லை காணமுடியாது. உள்ளம் உருகி நோக்கியவர் உவகை மீதூர்ந்து உய்தி பெறுகின்றார்.

இவ் வேள் ஒருநூல் என்றது யாவரும் விரும்பிப் போற்றத்தக்கதும், இனிய புதுமையுடையதும் ஆகிய அரிய ஓர் தனி நூல் என்றவாறு. வேள்=விருப்பம். உயிர்களுக்கு உறுதிப் பொருளாகக் கருதப்பட்டுள்ள அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கினையும் இனிதாக இஃது உணர்த்தியுள்ளதென்க.

இந்நூலின் இயல்பும் பயனும் இதனால் இனிது புலனும்.

பாயிரம் முற்றிற்று.

# முதல் அதிகாரம்

## மனிதன் நிலை.

இது, மனிதனுடைய நிலைமையை உணர்த்துகின்றது. அற நலங்களெல்லாவற்றையும் ஆராய்ந்து விதிவிலக்குகளை ஓர்ந்து தெளிந்து மதிநலத்துடன் ஒழுகி உய்திகாணும் உயர்நிலையுடையன் ஆதலால் அந்தத் தனி உரிமைதெரிய மனிதனிலை முதலில் வந்தது.

1. அன்பும் அறிவும் அருளும் அமைந்தெங்கும்
இன்பம் படிய இனிதொழுகி—முன்பிருந்த
பேராத இன்பப் பெருநிலையைப் பேணுவதே
நேரா மனிதன் நிலை. (க)

### இதன் பொருள்

அன்பு முதலிய பண்புகள் அமைந்து எவ்வுயிர்க்கும் இனியனாய் யாண்டும் இன்புற ஒழுகி முன்பு இருந்த பேரின்பப் பெருவாழ்வைப் பெற்று மகிழ்வதே மனிதனது உண்மையான உறுதிநிலை என்பதாம். நிலைமை தெரிந்து தலைமை பெறுக.

அன்பை முதலில் வைத்தது அதன் பண்பும் பயனும் கருதி. இந்த அரிய உடம்புள் அமைந்து மனிதன் என்னும் பேருடன் உயிர் இங்கே வந்துள்ளதற்கு வாய்த்த பயன் யாது? எனின், எங்கும் ஆதரவாய் அன்பு செய்தலே யாம். எடுத்த பிறப்பை இன்புடையதாக்கும் பண்புடைமையால் அது முன்புற வந்தது.

எந்த உயிருக்கும் இரங்கி இதம்புரிவதே அன்புருவமாம்.

அன்பின் பெருக்கே அருள் என்க. இந்த அன்பும் அருளும் உயிரை உருக்கி உயர் பரம் ஆக்கும். உயிர் அன்புடன் கனியக் கனிய அது செம்பொருளாய்ச் சிறந்து திகழுகின்றது. "அன்பே சிவம்" எனக் கருமூலங் கட்டறுத்த திருமூலர் கூறியுள்ளமையான் அதன் ஒரு மூலமான உயிர்மூலம் உணரலாம். அன்பு இன்ப நிலையம்; அதனைப் பேணிப் பேரானந்தம் காணுக.

அறிவை இடை நிறுத்தியது அவ்விருமையுடனுள்ள அதன் தலைமை தெரிய. அன்பும் அருளும் அறிவினுடைய இரு கண்களாய் இனிது ஒளிசெய்து வரும்; அவ்வுறவுரிமையால் அதன் இருமருங்கும் மருவி அவை கிழமை கொண்டு நின்றன.

அருளில்லாத அறிவு கணணில்லாத குருடன் போல் கடையாய் இழிந்துபடும். எவ்வளவு பேரறிவுடையனாயினும் ஆருயிர்களிடம் அருள்புரியானாயின் அவன் பேரிழவுடையனாய்ச் சீரழிந்து போகின்றான். போகவே அந்த அறிவு பாழாயழிந்தது.

"அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதினோய்
தந்நோய்போல் போற்றாக் கடை." (குறள், 315)

அறிவுக்குப் பயன் அருளே; அஃது இல்லையாயின் அவ்வறிவால் யாதும் பயனில்லை என வள்ளுவப் பெருந்தகை இவ்வாறு உள்ளுற வுணர்த்தியுள்ளார். உண்மையை ஓர்ந்து உணர்க.

எங்கும் என்றது ஒத்த மக்களிடமட்டுமேயன்றிப் புழு பூச்சி எறும்பு முதலிய சிறிய பிராணிகளிடத்தும் உரிமையுடன் அருள் செய்யவேண்டும் என்னும் பொருள் தெரிய வந்தது.

சிறந்த அறிவினையுடைய உயர்ந்த மக்கட் பிறப்பை அடைந்தவன் எல்லா உயிர்களிடத்தும் இரங்கி இதம் புரிந்து ஒழுகிய பொழுதுதான் பிறந்த பயன் பெற்றவனாய்ப் பெரிய பதவியை அடைகின்றான். மன்னுயிர்க்கு இரங்கிய அளவு தன்னுயிர் இன்னுயிராய் இன்பம் பெறுகின்றது.

முன்பு இருந்த என்றது ஆதியில் பரமனோடு உயிர் ஒன்றியிருந்த நிலைமையை. "என்று நீ அன்று நான்" என்றபடி பரத்துடன் தொடர்புற்றுள்ள பழமையை யுணர்ந்து கிழமை புரிந்து விழுமிய நிலையில் உளம் உயர்ந்து உய்க என்பதாம்.

பேராத=நிலை குலையாத. என்றும் குன்றாத இன்பநிலை என்க. பரனோடு ஆன்மா நேரான நிலையினது ஆதலால் "நேர் ஆம் மனிதன்" என நின்றான். முன்பு நேர் ஆயிருந்தவன் நிலை திரிந்தமையால் அத்தலைமையை யிழந்து இத்தரையிலிழிந்து இங்ஙனம் தாழலாயினான். இத் தாழ்விலிருந்து உய்யவேண்டுமாயின் யாண்டும் அருள் செய்ய வேண்டும் என்க.

உள்ளம் இரங்கி உயிர்களுக்கு இனியனாய் ஒருவன் ஒழுகிவரின் அவன் பேரின்பமுடையனாய்ப் பெருமகிழ்வடைவான் என்பது கருத்து. அருள் வர ஆனந்தம் வருகிறது.

2. இனிய மொழியும் இதமார் செயலும்
கனிவு தருநெஞ்சும் கண்டான்—புனித
மனிதன் எனநின்றான் வானும் வணங்கும்
முனிவன் அவனே முதல். (உ)

இ—ள்

நெஞ்சில் இரக்கமும், வாக்கில் இனிமையும், செயலில் இதமும் ஒரு மனிதன் உடையனாயின் அவன் புனிதனாய் விளங்குவான்; அவனை வானவரும் வணங்குவார்; அவனே முனிவருள் முதல்வன் என்பதாம்.

கனிவு = தண்ணளி. கண்டான் முதல் என்று காண்க.

மனம் மொழி மெய்கள் இன்ன நிலையில் இருக்கவேண்டும் என்று குறித்தபடியிது. முக்கரணங்களும் இங்ஙனம் இனிமைப் பண்புகள் வாய்ந்திருப்பின் அவ்வுயிர் திவ்விய சோதியாய்த் திகழ்ந்து வானும் வணங்க, வையமும் துதிக்க, உய்கதியடைந்து உயர்ந்துபோம். இனியசெயல்கள் அரியநலங்களை அருளுகின்றன.

மொழியும், செயலும், நினைவும், இனிமையும் இதமும் கனிவும் கனிந்திருப்பின் மனிதன் தனிமுதல் நிலையைத் தலைப்படுவான் என்றது தரும நீர்மைகளின் பெருமை தெரிய வந்தது.

புனித மனிதன் என்றது பரிசுத்தன் என்றவாறு. பாவ அழுக்குப் படியாமையால் உள்ளம் புனிதமாகிறது; அந்தச் சித்தசுத்தி பரமபரிசுத்தனை நின்மலனை நேரே காணச் செய்கிறது; ஆகவே மாசறு காட்சியனாய்த் தேசுமிகப் பெற்றுச் சிறந்து திகழ்வன் என்க. அருள் ஒழுக்கம் அதிசய விழுப்பமாம்.

---

3. ஈச னிடமிருந்தே எல்லாரும் வந்துள்ளோம்
மாசகன்று நின்றால் மனிதனே—ஈசன்
எனமே லெழுவான் இழிவுறினோ நீசன்
எனவே விழுவான் இழிந்து. (ந)

இ—ள்.

நாம் எல்லோரும் ஈசனிடத்திலிருந்து பிரிந்தே இவ்வாறு வந்திருக்கிறோம்; அந்த உறவுரிமையை உணர்ந்து உள மாசுதீர்ந்து உயர்ந்து போகவேண்டும் என்பதாம்.

ஏன் பிரிந்தோம்! எப்பொழுது வந்தோம்? எதற்காக இப்படி வேறு வேறு உருவாய் மாறுபாடு மண்டிச் சீரழிகின்றோம்? எனின், அப்பேரிழவு பேசும் தரமன்று; கூரிய சீரிய தத்துவக் காட்சியால் ஒருவாறு உய்த்துணரலாமன்றி எத்துணையும் உரைக்க இயலாது; ஒருவேளை இயன்ற அளவு எழுத முயன்றால் ஈண்டு இடம் பெருகும் என்க. உணர்வு தூய்மையான பொழுது அவ்வாய்மை தானேபுலனாம். உண்மைதெரிய நன்மை வருகிறது.

> சீவன்எனச் சிவன்என்ன வேறில்லை;
> சீவனார் சிவனாரை யறிகிலர்;
> சீவனார் சிவனாரை அறிந்தபின்
> சீவனார் சிவனா யிட்டிருப்பரே." (திருமந்திரம்)

என்னும் இம் மந்திரம் ஈண்டு நன்கு சிந்திக்கவேண்டும்.

மாசு = மனக்குற்றம். என்றது பாவத்தீமைகளை. இந்த ஈனத்தீமையால் மனிதன் ஈனன் ஆகின்றான்; ஆகவே புண்ணிய மூர்த்திபால் போக முடியாமல் புலைப்பட்டு உழல லாயினான்.

ஈசன், தருமவுருவன்; சத்தியசீலன்; தயாநிதி. இப்பண்புகளை எவ்வளவுக்கு எவ்வளவு ஒருவன் அடைகின்றானோஅவ்வளவுக்கு அவ்வளவு அவன் ஈசனை அணுகுகின்றான்; எவ்வளவு இழந்துள்ளானோ அவ்வளவு தூரம் அவனை அகன்று போய் இழிந்து ஒழிகின்றான். நிலைமை குலையத் தலைமை குலைந்தது.

மனிதன், ஒருபடி மேல் ஏறினால் மகாத்துமா; இன்னும் ஒரு படி மேலே போனால் பரமாத்துமா ஆகின்றான். அவன், ஒரு படி கீழ் இறங்கினால் துராத்துமா: மீண்டும் ஒருபடி கீழே சென்றால் அதமாத்துமாவாய் அதோகதியில் வீழ்ந்து யாண்டும் அவலமாய் அலமந்து உழல்கின்றான் என்க. தன்னை உயர்த்தவும். தாழ்த்தவும் தானே காரணனாய் மனிதன் பூரண வுரிமை பெற்றுள்ளமை இதனால் இனிது புலனாம்.

பாவ எண்ணங்கள் மனிதனை நீசனாக்கி நாசப்படுத்தும் ஆதலால் அவற்றை அறவே ஒழித்து உய்ய வேண்டும் என்பது கருத்து. ஈசன் ஆகுக; நீசன் ஆகாதே.

---

4. ஆரறிவு வாய்ந்த அருமை மனிதன்றன்
பேரறிவுக் கானபயன் பேசினோ—பேராத
வன்பிறவி மீள வராவழி முந்தேறித்
தன்பிறவி தாண்டலே தான். (௪)

இ—ள்

சிறந்த மனிதனுடைய உயர்ந்த அறிவுக்குத் தகுந்த பயன் மீளவும் தான் பிறந்து உழலாமல் பிழைத்துக் கொள்ளுவதே. பிறவி தீர்ந்து பேரின்பம் பெறுவதே உயிரின் உற வுரிமையாம்.

ஆர்தல்=நிறைதல். விலங்கு முதலிய பல பிராணிகளினும் மனிதன் நிறைந்த அறிவுடையன் ஆதலால் "ஆர் அறிவு" கூற வந்தது. பேரறிவு என்றது பெருகி வந்துள்ள உரிமை தெரிய.

"மக்கள் தாமே ஆறறி வுயிரே" (தொல்காப்பியம்)

என ஆசிரியர் தொல்காப்பியனுர் ஓரறிவு முதலாகக் கூறி வந்து மனிதனிடம் இங்ஙனம்அறிவைப் பூர்த்தி செய்திருக்கிருர்.

அருமை என்றது பெறுதற்கரிய பிறவியைப் பெற்றுள்ள பெருமையும் பெற்றியும் தெரிய நின்றது. பிறவிக்கு வன்மை யாவது எவரும் எளிதில் கடக்க முடியாதபடி பெருகி நிற்றல்.

பிறவி எவ்வழியும் பெருந்துயருடையது ஆதலால் அதனை அறவே நீக்குவது உயரறிவுக்குப் பயனும் என்க. பேராத பிறவியைப் பேர்த்து எறிவோனே பிறந்த பயனை யடைந்த சிறந்த பேருளன் ஆகின்ருன். அல்லாதவர் அல்லல் நிலையில் ஆழ்கின்ருர்.

எடுத்த பிறவிக்குப் பயன் அடுத்த பிறவியை அடையாதிருத்தலேயாம். ஆவதை அறிந்துஅடைவதை விரைந்துகொள்ளுக.

---

5. தன்னை யறியத் தகவான மானுடம்போல்
என்ன பிறவியும் இல்லையே—இன்ன
பிறவியைப் பெற்றும் பெறும்பே றடையா
தறவொழிதல் அந்தோ அவம். (௫)

இ—ள்.

மனிதப் பிறவியே எல்லாவற்றிலும் மிகவும் சிறந்தது; அத்தகைய அரிய பிறவியைப் பெற்றும்அதற்கு உரிய பயனைப் பெருமல் வறிதே கழிந்து ஒழிவது பெரிதும் பரிதாபம் என்பதாம்.

ஏகாரம் இரக்கம் தோன்ற நின்றது. பெறும்பேறு = பெறத் தக்க பயன். பேர் ஊர் சாதி குலம் முதலியனவாய்த் தோன்று கின்ற நாம உருவங்களின் வெளித்தோற்றங்களை யெல்லாம் ஒழித்து உண்மையான ஆன்ம நிலையை உணர்ந்து உய்யத்தக்க தன்மை மனிதப் பிறவிக்கே தனியுரிமையாய் இனிதமைந்துளது. ஆகவே "தன்னை அறியத் தகவான மானுடம்" என வந்தது.

இத்தகைய அரிய உயர் பிறவியைப் பெற்றும் அதன் பயனைப் பெருமல் வீணே விளிந்தொழிவது மிகவும் வெறுக்கத் தக்கதாம். பிறந்த பயனை விரைந்து பெறுக என்பது குறிப்பு.

---

6. பயிரில் களைகளைந்து பண்பாற்றி நிற்கும்
செயிரில் உழவனெனச் சேர்ந்த—உயிரில்
பழிபாவம் யாதும் படியாமல் காத்தான்
அழியாவாழ் வுற்ருன் அமர்ந்து. (௬)

இ—ள்.

உழவன் களைகளைக் களைந்து நீக்கிப் பயிரை வளர்ப்பது போல் பழிபாவங்களை ஒழித்து ஒதுக்கி உயிரைப் பாதுகாப்ப வன் என்றும் அழியாத இன்ப வாழ்வை அடைவான்என்பதாம்.

களைகள் பயிரைக் கெடுப்பதுபோல் பிழைகள் உயிரைக் கெடுக்கும் ஆதலால் அவை அணுகா வகை அறிந்து பேணுக. மனதில் மாசு படாமல் ஒழுகி வருபவன் ஈசனை அடைகின்ருன்.

நாளும் புகழ் புண்ணியங்களைப் பேணி ஒழுகி என்றும் காணி யாகப் பேரின்ப நிலையை நேரே பெறுக என்பது கருத்து.

---

7. அழுகல் சிறிதோர் அருங்கனியில படடால்
முழுதும் கெடுமம் முறைபோல்—வழுவான
தீமை யணுவுளத்தில் சேரினும் தீங்காகிப்
போமே புலையாய்ப் புரண்டு. (௭)

இ—ள்.

அருமையான இனிய மாங்கனியில் சிறிது அழுகல் உறினும் அது முழுதும் பழுதாய் விரைவில் அழியும்; அதுபோல், மனத் தில் அணு அளவு தீமை புகினும் மனிதன் தீயனாய் அடியோடு கெடுவான்; கெடு நிலைகளைக் கடிது கடிக என்பதாம்.

கனியை எதிர் எடுத்துக் காட்டியது மனிதனது இயல்பான இனிமையும் அருமையும் தெரிய. இனிமைப் பண்புகளுடைய மனம் அதிமதுரமான கனியை ஒத்துள்ளது; அதில் தீய எண்ணம் சிறிது மருவினும் அதனை யுடையவன் இழிந்து தானகவே விரைந்து அழிந்து போவான்; அந்த அழிவுநேராமல் விழுமிய நிலையில் தெளிந்து வாழுக. இழிவு நீங்க உயர்வு ஓங்கி வருகிறது.

தலைமையாய் நிலவி நிற்கின்ற மனிதனை நிலைதிரித்து நீசப் படுத்தும் ஆதலால் அந்த நீசமான தீமையை நாசகாரியாக அஞ்சி ஒதுங்கி எவ்வழியும் இனிய நீர்மையனாய் ஒழுகவேண்டும்; அவ்வாறு ஒழுகிவரின் திவ்விய நிலைகளை அடைகின்றான்.

நெஞ்சைப் புனிதமாகப் பாதுகாத்து வருக; அதனால் இனிய பல மகிமைகள் உன்பால் எளிது வந்து சேரும்.

---

8. காட்சிக் குரிய கருவிழியில் மாசுபடின்
மாட்சி யிழந்துபோய் வன்குருடாம்—ஆட்சியுறும்
உள்ளம் கெடின்ஞே உயிர்கெட் டொளியின்றி
எள்ளல் உறுமால் இழிந்து. (அ)

இ—ள்

கண் ஒளியுள் மாசுபடின் உடல் குருடாய் இழிந்து படும்; உள்ளம் கெடின் உயிர் ஒளிகுன்றி ஒழிந்து கெடும் என்பதாம்.

கருவிழி என்றது கண்ணுள் நடுவே மிளிர்கின்ற ஒளியை.

உடல், கண், கண்மணி என்னும் இம் மூன்றும் உயிர் நெஞ்சு உள்ளம் என்பவற்றிற்கு முறையே ஒப்பாம்.

உடற்கு விழியொளி போல் உயிர்க்கு உள்ளம் என்றதனால் அதன் அருமையும் பெருமையும் அறியலாகும். உவமையை உய்த்து நோக்கிப் பொருள் நிலையை ஊன்றி யுணர்ந்து கொள்க.

கண் கெட்டாலும் குருடனயிருந்து ஒருவாறு கதி பெறலாம்; உள்ளம் கெடின்ஞே, எவ்வாற்றானும் உய்தியின்றி உயிர் இழிந்து போம் என்க. ஆகவே, உயிர் நிலையமான அந்த உள்ளத்தைப் புனிதமாகப் பாதுகாத்து மனிதன் உய்ய வேண்டும் என்பது கருத்து. உண்மையை ஓர்ந்து தெளிந்து உய்தி பெறுக.

---

9\. உள்ளம் புனித முடையான் உயர்ந்தினிய
தெள்ளமிர்தம் என்னத் திகழுவான்—உள்ளமைந்த
உள்ளத்தே நல்லவியல் பில்லான் உலகிற்கோர்
கொள்ளித்தேள் என்றே குறி. (௯)

இ—ள்

மனம் தூய்மையாயுள்ளவன் எவர்க்கும் இனியனாய் உலகில் உயர்ந்து விளங்குவான்; உள்ளம் தீயவன் கொள்ளித் தேள் போல் எல்லார்க்கும் கொடியனாய் நெடிதோங்கி நிற்பன் என்க.

நல்ல மனமுடையவன் சொல்லும் செயலும் எல்லார்க்கும் இனிமையாய் இன்பம் பயந்து நிற்கும் ஆதலால், "அவன் தேள்ளமிர்தம்" என நின்றான். உள்ளம் கனிய உலகம் கனிகின்றது.

மனம் புனிதமானால் மனிதன் அமிர்தமயமாகின்றான்; அது தீயதாயின் அவன் மிகவும் கொடிய தீயனாய்க் கொடுமை மண்டி நிற்கின்றான். அந்த நெஞ்சின் படு கொடுமை தெரியக் கடு நஞ்சு வந்தது. கொள்ளித்தேள் என்றது தேள்களுள்ளே கொடிய விடமுடையது; உயிர்க்கேடு புரிவது என்க.

உருவத்தால் மனிதன் ஆனாலும் உள்ளத்தே நல்ல இயல்பு இல்லையானால் அவன் பொல்லாத ஒரு கொள்ளித் தேளாக எள்ளப் படுவான் என்றதனால் அவனது ஈன நிலை எளிது புலனாம்.

"Without goodnature, man is but a better kind of vermin"

"நல்ல இயல்பு இல்லையானால் அந்த மனிதன் நச்சுப் புழுவைப் போல் தொல்லையே செய்வான்" என ஆங்கிலப் பெரும் புலவராகிய பேக்கன் (Bacon)என்பவர் இங்ஙனம் கூறியுள்ளார்.

மனத் தீமை மனிதனது உயர்வை யெல்லாம் ஒருங்கே அழித்துவிடும் ஆதலால் அதனை ஒழித்துப் புனித மனமுடையனாய் யாண்டும்அவன் இனிது ஒழுக வேண்டும் என்பது கருத்து.

---

10\. தூயமனம் பேரின்பம் துய்ப்பிக்கும் தோமான
தீயமனம் தீநரகில் சேர்ப்பிக்கும்—ஆயநிலை
ஆய்ந்து மனந்தூய்மை யாயினான் அவ்வளவே
தோய்ந்தான் பரம சுகம். (௰)

இ—ள்

தூய மனம் பேரின்பத்தைக் கொடுக்கும்; தீய மனம் நரகத்தில் தள்ளும் ஆதலால் இந்த நிலைமையை நன்கு ஆராய்ந்து

தன் மனத்தைத் தூய்மை செய்து கொண்டவன் என்றும் குன்ருத இன்ப வாழ்வை எய்தி மகிழ்வான் என்பதாம்.

அவ்வளவே தோய்ந்தான் என்றது மனத்தைப் பரிசுத்தமாகப் பண்படுத்திய வுடனேயே திவ்விய மகிமையுடைய பரம பாக்கியவாஞய் அவன் விளங்குவான் என்றவாறு.

இறந்த காலத்தால் கூறியது விரைந்து பயன்பெறுதல்கருதி.

புனிதமான நல்ல எண்ணங்கள் புண்ணியங்களாய்ப் பொங்கியெழும் ஆதலால் அந்த எண்ணங்களுக்கு மூலமான மனம் இன்பப் பேற்றிற்கு ஏதுவாயது; தீமையான நினைவுகள் பாவங்களாய் பல்கி வருகின்றன; வரவே அவற்றையுடைய மனம் நரக துன்பத்திற்குக் காரணமாய் நாசம் புரிகின்றது.

தோம் = குற்றம். என்றது பொருமை வஞ்சகம் குரோதம் முதலிய தீமைகளை. இந்தத் தீய மாசுகள் மனத்தில் நீசமாய் வளர்ந்து மனிதனை நாசமாக்கும் ஆதலால் அவற்றை நண்ணுது நீக்கித் தண்ணளி புரிந்து புண்ணியங்களை எண்ணிப் புனிதமுற வேண்டும். இனிய எண்ணங்கள் இன்ப வுருவங்களாய்ப் பெருகி வருகின்றன.

மனிதன் தனது ஆதி மூல நிலையை ஓர்ந்து தீது மூலங்கள் தீர்ந்து செவ்விய சீலங்கள் தோய்ந்து திவ்விய நிலையை அடைய வேண்டும் என்பது இதுகாறும் கூறி வந்தவற்றின் திரண்ட பொருளாம். குறித்துள்ள குறிப்புகள் கூர்ந்து சிந்திக்க வுரியன.

இந்த அதிகாரத்தின் தோகைக் குறிப்பு.

மனிதன் கடவுளுடன் நெருங்கிய உறவுரிமை யுடையவன்.
அன்பும் அருளும் அவனை இன்பமாக்கும்.
மாசு தீர்ந்தால் அவன் ஈசனுவன்.
அவனுடைய அறிவுக்குப் பயன் ஆதியைப் பெறுதலே.
அது பெருவழி அவன் பிறவியால் பயனில்லை.
பாவச் செயல் அவனைப் பாழாக்கி விடும்.
தீய எண்ணத்தால் தீய ஞகின்ருன்.
உள்ளம் மாசுறின் உயிர் நீசமுறும்.
புனித எண்ணமுடையவன் அமிர்த மயமாவன்.
தூய மனமுடையவன் பேரின்பம் அடைகின்ருன்.

முதலாவது மனிதனிலை முற்றிற்று.

# இரண்டாவது அதிகாரம்

## உடல் நிலை.

இஃது இந்த உடம்பினது நிலைமையை உணர்த்துகின்றது. அறம் பொருள் இன்பம் வீடு என்னும் அரிய பொருள்களை உயிர் அடைதற்கு உரிய துணையாய் உடனின்று உதவி வருகின்றமையான் மனிதனிலையின் பின் உடல் நிலை வைக்கப்பட்டது.

11. ஆவிக் கினிய அழகிய ஆலயமாய்
மேவி யிருக்குமிம் மெய்ந்நிலையில்—நாவினால்
சொல்லற் கரிய தொழிலுயர் நுட்பங்கள்
எல்லை யிலகாண் இசைந்து. (க)

இ—ள்

உயிர்க்கு அழகிய இனிய கோயிலாய் அமைந்திருக்கின்ற இந்த விழுமிய உடலில் அளவிடலரிய அற்புத நிலைகள் அடங்கியுள்ளன; உண்மையை உணர்ந்து உரிய பயன் பெறுக என்க.

கடவுட் கூறுகிய ஆன்மாவுக்கு நிலையமாய் நிற்றலின் உடல் ஆலயம் என வந்தது. மேவி இருக்கும் என்றது அரிதாக அமைந்துள்ள இதன் அருமை தெரிய என்க. இம் மெய் என்னும் அண்மைச் சுட்டு உரிமை தோன்ற வுற்றது. மெய்யான உயிர்க்கு மெய்யா யிருத்தலின் தேகம் மெய் என நின்றது. மெய்=உடல், உண்மை. பேர் நிலை ஓர் நிலையாய் வந்தது.

தொழில் நுட்பங்கள் என்றது நாவில் நீர் ஊறல், உதிரம் உலாவல், நாடி துடித்தல் முதலிய வினை நலங்களை. உணவையும் நீரையும் உள்ளே கொண்டு போய்த் தக்க இடங்களில் பிரித்துச் சேர்த்துப் பக்குவப் படுத்திப் பதனுறுத்தும் திறன் அதிசய யந்திரங்கள் எதனினும் மிஞ்சி விதி நியமங்களா யுள்ளது.

கண்ணுள் மிளிரும் சிறிய கரு விழியின் ஒளி எண்ணரிய தொலைவிலுள்ள பெரிய விண்ணொளியையும் கவர்ந்து வெளி செய்து விளங்கும் வித்தக நிலை எத்துணை வியப்புடையது? எவ்வளவு அதிசயங்கள்! உய்த்துணர வேண்டும்.

உயிர் நிலையமான இந்த உடலில் அமைந்துள்ள கருவித் திரள்களின் அருமைப் பாடுகளை உரைகளால் உரைக்க இயலா; தெய்வ சிருட்டியின் அற்புத நிலையில் இது தலை சிறந்துள்ளது.

"அண்ட நிலையை அறிந்தள விடினும்
பிண்டநிலை யறிதல் பெரிதும் அரிதாம்."

என்றதனால் இவ் வுடம்பின் அமைதியும் அருமையும் உணர லாகும். உயிரின் நிலையமாய் உடல் ஒளி புரிந்துள்ளது.

இத்தகைய அற்புத உருவைப் பொற்புடன் போற்றி இதன் பயனை விரைந்து பெற வேண்டும் என்பது கருத்து.

---

12. எண்ணரிய தோற்றத்துள் இம்மா னுடம்பெறுதல்
நண்ணரிய புண்ணியத்தின் நற்பயனே—விண்ணரிய
பேறெல்லாம் பெற்றுப் பெருமையுற வுற்றவிதன்
சீரெல்லை யில்லை தெளி. (உ)

இ—ள்

அளவிடலரிய பல பிறவிகளையும் தப்பி இந்த மானுட யாக்கையைப் பெற்றது பெரிய புண்ணியத்தின் பயனும்; அரிய பேறுகள் பல அடையும்படி உயிர்க்கு உறுதியாய் வந்துள்ள இவ் வுடலின் பெருமை உரையிடலரியது என்பதாம்.

தோற்றம் என்றது பல்வேறு உருவங்களில் தோன்றி நிற்கும் சீவகோடிகளை. புல் பூடு செடி கொடி மரம் புழு பறவை விலங்கு முதலிய பலவகைப் பிறவிகளையும் கடந்து இந்த இனிய மனித வுடம்பை அடைந்தது மிகவும் அதிசயம் என்க.

கடலைக் கையினால் நீந்திக் கரையேறியது போல் இவ்வுடலை நாம் அடைந்திருக்கிறோம். இந்தப் பேற்றின் அருமையைக் குறித்து அறிஞர் பலரும் வியந்து கூறியுள்ளனர். சில அடியில் வருகின்றன. கருதிக் காணுக.

"பரவை வெண்டிரை வடகடற் படுநுகத் துளையுள்
திரைசெய் தென்கடல் இட்டதோர் நோன்கழி சிவணி
அரச! அத்துளை அகவயிற் செறிந்தென அரிதால்
பெரிய யோனிகள் பிழைத்திவண் மானிடம் பெறலே."
(சீவக சிந்தாமணி)

"வினைபல வலியினாலே வேறுவே றியாக்கை யாகி
நனிபல பிறவி தம்முள் துன்புறா உம் நல்லுயிர்க்கு
மனிதரின் அரியதாகும் தோன்றுதல்." (வளையாபதி)

"மக்கள் உடம்பு பெறற்கு அரிது." (அறநெறிச் சாரம்)

"புன்மரம் நெளிபுழுப் புள் விலங்கெனும்
பன்மைய துயர்செயும் பவங்கள் தப்பியே
வன்மைகொள் நிலமிசை மக்கள் ஆகுதல்
நன்மைகொள் உயிர்க்கலால் அரிது நந்தியே."
(பிரபுலிங்க லீலை)

"அரிதாம் பிறப்புள் உயர் மானிடத்தின் அடைவுற்று
வைகல்" (தணிகைப் புராணம்)

"உற்ற யோனிகள் தம்மில் உற்பவியாமல் மானுடஉற்பவம்
பெற்று வாழுதல் அரிது." (பாரதம்)

"தேரிற் சதுர யுகமிரண்டாயிரம் நாட்டிங்க ளாண்டு
ஓரின்அந் நூற்றில் அயன்மாண்டு உகாந்தமு மூற்றுத்தென்பால்
சேரும் நுகத்துளையுள் வடபாற்கழி செல் எளிது
சாரும் பிறப்பொழித் திம்மானிடத்திற் சனிக்கரிதே."
(அறிவானந்த சித்தி)

"அண்டசம் சுவேதசங்கள் உற்பிச்சம் சராயு சத்தோடு
எண்தரு நாலெண்பத்து நான்குநூ றுயிரத்தான்
உண்டுபல்யோனியெல்லாம் ஒழித்து மானுடத்துதித்தல்
கண்டிடிற் கடலைக் கையால் நீந்தினன் காரியங்காண்.
(சிவஞான சித்தியார்)

"அரிது அரிது மானுடராதல் அரிது." (ஔவையார்)

"எண்ணரிய பிறவிதனில் மானுடப் பிறவிதான்
யாதினும் அரிது அரிதுகாண்." (தாயுமானவர்)

இவ்வாறு நூலோர் பலரும் நுவன்றிருத்தலால் இப் பிறவிப் பேற்றின் அருமையை மேலோர் எவ்வாறு எண்ணியுள்ளனர் என்பது எளிது புலனும். அரிய இதனல் உரியதை அடைக.

---

13. பெறலரிய பேருகப் பெற்ற வுடல்தான்
இறலெளிதா யுற்ற இயல்பால்—அறநலனை
ஓர்ந்து விரைந்தே உறுதிசெய்க ஓராமல்
சோர்ந்தாய் இழந்தாய் துணை. (௩)

இ—ள்

பெரிதும் அரிதாகப் பெறப்பட்டுள்ள இவ் வுடம்பு மிகவும்

எளிதாகஅழியும் இயல்பினது ஆகலான் இஃது உள்ளபொழுதே உயிர்க்கு நல்லது செய்து கொள்ளுக என்றவாறு.

இம் மனித யாக்கை பெறுதற்கு அரியது; பெற்றாலும் நெடிது நில்லாது; கடிதே ஒழியும் முடிவினை யுடையது; அந்நிலைமையை நினைந்து விரைவாக நிலைபேறடைக. அரிதாக அமைவது; எளிதாக அழிவது; அழி நிலையுடைய இது கழியுமுன் கதிவழி காணுக. காணாது நின்றால் வீணே இழிந்ததாம்.

வரவு செலவுகளின் அருமை எளிமைகளை ஒருங்கே உணர்த்தியது உளநாளைப் பழுது படுத்தாமல் பயன் படுத்த என்க.

இறல் = அழிதல். அழிவு நேருமுன் ஆவதை அடைக.

மின்னல் எனமறையும் மெய்யடைந்தும் மெய்யடையார்
இன்னல் அடைவர் இழிந்து.

இவ் வுண்மையை உன்னி யுணர்ந்து உய்ய வேண்டும் என்க.

---

14. வானாதி பூத வகையால் வனைந்தஇவ்
ஊனாதி யான உடம்புதான்—தானாக
வந்தெளிதாய் வாய்த்தும் வரவறிந் துய்யாரேல்
அந்தோ அழிந்தார் அவர். (௪)

இ—ள்

அரிய மனித வுடம்பை அடைந்தும் அதற்குரிய பயனை அடையாமல் வறிதே ஒழிவது பெரிதும் பரிதாபம் என்பதாம்.

வான் ஆதி என்றது ஆகாயம் முதலிய ஐவகைப் பூதங்களை. நிலம் நீர் தீ வளி வான் என்னும் ஐந்து பூதங்களின் கலவையினால் இவ் வுடலம் ஆகியுள்ளது. ஆக்கம் நோக்கி உயர்க.

ஊன் ஆதி என்றது தசை எலும்பு தோல் நரம்பு உதிரம் முதலிய எழுவகைத் தாது மூலங்களை.

ஆருயிர்க்கு உரிய துணையாய் எல்லா அறிவு நலங்களுக்கும் இனிய இடமாய் இம் மனித வுடல் தனிஅமைந்துள்ளது; இது கொண்டு நன்மை அடையாதார் வேறு யாண்டும் உய்வின்றி அவமே யிழிந்து புன்மை யுறுகின்றார். உடல் ஒழிந்து போமுன் உயிரின் பயனை அடைந்து கொள்ள வேண்டும் என்பது குறிப்பு.

15. வான நிலையறிய வாரி வளனறியத்
தானமுயர் பூமி தனையறிய—ஆனகலை
யாவும் அறிய அமைந்த வுடல்நிலையை
மேவி அறியார் மிகுந்து. (ரு)

இ—ள்

வானம் கடல் பூமி முதலிய நிலைகளையும், பலவகைக் கலைகளையும் உயிர் உணர்ந்து தெளிதற்கு உறுதுணையாய் இவ் வுடல் அமைந்துள்ளது; அத்தகைய அருமைப் பாடுடைய இவ் வித்தக வுடம்பின் நிலைமையைப் பலர் உய்த்துணராது வீணே ஒழிகின்றார்; அவ் ஒழிவால் இழிவுகள் பல எய்துகின்றார் என்க.

ஆன்மா அறிவுடையதாயினும் வேறு உடம்புகளில்விளங்கித் தோன்றாது; இம் மானுட தேகத்திலிருந்தே மதி மாண்பு மிகுந்து கதி காணுகின்றது. அரிய காட்சியை உணர்ந்து உரிய மாட்சியை விரைந்து பெறுக.

---

16. பெற்ற வுடம்பின் பெருமை அருமைகளை
முற்றும் உணராமல் மூடமாய்ச்—சுற்றிக்
கெடுவழியில் ஓடியே கேடாக வீணே
படுகின்றாய் என்னே பழி. (சு)

இ—ள்

அரிதாகக் கிடைத்துள்ள இவ்வுடம்பின் அருமை பெருமைகளை ஒரு சிறிதும் உணராமல் நெடு மடமையாய்க் கெடு வழியில் திரிதல் படுபழியாம் என்றவாறு.

மனிதப் பிறப்பு பெறலரிய பேறாய்க் கிடைத்துள்ளது; இதனால் அடைய வுரியதை விரைவில் அடைந்து கொள்ள வேண்டும்; அடையாது கழியின் கடையாய் இழிந்துபடநேரும்.

உற்ற தேகம் உகுமுன் உயர்கதி
பெற்ற யோகர் பெறலரும் பேறினர்.

என்றது மற்ற மூகரது வறு நிலையை உய்த்துணர வந்தது.

இம் மெய்யின் மெய்யை உணர்ந்து உய்க என்பது கருத்து.

---

17. புல்லிய எல்லாப் பிறப்பும் புறந்தள்ளி
நல்ல பிறப்பிது நண்ணியுள்ளாய்—ஒல்லையினி
என்றும் பிறவா இயல்பை இனிதாய்ந்து
நின்று புரிக நிலைத்து. (எ)

இ—ள்

இழி பிறவிகள் யாவும் கடந்து உயர் பிறவியை அடைந்துள்ள நீ இனி உயர்வற உயர்ந்த பேரின்ப நிலையை உடனே பெறுக; பெருது நின்ருல் பேரிழவாம் என்க.

புல்லிய என்றது புழு பறவை மிருகம் முதலிய உடம்புகளை. புறம் தள்ளி என்றது அவற்றைக் கடந்து வந்துள்ள கதி நிலை தெரிய. புன்மை யாவும் நீங்கி நன்மை யடைதற்கு மனிதப் பிறவியே தனியுரிமை யுடையது ஆதலால் "நல்ல பிறப்பு" என வந்தது. இப் பிறவியால் பெறத்தகுவதை விரைவாகப் பெற்றுக் கொள்க. பிறந்த பேறு பிறவி தீர்ந்து பேரின்பம் பெறுவதேயாம்.

---

18. பெற்ற பிறப்பால் பெறலரும் பேரின்பம்
பற்ற முயலும் பயனுடையார்—மற்றுமோர்
புன்பிறப்பில் ஆழ்த்தும் புலைநிலையில் போராடித்
துன்படைய நில்லார் தொடர்ந்து. (அ)

இ—ள்

பெற்றுள்ள இப் பிறவியால் பெறுதற்குரிய பேரின்ப நிலையை நேரே பெறுகின்ற பேரறிவுடையவர் வேறே சிறு வழிகளில் திரிந்து சீரழியார் என்றவாறு.

புலை நிலை என்றது பழி பாவங்கள் விளையும் இழி நெறிகளை.

பயனுடையார் என்றது உடம்பின் பயனை உடன் அடைய முயலும் நயனுடைமை கருதி. நல்ல மனிதப் பிறப்பை அடைந்தவர் தமக்குரிய உறுதி நலனைக் காலமுள்ள பொழுதே கருதிக் கொள்ள வேண்டும். கொள்ளாதொழியின் பொல்லாத் துயரங்களுக்கு ஆளாய்ப் புல்லிய பிறப்பில் ஆழ்ந்து புலையாடிப் போவர்; அங்ஙனம் ஈனமா யிழிந்து போகாமல் ஞானமாய் உயர்ந்து செல்லுக. உரிமை யுறுபவர் பெருமை பெறுகின்ருர்.

19. நீரில் குமிழியென நேரழியும் என்றுடலை
ஓரின் உளபோதே உய்யாமல்—பாரில்
பழுதே பகலைப் பழியாக் கழித்தார்
அழுதே விழுவர் அளறு. (௧௯)

இ—ள்

இவ் வுடல் நீர்மேல் குமிழி போல் விரைவில் அழியும்; அந் நிலைமையை உய்த்துணர்ந்து உடனே நல்ல பயனை அடைக; அடையாதொழிந்தவர் கடையாய்இழிந்து கதறிஅழுவார் என்க.

உடலைக் குமிழி என்றது தோற்றக் கேடுகளின் தொடர்பு நோக்கி. மண்மேல் தோன்றி மடிவதற்கு நீர்மேல் எழுந்து ஒழிவது உவமையாய் வந்தது. கண் எதிரே கடிது மறைவதற்குக் காட்சி ஒன்றைச் சாட்சி எடுத்துக் காட்டிய படியிது.

"நீரில் குமிழ்என நீள்வானில் மின்என்னப்
பாரில் உடலழியும் பார்."

என்றபடியே நாளும் பார்த்து வருகிறோம். வந்தும் பலன் ஒன்றும் பாராமல் பழுதே கழிகின்றோம். இக் கழிவு எவ்வளவு அழிவினை யுடையது! ஆய்ந்து சிந்திக்கவேண்டும். நல்ல பகலை நாசமாக்காமல் ஒல்லையில் உயிர்க்கு உறுதிசெய்துகொள்ளுக; இல்லையேல், எல்லையில் காலம் அல்லலில் அழுந்த நேரும் என்க. அளறு = நரகம். பகலைப் பழுதே கழித்தவர் பின்பு அழுதே விழுவர் ஆகலான் அவ்வாறு கழிந்திழியாதுஉயர்ந்தெழுக என்பதாம்.

---

20. பேராது நின்ற பிறவிப் பெருங்கடலை
நேராக் கடக்கும் நெடுங்கலமாச்—சீராகப்
பெற்ற உடலிதால் பேரின்ப முத்திநிலை
உற்றவரே உய்ந்தார் உடன். (௨௰)

இ—ள்.

பெரிய பிறவிக்கடலைக் கடத்தற்கு உரிய கலமாய் இவ்வுடல் அமைந்துள்ளது; இதனால் பேரின்ப நிலையமான முத்தித் தலத்தை அடைந்தவரே என்றும் நித்திய முத்தராய் நிலைபெறடைந்து தலைமையாய் உயர்ந்தார் என்றவாறு.

இம் மனித உடம்பு பெற்றதற்குப் பயன் துன்பத்தொடர்பு நீங்கி இன்பப் பேறடைதலே யாம். ஆகவே அவ்வுயர் பயனை ஐயுறாது உடனே பெறுக. அதுவே பெரும் பாக்கியமாம்.

உற்றவரே உய்ந்தார் என்றதனால் மற்றவர் உய்வின்றி வெய்யதுயரில் வீழ்ந்து உழல்வார் என்பது பெறப்பட்டது. பயனை இழந்து பாழ்படுவது பரிதாபமாம்.

அறிவு நலங்கனிந்த இவ்வுயரிய உடலாலன்றி வேறு வகையில் பிறவியை நீக்கி உயிர் உய்தி காண முடியாது; அவ் வுண்மையை உவமைக் குறிப்பால் உய்த்துணர்ந்து கொள்ளலாம்.

உயிர்க்கு உறுதித் துணையாய், முடிவிலின்பத்திற்கு மூல காரணமாய் இம்மனித வுடம்பு இனிதமைந்துள்ளது; இது கொண்டு செய்வன செய்து விரைந்து உய்ய வேண்டும் என்க.

> கடலினை எளிது நீந்திக் கடத்தற்குக் கலம்போல் இந்த
> உடலினை அடைந்துளாய் நீ உற்ற இத் துணையினாலே
> அடலுறு பிறவி நீங்கி ஆனந்தம் அடையா யாயின்
> மடமையா யிழிந்து துன்ப வாரியில் வீழ்ந்தாயந்தோ!

இந்த உண்மையை உணர்ந்து உய்தி பெறுக.

### இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

மனித உடம்பு ஆன்மாவுக்குப் புனித நிலையம்.
அது பெறலரும் பேறாகப் பேர்பெற்றுள்ளது.
அஃது எளிதே அழியும் இயல்பினது.
அது பழுது படாமுன் பயனடைய வேண்டும்.
அதன் நிலைமை தெரிவது தலைமை அறிவாம்.
அறியா தொழியின் அவலம் ஆகும்.
பிறவாநிலையை அதனால் பெறலாம்.
அதன் பயனை யடைந்தவர் உயர்ந்து விளங்குவர்.
பழுதே கழித்தவர் அழுதே அயர்வர்.
அதன் அருமை தெரிந்து உரிமை செய்து கொள்க.

இரண்டாவது உடல்நிலை முற்றிற்று.

# மூன்றாவது அதிகாரம்

## பசி.

அஃதாவது பசியினது தன்மை. குடலிடை யுறைந்து உடல் உயிர்களை இயக்கி உலகை நடாத்தி வருகின்றது ஆகலான் அவ் வுறவுரிமை புணர உடல் நிலையின் பின் இது வைக்கப்பட்டது.

21. ஊனுயிர்கட் கெல்லாம் உறுபசியே உள்ளுயிராய்த்
தானமைந்து நின்று தனியியக்கி—ஆனதொழில்
எல்லாம் புரிய இயற்றி இயங்குமே
வல்லான் உருவாகி வந்து. (க)

இ—ள்

பசி உயிரினங்களுக்கு ஆதாரமாய் நின்று இறைவன் போலஅவற்றை யாண்டும் ஆட்டி அருள்கின்றது என்றவாறு.

உறு பசி = உயிர்க்கு உறுதியாக உற்ற பசி. உயிர் உடல் உற்ற பொழுதே பசியும் உடனுற்றது ஆகலான் உறு பசி என வந்தது. பிள்ளை பிறந்தவுடனே அழச்செய்வது அதன் உள்ளுறை பசியே. அங்ஙனம் அழுகின்ற அளவைப் பொறுத்தே அதனு டைய ஆயுள் நீட்சி அளக்கப் பட்டுள்ளது. பிறந்த பொழுது குழந்தை வாய் திறந்து அழவில்லையானல், அது விரைந்து இறந்து போதற்கு அறிகுறி என்ப. எனவே பசியின் பான்மை பசுங் குழவிபால் இங்ஙனம் அறிய வந்தது.

சீவ கோடிகள் யாவும் அலைந்து திரிந்து பறந்து தொழில் புரிதற்குக் காரணம் பசியேயாம்; அது இல்லையாயின் அவை யாதும் செயலற்றிருக்கும் ஆகலான் "எல்லாம் புரிய இயற்றி" என அதன் வல்லாண்மை கூற நின்றது.

வல்லான் என்றது கடவுளை: எல்லாம் செய்ய வல்லன் ஆத லால் இச் சொல்லால் சுட்ட நின்றான். பசியை வல்லான் ஒடு ஒப்பவைத்தது உயிர்களை இயக்கி உலகை நடத்தி வருதல் கருதி.

பூ வண்ணம் பூவின் மணம்போல் உலகுயிர்கள் எங்கணும் பரந்து எல்லாவற்றையும் இயக்கியருளும் தீவண்ணன் எனத் தீவண்ணமான பசியும் சீவர்களை இயக்கி யுள்ளது என்க.

தெய்வத் தன்மையுடைய இத் தகைய பசியை உய்வைத் தரும்படி உணர்ந்து போற்றி ஒழுக வேண்டும் என்பது கருத்து.

இதனல் பசியின் பெருமை கூறப்பட்டது.

22. ஆடும் பொறிகளைநன் காட்டுபவன் போலமைந்து
கூடும் உயிர்களைமுன் கூட்டுகின்றாய்—பாடமைந்த
இன்பசியே நீயொருவன் இல்லையெனில் இவ்வுலகம்
என்படுமோ எண்ணுவார் இல். (உ)

இ—ள்

பாவைகளை ஆட்டும் கூத்தன் போலப் பசியே! நீ உள்ளுறைந்து உடலுயிர்களை வெளியே ஆட்டி வருகிறாய்; நீ இல்லையாயின் இவ்வுலகம் என்னாம்? இவ்வுண்மையை ஊன்றி உணர்வார் இல்லையே என்றவாறு. பொறி = சூத்திரப்பாவை.

கண்ணுக்குத் தெரியாமல் உள்ளே இரகசியமாய் உறைந்திருந்து கொண்டு உடலுயிர்களைப் புறத்தே இனிதாக ஊக்கி நடாத்தி வருதலால் பசி சூத்திரதாரி எனச் சுட்ட நின்றது.

ஆடும் பொறிகளை அது ஆட்டியருள்கின்ற விந்தை அதிசயமுடையது. [illegible] அது ஊட்டி வருவதால் உயிர்கள் உலாவி வருகின்றன.

[illegible]. இன்பசியே என்றது உயிரை உடலில் [illegible]. பசியே உயிரினங்களை [illegible]; அவ்வரிய நிலை தெரிந்து [illegible] வேண்டும்.

23. மானம் அழியும் மரபழியும் என்றுன்னை
யாவரும் சொல்லுவதும் உண்மையே—ஆனாலும்
எல்லாம் அருள இருந்துணையாய் நிற்குமுன்சீர்
நல்லார் அறிவார் நயந்து. (ரு)

இ—ள்

பசியே! உன்னால் மானம் அழியும், மரபு அழியும் என்று பலரும் உன்னை இகழ்ந்து பேசுவர்; ஆனாலும் உயிர்க்கு உறுதியான அரிய நலங்களை நல்கியருளும் உன்னுடைய வள்ளன்மையை யறிந்து நல்லார் புகழ்ந்து போற்றுவர் என்றவாறு.

இரும் = பெரிய. அடைதற்கு அரிய பெரிய பேறுகளை உயிர்கள் எளிதடைய உடனிருந்து உதவி வருதலால் பசி "இருந்துணை" என நின்றது. செய்துவரும் இதம் சிந்தனைக்கு உரியது.

பசி எழுந்து முதலில் சோதனை புரியுங்கால் வேதனை விரியும்; விரியவே மானம் முதலியன அழியவரும்: வரினும் அதனை ஞான நிலையில் பொறுத்து நிற்பின் இறுதியில் உயிர்க்கு நலம் பல விளை

யும் ஆகலான் இன்பமெல்லாம் அருள இருந்துணையாய் நிற்கும் என அதன் பண்பும் பயனும் பாராட்ட வந்தன.

பொன்னைத் தீ சுடச்சுட ஒளியும் மாற்றும் அதிகமாகும்; அது போல் உயிரைப் பசித் தீ வாட்ட அது அருந்தவமுடைய தாய் அமைந்துநின்று சிறந்த தேசுடன் உயர்ந்துவிளங்கும் என்க.

நல்லார் என்றது விரத ஒழுக்கங்களையுடைய புண்ணிய சீலர்களை. பசி ஊனினை உருக்கினும் உள்ளொளி பெருக்கி ஞான நல முடையார்க்கு வானுயர் இன்பம் வழங்கியருளும் என்க.

24. ஆற்றுதவ மெல்லாம் அளிபசியே உன்னுடைய
ஏற்றமதில் ஏறி யிருக்குமெனத்—தேற்றிய நூல்
எல்லாம் புகழ இனிதிருந்தாய்! உன்பெருமை
சொல்லார் எவருலகில் சொல்? (ச)

இ—ள்

இனிய பசியே! அரிய தவமெல்லாம் உனது உருவ நிலையில் உறைந்துள்ளது; இவ்வுண்மையை உணர்ந்து உயர் நூல்கள் புகழ நீ உவந்திருக்கின்றாய்! உன்னுடைய பெருமையை முற்றவும் தெளிந்து கொண்டவர் உன்னை யாண்டும் வியந்து புகழ்ந்து சொல்லுவர் என்றவாறு.

ஞான யோகங்களை வளர்த்து உயிர்க்கு நன்மை அளித்து வருதலான் அளிபசி என வந்தது. ஆற்று தவம் எல்லாம் பசியின் ஏற்றமதில் ஏறியிருக்கும் என்றது பட்டினியளவே படிமை என்பது கருதி.

"உற்ற நோய் நோன்றல், தவம்" என்றது பொய்யாமொழியும்.

"ஓவாதுஇரண்டுவரும் அட்டமியும் பட்டினிவிட்டு ஒழுக்கம் காத்தல், தாவாத் தவம்" [சீவகசிந்தாமணி,1547]

"பாவனை மரீஇப் பட்டினியொடும்
தீவினை கழூஉம் தீர்த்தன்"

என இன்னவாறு பசியின் பெருமை பாராட்டப் பட்டுள்ளமை காண்க. இதனால் அதனது புண்ணிய விளைவு புலனும். போகமோகங்கள் ஒழிந்த பொழுதுதான் யோக ஞானங்கள் எழுந்து திகழும்; அந்த எழுச்சி பசியால் இசைந்து வருகிறது.

பசித்தீ பாவத்தைக் கழுவி நீக்கி உயிரைப் பரிசுத்தமாக்கும் ஆதலால் அதன் தூய்மையையுணர்ந்து வாய்மை காத்து வருக

என்பதாம். தவம் உயிர்க்கு உறுதியானது; கூற்றையும் கடப்பது; அத்தகைய அரிய தவத்திற்குப் பசி உரிய துணையாயுறைந்திருத்தலால் இதன் அருமையும் பெருமையும் உணரலாகும்.

25. தீயொடுநேர் வைத்துன்னைத் திட்டுவார் அத்தீயைத்
தூயபரன் என்று துதிப்பர்பின்—ஆயதுபோல்
சந்தமிகு தன்மை தருபசியே நீபெறுவாய்
நிந்தையிதில் என்னே நினை. (ரு)

இ—ள்

தீ மிகவும் கொடியது என்று திட்டுவார்; அங்ஙனம் திட்டினும் அதனைத் தெய்வம் என மக்கள் வணங்குவார்; அது போல் பசியே! உன்னையும் வெளியே நிந்திப்பர்; உண்மையை யுணர்ந்து பின் வந்திப்பர் என்றவாறு.

வந்தனைகள் சிந்தனைகள் தோய்ந்து வந்துள்ளன.

நிலத்தை விளைத்து உயிர்க்கு ஒளியும் எழிலும் உயர்வும் தருதலால். "சந்தமிகு தன்மை தருபசியே!" என அடையடுத்து வந்தது. சந்தம் — அழகு. [illegible] என்க.

பசியைத் தீயோடு ஒப்புரைத்தது அதன் செயல் இயல்களை நோக்கி. விறகையும் தண்ணீரையும் கவர்ந்து நீராவியாக்கிக் கப்பல் முதலிய பெரிய எந்திர உருவங்களைத் தீ இயக்கி வருதல் போல் உணவையும் நீரையும் உட்கொண்டு உயிர்ப்புண்டாக்கி உடலுயிர்களைப் பசி இயக்கி வருகின்றது; ஆகையால் தீயும் பசியும் நேர் எண்ண நின்றன. பசியை உதராக்கினி என வழங்கி வருதலும் காண்க. சூடு காட்டிப் பாடு காட்டுகின்றது.

தீ இல்லையானால் உலகம் ஒளிகுன்றி ஒழியும்; பசி யின்றேல் உயிர் பாடிழந்து பொன்றும் என்க. எனவே பசியின் பான்மையும் மேன்மையும் அறியலாகும்.

பசி இல்லையாயின் உயிரியக்கம் இல்லை; உலகமும் தொழிற்படா; இந்நிலைமைகளை உணர்ந்து அதன் தலைமையைத் தெளிந்து தக்கவாறு பேணித் தகவுடன் ஒழுகுக.

26. உன்வரவை நோக்கி உணர்ந்திருந்து வந்தபின்பு
இன்வரவா எண்ணியுடன் ஏத்தியுண்டால்—பின்வருநோய்
ஒன்றேனும் உண்டோ ஒளிர்பசியே நீயின்றேல்
பொன்றுவார் நோய்வாய்க்குட் போய். (சா)

இ—ள்

பசியே! உன் வரவை எதிர்பார்த்திருந்து நீ வந்த பின்பு

உணவை உண்டால் உயிர்களுக்கு என்றேனும் பிணிகள் உள வாகுமா? யாதொன்றும் உண்டாகாது; நீ இல்லாமல் உண்டவர் நோய்வாய்ப்பட்டு அல்லலுழந்து அழிவார் என்றவாறு.

நன்ருகப் பசித்த பின் புசித்தால் வாடிய பயிர்க்கு நீர் வார்த்தது போல் உயிர் செழித்து விளங்கும்; பசியாமல் உண்டால் பிணிகள் பல மண்டி அவலமான அழிவுகள் நேரும் என்க.

உணர்ந்து என்றது பசியளவை ஓர்ந்து அறிந்து என்றவாறு. பசியறியாமல் உண்டால் உண்டவுணவு நஞ்சாய் உயிர்க்கேடு செய்யும்; உண்மையை உணர்ந்து உறுதி காணுக.

"வாய்க்குணவே மண்டி வயிறறியா துண்டுவந்தான்
நோய்க்குணவாய் நொந்து படும்."

என்றதனுல் பசியின்றி யுண்டவர் படுதுயரம் அறியலாம்.

27. செல்வர் சிலர்நின்னைச் சேராமல் சேர்ந்தவெல்லாம்
புல்லி விழுங்கிப் புரண்டெழுவார்—அல்லல்பின்
கொண்டு குலைவார் குலப்பசியே உன்பெருமை
கண்டு தெளியாரோ காண். (எ)

இ—ள்

பசியே! சிலர் உன்னைக் காணுமல் கண்டவற்றை யெல்லாம் உண்டு கடும்பிணி கொண்டு வருந்துகிருர்; வருந்தியும் உனது பெருந்தன்மையை உணராது மேலும் மேலும் அருந்தி உழல்கின்ருர் என்றவாறு. புல்லி = அள்ளி.

விழுங்கி என்றது இழிவு தோன்ற நின்றது.

பசி அறிந்து உண்ணும் பண்புடையாளர் பலர் உளர் ஆதலால் இங்கே சிலர் என வந்தார். குலப்பசி என்றது மனுக்குலம் தழைக்க வந்துள்ள அதன் மாட்சி கருதி.

கண்டு தெளியாரோ? என்றது வயிறறியாதுண்டமையால் நேர்ந்ததுயரங்களை அனுபவித்தறிந்தும் மறுபடியும் படுதீனியாளராய்க் கொடுநோய் கொண்டு கெடுவாரைக் குறித்துப் பரிந்து கூறியபடியிது.

"குடல்காய ஓர்ந்து குறிக்கொண் டருந்தின்
உடல்காய மாகும் உயிர்க்கு"

என்பதை உணர்ந்தொழுகி யுயர்நலம் அடையவேண்டும் என்க.

28. வேல்வல்லார் வாள்வல்லார் மேதினியி லேதெளிந்த
நூல்வல்லார் தீது நுவல்கில்லார்—சால்பெல்லாம்
கொண்டா ரெனினுமுனைக் கூர்ந்துகுறிக் கொள்ளாரேல்
கண்டாரே மண்டுபிணி கள். (அ)

இ—ள்

வீரர்கள் புலவர்கள் ஆசார சீலர்கள் அருந்தவ நிலையினர் வேறு யாவராயினும் பசியை உணர்ந்து மதித்து ஒழுகாராயின் பிணிகள் தொடர்ந்து மிதிக்க அழுவார் என்றவாறு.

குடல் அழத் தின்றவரை நோய்கள் உடல் அழத் தின்னும் ஆகையால் பிணிகள் ஈண்டு எண்ண வந்தன.

மண்டுதல் = நெருங்குதல். பிணியுறாது பேணி ஒழுகுக.

பசியுணர்வு அருமருந்தென அருள் சுரந்துள்ளது என்க.

29. ஓதுகட லாடை உலகமெலாம் ஓர்குடைக்கீழ்க்
கோதுபதி யாதாளும் கொற்றவரும்—நீதிபதி
யானவரும் நீவந்தால் அக்கணமே தாமெழுந்து
மானவருள் செய்வார் மதித்து. (கூ)

இ—ள்.

உலகம் முழுவதையும் ஒரு குடைக்கீழ் ஆளும் மகா சக்கரவர்த்திகளும் பசியைக் கண்டால் எழுந்து மரியாதை செய்வர்; ஆகவே அதன் மகிமை அறிக என்பதாம்.

வணங்காமுடியரையும் பசி வணக்கி யருளுகின்றது.

மன்னர் மன்னவரும் பசி வந்து விட்டால் என்ன காரியங்களாயினும் அவற்றை யெல்லாம் இகழ்ந்து தள்ளிவிட்டு உணவு கொள்ளப் போவர் ஆதலால் அவ்வியல்பு இங்ஙனம் புனைந்து கூற வந்தது. பசி வர யாவரும் பணிந்து வருகிறார்.

ஒரு பெரிய மனிதன் வந்தால் அனைவரும் எழுந்து மரியாதை செய்கின்ற வணக்கக்காட்சி இங்கே காண வந்தது.

30 ஈசனுக்குப் பூசனையென் றேவெளிக்குக் காட்டிப்பின்
தேசுமிகு பண்டமெலாம் சேர்த்தெடுத்து—நேசமுடன்
உன்பால்வைத் தின்ப முறுகின்றார் மன்பதைகள்
அன்பால் அருள்பசியே ஆய். (ம)

இ—ள்.

பசியே! அரிய இனிய உணவுப்பண்டங்களையெல்லாம் கடவு

ளுக்கு என வெளியே காணப் படைத்துப் பின்பு உனக்கே கொடுத்து மக்கள் இன்புறுகின்றனர்; இதனால் உனது தனி மகிமை உணர நின்றது என்றவாறு

பண்டங்கள் ஈசனுக்கு என்று இசைந்திருக்கும் வரையும் இன்பமில்லை; எடுத்து உண்டபொழுதுதான் உயிரினங்கள் உவகையுறுகின்றன ஆதலால், "உன்பால் வைத்து இன்பம் உறுகின்றார்" எனப் பசியின்பால் யாவருக்கும் இயல்பாக வுள்ள அன்பு நிலை கூற வந்தது.

கடவுளினும் பசி உடலுயிர்களுக்கு உரிமை மிக வுடையதாயுள்ளே மருவியுள்ளமையால் பிரியமா அது பேணப் படுகிறது.

உடல்அமைப்பில் ஓர் அரிய தத்துவமாய் உள்ளுறைந்து உயிர்களை ஆட்டிவருகின்ற ஆற்றலுக்குப் பசி என்று பெயர். உண்ட உணவுகளைத் தகித்தொதுக்கி உயிராதாரமாய் அது ஒளிசெய்துள்ளது; அதன் நிலைமையையும் தலைமையையும் உணர்ந்து நெறி செய்தொழுகின் பொறி புலன்கள் நலமாய் உடல் வாழ்க்கை நெடிதோங்கி வரும்; அதனால் உயிர் வாழ்வு சுகமாய் உயர் பேரின்பம் உண்டாம் என்பது இதன் திரண்ட பொருளாம்.

பசியை முன்னிலைப்படுத்தி அதன் இயல்புகளைப் பலபடியாக இதுவரை பகர்ந்து வந்தது மானுட சிருட்டியின் அற்புத நிலையை நுட்பமாக வுணர்ந்து நற்பயன் அடைய என்க.

## இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

பசி கடவுள் என நின்று உடலுயிர்களை இயக்கி வருகிறது.
அஃது இல்லையாயின் உயிர்கள் இயங்கா.
எல்லா நலங்களும் அதன்கண் உள்ளன.
அதனால் தவம் விளைகின்றது.
ஒளி வளர்கின்றது.
உயிர் உயர்கின்றது.
அதனைப் பேணாது உண்டால் பிணிகள் பெருகும்.
யாவரும் பசிமுன் அடங்கி நிற்பர்.
அரசரும் அதனை ஆதரித்தெழுவர்.
கண்கண்ட தெய்வமாய் அது யாண்டும் கனிந்துள்ளது.

ங-வது பசி முற்றிற்று.

# நான்காவது அதிகாரம்

## ப ழ க் க ம்

இது மனிதனுடைய பழக்கத்தின் பான்மையை உணர்த்துகின்றது. நடைமுறையில் நாளும் பழக விளைதலால் பழக்கம் என வந்தது. செயற்கை நிலையில் திரண்டு யாண்டும் தொடர்ந்து மக்களை இயக்கி வருதலின் இயற்கையான பசியின் பின் இது வைக்கப்பட்டது. பழகிய வாசனை வழியே பிறவிகள் வந்துள்ளன.

31. பாரில் மனிதன் பழக்கத்தின் கட்டாக
நேரில் நிமிர்ந்து நிலவுகின்றான்—ஓரினது
நல்லதெனின் நல்லனும் நண்ணியது தீயதேல்
புல்லனென நிற்பன் பொலிந்து. (க)

இ—ள்

மனிதன் பழக்கத்தின் பிண்டமாய் வெளிப்பட்டு விளங்குகின்றான்; அப்பழக்கம் நல்லதாயின் அவன் நல்லவனும்; தீயதானல் தீயன் எனத் திகழ்ந்து நிற்பன் என்றவாறு.

புல்லன் = அற்பன். நல்லது பழகி நல்லவனாய் உயர்க.

நேரில் என்றது பாரறிய வெளியே தோன்றி நிகழ்தலை.

பழக்கத்தின் கட்டு என்றது தான் பழகி வந்துள்ள பழக்கத்தின் அளவே மனிதன் தலை எடுத்து உலகில் நிலவுகின்றான் என்னும் அந்த நிலை தெரிய நின்றது.

கட்டு என்ற குறிப்பினல் அது உயிர்களைப் பிணித்திருக்கும் பிணிப்பும் அதற்கு மாருக மீறி யாதும் அவை வேறுபட முடியாமை என்பதும் உணரலாகும்.

பழக்கத்தின் வயப்பட்டே மனிதன் பழுத்து வருகின்றான்; அவன் இனிப்பதும் புளிப்பதும் அதன் இயல்பைப் பொறுத்துள்ளன.

மனிதனைப் பெரியவனுக்கவும் சிறியவனுக்கவும் பழக்கம் வல்லது ஆதலால் அதனை நல்லதாக நன்கு ஆராய்ந்து கொள்ள வேண்டும் என்பது கருத்து.

32. பொல்லாப் பழக்கம் புகுந்தநாள் தாமரைநூல்
புல்லியது போன்மெலிதாய்ப் பூண்டுநிற்கும்—மெல்ல
இருநாள் கழியின் இருந்தேர் வடம்பின்
ஒருவா இருப்புத் தொடர். (உ)

இ—ள்

பொல்லாத பழக்கம் முதல் நாள் மெல்லிய தாமரை நூல் போல் மெலிந்திருக்கும்; மறுநாள் கயிருய் வரும்; இருநாள்

கழியின் தேர் வடமாய்ப் பெருகி யெழும்; அதன்பின் வலிய இரும்புச் சங்கிலி போல் நெடிதாய் நிமிர்ந்து அது நீண்டு நிற்கும் என்பதாம்

இரும்பு என்பது இருப்பு என வலிந்து வந்தது. தொடர் = சங்கிலி. ஒருவுதல் = நீங்குதல். நீக்கமின்றி வீக்கி நிற்கும் தொடரின் தொடர்பு தெரிய இத் தொடர் மொழி வந்தது.

பொல்லா என்றது குடி சூது கோள் முதலிய தீய தொடர்புகளை.

ஒரு கெட்ட பழக்கம் முதலில் படிந்த பொழுது மிகவும் மெலிதாயிருக்கும்; அச் சமயம் அதனைத் துடைத்து விடுதல் எளிதாம்; துடையாது நின்றால் அது வலிதாய் வளர்ந்து உள்ளத்தையும் உணர்வையும் கவர்ந்து கொள்ளும்: கொள்ளவே உயிர்கள் அதன் வசமாயிழிந்து பழி வழிகளில் உழந்து பாழாய் ஒழிந்து போம் என்க.

நூல், கயிறு, வடம், சங்கிலி என்ற குறிப்பினால் பழக்கத்தை ஒருநாள் நிலைக்க விட்டாலும் மறுநாள் அதனை நீக்க முடியாமல் மனிதன் நிலை தளர்வான் என்பது புலனாம்.

பழக்கம் இரும்புச்சங்கிலிபோல் மனிதனை இறுகப் பிணித்து விடும்; அப் பிணிப்பிலிருந்து தப்ப இயலாது; இந் நுட்பத்தை உய்த்துணர்ந்து கெடுதலான பழக்கம் யாதும் படியாமல் அடி நாளே அடியோடு அதனை ஒழித்து விடவேண்டும்என்பது கருத்து.

33. தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்பின்
ஓட்டித் தொடரும் உறுதியால்—கெட்ட
பழக்கம் சிறிதும் படியாமல் நல்ல
வழக்கம் வளர வளர். (௩)

இ—ள்

இளமையில் பழகிய பழக்கம் இறுதி வரையும் உறுதியாகத் தொடரும் ஆதலால் முதலிலேயே தீயதை அணுகாமல் நல்லதை நாடிக் கொள்க என்றவாறு.

"தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்" என்பது இந் நாட்டில் வழங்கிவரும் பழமொழி. மனிதனது நிலையையும் பழக்கத்தின் இயல்பையும் இது எவ்வளவு அழகாக உணர்த்தி நிற்கிறது!

பிள்ளைப் பருவத்தில் நல்ல பழக்கங்களைப் பழகிக் கொள்ள வேண்டும்; இல்லையானால் சாகும் வரையும் தொல்லையாகும்; செத்தொழிந்தாலும் தொட்டு வந்த கெட்ட பழக்கம் விட்டொழியாது; இதனை உய்த்துணர்ந்து உயர் நலம் தழுவி உய்தி பெறுக.

ஒரு நாள் பழகியது உள்ளத்தில் படிந்து உடல் அழிந்தாலும் தான் அழியாமல் உயிரைத் தொடர்ந்து நிற்கும் ஆகலான் நல்ல பழக்கத்தை இளமையிலேயே நலமுற ஆராய்ந்து கொள்க. படியாமல் என்றது இருபொருள்பட நின்றது. தீயதை நீ பழகிக்கொள்ளாமலும், உன்னிடம் அது படிந்து விழாமலும் பாதுகாத்து வருக என்றவாறு.

கொஞ்சமும் கூடாவகை நெஞ்சம் பேணுக என்பார் சிறிதும் என்றார். கெட்டது அணுவளவே ஆயினும் எட்டிவிதைபோல் இன்னல்களை விளைக்கும்; அது எவ்வழியும் யாதும் நண்ணுதபடி கண்ணூன்றி நோக்கிக் களைந்து போக்கி எண்ணூன்றியருள்க என்பதாம்.

கெட்ட பழக்கம் உயிரைக் கெடுத்துவிடும் ஆதலால் அதனை யாண்டும் ஒட்டாது ஒழுகுக என்பது கருத்து.

---

34. தீய பழக்கம் தினையளவே ஆனாலும்
நேய முடன்சிலநாள் நீளவிடின்—மாய
மலையாய் வளர்ந்து வலுதீய னாக்கிப்
புலையாடச் செய்யும் புகுந்து. (ச)

இ-ள்.

தினை அளவு தீயபழக்கமும் நாளடைவில் மலையளவாய்ப் பெருகி நல்ல மனிதனையும் பொல்லாத கொடியனாப் புலைப்படுத்திவிடும் என்பதாம். வலுதீயன்—எவ்வழியும் திருந்தாத திண்ணிய தீவினையாளன்.

தினை என்பது தானிய வகையுள் ஒன்று. நுண்ணிய உருவினது. கடுகு அணு என்பனபோலச் சிறிய அளவுக்கு ஓர் எடுத்துக்காட்டாக ஈண்டு அது இசைந்து நின்றது.

காலமும் பயிற்சியும் சாலவும் சிறிதே யாயினும் தீயபழக்கம் மாய மலையாய் வளர்ந்து தூய உயிர்களைத் தீயனவாக மாற்றி மாயச் செய்யும் என்க. எனவே அதன் தீமையும் திண்மையும் நன்கு புலனும்.

நொடிப்பொழுது தொட்ட பொடிப் பழக்கமும் பின்பு யாதும் விடுப்பரியதாய் மனிதனை வடுப் படுத்திக் குடிப்பழி செய்து வருதலைப் படிப்படியாக உலகம் பார்த்து வருகின்றது.

புலையாடச் செய்யும் என்றது தலைமையான நிலைமை மாறி ஈனமாய் இழிந்துபடும்படி மோனமா அது இயற்றிவிடும் என்றவாறு. புகுந்து என்றது வலிந்து இடங்கொண்டு அஃது அடியூன்றி நிற்கும் அடல் தோன்ற நின்றது. உள்ளே புகவிடாதே என்பதாம்.

பழக்கத்தின் வளர்ச்சியும் வன்மையும் வியத்தகு நிலையின; தீயதை முளையிலேயே கிள்ளி எறிக; எறியாமல் ஏமாந்து இருப்பின் அது வலிதாய் ஓங்கி உன்னை நிலைதிரியச்செய்து நீசன் ஆக்கி முடிவில் எரிவாய் நரகில் கொடிதாய்த் தள்ளிவிடும் என்பது குறிப்பு.

எள்ளள வேனும் இழிபழக்கம் ஈனமெல்லாம்
உள்ளள வீனும் உணர். (அரும்பொருளமுதம்)

என்பதை உணர்ந்து உறுதி நலம் பெறுக என்பது கருத்து.

---

35. சார்ந்த இனத்தின் தகவே உயிரினங்கள்
நேர்ந்து திகழும் நிலைமையால்—ஓர்ந்துமுன்
நல்லாரை நாடி நயக்க நயமிலாப்
பொல்லார் ஒழிக புறம். (௫)

இ-ள்.

தாம் மருவிய இனத்தின் இயல்புக்குத் தக்கபடியே உயிரினங்கள் உயர்வு தாழ்வுகளை அடைகின்றன; ஆகலான், பொல்லாரைப் புறம் ஒதுக்கி நல்லாரை நாடிக் கூடிக்கொள்க என்றவாறு.

மனிதர் மாத்திரமே யன்றி மிருகங்களும் பறவைகளும் கூடத் தாம் சேர்ந்த இனத்தின்படியே செயல்நிலைகள் நேர்ந்து வருகின்றன; ஆதலால், உயிர் இனங்கள் என வந்தது. "பன்றியோடு சேர்ந்தால் கன்றும் மலம் தின்னும்" என்னும் பழமொழி இந்நாட்டில் எங்கும் வழங்கி வருகின்றது. இதனல் ஈனச் சேர்க்கையால் விளையும் இழிநிலை தெளிவாம்.

நல்லாரை நாடி நயக்க என்றது சொல்லாலும் செயலாலும் பல்வகையிலும் ஆராய்ந்து நல்லவரைத் தெளிந்து தமராகத் தழுவிக் கொள்க என்றவாறு. நயத்தல்—நயந்து பேணுதல்.

பளிங்கு போலவே மனிதன் சார்ந்ததன் வண்ணமாய் நேர்ந்து விடுகின்றான் ஆதலால் முதவிலேயே புன்மையாளரைப் புறம் ஒதுக்கி நன்மையாளரை அவன் ஓர்ந்துகொள்ளவேண்டும் என்க.

நல்லார் என்றது தருமகுண சீலரை.

பொல்லார் என்றது தீவினை யாளரை.

நயம் இலா என்றது அவரது இயல்புணர வந்தது. நயம்—நன்மை, அறம். பயன் உணர்ந்து பயில்க என்றபடி.

புறம் ஒழிக என்றது அயலே யாதும் அணுகலாகாது என்றவாறு.

தீவினை புரியும் பாவகாரிகளுடன் ஒரு சிறிது பழகினும் உள்ளம் பழுதாய் ஊனங்கள் விளையும் ஆகலான் அவ்வீனங்களை யாண்டும் அணுகாமல் அமைந்து ஒழுகவேண்டும் என்பதாம்.

"தீய ரோடுசிறிது சேரினும் தூயரும்
பேயராய் வீழ்வர் பிறழ்ந்து."

என்றதனால் பொல்லாச் சேர்க்கையின் புலைநிலை புலனும்.

---

36. நல்லனெனத் தீயனென நானிலத்தில் மானிடன்மேல்
ஒல்லை நிலவி ஒளிர்தல்தான்—தொல்லையின்கண்
உற்ற பழக்கத்தின் உள்ளளவே ஆதலினால்
பற்றுக நல்ல பரிந்து. (௬)

இ-ள்.

தன் உள்ளத்தில் படிந்த பழக்கத்தின்படியே ஒரு மனிதன் நல்லவன் அல்லது தீயவன் என உலகத்தில் வெளிப்பட்டு வருகின்றான்; ஆகவே ஒருவன் நலமுற வேண்டின் முதலிலேயே நல்ல பழக்கத்தை நயந்து கொள்க என்றவாறு.

தொல்லையின்கண் என்றது ஆதியில் என்றவாறு.

பிறந்த பிறப்பின் இளமையையும், இறந்த பிறப்புக்களின் பழமையையும் கிழமையாக அது குறித்து நின்றது,

நினைவரும் நிலையில் வினைவயப்பட்டு உயிர்கள் பிறவியில் உழன்று வருகின்றன. அவ்வரவில் மூன்று வாசனைகள் அவற்றைத் தோய்ந்துள்ளன. அவை மூலவாசனை, சூலவாசனை, காலவாசனை, எனப்படும். பிறப்பதற்கு முன்னும், கருவுற்றிருக்கும் காலத்தும், பிறந்த பின்னும் என மூவகை நிலைகள் உயிரின்கண் உறைந்திருக்கின்றன. அந்தப் படிமுறைகளில் படிந்துள்ள தொடர்புகளை வாசனை என்பர்.

முன்னது பூர்வ வாசனை; இடையது கருப்ப வாசனை; பின்னது பழக்க வாசனை என்க. ஆதியில் உள்ள அது புனிதமுடையதாயின் அம்மனிதன் எவ்வழியும் தனி உயர்ந்து திகழ்வன். இரண்டாவது கருவாசனை, தாய் தந்தையர்களுடைய மன நிலைகளின் அளவுகளை மருவி மிளிரும். மூன்றாவது வாசனை பிறந்த இடம், இருந்த காலம், பயின்ற கல்வி, சார்ந்த இனம், சூழ்ந்த சூழல் என்னும் இவற்றின் இயல்புக்குத் தக்கபடி பசைந்து அயலே இசைந்து நிற்கும்,

இம்மூன்றும் நல்லனவாயின் அவ்வுயிர் செவ்விய நிலையில் எங்கும் சிறந்து விளங்கும். குடிப்பிறப்பு பரம்பரைக்குணம் என்பன வெல்லாம் இடையிலுள்ளதை அடிப்படையாக் கொண்டு நிற்கின்றன.

இறுதியிலுள்ள பழக்க வாசனையே மறுபடியும் பிறவிக்கு மூல மாய்ப் பெருகி வருதலால் அதன் நிலைமை எவ்வளவு பொறுப்பில் நிலைத்துள்ளது என்பது தெளிவாம்.

உற்ற பழக்கம் உயிர்க்குறுதி என்னினதன்
பேற்றி தேளிக பேரிது.

பழக்கத்தை நல்லதாகப் பரிந்து பேணுக என்பது கருத்து.

---

37. கெட்ட பழக்கம் கெடுநோய் எனவிரைந்
தொட்டி உயிரை உறிஞுமால்—எட்ட
வருமுன் அறிந்து வரைக வரினே
எரிமுன் துரும்பே இடர். (எ)

இ-ள்.

கெட்ட பழக்கம் தீயநோய் போல் விரைந்து உயிரைக் கவர்ந்து கொள்ளும்; அக்கொடுமையை உணர்ந்து உடனே அதனை ஒழித்து விடுக; ஒழியாதிருப்பின் எரிமுன் துரும்பாய் நீ அழிவாய் என்றவாறு.

கெடுநோய் என்றது கொடிய தொத்து நோய்களை.

விரைந்து பரந்து உதிரங்களைத் திரித்து உடல்களை ஒழிக்கும் தீய நோய்கள்போல், தீயபழக்கங்கள் உணர்வுகளைக் குலைத்து உயிர்களைக் கெடுத்துவிடும் ஆதலால் இவற்றிற்கு அவை உவமைகளாய் வந்தன.

வரைக = ஒதுக்கித் தள்ளுக. வருமுன் வரைக என்றது, வந்து நுழைந்தபின் யாதும் செய்யமுடியாமை கருதி. வெய்ய நிலை தெளிந்து செய்வன செய்து உய்தி புரிக என்றபடி.

கை கால்கள் அழுகிய தொழு நோயர்களை அருவருத்து ஒதுங்கு வதினும் இழி பழக்கங்களை மிகவும் வெறுத்து ஒதுங்குக என்பதாம். அந்நோய் உடலை ஒட்டி உருவைக் குலைக்கும்; இது உள்ளத்தைப் பற்றி உயிரைக் கெடுக்கும் என்க. எனவே குட்ட நோயினும் கெட்ட பழக்கம் கொடியது என்பது புலனும்.

எரிமுன் துரும்பு என்றது அழிவின் விரைவும் தெளிவும் உணர வந்தது. எரி = தீ. எய்தியதை எரித்து அழிப்பது என்பதாம்.

தீய பழக்கத்தை ஒரு நாள் தொடின், மறுநாள் அது நேய வழக்கமாய் நிலைத்துவிடும்; விடவே அதன் கொடுமையை உணராது மனிதன் அடிமையாய் அமர்வான்; அமரவே அது அவனை அடியோடு கெடுத்துவிடும் என்க. அக்கெடு மூலம் படியுமுன் கடிக என்பது கருத்து.

பழக்கம் முதல்நாள் படியின் அதுவே
வழக்கம் மறுநாள் வரும். (அரும்பொருளமுதம்)

என்றமையால் பழக்கத்திற்கும் வழக்கத்திற்கும் உள்ள பருவ உருவங்களின் வேறுபாடுகளை நன்கு அறியலாகும்.

கெட்ட பழக்கம் எல்லா நலங்களையும் கெடுத்து மனிதனை ஈனப்படுத்திவிடும் ஆதலால் அப் படுநீசம் யாதும் படியாமல் நெடிது பேணி இனியனாகிப் புனிதமுடன் வாழ்க என்பதாம்.

---

38. கள்ளன் கொலைஞன் கடியன் கொடியனென
எள்ளலுற நேரும் இழவெல்லாம்—உள்ளம்
படிந்த பழக்கமே பாழாகி அங்ஙன்
முடிந்தன என்க முதிர்ந்து. (அ)

இ-ள்,

தம் உள்ளம் படிந்த பழக்கமே கள்வர் கொலைஞர் கடியர் கொடியர் எனப் பொல்லா நிலைகளில் திரித்து மனிதரைப் புலையாடச்செய்கின்றது என்றவாறு. இழவு என்றது ஆன்ம நாசமான அந்நீசம் தெரிய.

அங்ஙன் = அப்படி; அவ்விதம். படிதல் = தோய்தல்.

இளமையில் நெஞ்சில் தோய்ந்த ஈனப் பழக்கங்களே நீசவழக்கங்களாய் நிலைமாறி மக்களை நாசப் படுத்துகின்றன; அகத்தே அறிவுக் கண் குருடுபட்டமையால், புறத்தே திருடர் முருடர் எனப் புருடர் புலப்படுகின்றனர். இப் பழிபட்ட நிலைகளுக் கெல்லாம் பழக்கமே மூல முளையாம்; ஆகவே அத் தீய வித்துக்கள் தூய மனத்தில் தோயாதபடி தொலைத் தொழிக்கவேண்டும் என்க.

களவு முதலிய இழிவினைகளைத் துணிந்து செய்பவரும் அவை பிழைபாடுடையன என்று தெளிவாக உணர்வர்; ஆகையினாலேதான் ஒளி மறைவாய் நின்று அவ்வெய்ய செயல்களைச் செய்ய நேர்கின்றனர். "கள்ள மனம் துள்ளும்" என்னும் பழமொழியால் அவர் உள்ளமும் உடன்படாது துடிக்கும் என்பது புலனும். இப்படி நெஞ்சுகடி தீமைகளை அஞ்சாது செய்து அநியாயமாய் உயிர்கள் அழிநரகடையுமாறு பழிபழக்கங்கள் பண்ணிவிடுகின்றன.

பிறர் பொருளை அயல் அறியாமல் கவர்ந்து கொள்வது களவு எனப்படும். ஈனமான இக் கள்ளம் யாண்டும் எள்ளப் படுகின்றது. களவு கொலை பொய் முதலிய நீசங்களை மனித சமூகம் எங்கும் என்றும் வெறுத்து நிற்கின்றது; நின்றும், சிலர் நிலை திரிந்து தலைமறைவாய் அவற்றைச் செய்து வருகின்றனர்; செய்கின்ற அவர்க்கும் அவை நவை என்று தெரியும்; தெரிந்தும் பழக்க வாசனையால் உள்ளம் மழுங்கி, உணர்ச்சி குன்றி, உறுதி இழிகின்றார் என்க.

பழக்கத்தின் கொடுமையும், மனிதவருக்கத்தை அது கெடுத்துவரும் கேடும் இதனால் இனிது புலனும்.

இனிய மனிதரை இன்னாதாராக்கிக் குடிகேடு செய்யும் கொடிய பழக்கங்களை அடியோடு நீக்கிப் புனிதம் அடைக என்பது கருத்து.

நல்ல வுயிரை நவையாக்கும் புன்பிழைகள்
ஒல்லை ஒழிக உணர்ந்து. (அரும்பொருளமுதம்)

---

39. கல்வி யறிவு கனிந்து கருத்தொத்து
நல்லியல்பு நன்கமைந்து நண்ணிடினும்—புல்லியர்தம்
பாலணுகி நாளும் பழகல் பழகினே
சீலம் திறம்பும் தெளி. (கூ)

இ-ள்.

சிறந்த கல்வியறிவும் உயர்ந்த எண்ணங்களும் நல்ல தன்மைகளும் நன்கு அமைந்திருப்பினும் புன்மையாளரோடு நீ பழகற்க; பழகினால் உனது செம்மை நீங்கி வெம்மை ஓங்கும் என்றவாறு.

சீலம் = நல்ல ஒழுக்கங்கள். திறம்பும் = நிலைகுலைந்துபோம்,

புல்லியர் என்றது இழிந்த பழக்கங்களையுடைய அற்பர்களை.

கள்ளம் முதலிய தீமைகள் எல்லாம் உள்ளம் பழகிய தீயபழக்கங்களால் ஆயின என முன்னம் அறிந்தோம்; அங்ஙனம் நிலைமாறிப் புலையானவர்களோடு யாதும் பழகலாகாது என்பதை இது உணர்த்தி நின்றது.

எவ்வளவு நலமுடையராயினும் வெவ்வினையாளருடன் பழகின் அவ்வளவும் பாழாய் அவரும் தீயராய் இழிந்து கெடுவர் என்பதாம்.

இயல்பாகவே நல்லவனாயினும் பொல்லாதாருடன் சேரின் எல்லா நலமும் தொலைந்து இழிவுற நேரும் என்றமையால் அப்பழக்கத்தின் அழிதுயர் தெளிவாம்; செயற்கைச் சிறுமையால் இயற்கைப் பெருமை கெடும் ஆதலால் அங்ஙனம் பழுதுபடாமல் பார்த்துக்கொள்க என்றபடி.

உள்ளும் புறனும் நலமுறும்படி நாளும் நல்லவரோடே பழகி ஒல்லையில் உயிர்க்குறுதிசெய்து வரவேண்டும் என்பது கருத்து.

---

40. நல்ல நினைக நலம்புகல்க எவ்வுயிர்க்கும்
ஒல்லை இதமாய் உதவி செய்க—எல்லா
வழியும் இனிய வகையே பயில்க
ஒழியும் பிறவி யுடன். (ம

இ-ள்.

நல்ல எண்ணங்களையே எண்ணுக; பயனுடைய மொழிகளையே பேசுக; எவ்வுயிர்க்கும் இனியனாய் நின்று எங்கும் இதங்களையே செய்க; எல்லா வழிகளிலும் நல்லவையே பழகுக; இவ்வாறு புரிந்து வரின் வெவ்விய பிறவி விரைந்து ஒழிந்துபோம் என்றவாறு.

மனம் வாக்கு காயம் ஆகிய மூன்றும் யாண்டும் இனியவழிகளில் பழகுக என்றபடி. நினைவை முதலில் குறித்தது, சொல்லுக்கும் செயலுக்கும் அது மூலகாரணம் ஆதலின் அதன் நிலைமையையும் தலைமையையும் தனிமையாக உணர்ந்துபேண என்க. எண்ணம் நல்லது ஆயின், சொல்லும் செயலும் என்றும் நல்லனவாகவே யிருக்கும்.

தீய எண்ணங்கள் நஞ்சுதோய்ந்த பால்போல் நெஞ்சைப் பாழ்படுத்திவிடும்; விடவே உணர்வு பாழாய் உயிர் நாசமடையும் ஆகலின், கெடுமூலமான அத்தீமைகளைக் கனவிலும் கருதாமல் நல்ல சிந்தனைகளையே நாளும் நயந்து பழகி வருக என்பார் நல்ல நினைக என்றார்.

`பயில்க என்றது பழக்கத்தின் இயல்பான பயிற்சி தோன்ற வந்தது.

நிலத்தைப் பண்படுத்தி அதில் நல்ல வித்துக்களை விதைத்தால் இனிய பலன்கள் பல விளைந்து இன்பம் பயக்கும்; அங்ஙனம் விதையாது விடின், கெட்டவித்துக்கள் விழுந்து முளைத்துக் கேடு விளைக்கும். அதுபோல், நெஞ்சில் நல்ல நினைவுகளை நினையாது விடின் தீய எண்ணங்கள் புகுந்து வளர்ந்து தீங்கு புரியும் என்க. எனவே நல்ல சிந்தனைகள் எவ்வளவு உரிமையோடு உறுதியாக நாளும் பழகிவர உரியன என்பது இதனால் நன்கு அறியலாகும்.

எவ்வுயிர்க்கும் என்றது பறவை, விலங்கு, ஊர்வன, நீர்வாழ்வன முதலிய எல்லாப் பிராணிகளுக்கும் என்றவாறு.

ஒருவன் பிற உயிர்கட்குச் செய்யும் உதவிநலங்களெல்லாம் தன் உயிர்க்கே நன்மையாய்த் தழைத்து வருகின்றன; வரவே அப் புண்

ணியப் பெருக்கால் எண்ணிய போகங்களையெல்லாம் இனிது நுகர்ந்து மேன்மேல் உயர்ந்து முடிவில் முடிவிலின்பமான முத்திப் பேற்றை உறுதியாக அடைவன் ஆதலால் "பிறவி ஒழியும்" என்றார்.

மனிதன் புனித மனமுடையனாய்த் தினமும் இனிய பழக்கங்களைப் பழகிவரின் அவன் பிறவி நீர்ந்து பேரின்பம் பெறுவான் என்க.

முக்கரணங்களையும் தக்க வகையாகப் பாதுகாத்து, எவ்வுயிர்க்கும் இதமாய் ஒழுகி, யாண்டும் நல்ல பழக்கங்களையே மக்கள் பழகி வரவேண்டுமென்பது கருத்து

இன்சொல் விளைநிலமா ஈதலே வித்தாக
வன்சொற் களைகட்டு வாய்மை எருவட்டி
அன்புநீர்ப் பாய்ச்சி அறக்கதிர் ஈனுமோர்
பைங்கூழ் சிறுகாலைச் செய். (அறநெறிச்சாரம்)

---

### இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

மனிதன் பழக்கத்தின் பழம்.

பழகிய படியே பழுத்து வருகின்றான்.

நல்ல பழக்கம் நலம்பல நல்கும்.

கெட்ட பழக்கம் கேடெல்லாம் விளைக்கும்.

பொல்லாதவற்றைப் புறமே தள்ளுக.

நல்லனவற்றை நயந்து கொள்ளுக.

தீய பழக்கம் நோயினும் தீயது.

இழிபழக்கமுடையாரே பழிகளை விளைத்துப்பாவிகள் ஆகின்றனர்.

இழிந்தவருடன் பழகின் உயர்ந்தவரும் கெடுவர்.

நல்லது நினைந்து, நல்லது மொழிந்து, நல்லது பழகினர் எல்லா நலங்களையும் எளிதே அடைந்து இன்பம் பெறுவர்.

௪-வது பழக்கம் முற்றிற்று.

---

# ஐந்தாவது அதிகாரம்
## பெற்றோரைப் பேணல்.

அஃதாவது பெற்ற தாயையும் உற்ற தந்தையையும் உரிமை யுடன் பேணி மைந்தர் உபசரித்தல். உயிர்க்கு உறுதியான நல்ல பழக்கங்களைப் பழகி எல்லா மேன்மைகளையும் அடைதற் குரிய மக்கள் முதன்மையாக உணர்ந்து ஒழுகவேண்டிய கடமை களுள் இது தலைமையானது ஆகலின் பழக்கத்தின்பின் வைக்கப் பட்டது. மூலமூர்த்திகளை முதலில் தெளிந்து தொழுகஎன்பதாம்.

41. கண்ணெதிரே கண்ட கடவுளாயர் தாய்தந்தை
எண்ணெதிரே காண எதிருண்டோ—மண்ணெதிரே
வந்தருளி நம்மை வளர்த்தருளும் மாமுதலை
முந்து பணிக முனைந்து. (க)

இ-ள்

தாயும் தந்தையும் நமக்கு நேரே கண் கண்ட தெய்வங்களாய் நிலவியுள்ளனர்; நம்மைப் பெற்றருளியுள்ள அப்பேராளரைப் பேரன்போடு வணங்கி வழிபட்டுச் சீராட்டிப் பாராட்டி நாளும் நன்கு போற்றி வரவேண்டும் என்றவாறு.

தாய் தந்தையரைக் கடவுள் என்றது உடலுயிர் உதவியுள்ள அவர்தம் நிலைமையும் தலைமையும் நினைந்து.

சகல சீவகோடிகளுக்கும் ஆதாரமாய்த் தலைமையான ஒரு பொருள் நிலவி யுள்ளது. அப் பரம்பொருளைக் கடவுள் என வழங்கி வருகின்றோம். எல்லாவற்றையும் படைத்துக் காத்து அருளுகின்றது என்று நம்பிப் பயபத்தியுடன் அதனைப் போற்றி வழிபடுகின்றோம். ஆனால் யாரும் நேரே காணவில்லை.

நம்மைப் பெற்றுப் பேணி ஆர்த்தியோடு அருள்புரிந்துள்ள மாதா பிதாக்களை நேரே பார்த்து நிற்கின்றோம். யாண்டும் காணாமல் உண்டு என ஊகமாய் நம்பியுள்ள அந்தப் பொதுத் தெய்வத்திலும் கண் எதிரே கண்டுள்ள இந்தச் சிறப்புத் தெய்வங்கள் நமக்கு மிகவும் உரிமை யுடையன. இவ்வருமையை உணர்ந்து அவரைப் பெருமையாகப் போற்றி வருக என்பதாம்.

"அம்முளின் என்ன கடவுளும் இல்" (நான்மணிக்கடிகை)

" தாயிற் சிறந்தொரு கோயிலும் இல்லை "
" அன்னையும் பிதாவும் முன் அறி தெய்வம் " (கொன்றைவேந்தன்)

இன்னவாறு முன்னோர் குறித்துள்ளவை ஈண்டு எண்ணத்தக்கன.

உலகிலுள்ள எல்லாப் பொருள்களினும் பெற்றோர் மக்களுக்குப் பெருமை மிக்க பொருள் ஆகலான் மா முதல் என நின்றார். மூலமுதலான இந்த மூர்த்திகளை உள்ளன்போடு நாளும் உவந்து போற்றி உபசரித்து வரவேண்டும் என்பது கருத்து.

---

42. ஆதி முதல்வனையும் அம்மையப்பா என்றுநாம்
ஓதி யுணர்ந்துள் ளுருகுகின்றோம்—ஈதினுல்
ஈன்றார் உயர்வும் இயல்பும் இனிதாகத்
தோன்றல் உணர்க தொடர்ந்து. (உ)

இ-ள்.

கடவுளையும் அம்மையப்பா என்று கூவியே நாம் அன்பு செலுத்தி வருகின்றோம்; இதனால் உண்மையான அம்மை அப்பர்களுடைய உயர்வும் தகவும் உணர்ந்துகொள்ளலாம் என்றவாறு.

மனிதன் கடவுள் அருளை வேண்டிக் கைதொழும்பொழுது அவரைத் தாயாகவும் தந்தையாகவுமே பாவித்து வாயார வாழ்த்துகின்றான்.

" அம்மையே ! அப்பா ! ஒப்பிலா மணியே ! அன்பினில்
விளைந்த ஆர் அமுதே !" (திருவாசகம்)

" என்னப்பன் எனக்கா யிகுளாய் என்னைப்பெற்றவளாய்
பொன்னப்பன் மணியப்பன் முத்தப்பன் என்னப்பனுமாய்
மின்னப்பொன் மதிள்சூழ் திருவிண்ணகர் சேர்ந்த அப்பன்
தன்னொப்பாரில்லப்பன் தந்தனன் தன தாள்நிழலே."
(திருவாய்மொழி)

" தடித்தஓர் மகவைத் தந்தைஈண் டடித்தால்
தாயுடன் அணைப்பள்; தாயடித்தால்,
பிடித்தொரு தந்தை அணைப்பன் ஈண் டெனக்குப்
பேசிய தந்தையும் தாயும்
பொடித்திரு மேனி அம்பலத்தாடும்
புனிதனீ ஆதலால் என்னை
அடித்தது போதும் அணைத்திட வேண்டும்
அம்மையப்பா ! இனி ஆற்றேன்." (திருவருட்பா)

"அன்னேஎன் அத்தாஎன்று அமரரால் அமர" (சுந்தரர்).
"ஈன்றாளுமாய் எனக்கு எந்தையும் ஆய்" (அப்பர்).

• பேரன்புடைய பெரியோர்கள் இறைவனை நோக்கி இங்ஙனம் பாடியிருக்கின்றனர். காணாத தெய்வத்தைக் கனிந்து பாடுங்கால் கண் கண்ட தெய்வமாகிய தாயையும் தந்தையையும் இவ்வாறு முன்கொண்டு கூறி முதன்மையை உணர்த்தினர் என்க.

என்பும் உருகும் அன்புரிமையில் முன்பு இருக்கத்தக்கவர் அன்னையும் பிதாவுமே என்பது இதனால் நன்கு அறியலாகும்.

"எப்புவி களும்புரக்கும் ஈசனைத் துதிக்குங் காலை
அப்பனே தாயே என்போம்; அவரையே துதிக்கவேண்டின்
ஒப்பனை யுளதோ வேலை யுலகிற்கட் புலனில் தோன்றும்
செப்பரும் தெய்வமன்னார் சேவடி போற்றாய் நெஞ்சே."

என்பதும் ஈண்டுச் சிந்திக்கத் தக்கது.

முன்னறி தெய்வமாய் முதன்மை எய்தியுள்ள தாய் தந்தையர்களுடைய அருமை பெருமைகளை உணர்ந்து உரிமையோடு பூசித்து உய்க என்பதாம்.

---

43. அன்புருவ மான அருமைத்தாய் போலெவரே
இன்புதவி நம்மை இனிதளிப்பார்—என்புருகி
அன்னாள் பணிபுரிந் தார்வமுடன் போற்றிவரல்
நன்னாளே யாகும் நமக்கு. (௩)

இ-ள்

அன்புமயமான அருமைத் தாய்போல் மக்களுக்கு இன்பம் புரிவார் எவரும் இலர்; இத்தகைய அந்தப் பெருங் கருணைத் தெய்வத்தை ஆர்வமுடன் பேணி வருதலே நமக்குக் காணியான கடமையாம் என்றவாறு.

மற்றவரெல்லாரும் நினைந்து உவந்து மனம் கனிந்து வலிந்து அன்புசெய்யவேண்டும்; பெற்றதாய் அங்ஙனமின்றிஇயல்பாகவே என்புருகு நிலையில் மைந்தன்பால் அன்பு சுரந்துள்ளமையான் "அன்பு உருவம்" என நின்றாள். பரிவு மீதூர்ந்து அவள்போல் உளம் உருகி அளிபுரிவார் யாரும் இலர் என்க.

குழந்தைக்கு ஏதேனும் நோய் தோன்றினால் அந்த இளங் குடல் மருந்தின் வேகத்தைப் பொறாது என்று கருதி அதனைத்

தானே உண்டு பால் வழியே அது பயன்படும்படி நயனாக ஊட்டித் தாய் நன்கு போற்றியருள்வள்; இது எவ்வளவு கருணை! அத்தகைய அருள்நல முடைமையால் தெய்வத்தினும் சிறந்தவளாக வையம் அவளை வாழ்த்தி வருகின்றது.

“பால்உண் குழவி பசுங்குடர் பொறாதென
நோய்உண் மருந்து தாய்உண் டாங்கு
மன்னுயிர்த் தொகுதிக்கு இன்னருள் கிடைப்ப
வையம் ஈன்றளித்த தெய்வக் கற்பின்
அருள்சூற் கொண்ட ஐயரித் தடங்கண்
திருமாண் சாயல் திருந்திழை காணச்
சிற்சபை பொலியத் திருநடம் புரியும்.”

(சிதம்பரமும்மணிக்கோவை, 2)

“இளங்குழவிப் பிணிக்குஈன்ற தாய்மருந்து நுகர்வதுபோல் இருளின் மாண்ட
களங்குல்வு மலமுயிர்கட் கொழியவருள் நடங்காணும் கடன்மீக் கொண்டு
வளங்குலவு தனதுபெருங் கற்புமொரு கணவரிறை மாண்பும் தோன்ற
விளங்குமிர ணியமன்றில் நின்றருளும் மணிவிளக்கை விளம்பி வாழ்வாம்.” (திருவானைக்காப் புராணம்)

உயிர்களுக்கு இரங்கியருளும் உமாதேவிக்குத் தாயை இவற்றுள் உவமைகாட்டியுள்ளமை காண்க. சேயரிடம் தாயர் கொண்டுள்ள தண்ணளி எண்ணி அளவிடலரியது.

இவ்வளவு கருணையோடு இளமையில் பாதுகாத்து வந்த தாயை முதுமையில் ஆதரவுடன் போற்றிவரவேண்டும்; அவ்வாறு பணிந்து பணி புரிந்துவரும் நாளே பயனுடைய நாளாய் மக்களுக்கு நயன் அருளும் என்பதாம்.

அன்னையைப் போற்றும் நாளே நன்னாள் என்றதனால் அல்லாத நாள் புன்னாளாய்ப் புலைப்படும் என்பதாயிற்று. பெற்ற தாய் மனம் மகிழ உற்றசேய் ஒழுகவேண்டும் என்பது கருத்து.

கடவுளை வருந்திச் சூலாய்க் கைப்புறை யுண்டனந்தம்
இடர்களுற் றுதரந்தன்னில் ஈரைந்து திங்கள் தாங்கிப்
புடவியில் ஈன்று பன்னாள் பொற்றனப் பாலையூட்டித்
திடமுற வளர்த்து விட்ட செல்வியை வணங்காய் நெஞ்சே.

(நீதி நூல்)

44. பெற்றவரைப் பேணிப் பெரிதொழுகும் பிள்ளைகளை
மற்றவர்கள் கண்டு மனமகிழ்ந்து—சுற்றமெனச்
சூழ்ந்து தொழுவார் துறக்கத்தே அன்னவர்பின்
வாழ்ந்து மகிழ்வார் வளர்ந்து. (௪)

இ-ள்

தாய் தந்தையரைப் பேணி ஒழுகும் பிள்ளைகளை உலகத்தார் உவந்து பேணுவார்; மறுமையிலும் அவர் பெருமை மிகப்பெறுவர் என்றவாறு.

இம்மைப் பயனும் மறுமைப் பேறும் கூறிய படியிது.

மாதா பிதாக்களை ஆதரித்து வருபவர் உத்தம புத்திரராய் ஒளிபெற்று விளங்குவர்; அவரது குணநலங்களைக் கண்டு மனம் மிக மகிழ்ந்து பிறர் எல்லாரும் உறவுரிமையுடன் அவரைப் புகழ்ந்து போற்றுவர் ஆதலால் "சுற்றம் என மற்றவர்கள் தொழுவார்" என்றார்.

கடவுளை வழிபட்டு நெறியோடு ஒழுகிவரும் மக்கள் பெரியோர் எனப் பெருகி நிற்கின்றனர்; அந்நிலையினை நோக்கி உலகம் அவரை உவந்து பணிந்து வருகின்றது; காணாத ஒன்றைக் கருதி வழிபடுபவர் இவ்வளவு பெருமை அடையின் கண்கண்ட கடவுளராகிய இரு முதுகுரவரை நேரே இனிது பேணி வருபவர் எவ்வளவு மகிமையை அடைவர் என்பதை அவ்வளவையும் ஆராய்ந்து அறிந்து கொள்க என்பதாம்.

ஈன்றவர் மகிழ்தலால் அத்தோன்றல்களுக்குப் புண்ணியம் விளைகின்றது; வினையவே மறுமையில் சுவர்க்க போகங்களுக்கு உரியவராய் அவர் உயர்ந்து விளங்குகின்றார்; ஆகவே "துறக்கத்தே வாழ்ந்து மகிழ்வார்" என வந்தார்.

புகழும் புண்ணியமும் ஒருங்கே அடைந்து இருமையினும் அவர் இன்பம் மிகப்பெறுவர் என்பது கருத்து.

தாயினிற் சிறந்த தெய்வம் இலையுயர் தந்தை தன்னின்
ஏயநற் குருவும் இல்லை என்னின்மற் றிவர்கள் தாளில்
தூய்மலர் தூவி நாளும் தொழுதிடும் அறிஞர் தாமே
ஆய்கதிர் பரப்பும்பொன்னாட் டமரராய் இனிது வாழ்வார்.
(கூர்ம புராணம்)

45. பெற்று வளர்த்துவந்து பேணிக் கலைபயிற்றிப்
பற்று மிகச்செய்து பாராட்டி—உற்றுநின்ற
மாதா பிதாவை வணங்கி வழிபடுக
வேதா வணங்கி விடும். (ரு)

இ-ள்

அருமையாகப் பெற்று வளர்த்துப் பேணி யருளி யுள்ள மாதா பிதாக்களை உரிமை கூர்ந்து மக்கள் போற்றிவரின் பிரமா அவரைப் பிறவியில் நின்று நீக்கிவிடுவன் என்றவாறு.

பெற்று என்றது பிள்ளைப்பேறு கருதி உள்ளம் உருகி அருந் தவம் கிடந்து வருந்திப் பெறுகின்ற அந்நிலை தெரிய வந்தது.

பெறுதல், வளர்த்தல், பேணல், கலைபயிற்றல், கருதியுருகல், அன்பு பாராட்டல், என்னும் அருமைப்பாடுகளை எடுத்துக் காட்டியது அவர்தம் உரிமையும் உழைப்பும் உணர்ந்து உருக.

பற்று=உள்ளப்பாசம். பிள்ளைமேல் பெற்றோர் கொண்டிருக்கும் பாசம் எவரும் பேசமுடியாத பெருநிலை யுடையது. அத்தகைய உருக்கமும், இரக்கமும் இயற்கையாக வாய்ந்த உரிமையாளர் என அவர்தம் உயிர்க்கிழமை உணர வந்தது.

உணவு முதலியவற்றால் உடம்பைபேணியும், கல்வி போதனைகளால் உயிரை ஒளிபெறச் செய்தும் அளிபுரிந்து போற்றி வந்துள்ள அருட்பெருந் தகையாளரைக் கெழுதகைமையோடு நாளும் வழிபாடு செய்யவேண்டும் என்க. வேதா=பிரமன்.

மாதா பிதாவை வழிபடுவாரை வேதா வணங்கிவிடும் என்றது, அவர் பிறவி தீர்ந்து பேரின்பம் பெறுவர் என்றவாறு.

---

46. மைந்தர் உயர்நீதி மாண்புடைய ராயொழுகின்
தந்தைதாய் உள்ளம் தனிமகிழும்—மைந்தர்
பழிநிலையர் ஆயின் படுதுயர மாகி
அழிநிலை காண்ப ரவர். (சு)

இ-ள்

மைந்தர் நீதியுடையராய் ஒழுகின் அவரைப் பெற்ற தந்தை தாயர் சிந்தை மகிழ்ந்து சிறந்து திகழ்வர்; அவ்வாறன்றித் தீது புரியின் பெற்றோர் பெருந்துயரமுடையராய் வருந்தி யுழல்வர் என்க. ஈன்றவர் இன்புறச் சான்றோராய் ஒழுகுக என்றபடி.

தம்மைப் பெற்றெடுத்த மாதா பிதாக்களைப் பிள்ளைகள் பேணிவரவேண்டும் என்று முன்னர்க் கூறினார்; இதில் தாமே நல்லவராய் அவர் ஒழுகி வரவேண்டும் என்கின்றார்.

தம் புதல்வர்கள் அறநெறி நடந்து புகழ் புரிந்துவரின் அவ்வரவு இருமுதுகுரவர்க்கும் பெருநலமாய்ப் பெருகி எழுமையும் இன்பம் தரும் ஆகலான் அவர் உளம் மகிழ்வாராயினர்.

எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின். (குறள் 62)

என்றமையால் குணநலங்களுடைய பிள்ளைகளைப் பெற்றவர்கட்கு உளவாம் இன்பமும் பெருமையும் இனிது அறியலாகும்.

உணவும் உடையும் உதவிப் பெற்றோரைப் பேணி வருதல் மட்டும் போதாது; பிறந்த பிள்ளைகள் சிறந்த ஒழுக்கமுடையராய் உயர்ந்துகொள்ளவேண்டும்; அங்ஙனம் உயரின் அவர் துயரமெல்லாம் நீங்கி உள்ளம் களித்து உயிர் பூரித்து நிற்பர்என்பதாம்.

ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய். (குறள்)

சான்றோர் என்கை ஈன்றோட்கு அழகு. (ஔவையார்)

பிறந்த மக்கள் பெருந்தகையராயின் பெற்றவளுக்குப் பேருவகையாம் என இவை உணர்த்தி நிற்றல் அறிக.

---

47. மக்கள் எனவுலகில் மாண்பமையப் பெற்றவரைத்
தக்க வகையாகத் தாம்பேணார்—துக்கமிகு
குட்டிகுஞ்சி என்னக் கொடுவிலங்கின் பாலிழிந்து
டட்டி யுழல்வர் பரிந்து. (எ)

இ-ள்.

இவ்வுலகில் உயர்ந்த மக்கள் எனச் சிறந்த மதிப்பு அமையப் பெற்றருளியவரைத் தகுதியாகப் பேணுதுவிடின் அவர் பின் இழிந்த விலங்குகளிடமும், பறவைகள் வயிற்றிலும் பிறந்து பரிந்து உழலுவர் என்றவாறு.

மிருகம் பறவை முதலிய பலவகைப் பிறவிகளிலும் மனிதப் பிறப்பே மிகவும் உயர்ந்தது; அப் பிறப்பில் தோன்றிய பிள்ளைகளுக்கே மக்கள் என்னும் சிறப்புப் பெயர் உண்டு; இங்ஙனம்

சிறந்த நிலையில் உயர்ந்து திகழ உரிமையுடன் உவந்து பெற்று விட்டவர் தாய் தந்தையரே. அத்தகைய பேருபகாரிகளை நன்றி யறிவோடு பணிந்து போற்றி நாளும் நன்கு ஆதரித்து வர வேண்டும்; வராதொழியின் நன்றி கொன்ற பாதகராய் நைந்து இழிந்து பன்றி முதலிய ஈனப் பிறவிகளில் உழன்று திரிவர் என்பதாம்.

குட்டி என்றது மிருகப் பிறப்பைக் குறித்தது. குஞ்சி பறவை யினம் சார்ந்தது. உயர்வான மனிதப் பிறவியில் மக்கள் என்ற மதிப்புரிமை தந்த தாய் தந்தையரை மதியாது நின்றவர் பின்பு பன்றிக்குட்டி, கழுதைக்குட்டி, நாய்க்குட்டி என இழிந்து தொலைவர் என்க.

பட்டி = ஆடுமாடுகள் அடைந்து கிடக்கும் இடம்.

பிள்ளை எனப் பிறந்தவன் பெற்றவரைப் பேணுவழிக் குட்டி குஞ்சிகளாய் ஒட்டி உழன்று ஒழிவான் என்றதனால் அதன் பழி பாவமும் இழிதுயரும் தெளிவாம்.

---

48. பிள்ளையெனப் பெற்றுப் பெருமைசெய்து விட்டவரை
உள்ளநாள் எல்லாம் உரிமையா—உள்ளம்
உருகி வணங்கி உதவி புரியார்
அருகி இழிவர் அளறு. (அ)

இ-ள்.

உள்ள நாள் என்றது வாழ்நாள் முழுவதும் என்றவாறு. உரிமையுடன் பெற்றுப் பெருமை மிகச் செய்து பேணியருளிய தாய் தந்தையரை என்றும் உருகி வணங்கி உபசரித்துவரும் பிள்ளைகள் உயர்நிலை யடைவர்; அல்லாதார் பழி பாவங்களை யுடையராய் அழிவார் என்பதாம்.

தனக்கு இனிய பலன்கள் தரும் என்று கருதி ஓர் உழவன் நல்ல கனிமரங்களை வைத்துப் பக்குவமாகப் பாதுகாத்து வளர்த்து வந்தான்; அவை வளர்ந்தன; கவையும் கொம்புகளுமாய்ப் பெருகி நின்றனவேயன்றி ஒரு பலனும் தரவில்லை; இனிய கனிகள் அருளும் என நாளும் எதிர்பார்த்து நின்ற அவன் உள்ளம் கடுத்து அவற்றை எப்படி எள்ளி விடுவானோ அப்படியே ஈன்றவர்க்கு உதவாப் பிள்ளைகள் எள்ளப்பட்டு இழிவாய் ஒழிவார் என்க. பெற்றோரைப் பேணாமை பேரிழவாம் என்றபடி.

"வைத்தவர் உளம் உவப்ப மலர்நிழல் கனியீ யாத
அத்தருத் தன்னை வெட்டி அழலிடு மாபோல் ஈன்று
கைத்தலத் தேந்திக் காத்த காதல்தாய் பிதாவை ஓம்பாப்
பித்தரை அத்தன் கொன்று பெருநர கழற்சேர்ப் பானே"

அன்னை தந்தையரை ஆதரியாதவரை முன்னவனும் வெறுப்பன்; அன்னவரும் இன்னலுழந்து இழிவர் என்பது இதனால் அறியலாகும். தேவகோபமும் பாபமும் படியாதபடி படிந்து ஒழுகுக என்பதாம்.

49. உற்ற துயரம் ஒழித்தே உயரின்பம்
பற்ற முயலும் படியுடையார்—பெற்றவரைப்
பேணி வருக பிறவிநோய் தீர்ந்துபின்
காணியாக் காண்பர் கதி. (௯)

இ-ள்

பிறவித் துன்பங்கள் நீங்கிப் பெரிய இன்பங்களை அடைய முயலும் நிலையுடையார் அன்னை தந்தையரைப் பேணி வருக; வரின், கருதிய கதி காணியாகக் கைவரும் என்றவாறு.

உயர் இன்பம் என்பது சுவர்க்கபோகங்களையும், முத்திப் பேற்றையும் உணர்த்தி நின்றது. முயலும் படியுடையார் என்றது உயர்நலப் பிரியராய் ஊக்கியுள்ளவரை. இழிந்த பல பிறவிகளையும் கடந்து உயர்ந்த மனிதப் பிறப்பை யடைந்து அறங்கள் பலபுரிந்து சிறந்த பேறடைய முயன்று நிற்பது தலை சிறந்த செயல் ஆகலின் அந்நிலை தெரிய வந்தது. படியில் பல படிகள் ஏறி முடிவில் மூண்டு நிற்பவர் என்றபடி.

அருந்தவம் கிடந்து வருந்தி முயன்று அரிதில் பெறத் தக்க கதிமோட்சத்தை மாதா பிதாக்கள் மனம் குளிர நடந்து வரும் ஒரு செயலால் எளிதின் அடைந்து கொள்ளலாம் என்பதாம்.

பெற்றவரை இனிது பேணிவரின், யாரும் பெற முடியாத அரிய பேறுகளையெல்லாம் எளிதே பெறலாம் என்றமையால் அவர்தம் பெற்றியும் பெருமையும் உய்த்துணர நின்றன.

கொண்ட குடல் குளிர்ந்தால் அண்டமெல்லாம் குளிரும் என்ற பழமொழியும் ஈண்டு உளம் அறிய வேண்டும்.

காணி=நிரந்தரமான சுதந்திர உரிமை. பிறந்த மகன் சிறந்த பதவியை விரைந்து அடைதற்குத் தகுந்த உபாயம் இதனால் கூறப்பட்டது.

50. தந்தைதாய் பேணும் தனயர்பின் இவ்வுலகில்
தந்தைதாய் காணாத் தனியராய்ச்—சந்ததமும்
இன்ப நிலையமென எண்ணும் நிலையமர்ந்தே
இன்பம் நுகர்வர் இனிது. (ய)

இ-ள்

ஈன்ற தாய் தந்தையரை ஆன்ற அன்புரிமையுடன் ஆதரித்து வரும் தோன்றல்கள் பின்பு யாண்டும் பிறவியில் தோன்ருராய்ப் பேரின்பம் பெறுவர் என்றவாறு. தனயர்=புதல்வர்.

உற்ற பிறப்பில் தம்மைப் பெற்றவரை உள்ளன்புடன் வழி பாடு செய்து ஒழுகும் பிள்ளைகளுக்கு மறுபிறப்பு இல்லையாம்; ஆகவே வேருெரு தாய் தந்தையரை அறியாதவராய் அவர் பேரின்ப முத்தியைப் பெறுவார் என்க.

"தந்தை தாய் பேணும் தனயர், பின் தந்தைதாய் காணுத் தனியர்" என்றது பெற்ருரைப் பேணிய குலமக்கள் பின்பு ஒருவர் வயிற்றிலும் பிறவாதவராய் முத்தித்தலத்தில் முதன்மை எய்தி இருப்பர் என்றவாறு.

பரம பாக்கியவான்களாய் ஒப்பற்ற நிலையில் உயர்ந்து திகழ் வர் என்பது தனியர் என்றதனுல் அறிய நின்றது.

தாயைத் தொழுக; தந்தையை வணங்குக; உண்டி உடை முதலியன உதவி உரிமையுடன் அவரை உபசரித்துப் போற்றுக; அவருடைய உள்ளம் உவந்தால் பிள்ளைகளாகிய உங்களுக்கு உயர் நலங்கள் பல உளவாம். புகழ் மருவும்; புண்ணியம் பெரு கும்; எண்ணிய இன்ப நலங்கள் யாவும் எளிதில் வந்தடையும்; மக்கள் என மாண்புறுத்தி யருளிய அவரை மதியாதொழியின் மாக்களாக இழிவுற நேரும்; அங்ஙனம் அழிவுரு வண்ணம் உறு தியை உணர்ந்து உரிமை கூர்ந்து பேணி உயர்நிலை பெறுக; அத ஞல் ஈறில் இன்பம் நேரே வரும் என இதுவரை அறிய வந்தன.

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

தாயும் தந்தையும் கண் கண்ட கடவுள். ஆதி முதல்வனும் அம்மைஅப்பன் என நின்ருன். அந்த அன்புருவங்களைப் போற்றி வரின் இன்பம் பெருகும். பெற்றவரைப் பேணும் குலமக்களை உலகம் உற்றவராக உவந்து சூழும். அவரைப் பிரமனும் போற் றுவான். பிள்ளைகள் நல்லவராயின் பெற்ளூேர் உள்ளம் குளிரும். மாதா பிதாக்கள் மனம் கொதித்தால் மக்கள் மாக்களாய் இழி வர்; அழி நரகடைவர். கெழுதகைமையுடன் அவர்க்கு வழி பாடு செய்தவர் உயர்பதம் பெறுவர். இறுதியில் பிறவி தீர்ந்து பேரின்பம் எய்துவர் என்பதாம்.

5-வது பெற்ருரைப் பேணல் முற்றிற்று.

# ஆறாவது அதிகாரம்

## மனை மாட்சி.

அஃதாவது வாழ்க்கைத் துணைவி யாகிய மனைவியினது மாண்பு. பெற்றோர்க்கு அடுத்த படியாக ஒரு மகனுக்கு வாழ்நாள் முழுவதும் உற்ற துணையாய் உடனிருந்து உதவிவரும் உரிமையுடையவள் மனைவியே ஆகலின் அவ்வியல்பும் இனமும் தகவும் கருதி ஈண்டு இது வைக்கப்பட்டது. அதிகார முறைமையும் வகைமையும் இதனால் அறியலாகும்.

51\. எண்ணிப் பெறுபவற்றுள் இல்லறத்திற் கின்பான
பெண்ணிற் பெரிது பிறிதுண்டோ—மண்ணிலுறும்
இன்பநிலைக் கெல்லாம் இனிய துணைமனைவி
என்பதுணர்க எதிர். (௧)

இ-ள்.

ஒரு மனிதன் கருதிப் பெறத் தக்க பொருள்கள் பலவற்றுள்ளும் மிகவும் அரிய பொருள் மணமகளே ; இவ்வுலகில் நுகர்கின்ற எல்லா இன்ப நலங்களுக்கும் அவளே இனிய துணை என்பதை உறுதியாக உணர்ந்துகொள்க என்றவாறு.

இல்லறம் ஆவது இல்வாழ்க்கையிலிருந்து செய்யப்படுகின்ற நல்வினைகள். இல்=மனை, வீடு. செய்யத்தக்கது இது, தகாதது இது என்று முன்னோர்களால் வரையறுக்கப்பட்டுள்ளமையான் அஃது அறம் என வந்தது.

உயிர்க்கு உறுதியான அறனை வீட்டில் இருந்து செய்யுங்கால் இல்லறம் எனவும், வீட்டைத் துறந்து தனியே காட்டில் அமர்ந்து புரியுங்கால் துறவறம் எனவும் அது மருவி நின்றது.

இரு வகை நிலைகளிலும் நெறிமுறைகள் பல உள. சில நினைவில் இருக்கத் தக்கன. அடியில் வருவன அறிக.

### இல்லறத்தின் இயல்பு.

"நல்லற நூல்களில் சொல்லறம் பலசில
இல்லறம் துறவறம் எனச்சிறந் தனவே :
அந்நிலை இரண்டினுள் முன்னது கிளப்பின்,
கற்றநூல் துறைபோய்க் கடிமனைக் கிழவன்
5 நற்குணம் நிறைந்த கற்புடை மனைவியோடு

அன்பும் அருளும் தாங்கி இன்சொலின்
விருந்து புறந்தந்து அருந்தவர்ப் பேணி
ஐவகை வேள்வியும் ஆற்றி இவ்வகை
நல்லறம் நிரப்பிப் பல்புகழ் நிறீஇப்
10 பிறர்மனை நயவான் அறன்மனை வாழ்க்கைக்கு
வரையா நாளின் மகப்பேறு குறித்துப்
பெருநலம் துய்க்கும் பெற்றித் தன்றே;

துறவறத்தின் நிலைமை.

மற்றையது கிளப்பின் மனையறம் நிரப்பி
முற்றுணர் கேள்வியின் முதுக்குறை வெய்திப்
15 பொருளும் இன்பமும் ஒரீஇ அருளொடு
பொறையும் ஆற்றலும் நிறைபேர் ஒழுக்கமும்
வாய்மையும் தவமும் தூய்மையும் தழீஇ
ஓரறி வுயிர்க்கும் உறுதுயர் ஓம்பிக்
காலோய் நடைய னாகித் தோல்உடுத்து
20 என்பெழும் யாக்கையன் துன்புறத் துளங்காது
வரையும் கானும் எய்திச் சருகொடு
கால்நீர் அருந்திக் கடும்பனிக் காலத்து
மாநீர் அழுவத்து அழுங்கி வேனிலில்
ஐவகை அழலின் மெய்வருந்த வருந்தி
25 இவ்வகை ஒழுகும் இயல்பிற் றன்றே.''

(சிதம்பர மும்மணிக்கோவை)

இல்லறமும் துறவறமும் இன்னநிலையின என்பது இதனால் ஒருவாறு இனிது அறியலாகும். முன்னதாகிய மனை வாழ்க்கைக்கு மனைவி உயிர் நிலையமாயுள்ளமையான் ''இல்லறத்திற்கு இன்பான பெண்'' என உரிமையும் தகவும் உயர்வும் உணர நின்றாள். இன் உருபு எல்லைப் பொருளில் வந்தது.

பிறந்த மனிதனைப் புனிதனாக்கிச் சிறந்த நிலையில் நிறுத்தலால் அறம் அவனுக்கு உயிர்நிலையமா யுள்ளது. அந்த அறத்தை இல்லில் இருந்து செய்தற்கு இல்லாள் உயிராதாரமாயுள்ளாள். ஆகவே எல்லாப் பேறுகளுக்கும் இனிய துணையாய்ப் பெருமை பல தந்து உறுதிசெய்துள்ளமையால், ''பெண்ணிற் பெரிதுபிறிது உண்டோ?'' என அறைகூவி வினவும்படி அறிவுலகம் துறைகூடி நின்றது. கூட்டம் பெண்மைக்குப் பெருமை தந்துள்ளது.

பெண்ணிற் பெருந்தக்க யாவுள ? கற்பென்னும்
திண்மையுண் டாகப் பெறின். (குறள், 54)

என்றார் வள்ளுவப் பெருந்தகை. இதன் உள்ளுறை உணர்க.

வானுறை உலகினும் வையக வரைப்பினும்
தான விளைவினும் தவத்தது பயத்தினும்
எண்ணரும் பல்லுயிர் எய்தும் வெறுக்கையுள்
பெண்டிருள் மிக்க பெரும்பொருள் இன்மையின்
உயிரெனப் படுவது உரிமை யாதலின்
செயிரிடை யிட்டது செல்வன் காப்பு." (பெருங் கதை, 1-38)

பெண்ணினும் பெரும் பொருள் இல்லை என இவை உணர்த்தியுள்ளமை காண்க. வெறுக்கை=செல்வம்.

இங்ஙனம் எல்லாப் பெருமைகளுக்கும் இனிய துணையாயுள்ள மனைவியை அரிய செல்வமாகக் கருதி ஆதரித்துக்கொள்க என்பது கருத்து.

---

52. இல்லாள் எனும்பெயரே இல்லுக் குயிரென்னச்
சொல்லால் உணர்த்தும் துணிவுகாண்-இல்லானென்று
உன்பெயரால் சொல்லினே ஊனமுறும் ஓர்ந்தவளை
அன்புசெய்து பேணல் அறம். (உ)

இ-ள்.

அறம் பல புரிய அமர்ந்துள்ள உன் இல்லுக்கு மனைவியே உயிராயுள்ளாள் என்பதை இல்லாள் என்னும் சொல்லாலேயே உணர்ந்துகொள்ளலாம்; உன் பெயரால் சொல்லினே ஊனம் ஆகும்; ஆகவே அந்த ஞானநிலையை நன்கு தெளிந்து அம்மானவதியை அன்புடன் பேணி வருக என்றவாறு.

மனைவாழ்க்கைக்கு இனியளாய் வாய்த்துள்ள துணைவியின் மகிமையை மணமகனுக்கு விநயமாக உணர்த்திய படியிது.

இல்லாள் பெறலரும் பேறாக உள்ளாள் என முதலில் கூறினார்; இதில் அவளுடைய பேரானே பெருமையும் அருமையும் அறியலாம் என்கின்றார்.

காதலுடன் கலந்து வாழ்க்கையை நடத்தும் காதலர் இருவரும் தாம் மருவியுள்ள உறையுளுக்கு ஒரு நிகரான சமவுரிமை உடையவரே; ஆயினும் நாயகன் வெளியில் அமர்ந்து தொழில்

பல புரிந்து பொருள் ஈட்டி வரவும், அவ்வரவின் அளவறிந்து வகைசெய்து பேணி வந்த விருந்தினரை ஆதரித்து, எந்த வேளையும் இல்லின்கண் இருந்து நல்லறம் புரிபவள் நாயகி ஆதலின் அந்த நிலைமையும் நீர்மையும் தெரிய அவள் இல்லாள் என நின்றாள். இல்லினை ஆள்பவள் இல்லாள் என்க.

காரணப்பெயராய் வந்துள்ள இது அவளது பூரண நிலைமையைப் புலப்படுத்திப் பொருள் சுரந்துள்ளது.

பெண் பாலால் கூறியதனால் இவ்வளவு இன்பாயது; இதனை ஆண் பாலால் கூறினால் இல்லான் என வரும்; வரவே அது வறியவன் என்று பொருள்பட்டு இழிவு பல தரும் ஆதலால், "உன் பெயரால் சொல்லினால் ஊனம் உறும்" என்றார்.

அவளது பெயர் நிலையே உயர்வுரிமையை உணர்த்தியுளது.

இல்லறம் முதலிய எல்லா நலங்களுக்கும் உயிராதாரமாயுள்ளவள் இல்லவள் ஆகலின் அந்நல்லாளை நாயகன் நன்கு பேணி வரவேண்டும் என்பது கருத்து.

---

53. தாய்க்குப் பிறகுதாற் றாரமெனச் சொன்னஅவ்
வாய்க்குப் பெருமை வழங்குகின்றார்—காய்க்கும்
கனிமரத்தைப் பேணும் கடமைபோல் கொண்ட
மனைநலம் பேணல் மதி. (௩)

பெற்றதாய் போல் உற்றமனைவியும் உரிமை மிகஉடையவள்; அந்த அருமைப்பண்மை உணர்ந்து ஆதரித்தருள்க என்றவாறு.

உள்ளம் உருகி உழுவலன்புடன் பிள்ளையைப் பேணுவதில் தாயே தலை சிறந்தவள்; அதன் பின் தாரமே தாரகமாய் நின்று ஆதரித்து அருள்கின்றாள். மனித வாழ்க்கையில் மனைவியினது அன்பும் ஆதரவும் ஆட்சிநிலையும் இன்னவாறு இசைந்துள்ளமையால் அவளுடைய உன்னத மான மாட்சி நிலைகள் உணரலாகும்.

தாய்க்குப் பிறகு தாரம் என்பது இந்நாட்டில் வழங்கி வரும் பழமொழி. மனைவியின் அருமையும் பெருமையும் கிழமையும் கெழுதகைமையும் இதனால் இனிது புலனாம்.

முன் அறி தெய்வமாய் முதன்மை எய்தியுள்ள அன்னைக்கு அடுத்தபடி இன்னுயிர்த் துணையாய் மன்னியுள்ளவள் பன்னி

ஆதலின் அப்பத்தினியை எத்துணை உரிமையோடு ஒருவன் வைத்துப் போற்றவேண்டும் என்பது உய்த்துணர வந்தது.

மனைவியைக் கனிமரத்தோடு ஒப்பவைத்தது இனிய பலன்களை உதவி இன்புறுத்திவரும் இதநலம் கருதி.

மக்களைப் பயந்தருளி ஒக்க உறைந்து உரிமை மீதூர்ந்து எவ்வழியும் இதம்புரிந்து ஆவித்துணையாய் அமர்ந்துள்ள தேவியை அருமையுடன் பாவித்து ஒழுகுக என்பதாம்.

கொண்ட மனை என்றது உலகம் அறிய மணந்துகொண்ட மனைவியை என்றவாறு. வாழ்க்கைத் துணையா வரைந்துகொண்டவளை உவந்து பேணின் வாழ்வு நலங்களெல்லாம் வளர்ந்துவரும் என்பதாம். இன்ப வாழ்விற்கு இனிய மூலம் கூறிய படியிது.

---

54. ஆயுள் அளவும் அருகமர்ந் தின்பூட்டித்
தாயுவந்து பேணும் தகைமைபோல்—நேயம்
புரிந்து புரக்கும் புகழ்மனைபோல் யாரே
பரிந்து புரப்பார் பகர். (ச)

இ-ள்

வாழ்நாள் முழுவதும் அருகு அமர்ந்து உரிமையுடன் இன்பம் ஊட்டி அன்பு பாராட்டிவரும் அருமை மனைவிபோல் உனக்கு இனியவர் யாரும் இலர் என்றவாறு.

யாரே என்ற வினா நேரே ஒப்புரைக்க ஒருவரும் இல்லை என்பதை உறுதிசெய்து நின்றது. புரத்தல்=பாதுகாத்தல்.

பரிந்து=அன்புகூர்ந்து. பரிதல் உள்ளம் உருகுதல் என்க. பரிவு என்னும் பதம் அன்பினும் சிறந்ததாய் ஆன்ம உருக்கத்தின் மிகுதியைக் குறித்துவரும்.

இல்லவள் போல் உள்ளம் கனிந்து பல்வகையிலும் நாளும் உன்னைப் பேணி வருபவர் வேறு யாரேனும் உளரோ? இருந்தால் அவரை நான் அறிந்துகொள்ள விரும்புகின்றேன்; என் எதிரே சொல் என்பார் பகர் என்றார். பகர முடியாது என்பது குறிப்பு. பகர்தல்=பகுத்தறிவோடு வகுத்துச் சொல்லல்.

அன்புரிமையில் தலை சிறந்த தாயரும் சிலகாலம் வரையுமே சேயரைப் பேணி வருகின்றார்; அதன்பின் முதுமையால் அவர்

அயலொதுங்கிவிடுகிறார்; அங்ஙனம் யாதும் கைவிடாமல் ஆயுள் முழுவதும் நேயம் மீதூர்ந்து உடனிருந்து நாயகரைப் போற்றி வருபவர் நாயகிகளே யாவர் என்க. எனவே தாயினும் இனியராய் மனைவியர் தனியமைந் துள்ளமை தெளிவாம்.

புகழ் மனை என்றது இல்லில் இருந்து பெறுகின்ற எல்லாக் கீர்த்தி நலங்களுக்கும் இல்லாளே துணை ஆதலால் அந்நல்லாளின் நலம் தெரிய வந்தது.

தான் பிறந்த குடிக்கும் புகுந்த மனைக்கும் புகழை விளைக்கும் புண்ணியவதியே கணவனுக்கு எண்ணரிய இன்ப நலங்களாய் நண்ணி யிருப்பள் என்பதாம்.

பேதைமையான பாலப்பருவம் வரையும் ஆதரித் தகலும் அருமைத் தாயினும் இறுதிவரையும் உறுதியாக உடனிருந்து உதவிபுரியும் நாயகி மிகவும் உரிமையுடையவள் ஆதலால் அந் நேய நிலைமையை நினைந்து அத்தூயவளை உவந்துகொள்க என்பது குறிப்பு.

---

55. வீட்டுத் தலைவனென மேதக்க தந்தையெனப்
பாட்டுத் தலைவனெனப் பாராட்ட—நாட்டுக்குள்
உன்னை உயர்த்தி ஒளிசெய்த துன்மனையோ
அன்னையோ அப்பனோ ஆய். (ரு)

இ-ள்

நிலையில் தாழ்ந்து கிடந்த உனக்குத் தலைவன் என்னும் பதவியைத் தந்து உயர்ந்த நிலைமையில் உன்னை வைத்தது உனது மனைவி ஆகலின் அவ்வுண்மையை உணர்ந்துகொள்ளுக என்பதாம்.

ஒளி = கீர்த்தி. மனை என்றது மனையாளை.

முன்னம் தாயோடு ஒப்பு நோக்கினோம்; பின்னர் அதனினும் ஓர் உயர்வு கண்டோம்; இதில் தந்தையையும் சேர்த்து வைத்து மனைவியின் தகவு காண்கின்றோம்.

ஒரு மனிதனுக்குத் தாயினும் தந்தையினும் சிறந்த உரிமையாளர் இலர்; அந்த அருமையாளரினும் மனைவி அவனுக்குப் பெருமை அருளி உயர்வு தந்துள்ளாள் என இஃது உணர்த்தியுள்ளது. உயர்ச்சி நிலை உல்லாச நிலையில் உய்த்துணர வந்தது.

தாய் தந்தையரால் அடே பையா! என்று அழைக்கப்பட்டு, அடியும் மிதியும் தாங்கி, சின்னப் பயலாய்க் கிடந்த உன்னைப் பல பிள்ளைகளுக்குத் தகப்பன் ஆக்கிப் பயல் என்னும் சிறுமையை அடியோடு அயல் ஒதுக்கித் தந்தை என ஓர் உயர்ந்த பதவியைத் தந்தருளி, அவ்வளவோடு அமையாமல் தலைவன், நாயகன் என உலகில் உயரிய பட்டங்களையும் உதவி உன்னை ஒரு பெரிய மனிதனாக உயர்த்தி வைத்தது உனது மனைவியே; அதனை நினைவில் வைத்தருள் என்பது கருத்து.

அவள் தலைவி ஆயதால் நீ தலைவன் ஆயினாய்; அவள் நாயகியாய் நின்று உன்னை நாயகன் ஆக்கினாள் என்க.

எவ் வழியும் உன்னை மேன்மைப்படுத்தி உலகில் உயர்த்தியுள்ளது மனைவி ஆதலின் அவளை யாண்டும் மதித்துப் பேணுக என்பது குறிப்பு.

---

56. வெளியலைந்து வந்த விடாய்நோய் அனைத்தும்
ஒளிமுன் இருள்போல் ஒழியும்—அளிசெய்து
காணும் மனைவி கவின்முகம் கண்டவுடன்
பேணும் மகிழ்ச்சி பெரிது. (சு)

இ-ள்

புறத்தே தொழில்களில் திரிந்து அலைந்து வந்த களைப்புகள் யாவும் அகத்தே யுள்ள மனைவி முகம் காணவும் ஒருங்கே நீங்கி உயர் இன்பம் ஓங்கும் என்பதாம்.

உன்னத நிலையில் உயர்த்தி ஒளி மிகச் செய்துள்ளவள் இன்னுயிர்த்துணைவியே என்பதை முன்னம் அறிந்தோம்; இதில் இன்னல் எல்லாம் போக்கும் இனிய சஞ்சீவி என அவளை இனிது உணர்கின்றோம்.

விடாய் நோய் என்றது வினை செயல் வகையால் நேர்ந்த ஆயாசங்களை. களைப்பு நீங்கிக் களிப்பு ஓங்கும் என்க.

தொழில் புரிந்து போந்த கணவன் உழுவலன்புடன் இனிய முகத்தளாய் எதிர்வந்து நிற்கும் துணைவியைக் காணவே உழைப்பின் இளைப்பெல்லாம் மறந்து உவகை மீக்கூர்வன் ஆதலால் அந்த ஆர்வம் கனிந்த இயல்பும் செயலும் தெரிய வந்தன.

ஒளிமுன் இருள் என்றது உள்ளக் கவலை ஒளியும் நிலையைத் தெளிவாக உணர்த்தி உவமை வாசகமாய் நின்றது.

அளிசெய்து காணாத கழிமடங்களும் உளவாகலான் அப்பழியினங்களை ஒழிவு செய்ய அடைமொழிகள் தெளிவு செய்தன.

கவின் = அழகு. உள்ளம் அளிசெய்து உவந்தமையால் வெளியே முகம் எழில்சுரந்து ஒளி மிகுந்தது. அந்த இனிய முகம் இன்னல்களை நீக்கும் தனி மகிமையுடைய தாய தென்க.

அகம்கொண்ட நோய் முகம்கண்டவுடனே ஒழியும் எனவே அப்பதிவிரதையோடு மருவி வாழ்தலால் உளவாம் இன்ப நலங்கள் எளிது தெளிவாம்.

---

57. பேரின்பம் எல்லாம் பிறகென்று தள்ளியெதை
நேரின்ப மாக நினைகின்றார்—பாரின்பம்
எல்லாம் எதன்பால் இசைந்துள்ள தஃதன்றோ
இல்லாள் உடைய திவண். (எ)

இ-ள்

மனிதர் பேரின்பப் பேற்றை மறந்து வேறு எந்த இன்பத்தைப் பெரிதாக நினைந்து களித்திருக்கின்றனர்? உலகிலுள்ள இன்ப நலங்களுக்கெல்லாம் ஆதிமூல நிலையமாய்த் தலைமை எய்தியுள்ளது எது? அந்த அதிசய ஆனந்தம் இல்லாள் உடையது என்பதாம்.

இது அன்புடை மனைவியின் இன்ப நிலைமை கூறுகின்றது. பேரின்பம் என்பது பொறி புலன்களால் நுகர முடியாத உயர் தனி நிலையது. எல்லாப் பற்றுக்களும் அற்றுப் பிறவி முற்றும் தீர்ந்தபொழுது ஆன்ம அனுபவமாய் அது மேன்மை மிகுந்துள்ளது. தனக்கு நிகராக யாதொன்றும் இன்றி எதை அடைந்தால் எல்லாம் அடைந்ததாமோ அத்தகைய அதிசய முடையதாய் அளவிறந்துள்ளமையால், பரமானந்தம், முத்திப்பேறு, அந்தமில் இன்பம் என வந்தனையுடன் அது வழங்கப்படுகின்றது.

அந்த மோட்சானந்தம் பிறவி நீக்கத்தால் பெறத்தக்கது; அந்நீக்கம் துறவு ஞானங்களால் அடைய வுரியது; இங்ஙனம் அந்தப் பேரானந்தப் பெருவாழ்விற்கு நேரே சாதனமாயுள்ள அவற்றை அயலே தள்ளிவிட்டு உயிரினங்களெல்லாம் மனை

வாழ்க்கையை மருவியுள்ளன ; அவ் வாழ்வில் இன்ப நிலையமாய் இசைந்துள்ளவள் மனைவியே ஆகலின் இப் பாசநேசங்களுக் கெல்லாம் அவளே மூலகாரணமாய் முதன்மை எய்தியுள்ளமை தெரிய வந்தது ; வரவே, பேரின்பத்தை மறக்கச் செய்த சீரும் சிறப்பும் யாரிடம் உள்ளது ! என்பதைப் பாரிடம் அறிய நின்றது.

“பேரின்பம் எல்லாம் பிறகு என்று தள்ளி எதை நேர் இன்பமாக நினைகின்றார் ? என்றது ஒவ்வொருவரும் நினைந்து நோக்கி உண்மையை ஒருங்கே முடிவு செய்ய வந்தது.

இல்லற இன்பங்களை அனுபவித்த பின்பே துறந்து தவம் செய்வோம் என்று சிறந்த அறிவாளிகளும் அயர்ந்திருக்கின்றார். ஆகவே, முத்திப்பேற்றினும் முதன்மையாக மனை நலத்தை உலகம் விழைந்து போற்றி வருதலை நுணுகி உணர்ந்துகொள் கின்றோம்.

பேரின்பத்திற்கு நேரின்பமாய் நிலைபெற் றுள்ளமையால் இது சிற்றின்பம் எனச் சிறந்து நின்றது.

தன்னைப் பற்றி நிற்பவரைப் பரம பதத்தையும் மறக்கச் செய்து பரவசப்படுத்தி யிருத்தலால் இதன் உயர் நிலை உய்த் துணர வந்தது.

பார் இன்பம் எல்லாம் எதன்பால் இசைந்துள்ளது? என்றது உலகில் உள்ள இன்ப நலங்கள் யாவும் தன்பால் கொண்டு தலைமை யாய் நிலவி நிற்றலால் தலைவி யின்பத்தின் அரிய நிலைமை தெரிக என்றவாறு. உரிய அனுபவங்களை நினைக என்பதாம். பார் = பூமி.

பேரின்பத்தைப் பின்னே தள்ளிப், பாரின்பங்களையெல்லாம் தன்னுள் அடக்கி, முன்னே முனைந்துள்ளது பெண் இன்பமே என்பதைக் கண்ணுறக் காட்டிய படி யிது.

பாரியை உடையோன் யாவன் அவனுக்கே பற்றும் போகம்
நாரியை இல்லாதார்க்குப் போகத்தின் நலம் எங்குண்டாம் ?
காரிகை தன்னை நீங்கின் கருத்துறு சகத்து நீங்கும்
பேரியல் சகத்து நீங்கின் பிரிவில் பேரின்பம் உண்டாம்.
(ஞானவாசிட்டம்)

உலக போகங்களுக்கெல்லாம் உயிர்நிலையமாய்ப் பரபோகத் தையும் மறந்திருக்கச் செய்துள்ளது மனைவியின் போகமே என் பதை இதனால் உணர்ந்துகொள்ளலாம். நாரி = பெண்.

இங்ஙனம் உயர்போக நிலையமாய் ஒளி செய்தருளும் துணைவியை அளிசெய்து பேணுக என்பது கருத்து.

அஃது அன்றே இல்லாள் உடையது இவண்? என்னும் சொல்லாட்சியிலுள்ள சுவை யுணர்ந்து கொள்க.

---

58. குடியை விளக்கிக் குலம்விளக்கி இன்பம்
படிய மகப்பயந்து தந்துன்—அடிபணிந்து
பேணும் மனைவியைநீ பேணு தயர்ந்தாயேல்
காணும் கதியென்ன காண். (அ)

இ-ள்

நீ பிறந்த குடியை விளக்கி, உன் குலத்தைத் துலக்கி, இனிய மக்களை ஈன்று இன்புறத் தந்து, நாளும் உனது பாதம் பணிந்து பேணுகின்ற காதலியை ஆதரவோடு நீ பாதுகாவாது ஒழியின், அடையும் கதி யாதோ? என்றவாறு.

மனையாள் அருளும் பாக்கியங்களைப் பகர்ந்த படி யிது.

ஆண் மகனாய்த் தோன்றிய ஒருவன் தான் பிறந்த குடி முதலியவற்றை உயர்த்தி ஒளிசெய்து நிற்றற்கு உயிர்த்துணையாய் இருப்பது மனைவியே ஆதலின் அவளுடைய உதவிநிலைகளை இங்ஙனம் உணர்த்த நேர்ந்தது.

மனைவியால் மனைவாழ்க்கை இனிமை அடைகின்றது; மக்கட்பேறு உண்டாகின்றது; அதனால் வழி வழியே குடி வளர்ந்து வருகின்றது; வரவே குலம் விளங்குகின்றது; விளங்கவே உலகம் அதனை வியந்து புகழ்கின்றது; இங்ஙனம் எல்லா நலங்களுக்கும் மூலமுதலாயுள்ளவளை முதன்மையாக உணர்ந்து கொள்க.

மனைவி இல்லையானால் உன் குடி விளங்காது; பிள்ளைகள் கிடையாது; பிழைப்பும் இல்லை; இவ்வெல்லாவற்றையும் எண்ணி யுணர்ந்து அந்நல்லாளைப் போற்றுக என்பது குறிப்பு.

அடி பணிந்து என்றது அன்பு கனிந்த பணிவுடைமையைப் புலப்படுத்தி நின்றது. இங்ஙனம் பல வகையிலும் நலம் மிகச் செய்து, உன்னையும் பணிந்து பாதுகாத்துவரும் குலமனைவியை நன்றி யறிவோடு பேணி வருக; பேணாது ஒழியின் நீ கதி காணாது அழிவாய் அங்ஙனம் அழிவுறாது அளிபுரிக என்பதாம்.

அயர்ந்தால் காணும் கதி என்ன? காண்!
என்று கண் எதிரே எடுத்துக் காட்டியது கதி கண்டு உய்ய என்க.

---

59. கருதிப் பயிலாத கல்வியும், கற்ற
சுருதிப் படியொழுகார் சொல்லும்,—பெரிய
கிழவற் கிளம்பெண் கிழமையும், என்றும்
பழங்கண் பழியே படும். (௫௯)

இ-ள்

கருத்தூன்றிப் படியாத கல்வியும், கற்றபடி ஒழுகாதார் உபதேசமும், முதிய கிழவனுக்கு இனிய இளம்பெண் உரிமையும், யாண்டும் துயரமாய்ப் பழிமிகப்பட்டு இழிவு தரும் என்பதாம்.

கல்வியும், சொல்லும், காதலியும் இன்ன வகையில் அமைந்திருக்கவேண்டும் என அவற்றின் நன்னய நிலைகளை நவின்றபடி. கூர்த்த மதியூன்றிக் கல்வியை ஆர்த்தியுடன் அமைந்து பயில்க; பிறர்க்குப் போதிக்குமுன் நீ நல்லவனாய் உள்ளம் திருந்தி உயர்க; உன் பருவ நிலைக்குத் தகுந்தபடி உரிய குணவதியை மணந்து கொள்க. உறுதி நலங்களை உணர்த்திய வாறிது.

சுருதி என்றது ஆன்றோர் அருளியுள்ள அரிய பெரிய நூல்களை. கல்வி கேள்விகளால் அறிவு வளரும்; அவ்வறிவு நெறிமுறையே படிந்து ஒழுக்கத்தோடு கலந்த பொழுதுதான் உயிர் ஒளிமிகப்பெறும்; அங்ஙனம் பெற்றவனே பெரியவனாவன்; அவனையே உலகம் உவந்துபோற்றும் என்க.

தம் உள்ளத்தே நல்ல ஒழுக்கம் இல்லாதவர் புறத்தே பிறர்க்கு நீதி போதனைகளைச் சொல்லத் தொடங்கின், அது எள்ளற்பாடுடையதாய்த் தள்ளப்படுமே யன்றிக் கொள்ளப் படாது; ஆதலின் ஒழுகார் சொல் வழுவாம் என அதன் இழி நிலை இங்கே தெளிவுறுத்த நேர்ந்தது.

"உள்ளம் திருந்தார் உணர்வுரைத்தல் கட்குடியன்
கள்ளருந்தீர் என்ற கதை." (அரும்பொருளமுதம்)

ஒழுக்கம் இல்லார் வாய்ச் சொல் உதவாக் கறையாய் இழிக்கப்படும் என்பதை இதனால் உணர்ந்துகொள்ளலாம்.

வயது முதிர்ந்த பழங் கிழவனுக்கு இளங்குமரியை மனைவி ஆக்கின் அது இன்னாமையாய் ஈனங்களை விளைக்கும் ஆதலால்,

"கிழவற்கு இளம்பெண்கிழமை பழங்கண்" என வந்தது. கிழமை=உரிமை. பழங்கண்=துன்பம்.

சிறந்த கல்வியறிவும், திருந்திய ஒழுக்கமும் பொருந்தி, பெருந்தகைமையுடன் ஒத்த பருவம் ஒத்த அறிவு ஒத்த அன்பு ஒத்த பண்புடைய உத்தமியை மணந்துகொண்டு ஆண்மகன் இல்லற வாழ்க்கையை இனிது நடத்தவேண்டும் என்பது கருத்து.

---

60. மலர்மணம் என்ன மருவி இனிய
குலமனை யோடு குலாவிப்—பலநலங்கள்
பேணி யொழுகும் பெருமகனே பேரின்பம்
காணியாக் காண்பன் கனிந்து. (ம)

இ-ள்

மலரும் மணமும்போல் இனிய மனைவியுடன் இனிது மருவி, அறம் புகழ் முதலிய உயர்நலங்கள் பல புரிந்து, இல்வாழ்க்கையில் நெறிவழுவாது ஒழுகும் தலைமகன் பேரின்ப நிலைமையை உரிமையாக் கண்டு உவந்து நிற்பன் என்பதாம்.

இல்வாழ்க்கையின் பண்பும் பயனும் கூறிய படியிது.
குலமனை=குணநலங்களால் சிறந்த மனைவி.
குலாவல், உவகையோடு கூடி உல்லாசமாய் வாழ்தல்.
மலர் மணம் என்றது சேர்க்கை நலம் கருதி வந்தது.

கணவனும் மனைவியும் உழுவலன்புடன் உள்ளங்கலந்து ஒழுகின் புகழும் புண்ணியமும் பொலிந்து திகழும்; உலகமும் அவரை உவந்துபோற்றும்; இம்மையிலும் மறுமையிலும் அவர் இன்பமிகப் பெறுவர். இங்ஙனம் அன்பமைந்த வாழ்க்கைக்கு ஆருயிர் நிலையமாய்ச் சீரமைந்துள்ள பேருரிமையைப் பேணிக் கொள்க என்பதாம்.

மலர்க்கு மணம்போல் கணவனுக்கு மனைவி மாண்பமைந்து உள்ளாள். அக்குணவதி இலளேல் மணம் இல் மலர்போல் அவன் மதிப்பிழந்து நிற்பன். அந்நிலைமையை நினைந்துணர்க.

திருமணம் என்பது கலியாணத்தைக் குறித்து வருகின்றது. அப்பெயர்க்குப் பொருள் அழகிய சேர்க்கை என்பதாம். பருவ நலம் கனிந்த இருவர் மருவி மகிழும் கூட்டத்தை உரிமையுடன் உணர்த்தி நிற்றலால் இவ்வாறு மேலோர் அதனை வழங்கி வர

லாயினர். மணத்தல்=சேர்தல், கூடுதல், கமழ்தல். இந்த இனிய பெயரின் இயல்பை நுணுகி யுணர்ந்து பணிபுரிக என்பதாம்.

ஆடவன் ஒருத்தியை மணந்த பொழுதுதான் மணமகனாய் மணம் பெறுகின்றான். பெறவே மணம் நிறைந்த மலர்போல் உலகிற்கு அவன் பயன் பல தந்து வியன் புகழ் பெறுகின்றான்.

மெல்லிய கொடிகள் மரங்களில் படர்ந்து தழைத்துச் செழித்துக் கிளைத்து ஒளிர்தல்போல் மெல்லியலாரும் ஆடவரைப் புல்லி நின்றே பொலிவுற்று விளங்குகின்றார். புல்லாதொழியின் கொழுகொம்பில்லாத கொடிபோல் அவர் அலமந்து படுவர்.

தலைவனுக்குக் கொழுநன் என்பது ஒரு பெயர். ஒரு குல மகளுக்குக் கொழுகொம்பாய் நின்று மக்கட்பேறு முதலிய நலங்கள் பல அவள் நல்கியருளும்படி செய்துவருதலால் அப்பெயரை அவன் எய்தி நின்றான் என்க.

---

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

இனிய மனைவி அரும்பெறலான பெரும் பொருள்.
இல்லாள் என்பது சொல்லால் உயர்ந்தது.
தாயினும் மனைவி நேயமிக வுடையவள்.
ஆயுள் முழுவதும் அருகமர்ந் துள்ளவள்
தலைவன் என்னும் மகிமையைத் தந்தவள் தலைவி.
அல்லல் நீக்கி ஆனந்தம் அருள்பவள்.
பேரின்ப நிலையமாய்ப் பெருகி யிருப்பவள்.
குடியை விளக்கிக் குலநலம் செய்பவள்.
உரிமைத் துணையாய் உவகை விளைப்பவள்.
உத்தம பத்தினியை யுடையவன் முத்தி நலம் அடைவான்.

6-வது மனை மாட்சி முற்றிற்று.

# ஏழாவது அதிகாரம்
## மக்கட் பேறு.

இது, பிள்ளைகளுடைய பெருமையைக் குறித்துக் கூறுகின்றது. கணவனும் மனைவியும் கலந்து மகிழ்ந்து இல்வாழ்க்கை புரிந்து வருங்கால் அதன் தலைமையான சிறந்த பயனாய் முதலில் விளைந்து எழுவது குழந்தைகளே ஆதலால் மனைமாட்சியை அடுத்து மக்கட்பேறு வைக்கப்பட்டது.

61. மக்கட் பிறப்பை வழிவழியா மாண்புறுத்திப்
பக்கம் அழிந்து படாவகைநின்—றொக்கவே
ஓம்பி வரலால் உறுமகார் மக்களென
ஏம்பி இருந்தார் இசைந்து. (க)

இ-ள்

உலகில் மக்கள் என விளங்கி நிற்கும் குழுவினர் வழிவழியே தொடர்ந்து வளர்ந்து வரக் கிளர்ந்து வருதலால் பிறந்த பிள்ளைகள் மக்கள் என்னும் அச்சிறந்த பெயரை அடைந்து நின்றனர் என்பதாம்.

குழந்தைகளை மக்கள் என்று வழங்கி வருதற்குத் தகுந்த காரணம் காட்டிய படியிது.

மகார் = பிள்ளைகள். ஏம்புதல் = உறுதித்துணையாய் உதவுதல்.

இம்மண்ணுலகில் எண்ணிடலரியபடி பலவகை உயிரினங்கள் பரவியுள்ளன. அவ்வெல்லாவற்றுள்ளும் மனிதர் சிறந்த பிறப்பினராய் உயர்ந்து விளங்குகின்றனர். அவர் யாண்டும் மக்கள் என வழங்கப்பட்டு வருகின்றனர்.

"மாவும் மாக்களும் ஐயறி வினவே
மக்கள் தாமே ஆறறி உயிரே." (தொல்காப்பியம்)

என ஆசிரியர் தொல்காப்பியனார் இவரை அறிவு நிலையில் தலை சிறந்தவராகக் குறித்திருக்கிறார்.

இங்ஙனம் உலகில் உயர்ந்த மக்கள் வகுப்பு என்றும் குன்றாமல் மேலும் மேலும் பெருகி வருவதற்குக் காரணம் பிறந்து வரும் பிள்ளைகளேயாம்; பிள்ளைப்பேறு இல்லையாயின், மக்கட் கூட்டம் ஒக்கத் தேய்ந்து உருவற மாய்ந்துபோம். அங்ஙனம்

அழிந்து போகாவண்ணம் குழந்தைகள் தொடர்ந்து பாதுகாத்து வருதலால் சிறப்புரிமையாக மக்கள் என அவர் குறிக்க நின்றார் என்க. பெயர் வழக்கின் இயல் விளக்கியது.

மனித வுலகத்தை மாட்சிமைப்படுத்தி இனிது வளர்த்து வருவது ஈன்ற குழவிகளே; ஆகவே அத்தோன்றல்களின் அருமை பெருமைகளை ஊன்றி யுணர்ந்து நன்றியறிவோடு நயந்து பேணி நலம் பல புரிக என்பது கருத்து.

---

62 பெறப்படுவ யாவுமே பேறெனினும் பேறென்
றுறப்பெறுவ மக்கட்பே றொன்றே—சிறப்பாக
நின்று திகழும் நிலையால் மகப்பேறே
என்றும் பெரும்பே றினிது. (உ)

இ-ள்

மனிதன் விரும்பிப் பெறத்தக்க பொருள்கள் எவற்றினும் மக்கட் பேறே தலை சிறந்தது; அதுவே நிலையான இனிய பெருஞ் செல்வம் என்பதாம்.

பெறப்படுவது பேறு எனப் பேர் பெற்று வந்தது.

பேறு=செல்வம், புகழ், ஊதியம்.

அரும்பெறலான அரிய பொருளையே பெரும்பாலும் இது குறித்துவரும். மக்கட்பேறு, முத்திப்பேறு எனச் சிறப்பாகச் சேர்ந்து வருதலால் அதன் கருத்தும் குறிப்பும் காணலாகும்.

இவ்வுலகில் உரிமையோடு ஒருவன் உவந்து பெறத்தக்க உயர்ந்த பொருள் மக்களே ஆகலின், "பேறு என்று உறப்பெறுவ மக்கட் பேறு ஒன்றே" என உறுதியுணர வந்தது.

ஏகாரம் தேற்றமும் ஏற்றமும் தோற்றி நின்றது.

"பெறுமவற்றுள் யாம்அறிவ தில்லை அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற." (குறள், 61)

என்ற பொய்யா மொழியின் பொருள் நிலையும் அறிக.

"ஆர்கலி உலகத்து மக்கட் கெல்லாம்
மக்கட் பேற்றிற் பெறும்பேறு இல்லை."
(முதுமொழிக் காஞ்சி)

"மக்களின் ஒண்மையவாய்ச் சான்ற பொருள் இல்லை."
(நான்மணிக்கடிகை, 56)

சூழிநீள் முகத்தன துளைக்கைம் மாவொடு
மாழைநீள் மணியிவை எளிய மாண்பினால்
வாழுநீர் மக்களைப் பெறுதல் மாதரார்க்கு
ஆழிசூழ் வையகத்து அரிய தாவதே. (சூளாமணி, மந்திர 177)

விரிகடல் அமிழ்தமும் வேலை ஞாலமும்
செருமுகத் தழலுமிழ் சிறுகண் யானையும்
எரிமணிக் குப்பையும் எளிதின் எய்தலாம்
அருமகப் பெறுதல்மற் றரிய தென்பவே.

(நைடதம், நகர்நீங்கு, 13)

மக்கட் பேற்றின் மகிமையைக் குறித்து நூல்கள் பல இவ்வாறு வியந்து கூறியுள்ளன. எல்லாச் செல்வங்களுக்கும் உயிராதாரமாயுள்ளமையால் பிள்ளைப்பேறு யாண்டும் பெருமையாகப் போற்றப் படுகின்றது.

---

63. தெண்டிரைசூழ் ஞாலமெலாம் சேர ஒருகுடைக்கீழ்க்
கொண்டரசாய் நின்று குலாவினும்—கண்டனைய
இன்சொல் மகவொன் றிலனேல் அவன்வாழ்வு
புன்சொல் அடையும் புலந்து. (௩)

இ-ள்

கடல்சூழ்ந்த உலகம் முழுவதையும் தனி அரசாளும் சக்கரவர்த்தியே ஆயினும் புத்திரப்பேறு இலனாயின் அவன் வாழ்க்கை பொலிவிழந்து இழிவுறும் என்றவாறு.

தெண் திரை என்றது தெள்ளிய அலைகளையுடைய கடலை.

அரச திரு மிகவும் சிறந்தது; எவரும் எளிதில் அடைய முடியாதது; அத்தகைய உயர்ந்த பேற்றைப் பெற்றுச் சிறந்த செங்கோலுடன் பெருமித நிலையில் பேரரசனாய்ப் பெருகியிருந்தாலும் பிள்ளைப்பேறு இலனாயின் அவன் எள்ளப்படுவன் என்றதனால் இப்பேற்றின் தனிமகிமை இனிது புலனாம்.

குழந்தைகளுடைய மழலைமொழி இனிமை சுரந்து எவர்க்கும் இன்பம் பயக்கும் ஆதலால், "கண்டு அனைய இன்சொல் மகவு" என அவற்றின் இன்பநிலை தெரியவந்தது.

அரசரெல்லாரும் அடிதொழ ஏகசக்ராதிபதியாய் அகிலமும் ஆளினும் புத்திரப்பேறு இல்லையானால் மலடன் என எவ

ரும் இகழ்ந்து கூறுவர் ; அதுவுமன்றி வழிமுறையே வந்து கோல் தாங்கும் குலமகன் இன்மையால் குடி குலைந்துபோம் ஆதலால், "அவன் வாழ்வு புல்ந்து புன்சொல் அடையும்" என்றார்.

பூமண்டல முழுவதும் உடையராயிருந்தும் ஒரு புதல்வன் இல்லாமையை நினைந்து எத்தனை அரசர்கள் மறுகிப் புலம்பி அரிய வேள்விகள் ஆற்றி அலமந்துள்ளனர்? தசரதன் முதலாயினோர் சரிதங்களெல்லாம் இங்கே சிந்தனைக்கு உரியன.

படைப்புப் பல படைத்துப் பலரோ டுண்ணும்
உடைப்பெரும் செல்வ ராயினும் இடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்து
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லைத் தாம்வாழு நாளே. (புறம், 188)

"உந்து நீர்க்கடல் உடுத்தபார் முழுவதும் ஒருங்கே
வந்து தாள்தொழும் அரசியல் வளமெலாம் பெறினும்
இந்திராதியர் பெரும்பதத் திருக்கை எய்திடினும்
மைந்தர் இன்றியே வாழ்வது வாழ்வுமற் றன்றே."
(பிரமோத்தர காண்டம்)

"பொன்னுடைய ரேனும் பொருளுடைய ரேனுமற்
றென்னுடைய ரேனும் உடையரோ—இன்னடிசில்
புக்களையும் தாமரைக்கைப் பூநாறும் செய்யவாய்
மக்களையிங் கில்லா தவர். (நளவெண்பா)

மக்கட்பேறு எத்துணை மாட்சியுடையது என்பது இவற்றால் அறியலாகும். பிள்ளைகளே பெரும்பாக்கியங்கள் என்பது கருத்து.

---

64. மனிதன் குடிவாழ்வை மாட்சி யுறுத்தி
இனிது முயல இசைத்துக்—கனிவுமிகச்
செய்வதெலாம் சேயின் செயலால் குடிக்கென்றும்
உய்தி யவனே யுணர். (௪)

இ-ள்.

ஒரு மனிதனது குடிவாழ்க்கையை மாட்சிமைப் படுத்தி அவனைப் பலவகையிலும் முயற்சியில் ஊக்கியருள்வது புதல்வனே ஆதலால் அக்குடிக்கு அவனே உயிராதாரம் என்பதாம்.

சேய்—குழந்தை. உய்தி—உறுதி நலம்.

பொன் மணி முதலிய அரிய செல்வங்கள் பல நிறைந்திருப்பினும் மகவு இல்லையாயின், அக்குடி மிகவும் சிறுமையாக எண்ணப்படும்; பொருள் வளம் இலதாயினும் குழவி ஒன்று உளதேல் அது பெருமை பெற்று விளங்கும் ஆதலால், "குடி வாழ்வை மாட்சி யுறுத்தி" என அதன் ஆட்சி நிலை தெரிய வந்தது.

பெற்ற தந்தை பிள்ளையைக் கண்டு உள்ளம் உருகுகின்றான்; உவகை யுறுகின்றான். கல்வி செல்வம் முதலிய நலங்களில் அவனை வளம்பெறச் செய்யவேண்டும் என்று விழைவு மீக்கூர்ந்து விரைந்து முயல்கின்றான். இங்ஙனம் உள்ளக் கிளர்ச்சியும் ஊக்கமும் உடையனாய் ஆக்கம்தேடி வருதற்குப் பிள்ளையே காரணம் ஆகலின், "இனிது முயல இசைத்து" என்றார்.

குடிக்கு உய்தி அவனே என்றது ஒருவன் குடிவாழ்க்கை ஒளி மிகப் பெற்று வழிமுறையே நெடிதோங்கி வருதல் புத்திரனாலேயே ஆதலின் அவ்வரவு நிலை உய்த்துணர வந்தது.

---

65. உற்ற குடியை உயர்த்தி உறுங்கிளைகள்
சுற்றி மகிழ்ந்து சுகம்துய்க்கப்—பெற்றவரை
யாரும் புகழ அருமை புரிமகவே
பேரும் புகழும் பெறும். (ரு)

இ-ள்

தான் பிறந்த குடியைச் சிறந்த நிலையில் உயர்த்தி, சுற்றத்தாரைச் சுகம் பெறச் செய்து, தன்னைப் பெற்ற தாயையும் தந்தையையும் உலகம் புகழ்ந்து போற்றும்படி அமைந்து ஒழுகுவோனே உயர்ந்த குலமகன் என்பதாம்.

இது, பிறந்த மகனுக்கு உரிய சில கடமைகளை உணர்த்துகின்றது. குலமகனுக்குப் பல பொறுப்புகள் உள்ளன என்க.

உற்ற குடியை உயர்த்தி என்றது தான் தோன்றிய குடி செல்வம் கல்வி சீர்மை நீர்மை முதலியவற்றால் தாழ்ந்திருந்தாலும் ஊன்றி முயன்று உயர்மேன்மை யுடையதா அதனை ஒளிபெறச் செய்யவேண்டும் என்றவாறு.

கிளைகள் சுகம் துய்க்க என்றது தாய்வழியிலும் தந்தை வழியிலும் உற்ற உறவினர் உவந்து வாழ உதவி புரிக என்றபடி.

குடிக்கும் குலத்திற்கும் இன்னவாறு நன்னயம் செய்தவன் ஈன்றார்க்கு இயற்ற வுரியதை இறுதியில் குறித்தார்.

பெற்றவர் = தாய் தந்தையர்.

இந்தப் பிள்ளையைப் பெறுதற்கு அன்னையும் பிதாவும் என்ன தவம் செய்தார்களோ என்று உலகம் உவந்து புகழும்படி ஒரு குலமகன் நலமுற ஒழுகி வரவேண்டும்; அவ்வாறுவரின் இருமையினும் பெருமை மிகப்பெற்று அவன் இன்புறுவன் என்க.

"என்ன நோன்பு நோற்றாள்கொல் இவனைப் பெற்ற வயிறுடையாள்
என்னும் வார்த்தை எய்துவித்த இருடிகேசா!" (திருமொழி)

என்று இராமனைக் கண்ட மாதவர்கள் மகிழ்ந்து புகழ்ந்தது போல் தன்னைப் பார்த்தவர் தன்னுடைய பெற்றோரை ஆர்த்தியோடு போற்றுமாறு ஆற்றியருள்பவனே சீர்த்திமிகப் பெறுவான்; அவனே நல்ல குலமகனாவான் என்பதாம்.

"செம்மலைப் பயந்த நற்றாய் செய்தவம் உடையள் என்பார்;
எம்மலைத் தவம் செய்தாள்கொல்? எய்துவம் யாமும் என்பார்"
(சிந்தாமணி)

எனச் சீவகனைப் பார்த்தவர் இவ்வாறு வியந்து புகழ்ந்து விழைந்து பேசியுள்ளனர். பெற்றோரை இவ்வண்ணம் வையத்தார் உவந்துபோற்றுவது உற்ற மகனது உயர்நலங்களை நோக்கியே என்க. காரிய மதிப்பால் காரணம் துதியுற்றது.

அறிவு ஒழுக்கம் அமைதி ஆண்மை ஈகை முதலிய குண நலங்களுடையனாய் இனிது ஒழுகி, ஈன்றவர்க்கு ஆன்ற மதிப்பை அருளிச், சான்றோனாய் விளங்குபவனே வான்தோய் புகழுடன் மருவி நிற்பன். அந்நிலைமையைத் தலைமையாகப் பெறுபவனே மகன் என்னும் மகிமைப் பெயர்க்கு உரியவனாவன் என்பதாம்.

மகன்தந்தைக் காற்றும் உதவி இவன்தந்தை
என்னோற்றான் கொல்லென் னும் சொல். (குறள், 70)

என்னும் இப் பொதுமறையை ஒவ்வொரு மகனும் உள்ளம் பதித்து உரிமையை யுணர்ந்து உறுதியுடன் ஒழுகி ஒளிபுரிந்து வரின் இவ் வையம் எவ்வளவு திவ்விய மக்களை யுடையதாய்ச் செவ்விய நிலையில் உயர்ந்து சீர்மிகுந்து சிறந்து விளங்கும்!

66. குடிவிளக்கி நிற்கும் குலமகன் என்றும்
படிவிளக்கும் பானுவெனப் பாரோர்—கொடிவழிக்குக்
காட்டாகக் காட்டக் கவினுற் றரும்புகழின்
தேட்டாக நிற்பன் தெளி. (சு)

இ-ள்.

தான் தோன்றிய குடியைத் துலக்கி யருளும் குலமகன் உலகை விளக்கும் சூரியன் போலச் சீரிய நிலையில் சிறந்து மனுக் குலத்துக் கெல்லாம் அவன் ஓர் இனித்த உவமையாளனாய் ஒளி மிகுந்து உயர்வான் என்றவாறு.

இது, குடிவிளக்கும் புதல்வனது நிலைமை கூறுகின்றது.

படி=பூமி. எல்லாப் பொருள்களும் படிந்திருப்பது என்க.

பானு=சூரியன். எங்கும் பிரகாசிப்பவன் என்னும் ஏதுவான் வந்தது. குலவிளக்கன் நிலவிளக்கன் என நேர்ந்தான்.

பாரோர் கொடி வழி என்றது உலகத்தில் தொடர்ந்து பிறந்து வருகின்ற மனித சந்ததிகளுக்கு என்றவாறு.

காட்டு=ஒப்பாக எடுத்துக் காட்டுவது. கருதிய கருத்தை உறுதிபெற உணர்த்தற்கு உதாரணமாக உரைப்பது என்க.

குடி என்றது குலபரம்பரையை.

ஆண்மை அருள் அருந்தவம் முதலிய பெருந் தகைமைகளால் ஒருவன் சிறந்து விளங்கின் அவன் பிறந்த குடியை உலகம் உவந்து புகழும்; சிறப்பான அப் பிறப்பாளனை யாண்டும் பெருமையாகப் பாராட்டிப் பேசுவர்; பிள்ளை பிறந்தால் அப்படிப் பிறக்கவேண்டும் என அவனை யாரும் ஒப்பனை காட்டுவர் ஆதலால் தன் குடிவிளக்கும் குலமகன் உலகுக்கெல்லாம் ஓர் நல்ல உதாரண புருடனாய் ஒளிபெற்று விளங்குவான் என்க.

தன் மரபைத் துலக்கிய மகனை உலக சந்ததிகட்கெல்லாம் தலைமையாகக் கருதி மக்கள் வந்தனை செய்து வருவர் என்பதாம்.

தாம் பிறந்த குடியை மகிமைப் படுத்திய பகீரதன், மார்க்கண்டன் முதலாயினோரைத் தலைமைப் புதல்வராக உலகம் இன்றும் புகழ்ந்து போற்றி வருவதை ஈண்டு உணர்ந்து கொள்க.

67. வானம் மதியால் வயங்கும் வளர்கல்வி
ஞான நெறியால் நலமுறும்—மானம்சீர்
குன்று நிலையிற் குலவும் குலமகனால்
குன்றாய் விளங்கும் குடி. (எ)

இ-ள்

சந்திரனால் ஆகாயமும், ஞான நெறியால் கல்வியும், நிலை தாழாமையால் மானமும், மகிமையுறுதல் போல் ஒரு குடி அதில் தோன்றிய குலமகனால் உயர்ந்து விளங்கும் என்பதாம்.

குலமகன் முன்னம் அலர்கதிர் என நின்றான்; இங்கே கலை மதி என வந்தான். வயங்கல்=விளங்கித் தோன்றல்.

வானம் குடிக்கும், திங்கள் மகனுக்கும் ஒப்பாம்.

கல்வி ஞானம் மானங்களை உடன் கூறியது அவற்றை அவன் உடையனாய் உயர்ந்து வரும் உரிமை கருதி.

சந்திரனால் வானம் பொலிந்து விளங்குதல்போல் நல்ல மைந்தனால் குடி சிறந்து விளங்கும் என்பதாம். கலைமதியோடு ஒப்பு உரைத்தது, பல கலைகளும் நிறைந்து கலைமதியாளனாய் அக் குலமகன் நிலவிய போதுதான் அவனது குடி தலைமை எய்தி விளங்கும் ஆதலால் அந்நிலைமை தெரிய என்க.

வளர் கல்வி என்றது உயிர் உணர்வுகள் ஒளிவளர்ந்து திகழ வருகின்ற அதன் விளைவு நிலை கருதி. நெறி=நல்வழி.

ஒருவன் கல்வியில் எவ்வளவு வல்லவனாயினும் ஞான நலம் கனிந்த உள்ளப் பண்பு இலனாயின் அவன் ஒளிமிகப் பெறான்; சீலம் செறிந்த மெய்யுணர்வு தோய்ந்த பொழுதுதான் ஞாலம் புகழும் ஆகலின், "கல்வி, ஞானநெறியால் நலம் உறும்" என அதன் நன்மையும் தன்மையும் நன்குணர வந்தது.

குணநலம் குன்றாமல், யாண்டும் நிலை தாழாமல் நிலைத்து நிற்பவரே மானபரராய் மதிப்பு மிகப் பெறுவர் ஆதலால் சீர்மை குன்றாத நிலைமையை நேர் காட்ட நேர்ந்தது

தான் பிறந்த குடி எல்லா வளங்களும் நிறைந்து, பல் வகை நலங்களும் சிறந்து, எவ்வகையிலும் நிலை குலையாமல், எங்கும் துலங்கி நிற்கும்படி நல்ல குலமகன் புரிந்து நிற்பன் ஆதலின் "குலமகனால் குடி விளங்கும்" என அவன் நலம் புகழ வந்தது.

குடி விளக்கத்திற்கு மலையை உவமை கூறியது என்றும் நிலை திரியாது நிலவி நிற்கும் அதன் தலைமை நோக்கி குன்று=மலை.

படியில் பிறந்த மகன் கலைகள் பல பயின்று, மானம் பேணிச் சீலமுடையனாய் ஞான நெறியில் நடந்து, தனது குடி மரபு தலைமை யுறும்படி தழைத்து நிற்கவேண்டும் என்பது குறிப்பு.

---

68. குடிதழைக்க வந்த குலமகனும் இந்தப்
படிதழைக்க வந்த பதியும்—முடிதழைக்க
வந்த மணிபோல் வரிசை மிகப்பெற்று
முந்த வுயரு முதல். (அ)

இ-ள்

குடி தழைத்து விளங்கத் தோன்றிய புதல்வனும், இவ்வுலகம் செழித்து விளங்க வந்த அரசனும் சிறந்த புகழடைந்து முடிமணிபோல் உயர்ந்து விளங்குவர் என்றவாறு.

இது, குடிக்கும் படிக்கும் குலமுதல் கூறுகின்றது.

பதி=அரசன். முடி=கிரீடம். தழைத்தல்=செழித்து விளங்குதல். குடியை வளமுறச்செய்து உயர் நிலையில் நிறுத்துபவன் உத்தம புத்திரனாய் ஒளிபெற்று நிற்பன்; படியை நலமுறப் பாதுகாத்தருளும் அரசன் எல்லாராலும் காத்தற் கடவுளா எத்தப்படுவன் ஆதலால் இருவரும் ஈண்டு இணைத்துப் போற்ற வந்தார். கரும கருத்தாக்களின் உரிமை கருதி யுணர உற்றது.

குடியாளும் குலமகனைப் படியாளும் அரசனோடு ஒப்ப வைத்தது முடி ஆட்சிபோல் குடி ஆட்சியும் அரிய பல குண மாட்சிகளை யுடையது என்பது தெளிய என்க.

மடியின்றி முயன்று மதியூன்றிப் பேணினா லன்றிக் குடித்தனமும் துரைத்தனமும் செழித்து விளங்கா. குளமும் கடலும் போலச் சுருக்கமும், பெருக்கமும் உடையனவாயினும் இருவகை நிலைகளிலும் தலைமையாளர் ஒரு முகமான நிலைமையாளரே யாவர். பிறப்புரிமையைச் சிறப்புறச் செய்யவேண்டும் என்பதாம்.

குடி உயரக் கோல் உயரும், கோல் உயரக் கோன் உயரும் என்றமையால் குடிமகனுக்கும் கோமகனுக்கும் உள்ள உறவுரிமை உணரலாகும். ஆள்வினைகளின் அமைதி கூறிய படியிது.

முடிமணி போல் உயரும் என்றது குடியும் படியும் நலமுறச் செய்த இவர் புகழ்மிகப்பெற்று உலகம் போற்ற உயர்ந்து விளங்குவர் ஆதலால் அவ்வுயர் நிலை தெளிவாக உணர வந்தது.

---

69\. பெற்றாரைப் போற்றிப் பிறந்த குடிபேணி
உற்றாரை ஓம்பி உறுமகனே—வற்றாத
ஆழி எழுந்த அமிர்தாவான் அல்லாதான்
பாழில் எழுந்த பழி. (கூ)

இ-ள்

தன்னைப் பெற்ற மாதா பிதாக்களை வணங்கிப் போற்றி, உற்ற குடியை உயரச்செய்து, சுற்றத்தாரை ஆதரித்தருள்பவன் அமிர்தம் போல் இனியனாவன்; அல்லாதவன் வீணே இழிந்து ஒழிவன் என்பதாம்.

ஆழி என்றது பாற்கடலை. குடிக்கு ஆழியும், மகனுக்கு அமிர்தமும் உவமைகளாகித் தகைமைகளை விளக்கின.

குணநலமுடைய குலமகன் எல்லார்க்கும் இனியனாய் இன்பம் மிகச் செய்வன் ஆதலால் அவன் அமிர்தம் என நின்றான்.

அல்லாதான் என்றது பெற்றாரைப் போற்றாமல், பிறந்த குடியைப் பேணாமல், உற்றாரை ஓம்பாமல் ஊனம் உற்றுள்ள ஈன மகனை. பாழ்-வீண். அவன் பிறப்பு பயன் அற்றது என்பதாம்.

சிறந்த பிறவியை அடைந்தும் உரிய கடமைகளைச் செய்யாமையால் அவனுடைய தோற்றம் இங்ஙனம் தூற்றப் பட்டது.

---

70\. வீழமைந்த ஆல்போல் விறல்மகனைப் பெற்றகுடி
ஊழமைந் தோங்கி உயருமால்—கூழைவீழ்
பெற்ற மரம்போலப் பேதைமகன் உற்றகுடி
பற்றற் றழியும் பரிந்து. (எ)

இ-ள்

நல்ல ஆண் மகனைப் பெற்ற குடி விழுது படிந்த ஆல்மரம் போல் தழைத்துச் செழித்து நிலைத்து விளங்கும்; பேதை மகனைப் பயந்த குடி கூழை வீழ் உடையது போல் தாழ்வடைந்து வீழும் என்பதாம். வாழ்வும் வீழ்வும் வருமூலம் குறித்தது.

குடிதாங்கி யுள்ள குலமகனையும் மடிதாங்கி நின்ற இழிமகனையும் இணைத்துக் கூறிய படியிது. விறல்=ஆண்மைத் திறம்.

ஆலின் கிளைகளி லிருந்து கிளைத்துவந்து பூமியில் ஊன்றித் தாங்கு தூண் போல் பாங்கு அமைந்து நிற்கும் தூங்கு கொடிக்கு வீழ் என்று பெயர். அயலே தாழ்ந்து வந்து வீழ்ந்திருத்தலால் வீழ் என நின்றது.

இது, அடிமாத்திற்கு ஆதாரமாய் உறுதி செய்து நிற்றலால் குடிதாங்கும் குலமகனுக்கு உவமையாய் வந்தது. குடியை ஆல மரத்தோடு ஒப்ப வைத்தது, கிளைபடர்ந்து தழை செறிந்து இனிய நிழலுதவிப் பலர்க்கும் இதம் புரிந்து வருதல் கருதி.

தன்னிடமிருந்து தோன்றிய விழுது ஆலுக்கு உறுதி செய்துள்ளது போல் ஒரு குடியில் பிறந்த மகன் அதனை எவ்வழியும் தளராமல் தாங்கி நிலைபெறச் செய்ய வேண்டும் என்பதாம்.

தோன்றிய குடிக்குத் தோன்றல் ஆற்றும் ஆன்ற உரிமையை ஊன்றிய கொடியால் உணர்த்த நேர்ந்தது.

விறல் மகன் என்றது வினை ஆற்றல்களுடையனாய் யாண்டும் மூண்டு முயன்று வேண்டிய நலங்களை விளைத்தருளும் ஆண்டகையை. விறல் கரும வீரன் என்பதைக் காட்டி நின்றது.

அம் மேன்மையாளனைப் பெற்ற குடி மேலான நிலைமையை அடைந்து ஞாலம் போற்ற விளங்கும் ஆதலால் "ஊழ் அமைந்து ஓங்கி உயரும்" என வந்தது. ஊழ்=ஒழுங்கு, முறைமை.

அக் குடி படியில் உள்ளார்க்கு ஒரு மேல்வரிச் சட்டமாய் நெறிமுறையான பல படிப்பினைகளை விளைத்தருளும் என்றபடி.

நீளமாய் நீண்டு தாள் ஊன்றி நிற்கும் வீழ்போன்ற மகனது ஆள்வினை நிலைமையை அறிந்தோம்; இனி பாழ் மகனது கீழ்மையையும் பார்க்க நேர்கின்றோம்.

கூழை வீழ் என்பது நீளமாய் நிலம் தோயாமல் இடையே தேய்ந்து புடை தொங்கி நிற்பது. மூல நிலையமான ஆலமரத்திற்கு யாதொரு ஆதரவும் ஆற்றாமல் வெறும் சுமையாய் வீணே கிளைத்து வீங்கி நிற்கும் ஆதலால் தான் பிறந்த குடியைப் பேணுமையோடு அதற்கு ஒரு பாரமாய் முளைத்து ஈனம் விளைத்துள்ள பேதை மகனுக்கு இங்கே அது உவமையாய் வந்தது.

பேதை மகன் என்றது ஒரு தொழிலுமின்றி வறிதே உண்டு முடி கொண்டு திரியும் மதிகேடனை.

"கூழை வீழ் பெற்ற மரம்போலப் பேதை மகன் உற்ற குடி பற்று அற்று அழியும்" என்றது நல்ல குலமகனைப் பெறாத குடி அல்லல் பல அடைந்து அலமரும் என்பதை ஓர் உவமை காட்டி உணர்த்திய படியாம். பற்று = ஆதரவு. பரிந்து = வருந்தி.

பிறந்த குடியைப் பேணாதவன் இழிந்த மகனாய் யாண்டும் இழிக்கப் படுவன் ஆதலால், அதனை உரிமையுடன் இனிது பேணிச் சிறந்த குலமகனாய் உயர்ந்துகொள்க என்பது கருத்து.

> சிதலை தினப்பட்ட ஆல மரத்தை
> மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்குக்
> குதலைமை தந்தைக்கண் தோன்றின்தான் பெற்ற
> புதல்வன் மறைப்பக் கெடும். (நாலடியார்)

> தூங்குசிறை வாவலுறை தொன்மரங்கள் என்ன
> ஓங்குகுலம் நையஅதன் உட்பிறந்த வீரர்
> தாங்கல்கடன் ஆகும்தலை சாய்க்கவரு தீச்சொல்
> நீங்கல்மட வார்கள்கடன் என்றெழுந்து போந்தான்.
> (சீவகசிந்தாமணி)

> நைந்தடி யற்ற ஆலம் நடுங்கிவீழ் கின்ற தென்று
> வந்தவீழ் ஊன்றி வீழா வகைநிலை விளக்குமாபோல்
> மைந்தர்கள் தமக்கு நல்ல அறிவினால் மகிழ்ந்து சேர்ந்து
> தந்தையைத் தளரா வண்ணம் தாங்குவர் தவத்தின் என்றான்.
> (இராமாயணம்)

### இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

மக்கள் மனித வகுப்பை வளர்த்து வருகின்றனர்.
அவர் பெறலரும் பேறா யுள்ளனர்.
மகவு இல்லா வாழ்வு மிகவும் இழிவாம்.
மக்களால் வாழ்க்கை மாண்புறுகின்றது.
உற்ற மக்கள் இனியராயின் பெற்றவர் பெருமகிமை அடைவர்.
பிறந்த குடியை உயர்த்துகின்றவனே சிறந்த மகன்.
அவன் வானமதிபோல் வையத்தில் விளங்குவான்.
குடியைப் பேணுகின்றவன் கோமகனாவன்.
ஞாலம் அவனை நயந்து போற்றும்.
உற்ற குடியைப் பேணாதவன் ஊனமடைந்து ஒழிவான்.

7-வது மக்கட்பேறு முற்றிற்று.

# எட்டாவது அதிகாரம்

## அழகு

அஃதாவது அழகினது அமைதி. உவகை நிலைய மாய் ஒளி செய்து மிளிரும் இந்த எழில் நலம் விழுமிய நிலையது. திரு வின் அமிசமாய்த் திகழ்வது. பெறலரும் பேருக மதிக்கப் பட்டுள்ளமையால் மக்கட் பேற்றின் பின் இது வைக்கப்பட்டது. பிறந்த மகன் சிறந்த அழகனுயின் உயர்ந்தவன் ஆவன் என்ப தாம். அதிகார முறைமையும் இதனுல் அறிய லாகும்.

71. தேடரிய செல்வமாய்த் தெய்வத் திருவாகிப்
பாடமைந்து நிற்கும் பரிசினுல்—பீடமைந்த
மக்களுள்ளே மிக்கஎழில் வாய்ந்தோனை வானவரும்
ஒக்கப் புகழ்வர் உவந்து. (க)

இ-ள்

அழகு என்பது யாரும் விரும்பும் இனிமையும் திவ்விய மகிமையும் உடையது; அதனையுடைய மகனை அமரரும் விழை ந்து நோக்கி ஒருங்கே உவந்து புகழ்வர் என்றவாறு.

இது அழகின் தகைமை கூறுகின்றது.

பொன் மணி நிலம் முதலிய பொருள்களை எல்லாரும் முயன்று தேடி விரைந்து பெறுதல்போல் அழகை எவரும் எளிதில் பெறமுடியாது ஆதலால் அது "அரிய செல்வம்" என வந்தது.

தெய்வத் திரு என்றது அதன் திவ்விய மகிமை கருதி.

மனிதன் எண்ணியபடி எய்த முடியாமல் புண்ணியப்பயனுய்ப் பொருந்தி யுள்ளமையான் அப்புனித நிலை தெரிய இந்த இனிய பெயரை அஃது எய்தி நின்றது.

பாடு=மாண்பு. பரிசு=இயல்பு. பீடு=பெருமை.

தேடரிய செல்வம், தெய்வத் திரு என அழகைப் புகழ்ந்து பாடியது அதன் அருமை பெருமைகளை நுணுகி உணர.

எழில்=இளமை நலம் கனிந்த இனிய அழகு. கொழுந்து விட்டு நாளும் கிளர்ந்து எழுதலால் எழில் என இயைந்து வந்தது. தினமும் புதுமையாய் வளர் நிலையில் உள்ளது என்பதாம்.

சிறந்த பிறப்பினையுடைய மக்கள் உள்ளே அழகு உடையவன் உயர்ந்து விளங்குகின்றான்; அவனைத் தேவரும் புகழ்ந்து போற்றுகின்றார்; கண் எதிரே கண்ட அப்புண்ணியப் பேற்றை எண்ணி உயர்க என்றபடி.

மனிதப் பிறப்பு நல்வினையினால் அமைந்தது; அத்தகைய அரிய பிறவியில் அழகிய உருவமுடையனாய் வருதல் பெரிதும் அருமையாம் என்க.

> கருவி மாமழை கனைபெயல் பொழிந்தென வழிநாள்
> அருவி போல்தொடர்ந் தருதன வரும்பிணி அழலுள்
> கருவிற் காய்த்திய கட்டளைப் படிமையிற் பிழையாது
> உருவின் மிக்கதோர் உடம்பது பெறுதலும் அரிதே.
>
> (சிந்தாமணி, 2752)

அருப்பெறலான மக்கட் பிறப்பில் அழகுப் பிறப்பு அடைதல் மிகவும் அரிதாம் என இஃது உணர்த்தி நிற்றல் அறிக. இத்தகைய அருமையுடைய அது தருமம் உடையானுக்கே வரும்; அதனை உரிமையுடன் புரிக என்பது குறிப்பு.

---

72. வேண்டார்க்கும் வேண்டினர்க்கும் வேறுபாடொன்றின்றிக்
காண்டோறும் இன்பம் கனிதலால்—பூண்ட
அழகென் றுரைக்கும் அமிர்துடையார் யாண்டும்
தொழநின் றுயர்வர் தொடர்ந்து. (௨)

இ-ள்

விரும்பினும் விரும்பாவிடினும் காண்பவர் எவர்க்கும் அழகு இன்பம் தருதலால் அந்த அழகினையுடையவர் எங்கும் உயர்ந்து விளங்குவர் என்பதாம்.

அன்புரிமையும் நண்பும் இலராயினும் கண்டவரெவரும் காதல்கொண்டு களித்து நிற்கும்படி அழகு அளித்து வருதலால் "காண்தோறும் இன்பம் கனியும்" என வந்தது.

அழகை அமிர்தம் என்றது அதன் இயல்பும் உயர்வும் கருதி. அமிர்தம் உண்டார்க்கு இன்பம் தருதல்போல் அழகு கண்டார்க்கு இன்பம் தரும் என்க.

அந்தக் காட்சியின்பம் எல்லா இன்பநலங்களையும் மறந்து எவரும் தன்னை விழைந்துநோக்கும்படியான மாட்சிமையுடையது.

"அடலடர்ந்துயர் தானவர் அலையிடை தவழும்
கடல்கடைந்துகொள் அமுதமும் கடையென இகழ்ந்தே
உடலமைந்தெழு மோகினி அழகினை உவந்து
படலமைந்தனர் அழகெதிர் படாதவர் எவரே."

அழகின் அதிசய மகிமை இதனால் இனிது புலனும்.

இங்ஙனம் எல்லாரையும் தன் வசப்படுத்தும் அழகினை யுடையார் உலகம் மகிழ உயர்ந்து திகழ்வர் ஆதலால், "தொழ நின்று உயர்வர் தொடர்ந்து" என நேர்ந்தார்.

தன்னையுடையானைத் தொழுதகு தன்மையனு அழகு ஆக்கி யருளும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

73. காந்தம் இரும்பைக் கவர்வதுபோல் யாவரையும்
ஏந்தெழில் ஈர்க்கும் இயல்பினால்—மாந்தர்
அழகின் வசமாய் அவசமாய் நின்று
கிழமை புரிவர் கிளர்ந்து. (ங)

இ-ள்

இரும்பைத் தன்பால் ஈர்த்துக்கொள்ளும் காந்தம் போல் மாந்தரை அழகு வசப்படுத்தி யுள்ளமையால் யாவரும் அதில் பரவசராய் உரிமை பாராட்டி உவந்து நிற்கின்றார் என்றவாறு.

இது அழகின் அற்புத ஆற்றல் கூறுகின்றது.

வலிய முரடரும், கடிய நெஞ்சரும், கொடிய வஞ்சரும் அழகில் மயங்கி உளம் உருகி நிற்பர் என்பது இரும்பு என்ற குறிப்பால் அறிய வந்தது.

எவ்வளவு பொல்லாதவராயினும் தம் வன்கண்மை யெல்லாம் தாமே நீங்கி அழகின் எதிரே இனிய நீரராய் எளிதமைந்து அமர்வர் என்பதுகாந்தம் என்ற உவமையால் ஓர்ந்துகொள்ளலாம்.

அவசம் = தன்வசமிழந்து பரவசமாய் நிற்றல்.

கிளர்ந்து = உள்ளக் கிளர்ச்சி யுடையராய் உவந்து.

கிழமை புரிவர் என்றது அயலவரும் அன்புரிமையுடன் நண்பு மீதூர்ந்து அழகனுக்கு உளமகிழ்வாய் ஆதரவு செய்வர் என்றவாறு. உயிரினங்களெல்லாம் உள்ளம் களித்து உரிமை சுரந்து ஊழியம் புரியும் என்றமையால் அழகின் மகிமையும் மாட்சியும் அரிய பல ஆட்சியும் எளிது தெளிவாம்.

74. காட்சியுறுந் தோறும் கருத்தில் களிமிகுத்
துட்சி புரியும் அழகுதான்—மாட்சியுறு
தெய்வ அம்சம் சிறிதேனும் இல்லையெனின்
எய்த வருவ திலை. (சு)

இ-ள்

கண் எதிரே காணும் பொழுதெல்லாம் உள்ளத்தில் உவகையை விளைத்து அருள்கின்ற அழகை அரிய தெய்வத் திருவருளால் அன்றி யாரும் எளிதில் பெறமுடியாது என்றவாறு.

அழகின் இயல்பும் இசைவும் கூறிய படி யிது.

கண்டவர் எவர்க்கும் களிப்பை விளைத்து அவரைத் தன் வசப்படுத்தித் தலைவணங்கச் செய்யும் ஆதலால் "ஆட்சி புரியும் அழகு" என அதன் மாட்சி தோன்ற வந்தது.

புறத்தே விழிகாண அகத்தே களி காணும் என்றமையான் அழகுக் காட்சியின் அதிசய நிலை காணலாகும்.

மனிதப் பரப்பில் தன்னை ஒரு தனியான இனிய பிறப்பாக்கி யாண்டும் சிறப்புறச் செய்து என்றும் உயர்ச்சி யருளும் எழிலை எவனும் எளிதில் எய்த இயலாது; அரிய தவப் பேற்றால், பெரிய ஒரு தெய்வக் கொடையாய் அது மருவி வரும் என்க.

அழகு எங்கே அதிகமாய்க் காணப் படுகின்றதோ அங்கே ஒரு தெய்வத்தன்மை உள்ளது என ஊகம் செய்து கொள்ளுக. உருவ அழகு தெய்வ சம்பத்து; அருமைப் பேறாய் அமைவது; அதனைப் புனிதமாகப் போற்றி இனிமை யுற்றுக என்பதாம்.

---

75. நல்லார் இருவர் நயக்கும் அழகமைந்து
பல்லாரும் போற்றும் படிபடிந்து—எல்லாரும்
கண்டு மகிழ்கின்ற காமருருக் கொண்டிருத்தல்
பண்டு புரிந்த பயன். (ரு)

இ-ள்

நல்ல குணசீலர் நயந்து மொழியும் அழகு அமைந்து, பலரும் போற்றும் படி நடந்து, எல்லாரும் மகிழுமாறு இனிய உருவம் எய்தி யிருப்பது முன்னம் செய்த புண்ணியப் பயனே யாம் என்றவாறு. காமர்=அழகு. உரு=வடிவம்.

இது, அழகு இன்னபடி இசைந்திருக்கவேண்டும் என்கின்றது. இசைவு இசை நோக்கி நின்றது.

நல்லார் என்றது நன்மையான தன்மை யுடையாரை. அவர் உலகில் அரியர் ஆதலின் தொகை சுருங்கி இருவர் என நின்றார். வெறும் உடலழகை மட்டும் அவர் உவந்துகொள்ளார்; உயிரழகையே நயந்து காண்பர் ஆதலால் நல்லார் நயக்கும் அழகு என அந் நயம் தெரிய வந்தது.

இங்ஙனம் அரிய அழகு அமையப் பெற்றவன் பலரும் போற்ற இனியனாய் ஒழுக வேண்டும் என்பது "பல்லாரும் போற்றும் படி படிந்து" என்றதனால் அறியலாகும். அப்படிப் படிந்து ஒழுகின் இப்படியில் உள்ளார் எல்லாராலும் எப்படியும் அவன் ஏத்தப்படுவான்.

இவ்வாறு நல்ல அழகும், நயத்தகு பண்பும் உடையனாய் ஒரு மகன் தோன்றின், சிறந்த புண்ணிய சீலன் என உலகம் உவந்து புகழ அவன் உயர்ந்து விளங்குவான் என்க.

பண்டு புரிந்த பயன் என்றது இத்தகைய நல்ல பிறப்பு எளிதில் அமையாது என அதன் சிறப்பைக் கண்டு தெளிய வந்தது. எழிலும் குணமும் விழுமிய தவப்பயன்கள் என்க.

---

76. கண்டார் உளங்கவரும் கட்டழகும் காணாரும்
கொண்டாடி நிற்கும் குணநலனும்—தண்டார்
முடிமன்னர் ஆகு முறையும் அரிய
படிமன்னு பாக்கிய மாம். (௬)

இ-ள்

கண்டவர் உள்ளங்களைக் கவரத்தக்க கட்டழகும், காணாதவரும் கருதி மகிழ்கின்ற குணநலனும், பெரிய அரசுரிமையும் இவ்வுலகில் உயர்ந்த பாக்கியங்களாய்ச் சிறந்துள்ளன என்பதாம்.

கட்டழகு என்றது அதிசயமான பேரெழில்.

தன்னை நோக்கியவரது கண்ணையும் கருத்தையும் பிணித்து நிற்பது என்பது அப்பேரால் நுனித்துணரலாம்.

கண் எதிரே காணாதவரும் ஒருவனது குண நலங்களை வினவி யறிந்து அவனை உவந்து பாராட்டி வருவர்; அவ்வளவு, தலை சிறந்த குண கணங்களுக்கே அமையும் ஆதலால் அந்நிலை தெரியவந்தது. எழிலுருவும் புகழுருவும் இணைந்து நின்றன.

தண் தார் என்றது குளிர்ந்த மலர் மாலைகளை.

தாரும் முடியும் அரச போகத்தின் சீரும் சிறப்பும் தெரிய நின்றன. முடி மன்னர் என்றது குறுநிலத் தலைவர் முதலிய பலரையும் அடக்கி ஆளும் பேரரசரை.

அழகும் குணமும் அரச பதவியும் மிகவும் உயர்ந்த நிலையின; தம்மை யுடையாரை யாண்டும் மகிமைப்படுத்தும் மாண்புடையன; ஆதலால் பெறலரிய பெரும் பேறுகளாக ஈண்டு இவை ஒரு வரிசையில் வைத்து உரிமையுடன் பேசவந்தன.

படி மன்னு பாக்கியம் என்றது உலகத்தில் நிலைபெற்ற பாக்கியங்கள் என்றவாறு. இந்த அருமைச் செல்வங்கள் என்றும் பெருமைக் களஞ்சியங்கள் என்பதாம்.

அழகை முதலில் குறித்தது அதிகார நிலையானும், எதிர் காணவே இனிமை பயக்கும் தனி உரிமையானும் என்க.

பிறப்புரிமையான் அன்றி எவரும் எளிதாகப் பெறலரிய இவ்விழுமிய பாக்கியங்களைப் பெற்றவர் மேலும் உயர்ந்து மேன்மையாளராய் ஒழுக வேண்டும் என்பது கருத்து.

---

77. இளமைபொழில் என்றும் இனிதாய் இசைந்து
வளமை புதுமை மலிந்து—உளமை
ஒருகாலும் குன்று துறலால் முருகன்
அருகாது நின்றான் அமர்ந்து. (எ)

இ-ள்

இளமையும் எழிலும் இனிமையாய் இசைந்து, புதுமையும் வளமையும் நாளும் பொலிந்து, விழுமிய நிலைமை ஒருபோதும் குன்றமல் ஒளி வளர்ந்து உள்ளமையால் முருகன் என்றும் ஒரு நிலையே பெருமிதமாய் நின்று விளங்குகின்றான் என்பதாம்.

உளமை = உளதாம் தன்மை. அருகல் = சுருங்கல்.

முன்பு ஆறு கவிகளிலும் அழகின் பெருமை கூறப்பட்டது. இதில், அழகுத் தெய்வத்தின் நிலைமை கூறப்படுகின்றது.

இளமையும் அழகும் மனித நிலையில் மிகவும் இனியன. உலகப்பொருள்கள் எவற்றினும் இளமைக்கு ஒரு தனி மதிப்பு உண்டு. கத்திரிப்பிஞ்சு, வெள்ளரிப்பிஞ்சு எனச் சுவை நுகர்விலும் இளமையை விழைதலை அனுபவ நிலையிலும் அறிகின்றோம்.

எல்லாருக்கும் இனிமையான இத்தகைய இளமை விரைவில் மாறுகின்றது. முருகன் ஒருவன் மட்டும் ஒரு நிலையே என்றும் குன்றாத இளமை யுடையனாய் இனிதமைந்துள்ளான்.

"என்றும் இளையாய்! அழகியாய்! ஏறூர்ந்தான் ஏறே!"

என இப் பெருமானது அதிசய இளமையை வியந்து மேலோர் துதிசெய்து நின்றனர்.

இளையோன், சேய், குமரன், குழகன், செவ்வேள் என்னும் பெயர்கள் இளமை எழில்களைக் குறித்து வந்தன. முருகு என்னும் மொழி அழகு இளமை இனிமை மணம் தெய்வத்தன்மை முதலிய விழுமிய பல பொருள்களை யுடையது. அவ்வுயர்நலங்கள் யாவும் ஒருங்கே யுடையவன் முருகன் என நின்றான்.

"முருகவேள் அன்ன உருவுகொள் தோற்றம்"
(பெருங்கதை 1-42)

"முருகச் செவ்வி முகந்து" (மணிமேகலை, 5)

எனப் பேரெழிலுக்கு முருகனையே நூலோர் பலரும் உவமை கூறியுள்ளனர்.

இளமையும் எழிலும் ஒரு நிலையே மருவி மிளிர்கின்ற இந்த அதிசய அமைதி உலகமுழுவதையும் எளிதே வசம் செய்துள்ளது.

பகைமை மூண்டு போர் முகத்தில் நேர்ந்து நெடிது போராடிய சூரனும் ஒரு முறை இக்குமரனது உருவ எழிலை நோக்கி உள்ளம் உருகினான். அழகில் மயங்கிய அவன் இகலையும் மறந்து புகலடைய விழைந்து புகழ்ந்து போற்றினான். அவ்வீரன் வியந்து மொழிந்தன சில அடியில் வருவன.

சீர்க்குமரேசன் கொண்ட திருப்பெரு வடிவம் தன்னில்
ஏர்க்குறும் ஒளியும் சீரும் இளமையும் எழிலும் எல்லாம்
ஆர்க்குள உலகில் அம்மா! அற்புதத் தோடும் பல்கால்
பார்க்கினும் தெவிட்டிற்றில்லை இன்னும்என் பார்வை தானும்.

அண்ணலார் குமரன் மேனி அடிமுதல் முடிவின் காறும்
எண்ணிலா ஊழி காலம் எத்திறம் நோக்கினாலும்
கண்ணினால் அடங்கா துன்னிற் கருத்தினால் அடங்காது.என்பால்
நண்ணினன் அமருக் கென்கை அருள்என நாட்ட லாமே. (2)

திருகிய வெகுளி முற்றும் தீர்ந்தன ; செருவின் ஊக்கம்
அருகியது ; உரோமம் புள்ளி ஆயின ; விழியில் தூநீர்
பெருகியது ; இவன்பால் அன்புபிறந்தன ; தமியேற்கு உள்ளம்
உருகியது ; என்பு தானும் உலைமெழுகு ஆகுமன்றே, (3)

போயின அகந்தை போதம் புகுந்தன வலத்த தான
தூயதோர் தோளும் கண்ணும் துடித்தன புவனம் எங்கும்
மேயின பொருள்கள் முற்றும் வெளிப்படு கின்ற விண்ணோர்
நாயகன் வடிவம் கண்டேன் நற்றவப் பயனீ தன்றோ ? (4)

சூழுதல் வேண்டும் தாள்கள் தொழுதிடல் வேண்டும் அங்கை
தாழுதல் வேண்டும் சென்னி துதித்திடல் வேண்டும் தாலு
ஆழுதல் வேண்டும் தீமை அகன்றுநான் இவற்கு ஆளாகி
வாழுதல் வேண்டும் நெஞ்சம் ; தடுத்தது மானம் ஒன்றே. (5)
(கந்தபுராணம்)

முருகனது உருவ அழகில் ஈடுபட்டுச் சூரன் இப்படி உரையாடி யிருக்கின்றான். இந்த அழகிய மொழிகளால் அவன் உளம் பரவசமாகி யுள்ளமை உணரலாகும். என் மனம் இவ்வழகனுக்கு ஆளாக விழைகின்றது; மானம் இடையே தடுக்கின்றதே! என்று மறுகி நின்றது அக்குல வீரனது இயல்பான நிலைமை தெரிய வந்தது.

அழகு பகைவரையும் வசப்படுத்தும் என்பது இதனால் அறியலாகும். அதன் கனிவும் கவர்ச்சியும் கரையிடலரியன.

" உருவு திரு ஊட்டும் " (பழமொழி, 106)
என்னும் முதுரையும் ஈண்டு உணர உரியது.

அழகிற்கு இனிய நிலையமாய் உள்ளமையால் இளமையும் இணைத்து எண்ண நேர்ந்தது.

" இளமையில் நான் எப்படி இருந்தேன் ! இப்பொழுது இப்படியானேன் " என்று மனிதன் முதுமையில் இளமையை நினைந்து இரங்கி ஏங்குகின்றமையால் இதன் விழுமிய நிலைமை புலனாம்.

இங்ஙனம் நிலைதிரிந்து மாறுபடுகின்ற இளமை யாதொரு வேறுபாடுமின்றி ஒரு படியே நிலைத்திருக்கின்றமையால் முருகன் எழில் நிலையில் தலைசிறந்து மிளிர்கின்றான்.

என்றும் புதுமையாய் ஒளிர்கின்ற அந்த அதிசய அழகு இங்கே துதி செய்ய வந்தது. பல நலங்களும் இனிது வாய்ந்த பொழுது அழகு தனி உயர்ந்து விளங்கும் என்க.

78. உருவநலன் எல்லாம் ஒருங்கே அமைந்து
பருவ அழகு படினும்—மருவும்
குணத்தழ கின்றேல் குவிந்தஅழ கெல்லாம்
பிணத்தழ காகும் பிறழ்ந்து. (அ)

இ-ள்

அங்க அமைப்புகள் யாவும் நன்கு அமைந்து, சிறந்த அழகு ஒருங்கே நிறைந்திருப்பினும் நல்ல குணங்கள் இல்லையானால் அவ்வழகுகளெல்லாம் இழிவாக இகழ்ந்து தள்ளப்படும் என்றவாறு.

இது உயிர் அழகின் உயர்வு கூறுகின்றது.

உருவ நலன் என்றது முகம் கண் மூக்கு காது வாய் கழுத்து கை கால் தோள் முதலிய அவயவங்கள் இனிதமைந்திருக்கும் நலங்களை.

பருவ அழகு=இளமை நலம் சுரந்த விழுமிய எழில்.
படினும்=பொருந்தி யிருப்பினும்.

குணம் என்றது உள்ளப் பண்புகளை. அருள் ஈகை அறிவு சீலம் வாய்மை முதலிய இனிய நீர்மைகள் இங்கே குணம் என வந்தன. இக்குணங்கள் உயிரினங்களை மகிமைப்படுத்திப் பேரழகு செய்து வருதலின் குணத்தழகு என நேர்ந்தது.

மலர்க்கு மணம்போல் குணம் உயிர்க்கு மணமாய் ஒளி சுரந்து மிளிர்கின்றது. உயர்ந்த குண நலம் இலனேல் மனிதன் மணம் இல்லாத மலராய் இழிந்து படுகின்றான்.

"Beauty without grace is the hook without the bait."

"உள்ளப் பண்பில்லாத அழகு இரையற்ற தூண்டில் முள் போல் வறிதே இழிந்து படுகின்றது" என எமர்சன் என்னும் அமெரிக்கப் பெரும் புலவர் கூறியுள்ளார்.

புறத்தோற்றம் எவ்வளவு சிறந்திருந்தாலும் அகத்தே நல்ல இயல்பு இல்லை ஆயின் உலகம் அதனை மதியாது; ஆகவே அது மதிப்பிழந்து படும் என்க.

"குணத்தழகு இன்றேல் குவிந்த அழகு எல்லாம்
பிணத்தழகு ஆகும்"

என்றது அது செத்த அழகு என உய்த்துணர வந்தது.

குணம் உயிரின் மணமாய் ஒளிர்கின்றது; அழகு உடலில் இனிதாய் மிளிர்கின்றது. குணம் இல்லையேல் உயிர் அற்ற உடல்போல் அழகு பழியுற்று இழியும் என்க.

உள்ளே குண நலம் இல்லாத மனிதன் வெளியே ஓர் அழகனாய்த் தலைநீட்டி வருவது உயிர் நீங்கிய சவத்தை நீராட்டி அலங்கரித்து வைத்தது போல்வதோர் பாராட்டாம் என்றபடி.

அரிய குண நலங்கள் மருவிய பொழுதுதான் உயிர் பெற்ற உடலாய் அழகு ஒளிபெற்று விளங்கும் என்க. இனிய நீர்மையே புனித அழகு என்பது கருத்து.

---

79. மேனி மினுக்காய் வெளிப்பகட்டாய் மேவிவரல்
ஆனஅழ கெல்லாம் அழகல்ல—ஞானஒளி
தோய்ந்து கருணை சுரந்து தனதுயிரை
ஆய்ந்து வருதல் அழகு. (கூ)

இ-ள்

உடல்களை மினுக்கி ஆரவாரமா அலங்கரித்து வெளி வருவன அழகுகள் ஆகா; உணர்வு சுரந்து அருள் நலம் கனிந்து தனது ஆன்ம நிலையை ஆராய்ந்து வருவதே மனிதனுக்கு இனிய அழகு என்றவாறு.

உண்மையான அழகின் தன்மை உரைத்தபடியிது.

மேனி மினுக்கல் என்றது பட்டு உடை வனைதல், மணியணி புனைதல், திலகம் தீட்டல், சவ்வாது தோய்தல், சந்தனம் பூசல், வாசனைத் தைலம் தடவிச் சீப்பிட்டுத் தலை வாரிச் சிங்காரித்தல் முதலிய அலங்காரங்களை.

வெளிப்பகட்டு என்றது தலை எடுப்பாக நிமிர்ந்து நடந்தும் வாகன முதலியன ஊர்ந்தும் எதிரே கண்டவரெவரும் வியந்து கொண்டாடும்படி கோப்பும் கோலமும் காட்டி வருவது.

கண் மயக்கான இந்த ஆடம்பரங்களெல்லாம் செயற்கை அழகுகள் எனப்படும். செயல் வகையால் நேர்ந்தன செயற்கை என்க.

அவயவ அமைதியும் சமுதாய சோபையும் இயல்பாக வாய்ந்த இனிய உருவப் பொலிவு இயற்கை அழகாம். முன்னதி

னும் பின்னது சிறந்தது. இந்த இரண்டும் புறத்தே உடல் அளவில் ஒளிர்வன. வெளியே உருவப் பொலிவான இவ்விரு வகை அழகினும் பெரிதும் உயர்ந்ததாய் உள்ளே உயிரின் கனிவான பேரழகு ஒன்று உள்ளது. அதனை யுடையவரே என்றும் அழியாத விழுமிய அழகராய் ஒளிமிகுந்து விளங்குவர். அதன் நீர்மையும் சீர்மையும் நேரே ஓர்ந்து நிலை தெளிந்து கொள்க என்பதாம்.

தனது உயிரை ஆய்தல் ஆவது தான் யார்? என்று தோய்ந்து உசாவி ஆய்ந்து விசாரித்தல். கண் எதிரே காணுகின்ற கை கால் முதலிய உறுப்புக்களையும் உடம்பையும் என்னுடையன என்று வழங்கி வருதலால் உடையவன் ஒருவன் உள்ளே தனியே உளன் என்பது புலனும். ஆகவே, தேகமும் தேக சம்பந்தமான போகப் பொருள்களினும் வேறான ஒன்று யாரானும் நேரே அறியாவகை நிலவி நிற்கின்றது. அந்நிலைமையை ஊன்றி உணர்ந்தால் பேரானந்த மயமாயுள்ள தனது தலைமை தெளிவாம் என்க.

இந்த ஆன்ம தரிசனம் பொய்யுணர்வு நீங்கி மெய்யுணர்வு ஓங்கிய பொழுதுதான் உதயம் ஆகும். ஞான ஒளி தோய்ந்து, கருணை சுரந்து என்றது இருள் நீங்கி இன்பம் பெருகி நிற்கும் இயல்பு உணர வந்தது.

தனது இனிய உயிர் நிலை தெரியவே எல்லா உயிர்களும் யாவும் தானாயுள்ள உண்மை நிலை புலனும்; ஆகவே பல்லூழி காலம் பயனிழந்து கிடந்த பழிவழியையும் பரமான்ம நிலையையும் எண்ணி யிரங்கி உள்ளம் உருகிக் கண்ணீரும் கம்பலையுமாய் யாண்டும் தண்ணளிபுரிந்து ஆன்ம ஒளி தழைத்து விளங்கும் ஆதலால் அருள்நலம் ஞானத்தின் மணமாய் ஈண்டு நவில வந்தது.

ஞான விளக்கு ஏற்றிக் கருணைக்கண்கொண்டு உன் உண்மை நிலையை நீ ஊன்றிப்பார்க்க வேண்டும் என வேண்டிய படியிது.

தனது உயிரை ஆய்ந்து வருதல் அழகு

என்றது என்றும் அழியாத இன்பநலனும் யாண்டும் மாறாத பேரழகும் அதனால் பெறுதல் கருதி.

புறத்தே உடலழகைப் பார்த்து ஒழிந்துபோகாதே! அகத்தே உன் உயிரழகை நோக்கி உயர்ந்து கொள்க என்பதாம்.

> " என்னைஎண்ணிப் பாராமல் இந்த உடலழகைக்
> கொன்னே நினைந்து குடியழிந்தேன்—பின்னேநான்
> கண்டேன் எனதுயிரைக் காணுத பேரின்பம்
> கொண்டேன் உவந்தேன் குளிர்ந்து."

தன்னை அறிந்தபொழுது மனிதன் பரமானந்த நிலையனுய்ச் சிறந்து திகழ்வன் என்பது இதனுல் அறிந்துகொள்ளலாம்.

அழியா அழகனுய் ஒழிவில் இன்பனுய் நீ உறைந்துள்ளாய்; அதனை உணர்ந்து உய்க என்பது கருத்து.

நிலையான அழகின் நிலை இதனுல் கூறப்பட்டது.

---

80. அகத்தும் புறத்தும் அழகமையப் பெற்ருர்
இகத்தும் பரத்தும் இறையாய்—மகத்துவங்கள்
எல்லாம்கை எய்தி இனியராய் வாழ்ந்துவந்து
நல்லாறு காண்பார் நயந்து. (ம)

இ-ள்

அகம் புறம் என்னும் இருவகை நிலையிலும் அழகு அமையப் பெற்றவர் இகத்திலும் பரத்திலும் இறைவராகி மகத்துவங்கள் பல கண்டு கருதிய யாவும் கைக்கொண்டு உறுதி மிகப் பெறுவர் என்பதாம்.

அழகின் வகையும் தொகையும் வரவும் கூறிய படியிது.

அகத்து அழகு அமைதல், உள்ளத்தே நல்ல இயல்புகளை எண்ணி யாண்டும் தண்ணளி தழைத்து வருதல்.

புறத்து அழகு அமைதல், உலகத்தே அரிய செயல்களைச் செய்து எங்கும் இனியனுய் ஒழுகுதல்.

தன் கருத்தும் கருமமும் இங்ஙனம் நல்லனவாயின் மனிதன் புண்ணியவானுய்ப் புனித மிகப் பெறுவன்; பெறவே இம்மை மறுமை என்னும் இருமையிலும் அவனுக்குத் தலைமையான உரிமைகள் உளவாம் என்க.

இகத்தும் பரத்தும் இறை என்றது எய்தவரும் பதவிகளின் இயல்புணர வந்தது. இறை=அரசன். நல் ஆறு=முத்திநெறி.

அழகிய எண்ணங்களும் செயல்களும் விழுமிய பலன்களை உதவி வியத்தகு மேன்மைகளை விளைத்தருளும் ஆதலால் உள்ளும் புறனும் புனிதனாய் மனிதன் ஒழுகி வர வேண்டும் என்றவாறு. மகத்துவங்கள் என்றது உலகம் வியந்துபோற்றத் தக்க அற்புத நலங்களை.

எவரும் விழைந்து நோக்கி மகிழ்ந்து வருதலால் இனிய செயல்கள் இங்கே அழகு என வந்தன.

"Handsome is that handsome does" (Goldsmith).

"அழகிய செயல்களே அழகாம்" என மேல்நாட்டுப் புலவரும் கூறியுள்ளனர்.

உருவ அழகோடு உள்ளமும் அழகனாய் நல்வினைகள் புரிந்து வரின் யாவரும் விழையும் பேரெழிலாளனாய் மனிதன் பேரின்ப நலனைப் பெறுவான் என்பதாம்.

மனிதப் பிறவி மிகவும் சிறந்தது; அருமையும் பெருமையும் உடையது; எளிதில் எய்த முடியாதது; இத்தகைய அழகிய பிறப்பை அடைந்துள்ள நீ அவல வினைகள் புரிந்து அவலட்சணமாய் அழிந்து போகாமல் அகமும் புறமும் புனிதனாய் மனித வுலகம் மகிழ இனிது உயர்க என்பது கருத்து.

---

### இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

அழகு அரும்பெறலான பெரும் பாக்கியம்.
அதனை யுடையவனை எவரும் மகிழ்வர்.
உலகம் அவன் வசமாய் உரிமை புரியும்.
அழகு எளிதில் அமையாது.
புண்ணியப் பயனாய் அது பொருந்தி வருகின்றது.
அழகும் குணமும் அரசும் அரியன.
முருகன்போல் அழகு தெய்வத் திருவாயுள்ளது.
உருவ அழகு குண அழகால் உயர்கின்றது.
மேன்மையான அழகு ஆன்ம ஞானமே.
அந்த விழுமிய அழகு எழுமையும் இன்பமாம்.

அ-வது அழகு முற்றிற்று.

# ஒன்பதாவது அதிகாரம்

## குணம்.

அஃதாவது உள்ளப் பண்பான நல்ல தன்மைகள். மனிதனைப் புனிதனாக்கி யாண்டும் மகிமை மிகச் செய்யும் தனி மாண்புடையன. இக் குணநலம் உயிரின் அழகாய் ஒளி செய்து உயர் வருளி வருதலால் உடலழகின் பின் வைக்கப்பட்டது. முன்னது புறத்தழகு; இஃது அகத்து அழகு என்க.

81. மக்கள் எனப்பிறந்த மாண்புடையார் வாய்மையருள்
ஒக்கப் படிந்துள் ளுணர்வுயர்ந்து—தக்க
வகையா ளெர்ந்து வருக மகிமை
தொகையா வளரும் தொடர்ந்து. (க)

இ-ள்

உயர்ந்த மக்களாய்ப் பிறந்தவர் வாய்மை அருள் முதலிய இனிய குண நலங்களை மருவி உணர்வு நலம் சுரந்து வரின் அரிய மகிமைகள் பல உரிமையாய்ப் பெருகி வரும் என்றவாறு.

இழிந்த பிறவிகள் பலவும் கடந்து உயர்ந்த மனிதப் பிறவியை அடைந்துள்ளமையால் மாண்பு உடையார் என மதிப் படைந்து நின்றார். இங்ஙனம் உயர்ந்த நிலையில் பிறந்திருந்தாலும் நல்ல இயல்புகள் இல்லையாயின் எல்லா மாண்புகளும் இழந்து இழிந்து படுவர்; அங்ஙனம் பட்டு ஒழியாமல் பண்பு படிந்து ஒழுகுக என்பதாம்.

வாய்மையையும் அருளையும் வரைந்து குறித்தது எல்லாத் தூய்மைகளுக்கும் அவை நிலையமா யுள்ளமை கருதி. வாக்கும் மனமும் முறையே இவை நோக்கி வந்தன.

பொய்யும் கொடுமையும் வெய்யன ஆதலால் அவற்றை அறவே ஒழித்து மெய்யும் கருணையும் மேவி வருக; வரின் மேன்மைகள் யாவும் உன்பால் தாவி வரும்.

சத்தியமும் கருணையும் கடவுள் வடிவங்களாக் கருதப்பட்டுள்ளன: அவற்றை யுடையவன் தெய்வ நிலையமாய்ச் சிறந்து திகழ்கின்றான். அவ்வுயர் நலங்களை மருவி உய்க என்க.

உள்ளம் உருகி எவ்வுயிர்க்கும் இரங்கி அருள்க; யாண்டும் மெய்யே பேசுக; அங்ஙனம் ஆயின் திவ்விய மகிமைகள் வாய்ந்து சீர்மை மிகப்பெறுவாய் என வருவாயைக் காட்டி உறுதி நலனை உரிமையாக உணர்த்திய படி யிது.

---

82. மணியின் ஒளிபோல் மனிதன் குணத்தின்
குணியாய் அமைந்து குலவின்—அணியுலகம்
போற்றி அவனைப் புகழ்ந்து பணிபலவும்
ஆற்றி யருளும் அமர்ந்து. (உ)

இ-ள்

ஒளிமிகுந்த மணிபோல் மனிதன் குணநலம் நிறைந்து நிலவின் உலகம் அவனைப் புகழ்ந்து போற்றி உவந்து பணிந்து உதவிகள் பல புரியும் என்றவாறு.

குணத்தால மகிமை வளரும் என முன்னம் வந்தது; இதில் மதிப்பு வரும் என்கின்றது. அது உள் வரவு; இது உலக வரவு.

மணி என்றது மரகதம் மாணிக்கம் வயிரம் முதலிய சாதி இரத்தினங்களை. ஒளி இயல்புக்குத் தக்கபடி மணி விலை மதிக்கப் பெறுகின்றது. அதுபோல், குண நலன்களின் அளவே மனிதன் மதிப்பும் மாண்பும் பெறுகின்றான்.

மணி மனிதனுக்கும், ஒளி குணத்திற்கும் ஒப்பாம்.

குணி என்றது குணத்தை யுடையது என்க.

மனிதனை மணியோடு ஒப்ப வைத்தது அவனது இயல்பான உயர் நிலை கருதி. இழிந்த கல்லுகளாய்க் கடைப்பட்டொழி யாமல் உயர்ந்த மணிகளாய் வந்தும் உரிய குணங்கள் இலவேல் அவை கழிக்கப்படுகின்றன; அவ்வாறே சிறந்த பிறப்பில் தோன் றியும் தகுந்த நீர்மைகள் இலரேல் மக்கள் இழிக்கப்படுகின்றனர்.

ஒளி வாய்ந்த மணிகள் அழகிய அணிகளாய் அமைந்து விழுமிய நிலையில் விளங்குதல்போல் குணநல முடைய மனிதர் பல நிலைகளிலும் சிறந்து உலகில் உயர்ந்து திகழ்வர் என்க.

நல்ல குணசீலனை உலகமெல்லாம் உவந்து கொண்டாடும்; அந்நலனை நீ விழைந்து பேணுக என்பது கருத்து.

---

83. குணநலம் வாய்ந்த குலமகனை என்றும்
மணநலம் வாய்ந்த மலராக்—கணநலம்
கண்டுயர்ந்த மானிடங்கள் காதலுடன்கனிந்து
கொண்டுவந்து நிற்கும் குவிந்து. (ரு)

இ-ள்

குண நலம் உடைய குல மகனை மண நலம் உடைய நல்ல மலராக உவந்து பல்வேறு இனங்களாய்ப் பரந்து விரிந்துள்ள எல்லாரும் புகழ்ந்து கொண்டாடி நிற்பர் என்றவாறு.

ஒளி என முன்னம் குறித்த குணம் இங்கே மணம் என வந்தது. மதிப்பும் உவப்பும் முறையே மருவி நின்றன.

மணிக்கு ஒளியும் மலர்க்கு மணமும்போல் மனிதனுக்குக் குணம் அமைந்துள்ளது. அஃது இலனேல் ஒளி இழந்த மணியும் மணம் ஒழிந்த மலரும் போல் தானாகவே ஈனமாய் அவன் இழிந்துபடுகின்றான்.

வாய்ந்த என்றது குண நலங்கள் அமையும் அருமை தோன்ற நின்றது. வாய்தல்=அமைதல். குணம் வாய்க்கவே மனிதன் உலகில் உயர்ந்து விளங்குகின்றான் ஆதலால் அவன் குலமகன் என வந்தான். கணம்=கூட்டம்.

அன்பு அடக்கம் இரக்கம் ஈகை இன்சொல் முதலிய பண்புகளுடைய மனிதன் உலகிற்கு இன்ப நிலையமாம்; ஆகவே அவனை எல்லாரும் விழைந்து எங்கும் உவந்து கொண்டாடுகின்றார்.

அழகு செல்வம் முதலியன புறத்தே எவ்வளவு நிறைந்திருந்தாலும் அகத்தே குணம் ஒன்று இல்லையானால் அம் மனிதன் நன்கு மதிக்கப்பெறான் என்பது உவமையால் உணர்ந்து கொள்ளலாம்.

"குணமுடையான் என்றும் குலமலர்போல் எங்கும்
மணமுடையான் ஆகி மகிழ்வான்—குணமிலான்
உற்றவுயிர் இல்லா உடல்போல பிணமாகி
எற்றும் இழிந்து படும்."

குணம் இழந்த வழி நேரும் இழவுகளை இஃது உணர்த்தி நிற்றல் காண்க. உயிர் ஒளியா யுள்ளது உய்த்துணர வந்தது.

பிறந்த மனிதன் சிறந்த குணவானாய் உயர்ந்துகொள்ள வேண்டும் என்பது கருத்து.

84. அல்லற் பிறவி அடைந்தநீ யாண்டுமே
நல்ல குணவானய் நண்ணிநின்ருல்—எல்லையிலாச்,
சீரும் சிறப்பும் செறிந்து வளர்ந்துன்பால்
ஓரின்ப மாக வுறும். (ச)

இ-ள்

அல்லல் நிறைந்த இப்பிறவியில் தோன்றியுள்ள நீ நல்ல குணசீலனய் நண்ணி நின்ருல் எல்லையில்லாத சீரும் சிறப்பும் இன்ப நலங்களும் உன்பால் வந்து குவியும் என்பதாம்.

அல்லற் பிறவி என்றது பிறப்பிலுள்ள துயர நிலைகளை உணர்த்தி நின்றது. கருப்பையில் தோன்றிய நாள் தொடங்கி இறக்கும் வரையும் இடைமிடைந்துள்ள துன்பக் கூறுகளை ஒவ்வொரு மனிதனும் அனுபவத்தால் உணர்ந்துகொள்ளலாம்.

இங்ஙனம் இன்னல் நிறைந்த பிறவியில் பிறந்துள்ள நீ இனிய குணசீலனுய் உயர்ந்து புனிதம் அடைக என்றபடி. நண்ணுதல் = நிலைத்து நிற்றல்.

சீர் என்றது நல்ல மனைவி, இனிய மக்கள், அரிய நண்பர்கள் பெரிய செல்வம் முதலிய சீர்மைகளை.

சிறப்பு என்றது உலகத்தார் உவந்து கொண்டாடும் மதிப்பு மாண்புகளை. இனிய பண்புடைமையால் எல்லாச் செல்வங்களும் பெருமைகளும் ஒருங்கே வருகின்றன; வரவே அக்குணவான் உயர் பேரின்பனுய் ஒளிமிகப் பெறுகின்ருன்.

மணியும் மலரும்போல் குணவான் உயர்வான் என முன்னம் அறிந்தோம்; இதில், பல்வேறு வகைப்பட்ட செல்வ நலங்கள் எல்லாம் அடைந்து அவன் இன்ப மிகப் பெறுவான் என உணர்கின்ருேம். குணநல முடையான் பல நலங்களும் எளிதே அடைவான் என்பது கருத்து.

---

85. எவ்வழியும் எவ்வுயிர்க்கும் யாதும் இடரின்றி
வெவ்வழி யாவும் விலகி—இவ்வழி
வந்த வகையோர்ந்து வாரா வழிநாடிச்
சிந்தனை செய்க தினம். (ரு)

இ-ள்

எந்த உயிர்க்கும் எவ்வகையிலும் எவ்விதத்தும் இடர் புரியாமல் தீய வழிகள் யாவும் விலகி இவ்வுலகில் வந்துள்ள நிலையினை உணர்ந்து இனிமேல் வாராத வழியினை நாடி நாளும் நீ சிந்தனை செய்து வருக என்பதாம்.

வெவ்வழி என்றது கேடு விளைக்கும் தீய நெறிகளை.

இவ்வழி வந்தவகை = இந்த உலகத்தில் வந்து பிறந்திருக்கும் நிலையை. இருப்பு வகை தெளியின் எய்து நிலை வெளியாம்.

வாராவழி என்றது மீட்டும் வந்து பிறவாத நெறியை.

இந்த உடலுடன் இங்கே தோன்றியிருக்கும் நிலையை ஓர்தலாவது பிறப்பின் பெற்றியையும் அதன் மூல காரணங்களையும் ஆராய்ந்து உணர்தல். உணரின், துன்பக் கூறுகளும் வினை விளைவுகளும் தெரியும்; தெரியவே பிறவி ஒழிதற்கு ஏதுவான தவ ஞானங்களை விழைந்து பவநிலை கடக்க நேரும் என்க.

விலகி ஓர்ந்து நாடிச் செய்க என்றது சீவ தயை யுடையனாய்த் தருமவழி ஒழுகித் தத்துவ தரிசனம் செய்து பிறவி தீர்ந்து பேரின்பம் பெறுக என்றவாறு.

*கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்*
*மற்றீண்டு வாரா நெறி.* (குறள், 356)

*தறுகட் டறுகட்பம் தன்னைத்தான் நோவல்*
*உறுதிக் குறுதி உயிரோம்பி வாழ்தல்*
*அறிவிற் கறிவாவ தெண்ணின், மறுபிறப்பு*
*மற்றீண்டு வாரா நெறி.* (அறநெறிச்சாரம், 126)

*வாரா வழியருளி வந்தெனக்கு மாறின்றி*
*ஆரா அமுதாய் அமைந்தன்றே—சீரார்*
*திருத்தென் பெருந்துறையான் என்சிந்தை மேய*
*ஒருத்தன் பெருக்கும் ஒளி.* (திருவாசகம், திருவெண்பா, 7)

இம்மூன்று பாசுரங்களும் ஈண்டு எண்ணத் தக்கன. வாரா வழிக்கு வழி காட்டி இவை வந்துள்ளமை காண்க.

அருட் பண்பும் ஆன்ம சிந்தனையும் கூறிய படியிது.

86. நெஞ்சு நலமாய் நெறிமுறையே நீ ஒழுகின்
அஞ்சும் நலமாய் அமையுமே—தஞ்சமென
எல்லா நலமும் இசையும் எளிதிசைந்து
வல்லான் எனச்செய்யும் வந்து. (சு)

இ-ள்

மனம் புனிதமாய் நீதி நெறியில் ஒழுகின் ஐம்புலன்களும் நலமாய் அமைந்து எல்லா நலங்களும் எளிது கை வந்து வல்லவன் என உலகில் உயர்ந்து விளங்குவாய் என்றவாறு.

இது, உள்ளப் பண்பின் உயர்வு கூறுகின்றது.

மன நலம் எல்லா நலங்களுக்கும் மூலம் ஆதலால் அதன் நிலைமையும் தலைமையும் தெரிய வந்தது. புறத்தே நீ வல்லவன் ஆக விரும்பின் அகத்தே நல்லவன் ஆகுக.

அஞ்சும் என்றது மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐம்பொறிகளை. தஞ்சம் என = உரிமையாக.

ஒருவன் நெஞ்சு நல்லது ஆயின் இந்த ஐந்தும் நல்லனவாய் அமையும்; அமையவே அகத்தும் புறத்தும் அவன் நல்லவனவன்; ஆகவே புண்ணிய சீலனை அவன்பால் எல்லா இன்ப நலன்களும் அரிய பல மேன்மைகளும் எளிது வந்து சேரும்; சேரவே உலகம் முழுவதும் உவந்து போற்ற உயர்ந்து திகழ்வன்.

இசை = கீர்த்தி. வியந்து விழைந்து எங்கும் புகழ்ந்து பேசுதல் என்னும் ஏதுவால் புகழ் இசை என வந்தது. இசைத்தல் = இனிது பாராட்டி மொழிதல்.

நல்ல நெஞ்சு ஆவது யாண்டும் எவ்வழியும் யாதும் தீமை கருதாத தூய்மை யுடையது. சித்த சுத்தியுடையவன் எல்லாப் பாக்கியங்களையும் எளிதில் அடைந்து எவர்க்கும் தலைவனாய் விழுமிய நிலையில் விளங்கி நிற்பன் என்பது கருத்து.

---

87. இனிய குணநலங்கள் எல்லாம் இறைவன்
புனித உருவாய்ப் பொலியும்—மனிதன்தான்
அவ்வுருவைப் பேணின் அமலன் என அவனை
எவ்வுலகும் ஏத்தும் எதிர்ந்து. (எ)

இ-ள்

இனிய குண நலங்கள் யாவும் இறைவனது புனித உருவமாய்ப் பொலிந்துள்ளன; மனிதன் அவற்றைப் பேணி வரின் அவனைத் தெய்வமாக மதித்து வையம் போற்றி வரும் என்பதாம்.

இது, குணங்கள் கடவுளின் உருவங்கள் என்கின்றது.

கருணை, உண்மை, வண்மை, கண்ணோட்டம், ஈகை, சீலம் முதலிய நீர்மைகள் கடவுள் வடிவங்களாய்க் கனிந்து இருக்கின்றன ஆதலால் இந்த இயல்புகளை யுடையவர் தெய்வத் தன்மையை அடைந்து திவ்விய புருடராய்ச் சிறந்து விளங்குகின்றார்.

கருணாநிதி சத்தியசீலன் தருமமூர்த்தி என இறைவன் பெயர் பெற்றுள்ளமை ஈண்டு எண்ணத் தக்கன. இந்தத் தன்மைகளை அடைந்தபொழுது மனிதன் தெய்வமாய்த் திகழ்கின்றான்; திகழவே முதல்வன் புதல்வன் என உலகம் அவனை உவந்து துதிக்கின்றது.

அமலன் என்றது கடவுளை. பரிசுத்தன் என்பது அதன் பொருள். சித்த சுத்தியும் உத்தம இயல்பும் உடையவன் உயர் பரனாய் ஒளி பெற்று மிளிர்கின்றான்.

இனிய என்றது குணங்களின் புனித நிலை தெரிய. தூய குணங்கள் மனிதனை ஈசன் ஆக்குகின்றன; அவ்வாறே தீயன அவனை நீசன் ஆக்கிவிடும் என்க.

நல்ல இயல்புகளை நயந்து பேணி அல்லன யாவும் களைந்து ஒல்லையில் உயர்க என்பது கருத்து.

---

88. உள்ளம் திருந்தி உயர்பண் புடையனாய்
வள்ளம் படிந்து வளரினோ—பள்ளமுந்திப்
பாயும் புனல்போல் பரமன் அருளுன்பால்
தோயும் இனிது தொடர்ந்து. (அ)

இ-ள்

உள்ளம் திருந்தி உயர்ந்த குணசீலனாய்த் தருமவழி ஒழுகி வரின் பள்ளம் பாயும் நீர்போல் இறைவன் அருள் உன்பால் விரைவில் வந்து தோயும் என்றவாறு.

உள்ளம் திருந்தல் ஆவது வஞ்சம் பொறாமை முதலிய புன்மைகளை ஒழித்து நல்ல தன்மைகளை வளர்த்து நன்கு பண் படுத்தல். நெஞ்சம் பண்படின் நெடும் போக மாகும்.

உயர் பண்பு = பெருந்தகைமை. சிறியன சிந்தியாதவன் பெரிய மனிதன் ஆகின்றான்; ஆகவே அவ் அரிய இயல்பு உயர் பண்பு என வந்தது.

திருந்திய நிலம் உயர்ந்து விளைதல்போல் செம்மையான நெஞ்சில் நன்மைகள் யாவும் நன்கு விளையும் என்க.

பள்ளம் உள்ள இடத்தில் வெள்ளம் பாய்தல்போல் நல்ல உள்ளத்தில் இறைவன் அருள் தானாகவே விரைந்து வந்து தோயும் என்றதனால் இயல்பும் உரிமையும் இனிது அறியலாகும்.

தண்ணீர் எங்கும் பரவியிருந்தாலும் மேட்டை நோக்காது பள்ளத்தையே நோக்கிப் பாய்கின்றது; அதுபோல் யாண்டும் பூரணமாய்ப் பொங்கித் ததும்பியுள்ள பரமன் அருளும் தீமை மண்டித் திமிர்கொண்டு நீண்டுள்ள தீய நெஞ்சைப் பாராமல் திருந்திய பண்புடைய பெருந்தகைமையான தூய உள்ளத்தையே நோக்கி விரைந்து பாய்ந்துகொண்டுள்ளது.

மேட்டு நிலம்போல் நெஞ்சைக் கேட்டு நிலையமாக் கெடுத்து ஒழிக்காமல் நல்ல நீர்மையைப் பெருக்கி உள்ளத்தை இனிது வளர்த்து வருக; வரின் பரமானந்த வெள்ளம் உனக்குத் தனி உரிமையாம் என்பது கருத்து.

---

89. உன்னுயிர்போல் மன்னுயிரை ஓர்ந்து நலம்புரிந்
தின்னிலைய னாகி இனிதொழுகின் —பன்னிலையில்
உள்ள அறநலங்கள் உன்பால் ஒருவழியே
வெள்ளமென வீழும் விரைந்து. (கூ)

இ-ள்

உன் உயிரைப்போலவே பிற உயிர்களையும் கருதி யாண்டும் இதம் புரிந்து இனியனாய் ஒழுகின் அறநலங்கள் யாவும் ஒருங்கே உன்பால் விரைந்து வந்து சேரும் என்பதாம்.

இன்னிலையன் ஆகி = மனம் மொழி மெய்கள் இனிய நிலையில் உயர்ந்து. இனிமை இதநலம் கனிந்தது.

மனிதன் இன்பம் விழைகின்றான்; துன்பம் களைகின்றான்; அவ்வாறே எல்லாரும் உழல்கின்றனர் ஆதலால் உன் உயிர்போல் ஓர்ந்து யாண்டும் நலம் புரிக என இஃது உணர்த்தி நின்றது.

முன்னிலையில் சுட்டியது, தன் நிலைமையை உன்னி உணர்ந்து உறுதி தெளிய. ஓர்தல் அனுபவமாய் அழுந்தி அறிதல்.

தனது அருமை மகனுக்கு உரிய தந்தை உறுதி நலங்களைத் தனி உரைப்பதுபோல் உலக மக்களுக்கு அரிய உண்மைகளை உரிமையோடு கவிகள் இனிது கூறுகின்றார் ஆதலால் அம்மரபு நிலைதெரிய முன்னிலை ஒருமையில் இங்கு மொழிய நேர்ந்தது. முன்னும் பின்னும் இன்ன வகையில் இந்நூலுள் வந்துள்ளன எண்ணிக்கொள்க.

அருள் நலமுடையனாய் உள்ளம் கனிந்து உயிர்களுக்கு இதம்புரிந்து வரின், அந்நல்வினைகள் புண்ணியங்களாய்ப் பெருகி ஒருங்கே திரண்டு உடையவனை நாடி ஓடிவரும் ஆதலால் "அற நலங்கள் வெள்ளம் என விரைந்து வீழும்" என வந்தது.

கருணைப் பண்பு புண்ணியங்களை விளைத்து எண்ணரிய இன்ப நலங்களை இனிது நல்கும்; மனிதன் அதனைப் பேணி மாண்புற வேண்டும் என்பது கருத்து.

---

90. ஆன்ம ஒளியாய் அருமணமாய் இன்குணங்கள்
மேன்மை மிகுந்து மிளிருமே—பான்மை
அளவே மகிமை அறிவின்பம் எல்லாம்
உளவே அதன்கண் உறைந்து. (ம)

இ-ள்

இனிய குணங்கள் உயிரின் ஒளியாய் அரிய மணமாய்ப் பெருகி யுள்ளன; அறிவு ஆற்றல் முதலிய உயர் நலங்களெல்லாம் குணத்தின் கண்ணேயே உறைந்திருக்கின்றன என்றவாறு.

குணங்கள் ஆன்மாவுக்கு ஒளி ஆயும் மணம் ஆயும் உள்ளன என்றமையால் அவற்றின் மகிமையும் மாண்பும் அறியலாகும்.

இத்தகைய குணநலங்களைப் பெற்றுள்ள அளவே மனிதன் மாட்சி அடைகின்றான். குணம் குன்றிய பொழுது மணம் குன்றி இழிகின்றான் ஆதலால் யாண்டும் அதனைப் போற்றி வர வேண்டும் என்க. பான்மை = தன்மை, தகுதி.

" சத்தியம் தானம் சம்மதம் இன்சொல்
சாற்றுதல் ஒருவழிப் படுதல்
புத்தியே முதல கரணம்ஓர் நான்கும்
அடக்குதல் புலன்கள்போம் வழியில்
உய்த்திடா தமைத்தல் பொறை திடம் ஞானம்
உயிர்க்கெலாம் தண்ணளி புரிதல்
இத்திறம் அனைத்தும் மானத தீர்த்தம்
எனஎடுத்து இயம்பினர் மேலோர். " (காசிகாண்டம்)

இவ்வுத்தம குணங்களால் உயிர் புனிதம் அடைகின்றது.

உலக மதிப்பும், உணர்வின் தெளிவும், உள்ளத்தில் இன்பமும் குணத்தால் வளர்ந்து வருகின்றன; எல்லா நலங்களுக்கும் மூலகாரணமான அந்த இனிமைப் பண்பைப் பேணி மனிதன் இருமை இன்பங்களையும் பெறுக என்பது கருத்து.

### இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

குணம் மனிதனை மகிமைப் படுத்துகின்றது.
ஒளிமணிபோல் குணவான் உயர்ந்து விளங்குகின்றான்.
உலகம் அவனை உவந்து கொண்டாடுகின்றது.
சீரும் சிறப்பும் உடையனாய் அவன் சிறந்து திகழ்கின்றான்.
உயிர்கட்கு இதம்புரிதலே உயர் குணம் ஆகும்.
நெஞ்சு நலம் ஆயின் அஞ்சும் நலமாம்.
குணசீலன் தெய்வம் என மிளிர்கின்றான்.
இறைவன் அருள் அவன்பால் பெருகி வருகின்றது.
புண்ணியங்களெல்லாம் அவனிடம் பொங்கி விளைகின்றன.
ஆன்ம சோதியாய் அவன் மேன்மை மிகுந்து நிற்கின்றான்.

௯-வது அதிகாரம் குணம் முற்றிற்று.

# பத்தாவது அதிகாரம்.
## இன நலம்.

அஃதாவது சேர்ந்த இனத்தினது நன்மை. ஒருவன் எவ்வளவு குணசீலனாய் இருந்தாலும் அவனைப் புடை சூழ்ந்துள்ளவர் நல்லவராயின் நலமும், அல்லவரானால் அவமும் அமைய நேரும்; ஆகவே அந்தச் சேர்க்கையின் சீர்மை இங்கே கூற நேர்ந்தது. குணம்போல் மனிதனை இனமும் மணம்பெறச் செய்யும் ஆதலால் அதன்பின் இது வைக்கப்பட்டது.

91. ஒருதாய் வயிற்றில் உடன்பிறந்தார் ஏனும்
பெரியார்நட் புற்றார் பெரியர்—பெரியார்நட்
பில்லரேல் புல்லரே இன்பனைநீர் சுண்ணமுறின்
நல்லதின்றேல் பொல்லதாம் நாடு. (க)

இ-ள்

ஒரே பனையில் ஊறிய நீர் சுண்ணாம்போடு சார்ந்து பதினியாகின்றது; சாராவழி கள் ஆய் இழிகின்றது; அதுபோல் ஒரு தாய் வயிற்றில் பிறந்த பிள்ளைகளேயாயினும் பெரியாரோடு சேர்ந்தால் பெரியராய் உயர்கின்றார்; சேராதவர் சிறியராய் இழிகின்றார் என்றவாறு.

இது, நல்ல சேர்க்கையின் நலம் கூறுகின்றது.

பெரியார் என்றது குண சீலரான மேலோர்களை.

பனை நீர் = பனஞ்சாறு. பக்குவமாகப் பதம் செய்து விளைத்தலால் பதநீர் என நேர்ந்தது. இது பொழுது அதனைப் பதினி என்று வழங்கி வருகின்றனர்.

சுண்ணாம்பு தோய்ந்த நீர் இனிப்பாய்ப் பதினி என வந்தது; தோயாதது புளிப்பாய்க் கள் என நின்றது. முன்னது பருகத் தக்கது; பின்னது பருகத் தகாதது. பருகின், வெறியை விளைத்து அறிவைக் குலைக்கும்; குலையவே அவங்கள் பல விளையும் ஆதலால் அது பாவம் எனப் படர்ந்தது. கள் அருந்துதல் பஞ்சமா பாதகமாகப் பண்டு தொட்டே இந்நாட்டில் கருதப்பட்டுள்ளது.

"கள்ளும் பொய்யும் காமமும் கொலையும்
உள்ளக் களவும்என் றுரவோர் துறந்தவை."

(மணிமேகலை, 24)

ஐவகைத் தீமைகளுள் கள்ளை இதில் முதலில் குறித்திருத்தல் அறிக. பாவத் தலைமை இடத்தின் நிலைமையால் தெரிந்தது.

"கள்விலை பகர்வோர் கள்ளினை நுகர்ந்தோர்
கள் அருந் துதற்குடன் படுவோர்
கள்ளருந் தினரை மகிழுநர் நரகில்
கற்பகா லங்கிடந் தழுந்தி
எள்ளுறுந் தீய மலப்புழு வாகி
மலத்தினை நுகர்ந்துபின் இறந்து
விள்ளருங் கொடிய ரவுரவ நரகில்
மீட்டுமீட் டுழன்றுநாள் கழிப்பார்."

(கூர்ம புராணம், 2, 17)

என்றமையால் கள்ளின் கொடுந் தீமை காணலாம். அதிபாதகமான இக்கொடிய கள்ளைப் படி முழுதும் நெடிது பரப்ப இதுபொழுது முடி அரசு முயல்கின்றதே! முடிவு என்னும்?

பனை நீர் ஒன்றே சுண்ணம்பைக் கலந்தது நல்லதாயது; கலவாதது தீயதாயது. ஆதலால், ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகளாயினும் நல் இனம் மருவியது நல்லதாம்; ஒருவியது தீயதாம் என்பதற்கு அது உவமையாய் வந்தது.

பனை தாய்க்கும், நீர் பிள்ளைக்கும், சுண்ணம் நல்லோர்க்கும் ஒப்பாம். சுண்ணம், வெண்மை நிறம் உடையது ஆதலால் அது தூய சத்துவ குணமுடைய உத்தமர் நிலைமையை உய்த்துணர நின்றது.

பதினி முதலில் இனிதாய் மேலும் கருப்புக்கட்டி சீனி என விளைந்து ஞாலம் இன்புற வளர்ந்து பயன்படுகின்றது; கள் இன்னதாய்த் தோன்றி இழிந்து கழிந்து பின்பு ஒரு தொடர்பும் இன்றி அடியோடு அழிந்து போகின்றது.

நல்ல இனம் சேர்ந்தவன் உடனே நல்லவனாகிப் பின்னும் நல்ல சந்ததிகளைப் பெற்றளித்து எல்லார்க்கும் என்றும் இதம் புரிந்து அருள்கின்றான். நல்லவரைக் கூடாதவன் அப்பொழுதே பொல்லாதவன் ஆகிப் பின்பு எப்பொழுதும் பயன்படாமல் வம்மிசம் அற்றுப் போகின்றான் என்பதைக் குறித்த உவமையால் கூர்ந்து உணர்ந்துகொள்ளலாம்.

இன நலத்தின் மகிமை இதனால் கூறப்பட்டது.

92. சேர்ந்தார் சிறுமையெலாம் தீர்த்துச் சிறப்புதவி
ஆர்ந்த உயர்வை அளித்தருளும்—தேர்ந்த
பெருந்தகை யாளரைப் பேணி அடைக
இருந்தகை எய்தும் எளிது. (உ)

இ-ள்

தம்மை அடைந்தவரது புன்மையாவும் நீக்கி நன்மை பலவும் நல்க வல்ல நல்ல தன்மையாளரை நாடிக் கூடிக்கொள்க; கூடின், அரிய மேன்மைகளெல்லாம் எளிது கைவரும் என்பதாம்.

சேரத் தக்காரது சீர்மையும் நீர்மையும் உணர்த்திய படியிது.

சிறுமை = இழிந்த இயல்புகள். சிறப்பு = நன்கு மதிப்பு.

உயர்ந்தோரைச் சார்ந்தால் சின்னத் தனங்கள் ஒழியும், சிறந்த நலங்கள் விளையும், உயர்ந்த மேன்மைகள் உளவாம் ஆதலால் அவரை விரைந்து சேர்ந்துகொள் என விழைவு தோன்ற வந்தது. சேர்க்கையின் பயனிலை வியனிலையில் விளைந்தது.

பாலொடு கலந்த நீர் பால் ஆய் விளங்குதல்போல் மேலோரோடு கூடினவர் மேலோராய் மிளிர்வர் என்க.

இரும் தகை என்றது அரிய பெரிய தன்மைகளை. இரும் = பெரிய. இருமையும் பெருமைதர வல்ல அருமையாளரை அறிந்து தழுவிக்கொள் என்பது கருத்து.

---

93. தன்னிடத்தே யுள்ள தனிக்கலையைப் பள்ளியுட்போய்
மன்னு குருவிடத்தே வாய்ந்துணரின்—மின்னுகின்ற
பூங்கொடியோர் கொம்பைநன்கு புல்லியெழல் போலின்பம்
ஓங்கி யெழுவர் உயர்ந்து. (௩)

இ-ள்

இயல்பாகவே தப்பால் அமைந்துள்ள கலை அறிவை ஆசிரியனிடம் அணுகி ஆராயின் அம்மாணவர் கொழுகொம்பு வாய்ந்த பூங்கொடிபோல் இனிதே ஓங்கி எழுவர் என்றவாறு.

இது, கல்வி வளரும் காட்சி காட்டுகின்றது.

பள்ளி = கல்வி பயிலும் இடம். மனன சீலரான முனிவர் வசிக்கும் ஆச்சிரமத்தையே முதலில் இது குறித்து வந்தது.

"மாதவி மாதவர் பள்ளியுள் அடைந்ததும்" (மணிமேகலை)

என்பதில் பள்ளி நிலை அறிக. முன்பு இங்ஙனம் நின்ற அது பின்பு பிள்ளைகள் படிக்கும் இடத்தைச் சுட்டியுள்ளது. உள்ளப் பள்ளத்துள்ள கலையை இனிது பயிலும் நிலையம் ஆதலின் பள்ளி என நேர்ந்தது. பிள்ளைகளைப் பூங்கொடியோடு ஒப்புற வைத்தது இளமையும் இனிமையும் வளமையும் கருதி.

ஒவ்வொரு பிள்ளையிடமும் அறிவு உள்ளத்தே உறைந்துள்ளது. அது நூல்களால் ஒளி பெற்று வளர்ந்து வெளியே விரிந்து எழுகின்றது. அவ்வளர்ச்சிக்கு ஆசிரியர் ஆதரவாய் நின்று கிளர்ச்சி தந்தருள்கின்றார்.

புறத்தே குருவின் துணை நன்கு அமைந்திருந்தாலும் தன் அகத்தே மாணவன் கருத்து ஊன்றி உணரவில்லையானால் கல்வியறிவு விருத்தி யாகாது.

"The more the power of Concentration, the greater the Knowledge that is acquired."

"மன ஒருமைக்குத் தக்க அளவே கலையறிவு பெருகி எழுகின்றது" எனத் தமது அனுபவத்தை விவேகானந்தர் இவ்வாறு பலரறிய வெளியிட்டுள்ளார்.

ஊன்றிய கருத்தும், உய்த்துணர்வும், நல்ல நூல்களும், தேர்ந்த குருவும் அகத்தும் புறத்தும் முறையே கல்விக்குத் துணைகளாயுள்ளன; இந்த நல்ல இனங்களைப் பேணிக் கல்வியில் ஒல்லையில் உயர்ந்து கொள்க என்பது குறிப்பு.

---

94. பூவேற நார்தான் புதுமணம் பூண்டதுபோல்
பாவேறும் செல்வர்தாம் பாடுபெற்றார்—பாவேறார்
நின்ற இடமும் நிலைதெரியா தையகோ
பொன்றி ஒழிந்தார் புறம். (ச)

இ-ள்

பூவினைச் சார்ந்து நார் மணம் பெற்றதுபோல் பாவினைச் சார்ந்த செல்வரே பூமியில் பெருமை மிகப் பெற்றார்; அங்ஙனம் சாராதவர் இருந்த இடமும் தடந் தெரியாமல் அழிந்து மறைந்து ஒழிந்து போயினர் என்றவாறு.

இது, செல்வர் நல்ல கல்வி இனம் சேர்க என்கின்றது. பூ என்றது பிச்சி மல்லிகை முதலிய நல்ல சாதி மலர்களை. பா என்றது ஆன்ற கல்வியுடைய சான்றோர் செய்யுள்களை. பா ஏறலாவது ஈகை முதலிய குண நலங்களால் உயர்ந்து புலவர் பாடும் புகழுடையராதல். பாடு=பெருமை, மேன்மை.

செல்வம் பெற்றவர் பல்லுயிர்க்கும் இரங்கி அதனை நல்ல வழியில் பயன்படுத்தின் எல்லார்க்கும் அவர் இனியர் ஆகின்றார்; ஆகவே உலக ஒளிகளாய் மிளிர்கின்ற கவிகள் அவரை உவந்து பாடுகின்றார். பாடவே பாடு பெறுகின்றார். என்னை? அப்பாடலால் என்றும் அழியாமல் நின்று யாண்டும் புகழுடன் அவர் பொலிந்து விளங்குகின்றார் என்க.

"உரையும் பாட்டும் உடையோர் சிலரே
மரையிலை போல மாய்ந்திசினோர் பலரே
புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்
வலவன் ஏவா வானவூர்தி
எய்துப என்பதம் செய்வினை முடித்து" (புறம், 27)

புலவரால் பாடப்பெற்றவர் இவ்வுலகில் புகழுடையராய் நின்று முடிவில் தெய்வ விமானம் ஊர்ந்து திவ்விய பதவி அடைகின்றார்; பெறாதவர் பழியினராய் இழிந்து வறிதே மாய்ந்து மறைந்து போகின்றார் என இஃது உணர்த்தி நிற்றல் அறிக.

"பாடல் பெறுவோ; பலர் மெச்ச வாழானே;"

எனச் சேடன் என்னும் ஒரு செல்வனது இழி நிலைமைக்கு இரங்கி ஒளவையார் இவ்வாறு மொழிந்திருக்கின்றார்.

"ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவன் ஆக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்
புலவர் பாடாது வரைகஎன் நிலவரை." (புறம், 72)

இது நெடுஞ்செழியன் என்னும் பாண்டிய மன்னன் கூறியது. "போரில் சென்று இன்று நான் பகைவரை வென்றுகொள்வேன்; அங்ஙனம் கொள்ளேன் ஆயின், என் நாடு புலவர் பாடும் பாடு பெறாது போக" என்று அவன் வஞ்சினம் கூறிய படியிது.

சிறந்த புலவர்கள் வாயிலிருந்து பாடல் பெறுவதை எவ்வளவு பெரும் பேறாக முன்னாள் மன்னர் கருதி வந்துள்ளார் என்பது இவற்றால் அறிந்துகொள்ளலாம்.

பூவை மருவிய நார் போல் பாவை மருவிய பேர் மதிப்பு மிகப் பெற்று மாண்புறுவர் என்பதாம். ஆகவே பாவினது தேவியல்பு இனிது புலனாயது.

இத்தகைய பாடலைப் பெற்றவரே நாடறிய நிலைத்து நிற்கின்றார்; பெறாதவர் நின்ற இடமும் நிலைதெரியாமல் ஒழிந்து போகின்றார் ஆதலால் வீணே இழிந்து வெறிதாய் ஒழிகின்ற அவரது பரிதாப நிலைமையை நினைந்து ஐயகோ! என இரங்க நேர்ந்தது. உய்தியை உணர உருகி வேண்டிய வாறிது.

---

95 எத்தனைதாம் கற்றாலும் எம்மிடத்தே வந்துதான்
சத்த மிகுபுலவர் சார்வரெனப்—பித்தமிகு
செல்வர் செருக்குகின்றார் சேராதார் சீரழிந்து
வல்லை ஒழிதல் மறந்து. (ரு)

இ-ள்

எவ்வளவு படித்தாலும் எம்மை யடைந்துதானே புலவர்கள் நன்மை அடைகின்றார் எனப் புன்மையுடைய செல்வர் சிலர் தம்மை மறந்து வெம்மையுடன் பிதற்றுகின்றார் என்றவாறு.

சில இனந் தெரியா மொழிகளை நினைந்து இரங்கிய படியிது. பித்தம் மிகு செல்வர் என்றது உணர்வு நலம் கனிந்த உத்தமச் செல்வர்களும் உளர் ஆதலால் அவரினும் வேறுபாடு தெரிய வந்தது. மதி மயங்கி மனக் களிப்போடு பிதற்றலால் பித்தம் என நேர்ந்தது.

கல்விமான்களைச் சேர்ந்து செல்வர்கள் சீரும் சிறப்பும் பேரும் பெறுகிறார்கள். செல்வரால் இவர் உறுவன உளவேல், ஒரு வேளை உணவும் சிறிது பொருளுமே யாம். அழிந்து ஒழிந்து போகின்ற இழிந்தன சில கொண்டு என்றும் அழியாத புகழுயிரைத் தம் கவி யுருவில் மருவி இவர் இனிது அருள்கின்றார். இந்த அருட் கொடையாளருடைய அருமை பெருமைகளை ஓர்ந்து உணராமல் ஊனமாய் உரையாடல் பெரிதும் இரங்கத் தக்கதாம்.

கபிலரைச் சேர்ந்த பாரியின் சீர் பாருலகெங்கும் இன்றும் பரவி ஒளிர்கின்றது. முடி மன்னர் பலருள் முடிவில் வாழ்வினராய் படிமன்னி யுள்ளவர் பாவலரைச் சார்ந்தவரே யாவர்.

வெண்ணெய்ச் சடையர் கம்பரைச் சார்ந்து அழியாவாழ்வு பெற்றுள்ளார். சந்திரன்சுவர்க்கி, வரபதி ஆட்கொண்டான் என்பவர் முறையே புகழேந்தி யாலும், வில்லியாழ்வா ராலும் எங்கும் புகழ் ஏந்தி நிற்கின்றனர். பண்டும் இன்றும் புலவரைச் சார்ந்தவரே நிலவரையில் நிலைத்து நிலவுகின்றார். சாராதவர் எவ்வளவோ கோடிபேர் ஈடழிந்து போயினர்.

கலைஞானம் கனிந்த கவியரசரைச் சேர்ந்தவர் இன்னும் புவி புகழப் புத்தொளி பெற்று நின்றார்; சேராதவர் சீரழிந்து இருந்த இடமும் தெரியாமல் இழிந்து ஒழிந்தனர்; ஆகவே செல்வ நிலையின் உண்மையை உணர்ந்து, கல்வியாளரின் தன்மை யைத் தெளிந்து நன்மையை அடைந்துகொள்க என்பது கருத்து.

---

96. நெஞ்சில் நலமில்லார் நீளுலகில் நல்லவர்போல்
செஞ்சொல் இயம்பிச் சிரித்தாலும்—நஞ்சமைந்த
குட்டம்போல் அன்றோர் கொடுவினையே கூர்ந்துநிற்பர்
ஒட்டல் ஒழிக உடன். (சு)

இ-ள்.

உள்ளத்தில் நலம் இல்லாதவர் உலகத்தில் நல்லவர்போல் அன்பு மொழிகள் ஆடி இன்புற நகைத்தாலும் அவரை நம்பிச் சேராமல் உடனே ஒதுங்கி விடுக என்றவாறு.

இது மன நலம் இல்லாதவரை மருவாதே என்கின்றது. மேல், கற்றவரைச் சேர்தல் நல்லது என்றார்; இதில் எவ்வளவு கல்வி இருப்பினும் நெஞ்சில் நலம் இல்லையாயின் அவரை அஞ்சி ஒதுங்குக என்கின்றார்.

நஞ்சுடைய நாகத்தின் தலையில் அரியமணி இருப்பினும், அதனைஎவரும்அணுகார்; நெஞ்சு தீமை யுடையாரிடம் நல்லகல்வி அமைந்திருந்தாலும் அவர் அருகே செல்லலாகாதென்க.

செஞ்சொல்லும் சிரிப்பும் வஞ்ச நிலையை மறைக்க வந்தன. உள்ளே தீயராயிருந்து, வெளியே இனியவர் போன்றுநடிப்பவரை நல்லவர் என எண்ணிச் சேராதே; சேரின், அல்லல் பல நேரும்.

குட்டம்=குளம். இழிந்த நீர் நிறைந்த சிறு குளத்தை இங்கே அது குறித்து நின்றது. நஞ்சு அமைந்த குட்டத்தை

வஞ்ச நெஞ்சோடு ஒப்பவைத்தது, கெட்ட எண்ணங்கள் நிறைந்து பிறர்க்குக் கேடு விளைத்து வரும் பாடு நோக்கி.

உள்ளே நஞ்சு தோய்ந்து இருப்பினும் வெளியே குளிர்ந்த நீர்போல் தெளிந்து தோன்றுகின்றது. அத்தோற்றத்தில் மயங்கி அந் நீரை அள்ளிக் குடித்தவர் துள்ளித் துடித்து மடிவர்; அது போல் வஞ்ச நெஞ்சரை மருவினவரும் பரிதாபமாய் மறுகி அழிவர் என்க. வெளிமினுக்கில் மயங்காதே; நெஞ்சம் தீயரை நஞ்சு என்று நினைந்து நீங்குக என்பதாம்.

உள்ளம் கொடியாரை எள் அளவும் கூடாதே என்பது குறிப்பு.

---

97. நெஞ்சம் கொடிய நெடுமூர்க்க ரோடுறைதல்
நஞ்சம் கொடிய நரகமே—தஞ்சமென
எவ்வழியும் அன்னூர் இருக்குமிடம் சேராதே
வெவ்வழி நீங்கி விடல். (எ)

இ-ள்.

கொடிய மனமுடைய நெடிய மூர்க்கரைச் சேர்தல் கடு நரகமேயாம்; அவர் இருக்கும் இடத்தை எவ்வழியும் நெருங்காமல் வெவ்வழி நீங்கி விடுக என்றவாறு.

இது மூர்க்கரோடு அணுகாதே என்கின்றது.

நெஞ்சக் கொடுமை நெடுமூர்க்கத்திற்கு மூல காரணம் ஆதலால் அது முன்னுற வந்தது. மூர்க்கம் ஆவது, தீய காரியங்களைத் துணிந்து செய்தல். மூடத்தினும் இது மிகவும் கொடியது.

மூர்க்கர் உறவை நஞ்சம் எனவும், நரகம் எனவும் குறித்தது இம்மையிலும் மறுமையிலும் அதனால் விளையும் இன்னல் நிலை கருதி. தஞ்சம் = ஆதரவு. தஞ்சம் ஆகாது; நஞ்சமாம்.

நெஞ்சு பாழ்பட்ட அவர் எப்பொழுதும் யார்க்கும் இடர்களையே செய்வர் ஆதலால் அவரது தொடர்பு துயர நிலையமாகவே பெருகி நிற்கும்; அந்நீசரோடு நெருங்கலாகாதென்க.

எவ்வழியும் என்றது எந்த வகையினும் என்றவாறு.

சாதி, சமயம், தொழில், உறவு முதலிய எவ்வித காரணத்தை முன்னிட்டும் வெவ்வினையாளரோடு சேராதே என்றபடி.

அவர் குடியிருக்கும் இடம் கொடிய விடம்; படு துயர் விளைக்கும்; நெடிய நீசமான அதன் அருகே அடியிடாதே என் பதாம். இருப்பு நெருப்பு என வெறுப்புற வந்தது.

வெவ்வழி நீங்கி விடல்=வெகுதூரத்தே விலகிவிடுக.

கண்ணுக்கு எட்டாதபடி கால்வாங்கிக்கொள்ளுக என்பதாம்.

"கொம்புளதற்கு ஐந்து; குதிரைக்குப் பத்துமுழம்,
வெம்புகரிக்கு ஆயிரம்தான் வேண்டுமே—வம்புசெறி
தீங்கினர்தம் கண்ணில் தெரியாத தூரத்து
நீங்குவதே நல்ல நெறி" (நீதிவெண்பா)

என்னும் நீதிமொழியும் ஈண்டு நினைக்கத் தக்கது.

தீயினம் தீயினும் தீயது என்பது இதனால் கூறப்பட்டது.

---

98. இந்திர மாளிகையே என்றாலும் ஈனரிடை
அந்தவாழ் வீனமே ஆகுமே—சிந்தை
புனித முடையார் புடைசூழ்ந் திருப்பின்
இனிதடவி யேனும் இதம். (அ)

இ-ள்,

இந்திர மாளிகையில் வசித்தாலும் ஈனர் அயல் ஆயின் அந்த வாழ்வு ஈனமே யாம்; அடவியே யாயினும் புனித மன முடையார் புடைசூழ்ந்து இருப்பின் அது பெரிதும் இன்பமாம் என்றவாறு.

இது தீயினத்தின் தீமையும், நல்லினத்தின் நன்மையும் கூறுகின்றது. நலம் தெளிந்து பலம் பெறுக என்றபடி.

ஈனர் என்றது இழிந்த செயல்களை விழைந்து புரியும் தீயரை. ஈனத்தை யுடையவர் ஈனர் என நின்றார். ஈனம்=இழிவு, கேடு.

சிறந்த திருவும், நிறைந்த இன்ப நலங்களும், உயர்ந்த காட்சியும், திவ்விய மாட்சியும் செவ்விதாய் நிறைந்து சீர்மிகுந்துள் ளமையால் இந்திர பவனம் இங்கே எடுத்துக் காட்ட வந்தது.

புண்ணிய போகங்கள் பொலிந்து விண்ணவர் வேந்தனுக்கு உரியது எனக் கண்ணியம் வாய்ந்துள்ள இனிய மணி மாளிகையுள் வாழ்வுற வரினும், அருகே தீய செயலுடைய ஈன மக்கள் சூழுற நேரின், அவ்வாழ்வு பாழாம் என்றமையால் அக்கீழோரது நீசமும் நாசமும் நிலைதெரியலாயின.

காசம் குட்டம் பிளேக்கு பேதி முதலிய கொடிய தொத்து வியாதிகள்போல் ஈனரது நீச வாசனை உள்ளே ஊடுருவி நல்ல உயிர்களை மெல்ல நாசப்படுத்திவிடும் ஆதலால் அப்பொல்லாதார் இடையே எவ்வளவு நல்ல வசதிகள் வாய்த்தாலும் அது அல்லல் என நேர்ந்தது.

காட்டில் இருந்தாலும், சிறிய குடிசையில் வாழினும் சித்த சுத்தி யுடைய உத்தமர்கள் அருகு இருப்பின் அஃது இருமை யினும் இன்பமாய் மிகவும் பெருமை தரும் என்க.

அடவி எனும் இனிது இதம் என்றது அதனால் வரும் பயனும் நயனும் கருதி. அடவி = காடு.

உள்ளம் புனிதமான நல்லோர்கள் கூட்டுறவால் பல நன்மை கள் தோய்ந்து உயிர் உயர் மேன்மை அடையும் ஆதலால் அம் முடிவு நலம் கருதி அடவியும் இனிது என வந்தது.

மேலான செல்வங்கள் மேவி யிருப்பினும், தீயோர் சூழல் கேடு விளைக்கும்; கேடான அந்த இனத்தைக்கூடாதே என்பதாம்.

நல்லோர் இணக்கமே யாண்டும் நல்லது என்பது இதனால் கூறப்பட்டது.

---

99. கொடிய விலங்கிடையே கூடி அடவி
நெடிதுநீ வாழினும் நில்லேல்—கடுமூர்க்கர்
உள்ள இடம்ஒருநாள் உற்றால் உயிர்பலநாள்
எள்ளல் உறுமால் இழிந்து. (கூ)

இ-ள்.

கொடிய மிருகங்கள் இடையே காட்டில் நெடிது வசிப்பதி னும் பொல்லாத மூர்க்கர் நடுவே நாட்டில் ஒருநாள் உறைவது பெரிதும் தீதாம் என்றவாறு.

இது, கொடியவர் தொடர்பு அடியோடு ஆகாது என்கின்றது.

புலி கரடி ஓநாய் முதலிய பொல்லா மிருகங்கள் நிறைந் துள்ள மலைகளிலும் வனங்களிலும் நெடுங்காலம் வாழ்ந்தாலும், கொடிய மூர்க்கரோடு ஒருநாள் தங்கலாகாது என்றது என்னை? எனின், அக்கூட்டுறவால் நேரும் கேட்டு நிலைகளை நோக்கி என்க.

அவ் வன விலங்குகள் இயல்பாகக் கொடியன வாயினும் உள்ளே வஞ்சம் இல்லாதன; கொஞ்சம் அறிவிருந்தால் அவற்றை நன்கு அடக்கி ஆளலாம்; அதுவுமன்றி, இடம் அறிந்து தனி ஒதுங்கி யிருப்பின் அவற்றால் யாதொரு கேடும் வராது. அத் தனி வாழ்வு தவம் மிக உடையதாய் உயர் நிலை யடையும்.

மூர்க்கரோ, எவ்வகையானும் திருந்தார்; வஞ்சமும் தீமையும் நெஞ்சம் முழுவதும் மண்டி யாண்டும் நஞ்சனைய வெஞ் செயல்களை நாளும் புரிவர்; கோளும் குண்டுணியும் விளைத்துக் குடிகேடு செய்வர்; ஒதுங்கி யிருந்தாலும் பதுங்கி வந்து ஒட்டிக் கெடுப்பர் ஆதலால் அக் காட்டு மிருகங்களைவிட இக் கேட்டு மாக்கள் மிகவும் அஞ்சத் தக்கவர் ஆயினர்.

ஒருநாள் பழகினும் உயிர் இழிந்து பல நாள் எள்ளல் உறும் என்றது, தீயவர் தொடர்பால் உள்ளங்கெடும்; கெடவே, நல்ல வரும் விழி தெரியாமல் பழி வழிகளில் படுவர்; படவே, அப் பாவத்தால் மேன்மை யெல்லாம் பாழாய்க் கீழ்மை யடைந்து போவர் என்க.

"பன்றியொடு சேர்ந்த பசுங்கன்றும் ஈனமலம்
தின்றுவிடும் தீயரொடு சேரினோ—நன்றறிந்த
நல்ல மகனும் நவைபுரிந்து தீயனாய்
ஒல்லை யிழியும் உணர்."

ஈனச் சேர்க்கையின் இழிநிலை இதனால் இனிது புலனாம்.

கொடிய மூர்க்கர் மீளாத் துயர்க்கே ஆளாக்கி விடுவர் ஆதலால் அப்படுதீயரை யாதும் அணுகாமல் அகன்று ஒதுங்குக என்பது கருத்து.

---

100. இனமும் மனமும் இனியன வாகித்
தினமும் அறிவுநூல் சேரின்—கனமுடைய
புண்ணியங்கள் எல்லாம் பொலிந்து விளையுமே
எண்ணிய யாவும் எளிது. (ய)

இ-ள்.

இனமும் மனமும் இனியனாய் நாள்தோறும் நல்ல அறிவு நூல்களோடு ஒருவன் பழகிவரின், அறநலங்கள் எல்லாம் அடைந்து கருதிய யாவும் எளிதே கைவரப் பெறுவன் என்றவாறு. கனம் = உறுதி, மேன்மை.

அறிவு நூல் என்றது உணர்வு நலம் சுரந்து உயிர்க்கு உறுதியருள்கின்ற உயர்ந்த நூல்களை. அறிவு நலம் யாதும் இன்றி வறிதே கலித்துள்ள வீணா நூல்களைக் காணலாகாது. காணின், உள்ள அறிவும் கெட்டு உறுதி நலம் குன்றும் ஆதலால் அப் பொல்லாத் தாள்களைப் புறம் தள்ளி, அறம் படிந்த நல்ல நூல்களை நயந்துகொள்ளுக. ஈனங்கள் படித்தால் ஞானங்கள் படியா.

எல்லார்க்கும் யாண்டும் இதமே கருதுகின்ற புனித நெஞ்சமே இனிய மனமாம். உள்ளப் பண்புடையராய்ப் பல்லுயிர்க்கும் இரங்கியருள்கின்ற மேலோரே ஈண்டு இனிய இனம் என நின்றார்.

சித்த சுத்தி யுடையனாய் உத்தமர்களோடு சேர்ந்து சிறந்த தத்துவ நூல்களை ஒருவன் ஆராய்ந்து வரின், ஆன்ம ஒளி பெருகி மேன்மை மிகப் பெறுவன்; புண்ணிய சீலனான அவன்பால் அரிய இன்ப நலங்களெல்லாம் எளிது வந்து அடையும் ஆதலால் "எண்ணிய யாவும் எளிது விளையும்" என வந்தது.

மன நலம் உடையவனாய் மருவி வாழ்க; மேலோரைச் சேருக; நல்ல அறிவு நூல்களை நாளும் பழகு; இவ்வாறு செய்துவரின், வெவ்வினைகள் நீங்கித் திவ்விய மகிமைகள் ஓங்கும் என்பது கருத்து. தினசரி நியமம் தெரிவித்த படியிது.

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

நல்லார் இணக்கம் நலம்பல நல்கும்.
உள்ளப்பண் பாளரை உறவுசெய்து கொள்ளுக.
குருவின் அருளால் அறிவுநலம் பெருகும்.
கல்வியாளரைச் சேர்ந்து செல்வர் சீர்பெறுகின்றார்.
சேராதவர் பேர் அழிகின்றார்.
வஞ்ச நெஞ்சரைச் சேர லாகாது.
கொடியவர் கூட்டம் கடுநரக மாகும்.
ஈனர் அயல் வாழ்தல் ஈனமேயாம்.
காட்டு மிருகங்களினும் நாட்டு மூர்க்கர் தீயர்.
இனிய இனம் சேரின் இன்ப நலம் பெருகும்.

௰-வது இன நலம் முற்றிற்று.

# பதினொராவது அதிகாரம்.

## மன நலம்.

---

இது மனத்தினது நன்மையைக் கூறுகின்றது. இன நலம் போல் மன நலமும் உயிர்க்கு உறுதியாய் ஒளி செய்துள்ளமை யான் அவ்வுரிமையும் உறவும் கருதி அதன்பின் இது வைக்கப் பட்டது. புறத்தே உருவ நிலையில் அது புடைசூழ்ந்து உதவு கின்றது. இஃது, அகத்தே அருவ நிலையில் அமர்ந்து இனிய நலங்கள் பல சுரந்து இருமையும் இன்புற அருள்புரிகின்றது என்க.

101. மனநலம் எவ்வளவோ அவ்வளவே மாட்சி
எனநலமும் அந்நலம்போல் இல்லை—அனநலத்தைப்
பெற்றார் இருமையும்சீர் பெற்றார் பெறுதவரோ
அற்றார் அனைத்தும் அயல். (க)

இ-ள்.

மனத்தின் நலத்தின் அளவே மனிதனுக்கு மாட்சி விளை கின்றது. அது எல்லா நலங்களினும் தலைசிறந்து உள்ளது; அதனைப் பெற்றவர் இம்மையினும் மறுமையினும் நன்மை மிகப் பெற்றார்; பெறுதவர் யாவும் இழந்து அவமே இழிந்தார் என்றவாறு.

இது நல்ல மனத்தின் நலம் கூறுகின்றது.

மனம் என்பது நினைப்பின் நிலையமா யுள்ளது. மன் என்ப தற்கு நினைப்பது என்பது பொருள். அதனை யுடையது மனம் என வந்தது. உள்ளுதலால் உள்ளம், சிந்தித்தலால் சித்தம், உய்த்து உணர்தலால் புத்தி என்க.

மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் இந் நான்கும் அந்தக்கரணம் எனப்படும். புறத்தே ஐம்பொறிகள் போல் அகத்தே இவை உயிர்க் கருவிகளாய் நிற்றலால் இப்பெயர் பெற்றது. பகுத்தறிவின் பண்பமைந்த நுண்பொறிகள்.

நினைக்கும் ஆற்றலுடைய மனத்தைத் தனக்குத் தனியுரிமை யாக உடைமையால் மனிதன் எனும் பேர் மருவி நின்றது. ஆகவே மனிதனுக்கும் மனத்திற்கும் உள்ள உரிமை புலனும்.

மனமே மனித உலகத்தை யாண்டும் இயக்கி வருகின்றது. மனிதன் அடைகின்ற எல்லா நிலைகளுக்கும் மூலகாரணமாய் அது நிலவியுள்ளது. அதன் அதிசய ஆற்றல்கள் அளவிடலரியன.

அரசனுக்கு அமைச்சன்போல் ஆன்மாவுக்கு மனம். அரசின் நலம் தீங்குகள் யாவும் அமைச்சனைப் பொறுத்திருக்கின்றன. அதுபோல் உயிரின் உயர்வு தாழ்வுகள் எல்லாம் மனத்தை மருவி நிற்கின்றன. மனத்தின் நிலைமைக்குத் தக்கவாறே மனிதன் நிலவுகின்றான். அது புனிதமாயின் உயிர் உயர் பரமாகும்.

உயிர்க்குக் கண்போல் ஒளி செய்துள்ள மனம் நல்லதாயின் இன்ப நலங்கள் எல்லாம் ஒருங்கே யுடையனாய் மனிதன் உயர்ந்து திகழ்வான் ஆதலால் மன நலத்தின் அளவே மாட்சி என வந்தது.

"மனநலம் மன்னுயிர்க்கு ஆக்கம்" (குறள், 457.)
"மனநலத்தின் ஆகும் மறுமை" (குறள், 459.)

என்னும் அமுத மொழிகள் ஈண்டு அறிய உரியன.

என நலம் என்றது எப்படிப்பட்ட நன்மைகளும் என்றவாறு. கல்வி செல்வம் அதிகாரம் குடிப்பிறப்பு முதலிய உயர் நலங்கள் எல்லாம் மனிதனுக்கு மதிப்பும் மாட்சியும் தருவனவே ஆயினும், மன நலம் இல்வழி அவை மாண்புறா என்க. அன நலம் என்றது அந்த மன நலத்தை.

புறத்தே பொருள் வளம் முதலியன இல்லாது போயினும் அகத்தே மன நலம் மாத்திரம் உடையனாயின், அவன் புண்ணியவானாய் இம்மையிலும் மறுமையிலும் இன்பம் மிகப் பெறுவான்; வெளியே எல்லா வளங்களும் எய்தி யிருந்தாலும், உள்ளே மனம் நல்லதாக இல்லையானால் அவை யாவும் வீணாம்; அவனும் அல்லல் பல அடைந்து அவலனாய் இழிவன் என்க.

"மன நலம் பெற்றார் இருமையும் சீர்பெற்றார்; பெறுதவர், அனைத்தும் அயல் அற்றார்" என்றமையால் உள்ள நலத்தின் உயர்வும் தகவும் உணரலாகும். உய்தி யாவும் அதன் செய்தியாம்.

புனித மனம் எல்லா இன்ப நலங்களையும் இனிது உதவி இருமையிலும் பெருமை மிகச் செய்யும்; மனிதன் அதனை யாண்டும் இனிதாகப் போற்றி ஒழுக வேண்டும் என்பது கருத்து.

102. மனம்போல வாழ்வென்னும் வாய்மொழியைக் கேட்டும்
அனம்போல் அறிந்தங் கமையார்—முனம்போன
போக்கே புரிந்து புலையாடித் தீமையே
ஆக்குவார் நெஞ்சம் அவம். (உ)

இ-ள்.

மனம்போல வாழ்வு என்னும் உண்மையுரையைக் கேட்டும் உணர்ந்து திருந்தாமல் முன்னம் போன ஈன வழிகளிலேயே திரிந்து நெஞ்சம் தீயராய் இழிந்துபடுகின்றார் என்றவாறு.

இது நல்ல மனமே எல்லாச் செல்வமும் என்கின்றது.

அனம்போல் அறிந்து என்றது அன்னப் பறவை நீரை ஒருவிப் பாலைப் பருகுதல்போல் மனிதன் புன்மையை மறந்து நன்மையை உணர்ந்து கொள்ளுதலை. இங்ஙனம் பகுத்து உணர்ந்து தெளியாமல் பழி வழிகளில் திரிதல் அழிதுயர்க்கே ஏதுவாம்.

முனம் போன போக்கே புரிந்து = அறிவீனமாய் முன்னம் போன ஈனவழிகளையே விரும்பி.

மனம்போல வாழ்வு என்பது பழமொழி. இது ஆழ்ந்த பொருளுடையது. ஒருவன் மனம் நல்லது ஆயின் அவனுக்கு எல்லா நலங்களும் எளிதில் உளவாம்; அவனுடைய வாழ்க்கை என்றும் இனிமை சுரந்திருக்கும். இவ்வாறு இன்ப வாழ்வுக்கு மூல முதலான மனத்தைச் செம்மை செய்து கொள்ளாமல் பழுதுபடுத்தி உழல்வது வாழ்க்கையைப் பாழ்படுத்திய படியாம்.

மனிதன் வாழ்வை விரும்புகின்றான்; தாழ்வை வெறுக்கின்றான்; விழைந்தபடியே சிறந்த வாழ்வை அடைந்து உயர்ந்து கொள்ளவேண்டிய வழியை மறந்து விடுகின்றான்; அழிநிலையில் விழிகண் குருடாய் இழிந்து உழல்கின்றான்.

தீய எண்ணங்களால் மனம் தீமை அடைகின்றது; அடையவே, நல்ல பலன்கள் எல்லாம் ஒழிந்து நாசங்கள் விளைய நேர்கின்றன; அந்நீசங்கள் நேரா வண்ணம் நெஞ்சைப் புனிதப் படுத்துக; நிலைமைகள் யாவும் இனிமை சுரந்து நிலவும்.

நெஞ்சத்தை அவம் ஆக்குவோர் நஞ்சத்தைக் குடிப்பது போல் தமக்கு நாசத்தை விளைத்தவராகின்றார்; அங்ஙனம் ஆகாமல் நலம் செய்து கொள்க என்பது கருத்து.

103. புன்னெறியில் தன்னுளத்தைப் போக்காது போதமிகு
நன்னெறியில் செல்ல நடத்தினன்—வன்னமிகு
நெல்லுக் கிறைத்தான்போல் நீள்வான்மற் றல்லாதான்
புல்லுக் கிறைத்தான்போல் போம். (ங)

இ-ள்.

மனத்தை நல்வழிப் படுத்தினவன் நெல்லுக்கு நீர்பாய்ச்சின வன்போல் நலம்பல பெறுகின்றான்; அல்வழியில் செலுத்தின வன் புல்லுக்கு இறைத்தவன்போல் புலையாடிப் போகின்றான் என்றவாறு

புன்னெறி = இழிவான ஈனவழிகள்.

நன்னெறி = தரும மார்க்கம். போதம் = அறிவு.

புன்மை தருவது புன்னெறி; நன்மை அருள்வது நன்னெறி. உண்மை நிலை தெரிந்து உயர் நலம் பெறுக என்பதாம்.

மனம் இழிந்த வழிகளில் சென்றால் மனிதன் ஈனனாய் இழிந்துபடுகின்றான்; அது புண்ணிய நெறிகளில் போனால் அவன் புண்ணிய சீலனாய் உயர்ந்து விளங்குகின்றான்.

இந்த விளைவுகளை விளக்குதற்கு இரண்டு உவமைகள் வந்துள்ளன. பொருள் நிலைகளை நுணுகி உணர்ந்து கொள்க.

வயலிலே நெல்லுப் பயிருக்கு நீரைச் செலுத்தினவன் நல்ல பலன்களைப் பெற்றுச் செல்வவான் ஆகின்றான்; அயலே களையான புல்லுக்குப் போக்கினவன் ஒரு பலனும் பெறாமல் வீணே அல்லல் அடைந்து இழிகின்றான். ஆதலால், நல்வழியில் செல்வோன் நலம் பெறுதற்கும் அல்வழியில் புகுவோன் அவம் அடைதற்கும் உவமைகளாய் இவை இங்கே எடுத்துக் காட்ட நேர்ந்தன.

வன்னம் = அழகு, வளம். உயிர்க்கு உறுதியான உணவு நலம் அருளும் உயர் பயிர் ஆகலான் அதன் இயல்புணர வந்தது.

மனத்தை இங்கே நீர் ஒடு ஒப்பவைத்தது அதன் நிலைமை தெரிய. பள்ளம் கண்ட இடமெல்லாம் வெள்ளம் பாய்தல்போல் புலன்களில் உள்ளம் பாய்தலை நாளும் உணர்ந்து கொள்ளலாம்.

பொறிகளில் வெறி மண்டி ஓடும் மனத்தை அறிவினால் அடக்கி நல்ல நெறியில் ஒழுக விடுக; இல்லையேல் அது பொல்

லாத வழிகளில் புகுந்து போம்; போகவே நீ பொல்லாதவனுகி அல்லல் பல அடைவாய்; அவதி ஓர்ந்து உய்க.

சென்ற இடத்தால் செலவிடா தீதொரீஇ
நன்றின்பால் உய்ப்பது அறிவு. (குறள், 422.)

என்றது பொய்யா மொழி. பொருளை நுணுகி உணர்க.

போன போக்கில் மனத்தைப் போக விடாதே என்றதனுல் அதன் பொல்லாப் போக்கு நிலை புலனும்.

"A man's nature runs either to herbs or weeds; therefore let him seasonably water the one, and destroy the other" "மனித இயற்கை நல்லதிலும் தீயதிலும் விரைந்து பாய்கின்றது; ஆகையால் கெட்டதைத் தடுத்து நல்லதில் செலுத்துக' என ஆங்கிலப் புலவராகிய பேக்கன் என்பவர் கூறியுள்ளார்.

காடும் கரையும் மனக்குரங்கு கால்விட்டோட அதன்பிறகே
ஓடும் தொழிலால் பயனுளதோ ஒன்ருய்ப் பலவாய் உயிர்க்குயிராய்
ஆடும் கருணைப் பரஞ்சோதி அருளைப் பெறுதற்கு அன்புநிலை
தேடும் பருவம் இதுகண்டீர் சேர வாரும் செகத்தீரே. (தாயுமானவர்)

மனத்தைக் குரங்கு என்று குறித்து அதன் போக்கை விளக்கி மனிதன் இறைவன் அருளை அடையும்படி இது இனிது போதித்துள்ளது. போதனையின் சாதனையை உணர்ந்து கொள்க.

உள்ளத்தை நல்வழிப்படுத்தி ஒழுகுக என்பது கருத்து.

---

104. எண்ணம் இனியதேல் எஞ்ஞான்றும் இன்பநலம்
நண்ண எவரும் நயந்தேத்த—விண்ணவன்போல்
சீரெல்லாம் பெற்றுச் சிறந்துயர்வான் தீயதேல்
பாரெல்லாம் எள்ளப் படும். (ச)

இ-ள்.

மனிதனது எண்ணம் இனியது ஆனல் இன்ப நலங்களை அடைந்து யாரும் புகழ்ந்து போற்றச் சீர் பல பெற்றுத் தெய்வம் போல் சிறந்து விளங்குவான்; தீயது ஆயின் உலகமெல்லாம் இகழ்ந்து தூற்ற அவன் இழிந்து படுவான் என்றவாறு.

இது எண்ணத்தின் இயல்பு கூறுகின்றது.

இனிய எண்ணம் என்றது அருள் கனிந்த நல்ல நினைவுகளை,

ஒருவன் எண்ணம் நல்லது ஆயின் அவனுடைய சொல்லும் செயலும் நல்லனவாம்; ஆகவே, அம்மூன்று கரணங்களிலும் தோன்றுவன நல்வினைகளாய் விளையும்; அவ்வினைவு புண்ணியமாய் வளரும்; பின்பு அதன் பயனாகிய இன்ப நலங்கள் தாமாகவே பெருகி வரும் ஆதலால் இனிய எண்ணம் இன்பப் பேற்றுக்கு ஏதுவாய் நின்றது.

புண்ணிய சீலனை எல்லாரும் புகழ்ந்து துதிப்பர்; மண்ணுலகில் வாழினும் அவன் விண்ணவன்போல் விளங்குவன்; அரிய மகிமைகள் யாவும் அவன்பால் வலியவந்து சேரும் என்க.

நண்ண, ஏத்த, பெற்று, உயர்வான் என்றது எய்தும் பேறுகளின் இனமும் ஏற்றமும் எண்ண வந்தது. நண்ணல்=சேர்தல்.

தீய எண்ணம் யாண்டும் தீமையாம்; ஆகவே, அத்தீவினையாளனை யாவரும் வெறுத்து வைவர் ஆதலால் "பார் எல்லாம் எள்ளப்படும்" என்றார். பார்=பூமி.

இப்படி எள்ளப்பட்டு இழிந்து போகாமல் உள்ளத்தைப் பேணி உயர்ந்து கொள்க. உயர்வு உன்னிடமே உள்ளது.

தீய தொடர்புகளை அறவே மறந்து, நல்ல எண்ணங்களையே நாளும் பழகி வரவேண்டும் என்பது கருத்து.

---

105\. கெட்ட நினைவைக் கிளர்நெஞ் சிடைநினைப்பின்
எட்டி விதையை இனியநிலம்—நட்டதுபோல்
நாசம் விளைத்து நவைவளர்த்து நாடாத
நீசம் பழுத்து விடும். (ரு)

இ-ள்.

நெஞ்சில் கெட்ட நினைவை நினைப்பது நிலத்தில் எட்டி விதையை நட்டது போலாம்; அதனால் பழி கேடுகள் விளைந்து அழிவு பல வரும் என்றவாறு.

இது நினைவு தீயதாயின் நெஞ்சு நஞ்சாம் என்கின்றது.

எட்டி என்பது ஒருவகை நச்சு மரம். அதன் பழங்கள் பார்வைக்கு அழகா யிருக்கும்; உண்டால் உயிர்க் கேடு செய்யும்.

கெட்ட நினைவை எட்டி விதை என்றது அதனால் விளையும் கேடுகளை நினைந்து. கெடு மூலமாய்க் கொடுமை மண்டி வெளி

அறியா வகை உள்ளே மறைவா யுள்ளமையான் வித்து என நேர்ந்தது. கொடிய விளைவுக்குரிய அடி முளையைக் கடிது கடிக.

இனிய நிலம் என்றது நெல் மஞ்சள் வாழை முதலியன விளையும் நல்ல புலங்களை. நெஞ்சை நன்செய்யோடு ஒப்பவைத்தது அரிய பெரிய விளைவுகள் பல பெருகி இனிய நலங்களை உயிரினங்களுக்கு உதவி வரும் அதன் நிலைமை கருதி.

மா, பலா, கமுகு, கரும்பு முதலிய இனிய பொருள்களை விளைத்து இதம்புரிந்து வருகின்ற நல்ல நிலத்தில் கொடிய எட்டியை விதைத்தால், அந் நிலம் பாழாய்க் கெடு பலன்கள் வளர்ந்து நிற்கும்; அதுபோல், அன்பு தயை உண்மை முதலிய இனிய பண்புகள் விளைந்து இன்புதவியருளும் நல்ல நெஞ்சில் வஞ்சகம் பொறாமை கொடுமை முதலிய கெட்ட எண்ணங்களை எண்ணின் அவ்வுள்ளம் கெட்டு ஊனமாய் ஈனம் அடையும் என்க.

தீய நினைவுகளால் பாவங்கள் விளைகின்றன; விளையவே அவற்றின் பலன்களாகிய துன்பங்களை உயிர் அனுபவிக்க நேர்கின்றது; அத்துன்பத் தொடர்புகளால் மேலும் மேலும் இழிந்து பாழாய் அழிந்து பழி துயரங்களிலே ஓயாது அது உழந்து படுகின்றது. படுகேடான அதனை விரைவில் ஒழிக.

ஒரு தீய நினைவால் மாளாத் துயரமும் மீளா நரகமும் மேவி வருதலால் பாழான அதனைக் கனவிலும் கருதலாகாது என்பது தெளிவாம். நாசம் = கேடு. நவை = குற்றம். நாடாத = யாரும் விரும்பி நோக்காத.

"நாசம் விளைத்து, நவை வளர்த்து, நிசம் பழுத்து விடும்."

என்றது கெட்ட நினைப்பால் விளையும் கெடு நிலைகளை யெல்லாம் நெடிதுணர்ந்து அக்கொடிய தீமையை அடியோடு மறந்துவிடும்படி திறந்து கூறிய படியிது.

கெடு நினைவு கொடிய விடம்; அப் படு கடுவைக் கடுகு அளவு தொடினும் குடிகேடாம்; யாண்டும் அதனை எவ்வகையானும் தீண்டாதே என்பது கருத்து.

106. உள்ளம் புனிதம் உறுனேல் உயர்நலங்கள்
வெள்ளம் எனவுறினும் வீணுமே—உள்ளொளியில்
கண்ணுக்கு மையெழுதிக் காட்சியுற வைத்தாலும்
ஒண்ணுமோ மேன்மை உணர். (சு)

இ-ள்.

உள்ளே ஒளி இல்லாத கண்ணுக்கு வெளியே அழகாக மை எழுதி வைத்தாலும் மாட்சி யுறாது; அதுபோல், அகத்தே தூய்மை இல்லாதவன் புறத்தே உயர்ந்த நலங்கள் பல நிறைந்திருந்தாலும் சிறந்து விளங்கான் என்றவாறு.

இது மன நலமே மனிதனுக்கு மகிமை என்கின்றது.

உயர் நலம் என்றது செல்வம் பதவி முதலிய நிலைகளை. உடைமைகளின் பெருக்கங்களை உள்ளம் ஓர்ந்துகொள்ள வெள்ளம் வந்தது.

அரிய வளங்கள் பல பெருகி வெளியே மிகவும் பெரியவனுக விளங்கினும், உள்ளே மனம் புனிதம் இலனுயின் அம்மனிதன் உண்மையான மதிப்பை அடையான் என்பதை ஓர் உவமையால் இஃது உணர்த்தியுள்ளது.

கண் அழகை அதிகம் காட்ட இமை அருகில் அஞ்சனம் தீட்டுவது வழக்கம். ஒண்ணுமோ=பொருந்துமோ.

ஒளியுடைய நல்ல கண்ணுக்கு மை எழுதின் அக்கருமைக் காட்சி அருமையாய் அழகு சுரந்து தோன்றும்; ஒளியற்ற குருட்டு விழிக்கு அஞ்சனம் இடின், அது நகைக்கு இடமாய் இழிக்கப்படுமே யன்றி ஏத்தப்படாது. எடுத்துக் காட்டு உவமையான இது அடுத்துக் காட்டும் பொருளைத் தெளிவுபடுத்த வந்தது.

அகத்தே மனநல முடையார்க்குப் புறத்தே பிற நலங்கள் அமையின், அவை மேலும் பெருமை மிகச் செய்யும்; உள்ளம் தீயது ஆயின், வெளியே எவ்வளவு செல்வங்கள் நிறைந்தாலும் அவர் நன்கு மதிக்கப்படார் என்க.

பொருள் வளங்களை அன்றிக் கல்வி முதலிய உயர் நலங்களும் மனம் தீயார்க்கு மாண்பு தரா ஆகலால் வீண் ஆமே என இரங்க நேர்ந்தது. வீணுகாமல் பேணுக என்பதாம்.

கற்றதம் கல்வியும் கடவுட் பூசையும்
நற்றவம் இயற்றலும் நவையில் தானமும்
மற்றுள அறங்களும் மனத்தின் பால்அழுக்கு
அற்றவர்க் கேபயன் அளிக்கும் என்பரால். (காசிகாண்டம்.)

இதனால் மனத் தூய்மையின் மாட்சி புலனும்.

புனித மனம் உடையவனே எல்லாப் பாக்கியங்களையும் இனிது அடைந்தவனாகின்றான்; ஆகவே அந்தச் சித்தசுத்தியைப் பேணி உத்தமனாய் உயர்ந்து கொள்க என்பது கருத்து.

---

107. ஆடை புனைந்தென் அணியணிந்தென் அண்ணலென
ஓடை நுதல்யானை யூர்ந்துவந்தென்—பீடுடைய
நெஞ்சம் புனிதமா நேர்ந்திலதேல் நேர்ந்தவெலாம்
துஞ்சினன் மேற்கொண்ட சூழ். (எ)

இ-ள்.

உயர்ந்த ஆடைகள் புனைந்து, சிறந்த அணிகள் அணிந்து யானைமேல் ஏறி அரசன் என வந்தாலும் அகம் தூய்மை இலதேல் அவை யாவும் சவம் தாங்கு கோலமே என்றவாறு.

அண்ணல்=பெருமையில் சிறந்தவன். இங்கே தலைமை நிலைமை கருதி அரசனைக் குறித்து நின்றது.

ஓடை நுதல்=ஒழுங்காக அலங்கரித்த நெற்றியினையுடைய. நெற்றிப் பட்டத்தைச் சுட்டியது, அரசனுக்கு உரிய பட்டத்து யானை என அதன் பான்மையும் மேன்மையும் தெரிய.

துஞ்சுதல்=இறத்தல். சூழ்=புறத்தே சூழ்ந்து விளைந்தது.

நேர்ந்த எலாம்=உரிமையாக வாய்ந்த உயர்ந்த சீர்மைகள் யாவும். சிறந்த செல்வச் சிறப்புகளைக் குறித்து வந்தன.

பட்டுடை வனைந்து, பணிகள் பல பூண்டு, மணிமுடி தரித்து, மதயானைமேல் அம்பாரியில் அமர்ந்து, வெண்குடை நீழலில் கண்டவர் கைதொழ மன்னர் மன்னவனாய்ப் பவனி வரினும் மனநலம் இலனாயின் அவனை உண்மையாக உவந்து அவனி மதியாது. ஆகவே அவநிலையனான அவன் சவம் என நேர்ந்தான்.

மனம் உயிரின் குணமாய் ஒளி செய்துள்ளது; அதன் நன்மைக்குத் தக்க அளவே மனிதத் தன்மை விளைகின்றது;

அவ் விளைவின் உளவறிந்து உணர்வுடை யுலகம் அளவு செய்து கொள்கின்றது; கொள்ளவே, உள்ள நலத்தையே ஓர்ந்து தெள்ளத் தெளிந்து அது போற்றுகின்றது.

வெளியே பேராசனாய்ப் பெருகி யிருந்தாலும் அகத்தே நன்மை இல்லையாயின் அவனுக்கு நல்ல மகத்துவங்கள் உளவாகா.

சித்த சுத்தி யில்லாதானைச் செத்த சவத்தோடு ஒப்ப வைத்தது, உயிர் ஒளி குன்றி ஊனம் அடைந்துள்ளமையான் என்க. சீவ நிலையம் தெரிவித்த படியிது.

அரிய அரச பதவியினும் புனித மனம் மிகவும் பெருமை யுடையது; அதனை இனிது பேணி இன்பம் பெறுக என்பது குறிப்பு. உண்மை உயர்வு இதனால் உணர்த்தப்பட்டது.

108. ஊற்றினிதேல் ஊறிவரும் ஊறல் இனிதாகி
ஆற்றுமுயிர்க் காரமிர்தம் ஆகுமே—தோற்றும்
மனநலம்ஒன் றெய்தினவன் மாநிலத்துக் கென்றும்
இனநலனே யாவன் இசைந்து. (அ)

இ-ள்.

இனிய ஊற்றிலிருந்து ஊறி வருகின்ற நீர் உயிரினங்களுக்கு அமிர்தமாய் அமைந்து நிற்கும்; அதுபோல், உள்ள நலமுடையான் உலகிற்கு நல்ல துணையாய் இசைந்தருளுவன் என்றவாறு.

இது உள்ளத் தூய்மை தெள்ளமிர்தம் எனகின்றது.

மனம் நல்லது ஆயின், அந்த மனிதனுடைய செயல் இயல்கள் எல்லாம் யாண்டும் நன்மை சுரந்தே வரும்; வரவே, உலகம் உவந்து சூழ்ந்து உறவுகொண்டு உறுதி நலங்கள் பல பெறும்; ஆதலால், மாநிலத்திற்கு அவன் ஓர் இன்ப ஊற்றாய் எண்ண நேர்ந்தான். நெஞ்சின் பண்பும் பயனும் பகர்ந்த படியிது.

இனிய ஊற்று, புனித மனத்திற்கும்; அதிலிருந்து சுரந்து வரும் தண்ணீர், நல்ல எண்ணங்களுக்கும்; அமிர்தம், அவற்றின் இன்ப நலங்களுக்கும் ஈண்டு உவமைகளாய் வந்தன.

இனிய மனமுடையான் உலகிற்கு அமுதம் என்றமையால் அவனது இயல்பும் உயர்வும் இன்ப நிலையும் இனிது புலனும்.

அகத்தளவே சகத்தளவு என்னும் பழமொழி, மனநலத்தின் மாட்சியையும் ஆட்சியையும் நன்கு வெளிப்படுத்தி யுள்ளது.

அகக் கண் ஆகிய மனம் மாசின்றித் தெளிவடைந்தபொழுது ஆன்ம எழில் ஒளி மிகப் பெறுகின்றது; பெறவே, உலகிற்கு அவன் ஓர் உதய பானுவாய் இனிதமைந்து அருள்கின்றான் என்க.

---

109. ஊர்த்திருத்தம் உற்றார் உயர்திருத்தம் உற்றுநின்ற
பேர்த்திருத்தம் என்றேன் பிதற்றுகின்றாய்--கூர்த்திடுமுன்
உள்ளம் திருந்தின் உலகமெல்லாம் உன்னுறவு
கொள்ளத் திருந்தும் குழைந்து. (௯)

இ-ள்

ஊராரைத் திருத்தல், உறவினரைத் திருத்தல், தேசத்தாரைத் திருத்தல் எனப் பலவகைத் திருத்தங்களைப் பன்னிப் பேசி நீ ஏன் வீணே பிதற்றித் திரிகின்றாய்? உன் உள்ளத்தை முதலில் திருத்துக; திருத்தின், உலகம் முழுவதும் உடனே திருந்தி உன் உறவை விழைந்து வரும் என்றவாறு.

சீர்திருத்தங்களைக் குறித்து வாளா வாயளந்து பேசுவாரை நோக்கி மதியளந்து கூறிய படியிது திருத்தல் = ஒழுங்கு படுத்தல். நிலைகுலைந்து கோணலாய் மாறுபாடு மண்டியுள்ளதை நேரே செம்மை செய்வது திருத்தம் என வந்தது.

சாதிகளிலும் சமயங்களிலும் சனசமுதாயங்களிலும் கால வேற்றுமையால் சில மாறுபாடுகள் புகுந்துவிடுகின்றன. அவ் வேறுபாடுகளைக் களைந்து சீரும் சிறப்பும் அமையச் செம்மைப் படுத்துதலே சீர்திருத்தமாம். அத்தகைய திருத்தங்களைச் செய்யத் தக்கவர் முதலில் செய்யவேண்டிய செய்தியை உய்தி பெற இது உணர்த்தி யுள்ளது.

தான் திருந்தாமல் பிறரைத் திருத்த முயல்வது பிழையாய் முடியும். ஆதலால் முடிவு நலம் தெரிய இது உறுதியுடன் வந்தது. திருத்தம், புறத்திருத்தம் அகத்திருத்தம் என இரு வகைப்படும்.

தன்னை ஒருவன் நன்கு திருத்திக் கொண்டால் பின்பு அவன் எங்கும் திருத்த இயலும். உள்ளே திருத்தம் இல்லாத

வன் வெளியே திருத்தத் துள்ளுவது எள்ளற்பாடுடையதாய் இழிந்து படுமேயன்றி நல்ல பயனைக் காண முடியாது.

கூர்த்திடும் என்றது பல வழிகளிலும் ஆர்த்தி மிகுந்து ஓடுகின்ற என்றவாறு. களிப்பும் கவலும் கொண்டு ஆசை மண்டி உழலுகின்ற உள்ளம் என மனத்தின் இயல்பைக் குறித்து வந்தது.

பிழைகள் யாவும் களைந்து எத்திறத்தும் வழுவின்றி ஒருவன் சித்த சுத்தி யுடையனாயின், அவ் வுத்தமனை உலகம் உவந்து போற்றுகின்றது; அவன் வாய்திறந்து ஒன்றும் சொல்லாமலே எல்லாரும் அவனுடைய முன்னிலையில் திருந்தி வருகின்றார்.

உன் உள்ளம் திருந்தின், உலகம் எல்லாம் உன் உறவு கொள்ளத் திருந்தும் என்னும் இது கூர்ந்து சிந்திக்கத் தக்கது. ஆன்ம தத்துவத்தின் அற்புத நிலை இதில் அடங்கி யுள்ளது. குழைந்து என்றது உலகம் உள்ளம் உருகி விழைந்து வரும் என்பதாம்.

மாசு படியாமல் ஓர் உயிர் பரிசுத்தம் உடையதாயின், அது தலைமையான நிலைமையை அடைகின்றது; அடையவே, உலகம் எல்லாம் அதனைத் திசை நோக்கித் தொழுது வழிபாடு புரி கின்றது. மனநலம் வாய்ந்து ஒருவன் தன்னுயிர் தழையவே, இனம் நலம் ஆனமையால் மன்னுயிர்கள் விழையலாயின.

ஊர் உலகங்களைச் சீர்திருத்த வேண்டும் என வீணே ஆரவாரம் செய்யாதே; முதலில் உன்னைத் திருத்திக் கொள்க; உடனே நீ எண்ணியன யாவும் எளிதே கைகூடும்.

மனம் திருந்தின் மாநிலம் திருந்தும் என்பதாம்.

"Absolve you to yourself, and you shall have the suffrage of the world." "உன் உள்ளத்தைப் புனிதப்படுத்து, உலகிற்கு நீ இனியனாவாய்" என எமர்சன் என்னும் அமெரிக்கப் பெரியார் கூறியுள்ளதும் ஈண்டு அறியத் தக்கது.

தூயமனம் ஈசன் துதிமனை வானவரும்
நேயம் புரிவர் நினைந்து.

ஒருவன் உள்ளம் புனிதமுறின் உலகம் அவன் வசமாம் என்பது இதனால் கூறப்பட்டது.

110. புனித மனமுடையான் புண்ணியவான் ஆகி
இனிய நலங்களெலாம் எய்தி—மனித இனம்
கண்கண்ட தெய்வமெனக் கைதொழூஉம் காட்சியினை
விண்கண்டு நிற்கும் விழைந்து. (ம)

இ-ள்.

சித்த சுத்தியுடையவன் புண்ணிய சீலனாய்ச் சிறந்து எண்ணிய இன்ப நலங்கள் யாவும் எய்தி மண்ணவர் தொழுது பேண விண்ணவர் விழைந்து காண விளங்கி நிற்பன் என்றவாறு.

இது புனித மனம் புதிய தெய்வம் என்கின்றது.

மனம் தூய்மையாகவே, அந்த மனிதனுடைய கருமங்கள் எல்லாம் தருமநலங்களாய்த் தழைத்து வருகின்றன. வரவே, புண்ணியவானாய் அவன் பொலிந்து விளங்குகின்றான். அறத்தால் விளைகின்ற இன்பங்கள் யாவும் அவன்பால் எளிது வந்து சேருகின்றன. அருளும் செயலும் இயல்பும் உயர்வும் கருதி மனிதர் அவனைத் தெய்வமாக உவந்து தொழுது பணிந்து போற்றுகின்றார். வையத்தில் நிகழுகின்ற இத்திவ்விய நிலைமையை விழைந்து நோக்கி வானத்தவர் வியந்து நிற்கின்றார் என்க.

விண் கண்டு விழைந்து நிற்கும்

என்றது மனம் தூய்மையுடையவன் தெய்வத் தன்மையடைந்து தன்பால் விரைந்து வருதலை எதிர் நோக்கி வானம் உரிமையுடன் அவனை உவந்து கொண்டாடும் என்றவாறு.

அழுக்கு நீங்கித் தெளிந்த ஆடியில் ஆதவன் விளங்குதல் போல் மாசற்ற நல்ல மனத்தில் ஈசன் ஒளிர்கின்றான்; ஒளிரவே அம்மனிதன் தேசு மிகுந்து திவ்விய மகிமையை அடைகின்றான்.

"Blessed are the pure in heart: for they shall see God." (Bible) "இருதயத்தில் சுத்தமுடையவர் பாக்கியசாலிகள்; கடவுளை அவர் நேரே காண்கின்றார்." என்னும் இந்த அருமை வாசகம் ஈண்டு அறிய உரியது.

மன நலம் உடையவன் இம்மையில் எல்லா நலங்களையும் அடைந்து மறுமையில் பேரின்ப நலனையும் பெறுகின்றான் என்பதாம். அரிய பேறுகளுக்கு உரிய மூலம் உணர வந்தது.

மனிதன் அடைகின்ற உயர் நிலைகள் யாவும் மனத்தூய்மையில் மருவியிருக்கின்றன; அவ்வுண்மை யுணர்ந்து எவ்வழியும் நன்மை செய்து கொள்க என்பது கருத்து.

அறவினைக்கும் அரும்பொருள் இன்பொடு
பெறுவதற்கும் பெருங்கல்வி கற்றுயர்
விறலினுக்கும்நல் வீரம் தனக்கும்ஒண்
துறவினுக்கும் துணைமனம் என்பவே. (பிரபுலிங்க லீலை)

நெஞ்சமே! நல்லை நல்லை உன்னைப் பெற்றால்
என்செய்யோம்? இனி என்ன குறைவினம்?
மைந்தனை மலராள் மணவாளனைத்
துஞ்சும் போதும் விடாது தொடர் கண்டாய்!
(திருவாய் மொழி)

மன்னும் ஒருவன் மருவு மனோமயன்
என்னின் மனிதர் இகழ்வரிவ் ஏழைகள்
துன்னி மனமே தொழுமின் துணையிலி
தன்னையும் அங்கே தலைப்பட லாமே. (திருமந்திரம்)

நின்னை அறப்பெறு கிற்கிலேன் நன்னெஞ்சே
பின்னையான் யாரைப் பெறுகிற்பேன்?—நின்னை
அறப்பெறு கிற்பேனேல் பெற்றேன்மற் றீண்டே
துறக்கம் திறப்பதோர் தாள். (அறநெறிச்சாரம்)

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

மன நலத்தின் அளவே மகிமை விளைகின்றது.
அதனால் நல்ல வாழ்வு வருகின்றது.
மனத்தை நலமாகப் பாதுகாத்தவன் பாக்கியவான் ஆகின்றான்.
நல்ல எண்ணங்களால் எல்லா நலங்களும் உளவாகின்றன.
கெட்ட நினைவு எட்டி விதையாம்.
உள்ளம் தூய்மை இலதேல் எல்லாம் பாழாம்.
மன நலம் இலனேல் அவன் உலகம் ஆளினும் பயனில்லை.
உள்ள நலம் தெள்ளமுதம் ஆகும்.
உள்ளம் திருந்தின் உலகம் திருந்தும்.
புனித மனம் இனிய தெய்வமாம்.

௰௪-வது மன நலம் முற்றிற்று.

# பன்னிரண்டாவது அதிகாரம்.

## வாக்கு நயம்.

அஃதாவது வாய்மொழியி னுடைய மகிமை. மனம் வாக்கு காயம் என்னும் மூன்றும் ஆன்ம இயக்கத்தின் மூவகை நிலையங்களாய் மேவி யுள்ளன. மனத்தில் விளைகின்ற எண்ணங்கள் மொழிகளால் வெளி வருகின்றன. வரவே தொழில்கள் நிகழ்கின்றன; அந்நிகழ்ச்சிக்கு நிலையமான வாக்கு நலனை இஃது உணர்த்துகின்றமையால் மன நலத்தின் பின் வைக்கப்பட்டது.

111. வாய்பேசும் வாய்ப்பொன்றே மானிடத்தின் மாட்சியாம்
வாய்பேசா வாயின் வனவிலங்கே—வாய்பேசி
வாழும் வகையுணரின் வாக்குநய நோக்குமுயர்
ஊழும் தெரியும் உடன். (க)

இ-ள்.

வாயால் பேசுகின்ற சிறப்பு ஒன்றே மனித சாதியின் மாட்சியா யுள்ளது; அங்ஙனம் பேசாது நிற்பின், காட்டு மிருகங்களேயாம்; பேச்சால் வாழ்க்கையை நடத்திவரும் வகையை உணர்ந்தால், வாக்கு நயத்தின் அழகும் உயர்வும் முறையும் இனிது தெரியும் என்றவாறு.

இது பேச்சு வழக்கின் பெருமை கூறுகின்றது.

நோக்கு=அழகு, கருத்து. ஊழ்=முறை, ஒழுங்கு.

உலகில் உள்ள உயிர்ப் பிராணிகள் எவற்றினும் மனிதன் உயர்ந்து விளங்குகின்றான்; அவ்வுயர்வுக்கு உரிய காரணங்கள் பல உள்ளன. அவற்றுள் தலைசிறந்து நிற்பது வாய்ப்பேச்சே; மிருகங்கள் பேச மாட்டா; மனிதன் பேசுகின்றான்; அப்பேச்சு ஒழிந்தது ஆயின், அவன் நிலைமை என்னாம்? நினைந்து நோக்க வேண்டும்.

தன் எண்ணங்களைப் பிறர்க்குச் சொல்லவும், பிறர் கருத்துக்களைத் தான் உணர்ந்துகொள்ளவும் சொற்களே துணைபுரிகின்றன. மனிதர் ஒருவரோடு ஒருவர் அளவளாவி வாழ்தற்குப் பேச்சே இனிய சாதனமாய்த் தனி இசைந்துள்ளது. பேச்சு இல்லையாயின் உலக வாழ்க்கை யாதும் நடவாது. வாயின் வயம் வையம் என்க.

"வாய் பேசி வாழும் வகை உணரின்" என்றது வாய்ப் பேச்சாலே தான் மனித வாழ்க்கை இனிது நடந்து வருகின்றது என்னும் உண்மையை உணர்ந்து கொண்டால் என்றவாறு.

இந்த அருமைப் பேற்றை எவரும் எண்ணி நோக்குவதில்லை; நோக்கின், வாக்கு நயத்தின் அருமையும் பெருமையும் தெரிந்து அதிசயம் அடைந்து போற்றுவர்.

மனிதனுக்குத் தனி மகிமையை விளைத்துள்ளது பேச்சு; அப்பேச்சிற்கு நிலையமாயிருப்பது வாக்கு; இங்ஙனம் மேன்மையான அந்த வாக்கை நன்கு போற்றி வரவேண்டும். உரையாடல் உயிராதாரமாயுள்ளமையை ஊன்றி உணர்க என்பது கருத்து.

வாக்கு நயத்தின் ஆட்சியும் மாட்சியும் இதனால் கூறப் பட்டன.

---

112. பேச்சு வழக்கொழிந்தால் பேருலகம் அப்பொழுதே
மூச்சு முழுதும் முடிந்ததாய்—காட்சியுற்ற
மக்களெலாம் மாக்களென மாண்பிழந்து மாறுகிப்
பக்கம் இழிந்து படும். (உ)

இ-ள்.

மனிதனுடைய பேச்சு வழக்கு ஒழிந்தால் இந்த உலகம் உடனே உயிர் முழுதும் முடிந்தபடியாம்; மக்கள் எல்லாரும் நிலை மாறி மிருகங்களாய் இழிந்து படுவர் என்றவாறு.

இது வாக்கு நின்றால் வையகம் இன்றும் என்கின்றது

வாய்ப் பேச்சே மனித வாழ்க்கையை இனிது நடத்தி வருகின்றது. அவ்வுரைகள் வழங்காது ஒழியின் ஒரு கருமமும் நிகழாது; எங்கும் ஒலியடங்கி ஊமையாம்; ஆகவே உயிர் அற்ற உடல்போல் உலகம் செயல் அற்று நிற்கும். சீவ ஓட்டம் இல்லாத அந்நிலைமையை இங்கே காட்ட நேர்ந்தது.

பேச்சு இல்லையானல் அப்பொழுதே "உலகம் மூச்சு முடிந்ததாய் இழிந்து படும்" என்றமையால் அதன் ஆட்சித் திறமும் அமைதியும் அறியலாகும். மூச்சு=உயிர்ப்பு.

விழிக்கு ஒளிபோல் தொழிற்கு மொழி ஆதலின் அதன் வழியே கருமங்கள் யாவும் யாண்டும் ஒழுகி உலாவுகின்றன; இம்மருமம் தெரிந்து உரிமை புரிக என்பதாம்.

பண்டமாற்றுக்குப் பணம் என உலக இயக்கத்திற்கு மொழி உரிமைபூண்டு உள்ளது. இவ்வுண்மையை நோக்கி வாக்கின் நன்மையைத் தெளிந்து பொன் மணிகளாகப் போற்றி வாழ்க.

பேச்சு வழக்கத்தாலேயே மனித சமூகத்தின் வாழ்வு ஓங்கி வருகின்றது; அஃது இல்லையாயின் இரண்டு கால் விலங்கினங்களாய்த் திரண்டு திரிய நேரும் ஆதலால் அக்காட்சியைக் கருத்தூன்றி நோக்க "மக்கள் எலாம் மாக்கள்" என வந்தது. உரை மாறவே உயிர் மாறியது என்க.

மனித இனத்தை மகிமைப் படுத்தி இனிது புரந்து வருவது வாய்மொழியே; அத்தகைய வாக்கை வறிது பாழ்படுத்தாமல் உரிமை கூர்ந்து போற்றி உறுதி நலங்கள் பெறுக.

"வல்லியல் விலங்கினங்கள் வாய்பேசா வகையால் அன்றே
புல்லிய இனங்க ளாகிப் புன்கண் உற் றுழலு கின்ற
நல்லியல் மனிதன் பேசும் நயத்தினால் உயர்ந்தான் அந்தச்
சொல்லுயர் வடையின் அன்னான் தோற்றமும் உயருமன்றே."

(வீரபாண்டியம்)

அருமையாய் அமைந்துள்ள வாக்கைப் பெருமையாகப் பேணிப் பயன் உள பகர்ந்து நயன் அடைய வேண்டும் என்பது கருத்து.

---

113. எண்ணங்கள் எல்லாம் இனிய மொழிவழியே
வண்ணங்க ளாகி வருதலால்—கண்ணகன்ற
ஞாலம் இயங்கி நடந்து வருகின்ற
மூலம் தெளிக முதல். (௩)

இ-ள்.

மனிதனுடைய எண்ணங்கள் மொழிகள் வழியே உருவங்களாய் வெளி வருகின்றன; ஆதலால் விரிந்து பரந்துள்ள இந்த உலகம் இனிது இயங்கி வருகின்ற மூல நிலையை முதலில் நன்கு தெளிக என்றவாறு.

இது உலக இயக்கத்தின் உரிமையை உணர்த்துகின்றது.

வண்ணம் = வடிவு, செயல். கண் = இடம். கண் அளவு கடந்துள்ள இஞ்ஞாலத்தில் எண் அளவு இயங்கி வரும் இயல் புணர்த்திய படியிது.

உயிர் உணர்ச்சிகள் உள்ளத்தில் எண்ணங்களாய் விளைகின்றன; அந்த எண்ணங்களை உரைகள் வெளியிடுகின்றன; இடவே அவை செயல்களாய் விரிந்து பல வழிகளில் பரந்து அளவிடலரிய படி பல கோடி வகைகளில் நிறைந்து நிலையோடி நிகழ்கின்றன.

இங்ஙனம் உலகம் நிகழ்ந்து வருதற்கு மூல காரணமாயுள்ளது யாது? என ஆராயின், அது மொழியே என்பது தெளிவாம். ஆகவே அதன் அற்புத நிலை அறிய நின்றது.

உயிர் வாழ்க்கையை இனிது இயக்கி, உலக வாழ்க்கையை நலமுறச் செய்து வருகின்ற உரைகளை அறிந்து வழங்காமல் மரபு முறை போற்றி அறிவு மணம் கமழ ஆற்றி யருளுக என்பது கருத்து. தனக்கும் பிறர்க்கும் தக்க பயன்கள் விளைய மொழிகளைப் பக்குவமாக வெளியிடுக என்பதாம்.

நாவை நயனுற நன்கு பயன் படுத்துக என்பது குறிப்பு.

---

114. நாநலமே எல்லா நலத்துள்ளும் மிக்கது
பூநலங்கள் யாவும் புரப்பது—மாநலங்கள்
எல்லாம் இனிதுதவி இன்பருளும் அந்நாவை
நல்லாறு செய்க நயந்து. (௪)

இ-ள்.

நாவினது நலமே எல்லா நலங்களுள்ளும் சிறந்தது; உலக நலங்கள் பலவும் பாதுகாப்பது; அரிய பெரிய நன்மைகளை இனிது உதவி இன்பம் அருள்வது; அத்தகைய நாவை நல்ல வழியில் நடத்துக என்றவாறு.

இது நாவின் நயன் கூறுகின்றது.

நெஞ்சில் விளைகின்ற நினைவுகளை மொழிகள் வெளியிடுகின்றன; அம் மொழிகள் நாவிலிருந்து எழுகின்றன; வாக்கின் மூல நிலையமான அந் நாக்கு நலன் இங்கே நோக்க வந்தது.

உடல் உறுப்புகளாய்ப் பிறப்பில் அமைந்துள்ள சிறப்பு நலங்கள் எவற்றினும் நா நலம் சிறந்தது என்றது அதன் இயல்பும் செயலும் நினைந்து. நாவின் தொழிலானே யாவும் எழிலாய் இனிமை சுரந்து வருகின்றன.

பூ நலங்கள் என்றது உலகில் வாய்த்திருக்கின்ற பொன் நிலம் மனை முதலிய பாக்கியங்களை. புரப்பது=பாதுகாத்து அருள்வது. பூ=பூமி.

மாநலங்கள் என்றது மறுமைக்குரிய அரிய பெரிய நன்மைகளை. அவையாவன நூல் ஓதுதல், நீதி முறைகள் போதித்தல், தரும உபதேசங்கள் புரிதல், கடவுள் நாமங்களை உச்சரித்தல், மந்திரங்களைச் செபித்தல் முதலியன.

எல்லா உயிர்களுக்கும் இதமான உறுதி நலங்களை இனிது பேசி உய்தி செய்து வருதலால் புண்ணியங்கள் விளைகின்றன; அதனால் இன்ப நலங்கள் யாவும் எளிது வந்து சேருகின்றன.

இங்ஙனம் பலவித நலங்களையும் இனிது விளைத்து மாநிலத்தில் மனிதனை மேல் நிலையில் நிறுத்தி யருளுதலால் நாவின் நலம் மாமகிமை யுடையதாயது.

நாநலம் என்னும் நலனுடைமை அந்நலம்
யாநலத் துள்ளதூஉம் அன்று. (குறள், 641)

என்ற அருமை வாசகமும் ஈண்டு அறியத்தக்கது.

மனித வாழ்வு சொல்லால் இயங்கி வருகின்றது. வாழ்க்கையில் நேருகின்ற ஆக்கக் கேடுகள் எல்லாம் சொல்லின் தலையில் நிலைத்திருக்கின்றன. அத்தகைய சொல் நாவின் வசமாயுள்ளது. ஆகவே அதனை அதிக கவனத்தோடு மதியூகமாய் நல்ல வழியில் செலுத்த வேண்டும் என்பதாம். நல் ஆறு=புண்ணிய நெறி.

அந்நாவை நல்லாறு செய்க என்றது எல்லாரும் நலமுற இதம்புரிக என்றவாறு.

---

115. நல்லதை யாண்டும் நயந்துகேள் நாவிரைந்து
சொல்வதை என்றும் சுருக்குக—வல்ல
இறைவன் இருசெவியை ஈந்தே ஒருவாய்
உறவைத்த உண்மை யுணர் (ரு)

இ-ள்.

மேலோர் சொல்லுகின்ற நல்ல நீதி மொழிகளை யாண்டும் விழைந்து கேள்; நீ பேசுவதைச் சுருக்கி எங்கும் நாவடங்கி இரு; எல்லாம் வல்ல கடவுள் உனக்கு இரண்டு செவியைக் கொடுத்து ஒரு வாயை மட்டும் உதவியுள்ள உண்மையை உணர்ந்து நன்மை தெளிந்து கொள்க என்றவாறு.

இது, நாவடக்கத்தின் நலம் கூறுகின்றது.

உள்ளப் பண்புடைய நல்லோரிடம் நல்ல அறவுரைகளைக் கேட்டால், அறிவு நலம் பெருகும்; அமைதி மருவும்; ஆதலால் அவ்வுறுதி நலங்களை உவந்து கொள்ளுக.

யாண்டும் என்றது செவ்வி வாய்த்த எவ்வழியும் கேள்வி வேண்டும் என்றவாறு. நல்லது என்றதனால் பொல்லாதவற்றைக் கேட்கலாகாது என்பது புலனும்.

நல்ல கேள்வி செவிக்கு உணவு என்றமையால் அஃது உயிர்க்கு உறுதியாயுள்ள உண்மை உணரலாம். இத்தகைய அரிய கேள்வியைப் பெரிதும் விரும்புக; நீ அதிகம் பேசாதே.

"நாவிரைந்து சொல்வதை என்றும் சுருக்குக"

என்றது சொல்லின் அருமை பெருமைகளை நுணுகி யுணர.

சொல் அறிவின் சாரம்; உயிரில் ஊறி வருவது; அதனைக் கண்ட இடங்களில் கண்டபடி வீசி விடலாகாது. காலம் அறிந்து, இடம் நோக்கி, கேட்பவருடைய நிலைமையை உணர்ந்து தகுதியோடு பேசவேண்டும். அவ்வாறு பேசுவதே அறிவுடைக்கு அழகாம். நாவடக்கமின்றி வீணே விரித்துப் பேசுதல் பேதைமையாம் என்க.

அதிகமாகக் கேள்; சுருக்கமாகப் பேசு என்பது மனிதனது உடலமைப்பிலேயே உணர்த்தப்பட்டுள்ளது.

இறைவன் இரு செவியை ஈந்து, ஒருவாய் வைத்த உண்மை உணர் என்றது உல்லாசமான விநோத விளக்கம். உற=பொருந்த.

ஆண்டவன் உனக்கு இரண்டு காதுகளைப் படைத்து ஒரு வாயை வைத்தது, கேள்வியை நீ எங்கும் மிகுதியாய்க் கேட்கலாம்; பேச்சை, குறித்த இடத்தில் தகுதியாய்ப் பேசவேண்டும் என்பதை அறிவுறுத்துதற்கேயாம். உறுதி நலம் பெறுக.

வாய்க்கு இரட்டைக் கதவுகள்போல் உதடுகள் அமைந்திருக்கின்றன. காதுகளுக்கு யாதும் கிடையாது. ஆகவே அவற்றை மனிதன் பயன்படுத்த வேண்டிய நயனும் வியனும் வெளியே தெளிய நின்றன.

கேள்வியால் பிறர் உள்ளத்தை நீ உணர்ந்துகொள்ளுகின்றாய்; பேச்சால் உன் உள்ளத்தை அயல் அறிந்து கொள்ளுகின்றது. இவற்றின் இயல் தெரிந்து செயல் புரிந்து கொள்க.

"Give every man thine ear, but few thy voice;
Take each man's censure, but reserve thy judgment.

"எல்லார் சொல்வதையும் நன்கு கேள், நீ அதிகம் பேசாதே; பிறருடைய உட்கருத்தை உணர்ந்துகொள், உன் அந்தரங்கத்தை எளிதே வெளிவிடாதே" என ஆங்கிலக் கவிஞராகிய ஷேக்ஸ்பியர் ஒரு மந்திரி உரையில் உரைத்திருக்கிறார்.

நாவின் நயன் அறிந்து வியன் பயன் கொள்க என்பது இதனால் கூறப்பட்டது.

---

116. *உற்ற வுயிரும் ஒருமகனும் பேரரசும்*
*முற்றும் நிலைகுலைய மூண்டதே—வெற்றிமிகப்*
*பூத்த தசரதன்தான் போற்றா துரைத்ததனால்*
*காத்தருள்க நாவைக் கனிந்து.* (கூ)

இ-ள்.

தசரதன் ஓராமல் சொன்ன ஒரு சொல்லால் தனது இனிய உயிரும், அருமை மகனும், பெரிய அரசும் ஒருங்கே ஒழிந்தான். ஆதலால் யாண்டும் நாவைப் பாதுகாத்துப் பேசுக என்றவாறு.

ஒரு உறுதி மொழியை வாய் திறந்து கூறுமுன்னர் அதன் முடிவை முன்னும் பின்னும் நன்கு ஆராய்ந்து சொல்ல வேண்டும். இல்லையானால் அல்லல் பல நேரும். இதனைத் தெளிவாக விளக்குதற்கு ஓர் இதிகாசத்தை இது எடுத்துக் காட்டியுள்ளது.

மன்னர் மன்னவனாய் அயோத்தியி லிருந்து அரசுபுரிந்த தசரதன் தனது மனைவியாகிய கைகேசிக்கு இரண்டு வரங்கள் கொடுத்தான். அவள் விரும்பியதைத் தருவதாக அவ்வுறுதி மொழிகள் மருவியிருந்தன. பருவம் வந்தது. தனக்குத் தருவதாகக் குறித்திருந்ததைத் தருக என்று கேட்டாள்; அவன்

தந்தேன் என்றான். அவ்வரத்தால் இராமனைக் காட்டுக்குப் போகும்படி பணித்தாள்; அப்பிள்ளைப் பிரிவால் அரசன் பதைத்து மாண்டான். ஆழ்ந்து நோக்காமல் உள்ளக் களிப்பால் உரைத்த ஒரு வாக்கால் உயிரும் மகனும் அரசும் இழந்தான் ஆதலால் சொற் சோர்வால் நிகழும் கேட்டிற்கு அவன் ஓர் காட்டாய் நின்றான்.

நாவைக் காத்து அருள்க=நவை புகா வண்ணம் சொல்லைப் போற்றி ஒழுகுக. கனிந்து=உள்ளுற உணர்ந்து.

செல்வம் கீர்த்தி முதலிய அரிய ஊதியங்களும், பழி வறுமை முதலிய கொடிய கேடுகளும் ஒரு சொல்லால் விளைந்துவிடும் ஆதலால் யாதும் வழுவுறாதபடி கூர்ந்து ஓர்ந்து தெளிந்து மொழிகளை வழங்க வேண்டும். வாய்க்கு வந்தபடி சொல்லின் நோய்க்கு இடமாம் என்க.

ஆக்கமும் கேடும் அதனால் வருதலால்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு. (குறள், 642)

சொற்சோர் வுடைமையின் எச்சோர்வும் அறிய.
(முதுமொழிக் காஞ்சி)

சொற்சோர்வு படேல். (ஔவையார்)

சொல்லுங்கால் சோர்வின்றிச் சொல்லுதல் மாண்பினிதே.
(இனியவை நாற்பது)

சொல்லின் நலம்குறித்து வந்துள்ள இவற்றை ஈண்டு எண்ணுக. நாவை நன்கு பாதுகாக்கவேண்டும் என்பது கருத்து.

---

117. ஓர்ந்தினிய சொல்வார் உயர்ந்தோர் உணர்வின்றிச்
சார்ந்திழிவே கீழோர்கள் சாற்றுவரால்—தேர்ந்தமைந்த
இன்னிசையை யாழ்நன் கிசைக்கும் இழிபறைதான்
என்னிசையச் செய்யும் இசை. (எ)

இ-ள்.

மேன்மக்கள் நல்ல உரைகளை ஆராய்ந்து இனிமையாகச் சொல்லுவர்; கீழ்மக்கள் இழிந்த மொழிகளை மனம் போனபடி ஈனமாகப் பேசுவர் என்றவாறு.

இது, உயர்வும் தாழ்வும் உரையால் உறும் என்கின்றது.

ஓர்ந்து=முன்னும் பின்னும் ஆராய்ந்து அறிந்து.

உள்ளத்தில் ஆய்ந்து தெளிந்த எண்ணங்களை வெளியே மொழியுங்கால் இனிமையாகச் சொல்லின் அச்சொல்லாளரை எல்லாரும் உவந்து புகழ்வர்; அவரும் சிறந்த பலன்களை அடைந்து உயர்ந்து திகழ்வர் ஆதலால் மனிதர் உயர்ச்சிக்கு இனிய சொல் ஏதுவாய் வந்தது.

ஓர்தல் உள்ளத்தில் நிகழ்வது; இனிது மொழிதல் வாயில் இயல்வது. பின்னதற்கு முன்னது நன்னயம் தருவது ஆதலின் அது முதலில் நின்றது.

ஓர்ந்து இனிய சொல்வது உயர்வு என்றமையால், ஓராமல் வன்சொல் மொழிவது இழிவு என்பது பெறப்பட்டது.

"உணர்வு இன்றி இழிவே சாற்றுவர் கீழோர்" என்றது மொழி வழியே இழி மக்கள் இயல்பு தெளிவுறுத்திய படி.

இந்த மேல் கீழ்களுடைய நிலைமைகளைத் தெளிவாக உணர்ந்து கொள்ளும்படி யாழும் பறையும் உவமைகளாய் வந்தன.

உயர்ந்தோர்க்கு யாழும், கீழோர்க்குப் பறையும் ஒப்பாம்.

இவ் வுவமக் குறிப்பால் பொருள்களின் இயல்புகளை நுணுகி யுணர்ந்து நிலை தெளிந்து கொள்க. யாழ்=வீணை.

யாழ், சுரநலங்கள் அமைந்தது; கலைஞானம் கனிந்தது; மங்கலமான இனிய சுவையுடையது.

பறை, ஓசை நிறை சேராதது; உணர்வு முறை யற்றது; அமங்கலமான இன்னா ஒலியது.

மேலோர் சொல், ஒழுங்கு அமைந்து உணர்வு நலம் கமழ்ந்து இனிமைசுரந்து வருதலால் அதற்கு யாழ் உவமையாயது; கீழோர் சொல், ஓர் ஒழுங்குமின்றி, கண்டபடி கரைந்து, கடுமையாய் ஒலித்தலால் பறை என நேர்ந்தது.

பறை ஒலிபோல் பாழ்வாய் திறந்து பழி மொழிகள் பேசி இழிவுறாதே; நிறையறிவோடு நினைந்து நோக்கி இனிது பேசி உயர்க என்பதாம். உரையாடும் திறம் உணர்த்திய படியிது.

ஒத்த பிறப்பினன் ஆயினும் ஈனமொழிகள் ஆடுகின்றவன் இழிந்து படுகின்றான்; மானம் மரியாதைகளோடு பேசின் அவன் ஞானமுடையனாய் உயர்ந்து விளங்குகின்றான். ஆகவே நாக்கு நலனை நீ நயந்து நோக்கி இனிய வாக்காளனாய் இசை மிகப் பெற்று நல்ல ஆக்கங்களை ஆக்கிக் கொள்ளுக.

தனக்கு அரிய பாக்கியமாய் அமைந்துள்ள வாக்கை மனிதன் கண்ணியமாகப் பாதுகாத்துப் புகழும் புண்ணியமும் விளைத்துக் கொள்ள வேண்டும் என்பது கருத்து.

---

118. புண்ணியநன் னீரர் புனிதவாய் நன்மொழியாம்
தண்ணமுதம் தந்துலகைத் தாங்குமால்—எண்ணிலிழி
மக்கள்வாய் தூம்பில் வருநீர்போல் புன்மொழியே
கக்கி வருத்தும் கடுத்து. (அ)

இ-ள்.

புண்ணிய சீலர்களுடைய புனிதவாய் இனிய மொழிகளை வழங்கி அமுதம் போல் உலகை ஆதரித்து அருளும்; இழி மக்களுடைய வாய் ஈன மொழிகளைப் பேசி நஞ்சம் போல் துயர் விளைக்கும் என்றவாறு.

தரும குணசீலருடைய வாய்மொழியை அமுதம் என்றது அதன் சுவையும் பயனும் கருதி. உயிர்களுக்கு உவகையாய் உறுதி நலம் அருளி உய்தி தரும் என்பது "உலகைத் தாங்கும்" என்றதால் அறியலாகும்.

பொய்த்தல் புறங்கூறல் முதலிய தீமைகள் படியாத தூய்மையுடையது ஆகலான் புனிதவாய் என வந்தது.

நல் நீரர்=நல்ல தன்மையர். நீர்மை ஆவது அருள் நலம் கனிந்த உள்ளப் பண்பு. இப்பண்புடையார் வாய்ச் சொல் இன்ப நலம் சுரந்து எவ்வுயிர்க்கும் இனிமை பயந்து நல்ல அறங்களை நல்கி அருளுதலால் நன் மொழி என நேர்ந்தது.

புண்ணியரது புனித வாய்மொழி இன்ன தன்மையது என முன்னுற அறிந்தோம். இனி, பாவகாரிகளுடைய படுமொழியையும் பார்க்க நேர்கின்றோம்.

எண்ணில் இழி மக்கள்=எண்ணத்தில் தாழ்ந்த மனிதர்.

மண்ணில் இழிந்தவர் என்பது எண்ணில் இழிந்த மக்களே ஆதலால் அந்த மூலநிலையை எண்ணியுணர இவ்வண்ணம்வந்தது.

செல்வத்தில் அதிகாரத்தில் உயர்ந்திருந்தாலும் உள்ளத்தில் இழிந்தவர் உண்மையில் ஈனமாய் எள்ளப்பட்டே நிற்பர்.

எவருடைய வாயில் ஈனமான இழிமொழிகள் வருகின்றனவோ அவரே ஈனர் என்க.

"இழிமக்கள்வாய் புன்மொழியே கக்கி வருத்தும்"

என்றது வெம்மையும் வெறுப்பும் விளக்கி நின்றது.

தீம்பர் வாய் ஆதலின் தூம்பு என வந்தது. தூம்பு = சலதாரை, அங்கணம்.

கழிந்த நீர் ஓடுகின்ற இழிந்த சாக்கடைபோல் இழி மக்கள் வாயில் ஈனமொழிகளே வரும் என்றமையால் அவர் உள்ளம் பாழாய் ஊனமுற்றுள்ளமை உணரலாகும்.

நல்லவர் வாயிலிருந்து நன்மொழி வருகின்றது; அஃது அமிர்தம்போல் உலகிற்கு இனிமை அருள்கின்றது. தீயவர் வாயில் நின்று தீமொழி எழுகின்றது; அது தூம்பு நீர்போல் துயரமாகின்றது.

நன்மொழி நவிலின் உயர்வும், புன்மொழி புகலின் இழிவும் உளவாகலான் புனிதமான இனிய மொழிகளைப் பேசி மனிதன் உயர்ந்துகொள்ள வேண்டும் என்பது இதனால்உணர்த்தப்பட்டது.

---

119. எளியரென எண்ணி எவரையுமே வையல்
அளிபுரிந் தாதரவே செய்க—ஒளிவளரும்
தெய்வ அருள்விரைந்து சேரும் திருநலங்கள்
எய்த வருமால் இனிது. (கூ)

இ-ள்.

எளியர் என நினைந்து எவரையும் இகழ்ந்துபேசாதே; என்றும் யார்க்கும் இதம் செய்க; அங்ஙனம் செய்யின், தெய்வ அருளும் திருவும் பிறவும் பெருகிவரும் என்றவாறு.

இது, ஏழைகள்பால் இரங்கி இதம்புகல்க என்கின்றது.

அறிவு மணம் கமழ இனிய மொழிகளையே அளவறிந்து பேசவேண்டும் என இதுவரை உரைத்துவந்து இதில் யாரையும் இகழ்ந்து பேசலாகாதென்று உணர்த்துகின்றது.

பொருள், வலி, குலம் முதலியவற்றில் தாழ்ந்தவர் என இளிவாக எண்ணி எவரையும் எளிதா ஏசலாகாது. ஏசின், வாய்க்கு மாசாம்; அம் மாசு மருவாமல் வாக்கைப் பேணுக.

எளியரை இகழ்ந்து வைதவன் பின்பு எளியனாய் இழிந்து பலரால் வையப்படுவன். இது தெய்வ நியதி; இதனை ஐயுறாது உய்திபெறுக. எளியர்பால் இதம்புகலின் எல்லாரும் புகழ்ந்து மகிழ்வர் ஆதலால் ஒளி வளரும் என அவ்வூதியம் தெரியவந்தது. ஒளி=கீர்த்தி. ஒளி வளர மொழி அருள்க.

"தெய்வ அருள் சேரும், திருநலங்கள் வரும்" என்றது ஏழைகளுக்கு ஆதரவு செய்யின் புண்ணியமாம்; ஆகவே தரும விளைவாகிய ஆக்கங்கள் பல உரியவனை நோக்கி வருவனவாயின.

கடவுளுக்கு ஏழை பங்காளன் என ஒரு பெயர். தன் பங்கில் பணி செய்வோர்க்கு அவனது அருள் உரிமையாய் விரைவில் வரும். அவ்வரவு இருமையிலும் இன்பம் தரும் என்க.

இனிய மொழியால் புகழும், இரங்கியருள்வதால் புண்ணியமும் விளையும்; அரிய பல பொருள்களும் பெருகும்; பரமன் அருளும் கிடைக்கும் என்பதாம்.

ஒருவன் சொல்லும் செயலும் நல்லனவாயின் அவன்பால் எல்லா நலங்களும் எளிதில் வந்து அடையும் என்பது கருத்து.

---

120. பூவுள் மணம்தேன் பொருந்தி மிளிர்தல்போல்
நாவுளுயர் மெய்யிலிமை நண்ணினல்—பூவிலமர்
செய்ய திருவின் செழுமனையாய்த் தேசுயர்ந்து
வையம் வழுத்த வரும். (ய)

இ-ள்

மணமும் தேனும் மருவிப் பூ விளங்குதல்போல் மெய்யும் இன்சொல்லும் மேவி நா அமர்ந்தால் அது திருமகளுக்கு வாசமாய் அரிய மகிமை வாய்ந்து உலகம் தொழ உயர்ந்து விளங்கும் என்றவாறு.

இது, மெய்யுடைய நா தெய்வ நிலையம் என்கின்றது.

பூ மணம் தேன் என்பன நா, மெய், இன்சொல்களுக்கு முறையே உவமைகளாயின. பூவுக்கு மணம் போல நாவுக்கு மெய் என்றமையால் அதன் சீர்மையும் நிலைமையும் நன்கு தெரியலாகும்.

மெய்ம்மை தோயாத நா, மணம் அற்ற மலர்போல் மதிப் பிழந்து படும். இன் சொல்லைத் தேன் என்றது உவமை நிலை மான அதன் சுவை இனிமை கருதி. செவியின் சுவையான அருவப் பொருளுக்கு நாவின் சுவையான உருவப் பொருள் இங்கே உவமையாய் வந்தது. தேன் உண்டவர்க்கு உவப்பாம்; இன்சொல் கேட்டவர்க்கு இன்பமாம். அது நாவளவில் இனிப் பாய் உடலோம்பி ஒழிகின்றது; இது, உள்ளும் தோறும் களிப் பாய் உள்ளம் புகுந்து உயிர் ஓம்பி யுள்ளது. இவ்வுண்மையை உய்த்துணர உயர் அடை வந்தது. மெய்யும் இன்மொழியும் தம்மை யுடையாரை உயர்த்தியருளும் தன்மை யுடைமையை அடை மொழி விளக்கி எடை தெளிய நின்றது.

மணமும் மதுவும் பூவின் உள்ளும் புறமும் பொருந்தி அதனைச் சிறப்புறுத்துகின்றன. உண்மையும் இன்சொல்லும் நாவின் அகத்தும் புறத்தும் அமர்ந்து அதற்கு மகத்துவம் அருள் கின்றன என்க.

"செய்ய திருவின் செழுமனை"

என்றது புனிதமான அந்நாவில் இலட்சுமி உரிமையோடு உவந்து வாசம் செய்வள் என்பதாம். மனை = வீடு.

நாமகள் நிலையத்தில் பூமகள் புகுந்தாள் எனவே கல்வியும் செல்வமும் ஒருங்கே பெருகிப் பல்வகை நலங்களும் சுரந்து எல் லாரும்போற்ற இசைவளர்ந்துள்ளமை தெளிவாம்.

சத்தியமும் இன்சொல்லும் உடையவன் புண்ணியமும் புகழும் பொருளும் பொருந்தி எண்ணிய இன்ப நலங்கள் யாவும் அருந்தி உலகம் விழைந்து தொழ விளங்கியிருப்பன் என்பதாம்.

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

வாய்ப் பேச்சே மனிதனை மகிமைப்படுத்தி யுள்ளது.
பேச்சு இல்லையாயின் ஆட்சி இல்லை.
உரையால் உலகம் இயங்கி வருகின்றது.
நாவின் நலமே யாவினும் சிறந்தது.
உரிமைச் சொல்லை அருமையாய்ப் பேணுக.
ஆக்கமும் கேடும் அதன்பால் உள்ளன.
உரையின் அளவே மனிதன் உயர்கின்றான்.
இனிய மொழியாளன் அமுத நிலையமாம்.
வாய் இனியதேல் வையம் போற்றும்.
மெய்யுரையுடையான் தெய்வம் எனத் திகழ்வான்

**12-வது வாக்கு நயம் முற்றிற்று.**

18

# பதின்மூன்றாம் அதிகாரம்

## போலி நிலை.

அஃதாவது உண்மைக்கு மாறாய் வெண்மை மேவி வெளிப் பகட்டாய் நிற்பது. ஒரு நல்ல பொருளைப்போலப் புல்லிப் பொலிவதால் போலி என வந்தது. உள்ளம் காவாய்க் கள்ளம் புரிந்து உருவ நிலையில் மருவி வருகின்ற இது காயத்தின் வயத்த தாய்க் கதித்து எழுதலால் வாக்குநயத்தின்பின் வைக்கப்பட்டது.

121. ஏற்றநலம் உள்ளத்தே இல்லான் இருப்பதுபோல்
தோற்றமுறச் செய்துமிகத் துள்ளியே—ஆற்றலொடு
சொல்லாடல் கள்ளுண்டோன் சோர்ந்தாடல் போலாமே
நல்லார்க்கு நல்ல நகை. (க)

இ-ள்

உள்ளத்தே நல்ல தகுதி இல்லாதவன் வெளியே உயர்ந்தவனாக நடிப்பது, கள்ளைக் குடித்தவன் களித்து ஆடுதல்போல் நகைப்பிற்கே இடமாம் என்றவாறு.

இது, வெளிப்பகட்டு இளிக்கப்படும் என்கின்றது.

ஏற்றநலம் — ஒருவனுடைய வெளித்தோற்றத்திற்குத் தகுதியான தன்மை.

தோற்றம் — யாரும் வியந்து காணும்படி விளங்கித்தோன்றல்.

அகத்தில் இழிந்தவனாயிருந்தும் புறத்தில் தன்னைச் சிறந்தவனாகப் பிறர் எண்ணுமாறு பண்ணிவருவது ஈனமாகும்.

கள்ளுக்குச் சொல்விளம்பி என்று ஒரு பெயர். அதனைக் குடித்தவன் அறிவு மயங்கி வெறியனாய்ப் புலம்புவன். அப்புலப் பத்தில் அவன் மறைத்து வைத்திருந்த இரகசியங்கள் எல்லாம் வெளிப்பட்டுவிடும். அதுபோல், வெளிப்பகட்டாளனுடைய உள்ளக் கள்ளங்கள் சொல்லிலும் செயலிலும் எல்லார்க்கும் புலப் படும்; படவே அப்புலைநிலையைக் கண்டு உலகம் அவனை எள்ளி இகழும் என்க.

பொல்லாதார் புரியும் புலையாட்டங்கள் பல்லோர்க்கும்வெளி யாய்ப் பழிவிளைப்பதை உணராமல் இளிவில் இழிந்து ஈனம் ஆதல் இரங்கத் தக்கதாம்.

வெளி மதிப்பை விழைந்து கபடநாடகம் ஆடுகின்ற அவரது அவலநிலையை நல்ல அறிவாளிகள் தெளிவாக உணர்ந்துகொள்ளுவர்; கொள்ளவே தம்முள்ளேயே எள்ளிச் சிரிப்பர் ஆதலால், "நல்லார்க்கு நல்ல நகை" என வந்தது.

அயலை வஞ்சித்து உயர்வடையத் துணிதல் மயலேயாம்; உன் நெஞ்சுள்ளேயே நல்ல நீர்மைகளை வளர்த்துவரின், எல்லாரும் உன்னை ஏத்தித் தொழுவர் என்க.

---

122. மேன்மை பெறநீ விழைகின்றாய் கீழ்மையே
பான்மையாய் உள்ளம் படிந்துள்ளாய்—நோன்மை
உடையவன்போல் ஓங்கி உயர்ந்தாலும் வையம்
கடையவனுக் காணுமே காண். (உ)

இ-ள்.

உயர்ந்த மேன்மையை உலகில் அடைய விரும்புகின்றாய்; ஆனால், இழிந்த புன்மையை உள்ளே உவந்திருக்கிறாய்! சிறந்த தவசீலன்போல் வெளியே தோன்றினாலும், இழிந்த ஈனன் என எவரும் உன்னை உணர்ந்து கொள்வர் என்றவாறு.

மேன்மை ஆவது மேலான தன்மைகளால் உண்டாகின்ற நன்கு மதிப்பு. உயர்வை விழைவது உயிர்களின் இயல்பாயது.

கீழ்மை என்றது ஈனமான இழிந்த இயல்புகளை. தன்னையுடையானைஇழிமகனுக்கிக் கீழே தள்ளுவது கீழ்மைஎன வந்தது.

எல்லாரும் தன்னை மேலாக மதித்துப் பேணவேண்டும் என்று எண்ணுகின்றவன் அதற்குரிய தகுதியைத் தான் அடைந்து கொள்ள வேண்டும். அங்ஙனமின்றி அவாவுவது வீணாம்.

"நோன்மை உடையவன்போல் உயர்ந்தாலும் வையம் கடையவனுக் காணும்" என்றது இழிந்த நிலையினன் சிறந்த விரத சீலனாய் வெளித்தோற்றத்தில் உயர்ந்து காணப்படினும் உண்மையை உலகத்தார் நன்கு உணர்ந்துகொள்ளுவர் என்றவாறு. நோன்மை = தவம், விரதம்.

அகத்தே புன்மையுடையவன் புறத்தே நல்ல தன்மையாளனாக நடித்தாலும், அந்த நாடகத்தால் உண்மையான பெருமையை அடைய முடியாது; உரிய தன்மையை மருவி உயர்க.

தன் தகுதிக்கு மாறுக மிகுதியான மதிப்பை யாரும் என்றும் எய்தியது இல்லை. இது தெய்வ நியமமா யுள்ளது.

"We pass for what we are." (Emerson)

"உள்ள நிலையளவே நம்மை உலகம் தெளிகின்றது" என்ற மேல்நாட்டுப் பெரியார் கருத்தும் ஈண்டு அறியத் தக்கது.

இழிவான எண்ணங்களை ஒழிக; உயர்வான குண நலங்களைப் பழகிக்கொள்க. கொள்ளின், நீ உயர்ந்தவனுவாய்; அவ்வாறன்றி வெளி மினுக்கால் மேன்மை பெற விழைவது களி மயக்காம்.

---

123. உனக்குநீ நல்லவனுய் உற்ருல் உலகம்
தனக்குநீ நல்லவனுய்ச் சார்வாய்—தனக்குணலம்
இல்லாதான் தோற்றம் இழிந்ததே என்றுமே
பொல்லாத தாகும் புவிக்கு. (ந)

இ-ள்.

உனக்கு நீ நல்லவன் ஆனுல், உலகத்திற்கும் நல்லவன் ஆவாய்; தனக்குள் நலம் இல்லாதவன் புவிக்குச் சுமையாய்ப் புலைமிகச் செய்வான் என்றவாறு.

உள்ளம் புனிதமாய் நல்ல எண்ணங்களை யுடையவன் நல்லவன் ஆவன். இனிய குணசீலனுன அவன் எங்கும் எல்லார்க்கும் இதம்புரிந்தே நிற்பன் ஆதலால் உலகிற்கு நல்லவனுய் ஒளி மிகப் பெறுகின்ருன்.

தனக்குள் நலம் இல்லாதான் என்றது நெஞ்சம் தீயனு யுள்ளவனை. அத்தீய நெஞ்சன் மாய நஞ்சாகின்ருன்.

மனம் தீமையாகவே அவனுடைய வாக்கிலும், செயல்களிலும் தீங்குகள் விளைகின்றன. அவ்விளைவுகள் பலவுயிர்களுக்கும் துயரமாய் வளர்கின்றன; வளரவே, அவன் பாவியாய் ஈண்டு இழிந்துபடுகின்ருன்; ஆவி போய் ஆண்டு அழிதுயரடைந்து அலமருகின்றது; ஆகலான், "தனக்குள் நலம் இல்லாதான் தோற்றம் இழிந்தது; புவிக்குப் பொல்லாதது" என நேர்ந்தது.

தன்னைப் பொல்லாதவன் என்று சொல்ல எவனும் விரும்பான்; நல்லவன் என்று கேட்கவே நயந்து நிற்கின்ருன்; நயந்தும் தகுந்த தன்மைகளைப் புரிந்துகொள்ளாமல் மிகுந்த பெயரைப்

பெற விழைகின்றான். அதனால் நல்லவன்போல் நடிக்க முயல் கின்றான். போலியான அம்முயற்சியாளனை நோக்கி அவன் கருதிய உறுதிநலம் மருவியுள்ள இடம் உரிமையுடன் உணர்த்தியபடியிது.

உயர்ச்சி உன் உள்ளத் தூய்மையில் உள்ளது. கள்ள நடிப் பால் அதனைக் காண முடியாது; காட்சி தெளிந்து மாட்சி பெறுக.

---

124. புல்லர் களிப்போடு பொங்கி வழிந்தாலும்
நல்லவர்போல் மேன்மைதனை நண்ணுவரோ—புல்லியகள்
மேலெழுந்து பொங்கி மிகுந்தாலும் நல்லாவின்
பாலெழுந்த பண்பாமோ பார். (௪)

இ-ள்.

புல்லர் மனக் களிப்போடு வெளியே மினுக்கி நிமிர்ந்தாலும் நல்லவரைப்போல் மேன்மையினை அடையார்; கள் மேல் எழுந்து வழிந்தாலும் பால்போல் மதிப்புறாது என்றவாறு.

புல்லர்=புன்மையான தன்மையுடையார்.

பொங்கி வழிதலாவது வீண் மினுக்கராய் யாண்டும் முந்தித் துள்ளுதல். வழிதல் என்றது சிறுமை நிலை தெரியவந்தது.

உள்ளப் பண்புடைய நல்லோர்கள் வெளிப் பகட்டின்றி அடங்கியிருந்தாலும் உலகம் அவரை உணர்ந்து மதித்து உவந்து போற்றும். பெரிய ஆடம்பரங்கள் செய்து அற்பர்கள் மினுக்கித் திரிந்தாலும் அறிஞர்கள் மதியார்.

கள், புல்லர்க்கும்; பால், நல்லவர்க்கும் ஒப்பாம். உவமக் குறிப்பால் பொருள்களின் இயல்புகள் இனிது புலனும்.

புளிப்பேறிக் கள் பொங்கி வழிதல்போல் களிப்பு மீறி இழி மக்கள் எங்கும் மினுக்கித் திரிவர்; பால்போல் இனியராய் மேலோர் யாண்டும் அடங்கி யிருப்பர்.

ஆவின் பால் என்றது பிறப்பின் பெருமையும் தூய்மையும் உணர வந்தது. ஆமோ? என்றது ஆகாது என்றவாறு.

இழிந்த கள் போல் ஈனமாய் ஒழிந்து போகாமல், நல்ல பால் போல் இனிமையாய் மனிதன் உயர்ந்து கொள்ள வேண்டும் என்பது கருத்து.

125. ஈட்டுபுகழ் வள்ளலைப்போல் ஈன உலோபர்தாம்
நீட்டிமேல் நின்ருலும் நேர்வரோ—ஆட்டின்
கழுத்தில் அலைமுலைதான் கண்ணுறநின்ருலும்
பழுத்த முலையாமோ பார். (ரு)

இ-ள்.

நல்ல வள்ளல்களைப்போல் பொல்லா உலோபிகள் வடிவம் ஒத்திருந்தாலும் மகிமை அடையார்; பால்சுரக்கும் இனிய முலை போல் ஆட்டின் கழுத்தில் தொங்கும் வறிய காம்பு பெருமை உறுமோ என்றவாறு.

இது, உருவப் போலியின் சிறுமை கூறுகின்றது.

புகழ் ஈட்டு வள்ளல் என்றது கொடையாளிகளின் இயல் புணர்த்தி நின்றது. தாம் ஈட்டிய பொருட்குப் பயன் ஈட்டிய நயன் காட்டியபடி யிது. அந்த நயனுடையார் வியனறிய வந்தது.

உலோபம்=பொருள்மேல் அளவுமீறி ஆசைமண்டி மருள் கொண்டிருக்கும் மடமை.

ஒருவருக்கும் ஒன்றும் கொடாத பிசுனர் என்றும் எல்லா ராலும் இகழப்படுவர் ஆதலால் ஈன உலோபர் என நேர்ந்தார்.

"செத்த சவமும் சிலர்க்குதவி செய்தருளும்
வைத்த இடமும் வளமாமே—கைத்தமனப்
பொல்லா உலோபி புவிக்குச் சுமையன்றி
நல்லாரென் றுண்டோ நவில்,"

இவ்வாறு எங்கும் எள்ளப்படுதலால் ஈன உலோபத்தின் இளி நிலை தெளிவாம். மானம் மாண்புகள் அதனல் மாண்டு படுகின்றமையால் அஃது ஈனமாய் நீண்டது.

வள்ளலும் உலோபியும் வடிவில் ஒத்திருந்தாலும் செயல் இயல்களில் சிறிதும் ஒவ்வார். அந்த ஒவ்வாமையை உவமையால் விளக்கியுள்ளது.

சில வெள்ளாடுகளின் கழுத்தில் முலைக்காம்புகள் போல இரண்டு உருவங்கள் நீண்டு தொங்கி யிருக்கும். அவற்றை அலைதாடி என்பர். முலைவடிவில் அமைந்திருப்பினும் ஒரு பலனும் இல்லாமல் அவலமாய் அவை அசைந்து நிற்கும்.

பழுத்த மூலை வள்ளலுக்கும், கழுத்து மூலை உலோபிக்கும் ஒப்பாம். இனிய பால் சுரந்து இதம்புரிந்து வருதலால் பழுத்த மூலை என வந்தது. நயனுடையராய் யாண்டும் பயன் சுரந்தருளும் வள்ளல் நிலைமையை மூலை உவமை உள்ளம் தெளிய உணர்த்தியது. மூலை உருவில் தோன்றியிருந்தாலும் அலைதாடியால் ஒரு பயனும் இல்லை ஆதலால் புலையான உலோபனுக்கு நிலை உவமையாயது.

வள்ளலைப்போல் உலோபி மனித வடிவமேயாயினும், இனிய பயன்யாதும் இல்லாமையால் அவன் தோற்றம் ஈனமாய் இழிக்கப்பட்டது. போலித் தோற்றங்கள் கேலிக் கூத்துகளாய்க் கிளைத்து ஒழிகின்றன.

---

126. கத்தும் கழுதை கலினமிட்டு நின்றாலும்
தத்துபரி போலுயர்வு சாருமோ—இத்தரையில்
மூடர் அறிந்தவர்போல் முன்னி நிமிர்ந்தாலும்
பீடு பெறுவரோ பின். (சு)

இ-ள்

கத்துகின்ற கழுதை கலினம் பூண்டு நின்றாலும் உத்தமக் குதிரை போல் உயர்வை அடையாது; அதுபோல், இவ்வுலகில் ஈன மூடர் ஞானசீலர்போல் கோலம்கொண்டு நிமிர்ந்தாலும் மேன்மை பெறார் என்றவாறு.

கலினம்=கடிவாளம். குதிரை வாயில் இட்டுப் பாகன் கையில் நீளமாகப் பிடித்துக்கொள்வது ஆகலான் கடிவாளம் என வந்தது. ஏறுகுதிரைக்குரிய சேணம் முதலிய அலங்காரங்களையும் ஈண்டு இணைத்து எண்ணிக்கொள்க.

அகத்தே நல்ல கல்வியறிவில்லாமல் புறத்தே ஆடம்பரமான வேடங்களைப் பூண்டுகொண்டு வீணே பிலுக்கி நிற்கும் போலிகளைக் குறித்துக் கூறியவாறிது.

முன்னி நிமிர்தல்=எண்ணிச் செருக்கி இறுமாந்து நிற்றல். முன்னல்=எண்ணல். களிப்போங்கி நிற்கும் இளிப்பு நிலையை வெளிப்படுத்தி நின்றது.

இழுதைகளுக்குக் கழுதையை உவமை கூறியது அவர் தம் இயல்பான இழி நிலை தெரிய. கத்தும் என்றது பயனின்றிப் பித்தும் அவரது வாயாடித்தனத்தைக் குறித்தது.

உத்தமக்கலைஞர் அதிவிவேகமுடைமையால் தத்துப்பரி அவர்க்கு உவமையாய் வந்தது. கம்பீரம், காட்சியின்பம், கதிவேகம், மதியமைதி, மங்கலமுடைமை முதலிய உவமை நலங்களை யெல்லாம் உபமேயத்தில் உணர்ந்துகொள்க.

பீடு பெறுவரோ? என்றது பெறார் என்றபடி. பீடு=பெருமை.

பின் என்றது முன்னதாக அறியாது மயங்கினும் பின்னர் உண்மை தெரிந்த பின் தெள்ளியோரால் மூடர் எள்ளித் தள்ளப்படுதல்கருதி. பேதைகள் மேதைகள் போல் மேவி நடிப்பினும் பெருமையடையார்; சிறுமையே படுவர் என்க.

கலைகளை உரிமையோடு பயின்று அறிவுடையனாய் உயர்ந்து கொள்க; போலி வேடம் போட்டு உலகத்தை வஞ்சிக்காதே; அது முடிவில் கேலியாய் முடியும் என உறுநிலம் உணர்த்தியபடியிது.

---

127. கையில் தடியும் கழுத்தில் மணிவடமும்
மெய்யில் உயர்நீறும் மேவிடினும்—பொய்யுள்ளம்
கொண்டார்க் கவையென்னே கூட்டும் குருடிமைத்தால்
கண்டார்க் கினிதாமோ காண். (எ)

இ-ள்.

கையில் தண்டமும் கழுத்தில் மணி வடமும் மெய்யில் நீறும் மேவி யிருந்தாலும் உள்ளத்தே பொய்யுடையராயின், அவர்க்கு அவை யாதொரு பயனையும் செய்யா; குருடன் பிலுக்காக இமைத்து விழிப்பதுபோல் நகைக்கே ஏதுவாம்.

இது, வெளி வேடர் இளி கேடர் என்கின்றது.

தடி என்றது யோக தண்டத்தை. உல்லாசமாக உலாவச் செல்லுங்கால் மாட்சிக்கு ஒரு காட்சியா மெய்க் கோலம் காட்டுவாரது கைக்கோலையும் இது குறித்து நின்றது.

மணிவடம்=உருத்திராக்கமாலை. உயர் நீறு என்றது திருநீற்றினை. தன்னை அணிந்தாரை உயர்ந்த பதவியில் உய்க்கும் அதன் புனித மகிமையை அடைமொழி உணர்த்தி நின்றது.

பொய் என்றது வஞ்சனை பொறாமை முதலிய தீய எண்ணங்களை. புறத்தே சிவம் பழுத்த நல்ல சைவக் கோலம்; அகத்தே

அவம் பழுத்த பொல்லாத் தீமை. இம் மாயத் தீயர் காயத் தோற்றம் அவரையே காய்ந்து தூற்றும்.

என்னே கூட்டும்? என்றது யாதொரு நலமும் கூட்டாது; அவர்க்கு இழவுதான் கூட்டும் என்றபடி. வேடதாரியைக் குருட்டுக் கண்ணோடு ஒப்ப வைத்தது, அகம் இருட்டாய்ப் புறம் மருட்டும் புன்மை நோக்கி.

குருட்டுக்கண்ணன் சிமிட்டி விழித்தால் சிரிப்பிற்கே இடமாம்; அதுபோல் ஒழுக்கம் இல்லாதவன் நல்ல வேடத்தை மேற்கொண்டு பிலுக்கி நிற்றல் இகழ்ச்சிக்கே ஏதுவாம்.

ஒளியுள்ள கண் இமைத்து விழித்தால் அழகாம்; குணம் உள்ளவன் கோலம் கொண்டால் நலமாம் என்க.

உள்ளத்தே சீலம் இல்லாமல் வெளியே நல்லகோலங்களைப் புனைந்து கொண்டு நல்லவர் என்று பிறர் நம்பும்படி சொல்லாலும் செயலாலும் நடித்து வருகின்ற பொல்லாத மாக்கள் மிகவும் அஞ்சத் தக்கவர் ஆதலால், புறப் பூச்சுக்காரரான அவ்வஞ்ச வேடரை நம்பற்க என்பது கருத்து.

---

128 உன்பால் உறுமுயர்வை ஓர்ந்துபிறர் பாராட்டின்
இன்பாம்நீ சொன்னால் இளிவாமே—பொன்புனைந்த
தன்முலையைத் தன்கையால் தான்வருடின் ஓர்மங்கைக்
குண்மலியின் புண்டோ வுணர். (அ)

இ-ள்.

உன்னுடைய உயர் நலங்களை உலகத்தார் உணர்ந்து புகழ்ந்தால் இன்பம் ஆம்; நீயே சொல்ல நேர்ந்தால், அழகிய மங்கை தன் கொங்கையைத் தானே வருடியதுபோல் நகைப்புக்கே இடமாம் என்றவாறு.

இது, தற்புகழ்ச்சி தனி இகழ்ச்சியாம் என்கின்றது.

ஓர்தல் = பலமுறையும் கூர்மையாக ஆராய்ந்து உணர்தல். கூர்ந்து ஓர்ந்து தேர்ந்தவர் புகழ்வதே ஆன்ற மதிப்பாம். பாராட்டல் = புகழ்ந்து கொண்டாடல். தன்னைக் குறித்துப் பிறர் பெருமையாக எண்ணிக் கொள்ள வேண்டும் என்பது

மனிதனது இயல்பான உயர் விருப்பம். அம்மதிப்பின் மோகத்தில் மதியீனமாய் மோசம் போகின்றான். அங்ஙனம் போகாதபடி இது போதித்துள்ளது.

போதனை எளிது தெளிவுற உவமை வந்தது. மங்கை என்றது பருவ நலம் கனிந்து தருணியாயுள்ள உரிமை யுணர.

பொன் = அழகு. பொன்புனைந்த என்றது அந்த இனிய உறுப்பின் இயல்புணர்த்தி நின்றது. வருடுதல் = இனிது பொதிந்து தழுவுதல்.

மங்கை, முலை, வருடல் என்னும் மூன்றும் மனிதன், உயர்வு, சொல்லல்களுக்கு முறையே ஒப்பாம்.

உள் மலி இன்பு உண்டோ? என்றது இல்லை என்றவாறு. மலிதல் = நிறைதல். பரிச விளைவு பரவச மாயது.

தன் கொங்கையை உரிய காதலன் வருடின் அம்மங்கைக்குப் பெரிதும் இன்பமாம். அவனுக்கும் நேரே பேரின்பமாகும்.

ஒரு மனிதனது உயர்வை அறிவுடைய பிறர் கூறின் இருபாலார்க்கும் இனிய உவகையாம்; அவ்வாறின்றித் தானே உரைத்தால், அது சுவைக் கேடாம்.

தன் பெருமையைத் தன் வாயால் சொல்வோன், தன் முலையைத் தன் கையால் வருடும் மடமங்கை போல் இன்ப நலன் இழந்து இளிக்கப்படுவன். உவமையிலுள்ள விநய நயங்களை நுணுகி உணர்ந்து பொருள் நிலையை ஓர்ந்து கொள்க.

கற்றனவும் கண்ணகன்ற சாயலும் இற்பிறப்பும்
பக்கத்தார் பாராட்டப் பாடெய்தும்; தானுரைப்பின்,
மைத்துனர் பல்கி மருந்தில் தணியாத
பித்தனென் றெள்ளப் படும். (நாலடியார், 340)

தன்னை வியப்பிப்பான் தற்புகழ்தல் தீச்சுடர்
நன்னீர் சொரிந்து வளர்த்தற்றால்—தன்னை
வியவாமை யன்றே வியப்பாவ தின்பம்
நயவாமை யன்றே நலம். (நீதிநெறி விளக்கம், 19)

இவை ஈண்டு எண்ணத் தக்கன.

உயர்ந்த குணசீலனாய் அமர்ந்துள்ளவனை உலகம் விழைந்து புகழும்; தன்னைத் தானே வியந்து கொள்பவனை இகழ்ந்து தள்ளும் என்க.

தன் பெருமை பேசலாகாது என்பது கருத்து.

---

129. ஏட்டுப் படிப்பை இதந்தெரிந்து கல்லாமல்
கேட்டுப் படிப்பே கெழீஇநின்று—நீட்டிமேல்
எல்லாம் தெரிந்ததா எண்ணிச் செருக்குவார்
புல்லறிவோர் எங்கும் புகுந்து. (௯)

இ-ள்.

நல்ல நூல்களை நன்கு உணர்ந்து படியாமல் பொல்லா நெறியில் பொருந்தி நின்று எல்லாம் தெரிந்ததாகப் புல்லறிவாளர் செருக்கித் திரிவர் என்றவாறு.

இது, போலிக்கல்வியின் புலைநிலை கூறுகின்றது.

இதம் தெரிந்து கற்றலாவது அறிவு நலம் கனிந்த இனிய நூல்களைத் தனி யுணர்ந்து நல்ல குருவிடம் நன்கு தெளிதல்.

கேட்டுப் படிப்பு என்றது தாமாக உரிமையுடன் ஊன்றிப் படியாமல் கற்றவர் வாய்மொழியை ஒட்டிக்கேட்டு உருப்போட்டுக் கொள்ளல். பட்டித்தனமான இது ஒருவகையிலும் உருப்படாது; கேட்டப்படிப்பாய்க் கெடுநிலையில் இழியும். கெழுமல்= பொருந்தல். அளபெடை விழைவின் விளைவை விளக்கவந்தது.

உள்ளம் பதிந்து உண்மையாகக் கற்றகல்வி உயிர்க்கு உறுதியாய்த் திண்மை புரிந்தருளும்; அங்ஙனம் கல்லாதது புன்மையாய்ப் புலைப்படுத்திப்போம்.

கண் ஊன்றி எண்ணிக் கற்றவர் கல்வியின் எல்லையை உணர்ந்து கருத்து அடங்கி நிற்பர்; அல்லாதார் எல்லாம் தெரிந்தாய்ப் பொல்லாச் செருக்குடன் பொங்கித்திரிவர்.

" எங்கும் புகுந்து புல்லறிவோர் செருக்குவார் "
என்றது அவரது புன்மையும் போக்கும் புலன் தெரியவந்தது.

" அச்சமும் நாணமும் அறிவிலோர்க்கு இல்லை " (நறுந்தொகை)

ஆதலால் நல்ல அறிவாளிகள் எதிரேயும் புல்லர் அஞ்சாது பேச நேர்கின்றார். அவர் போலித்தனம் காலித்தனமாய்க் களிப்பு மீதூர்ந்துள்ளது. அக்களிகளின் இளிவு பழிநிலையில் எழுகின்றது.

மலைச்சாரலில் உதிர்ந்து கிடக்கின்ற சிங்கப் பற்களை வாயில் ஒட்டவைத்துக்கொண்டு சில நாய்கள் புலிமுன் குலைப்பதுபோல், கலைச்சாரலில் சிதறி யுள்ள சில வுரைகளை வாய்ப்பாடம் செய்து கொண்டு பேதைகள் மூன் பேசிப் பேதைகள் பிழைபடுகின்றனர்.

"வெற்றியுறு கோளரிப்பல் வீழ்ந்தசில கொண்டுநாய்
கொற்றப் புலிமுன் குரைப்பொக்கும் குற்றமறக்
கற்றவர்முன் முன்னூல் உரைசில கற்றூர்போல்
மற்றவர் கேட்டுரைக்கும் மாண்பு." (இன்னிசை யிரு நூறு

இப்பாட்டு இங்கே சிந்திக்கத்தக்கது. தானும் நன்கு கற்று மேலும் நல்லவர் வாய்மொழிகளைப் பெற்று ஞானம் படிந்திருத்தல் ஒருவனுக்கு நலமாம்; அவ்வண்ணம் உணர்ந்து படியாமல் உள்ளம் தருக்கி ஊனம்புரிதல் ஈனமாம் என்க.

---

130. கொண்டமடம் நீங்காமல் கோலமடம் மேற்கொண்டு
கண்டபடி செய்து களிப்பரோ—சண்டன்
அணைந்தால் உறுவதனை ஆராய்ந்து சற்றே
உணர்ந்தால் உளத்துள் உற. (ம)

இ-ள்.

எமன் வரும்பொழுது உறுவதைச் சிறிது கருதி உணர்ந்தால், உள்ளமடம் போக்காமல் உயர்ந்த மடங்களில் புகுந்து இழிந்த செயல்களை விழைந்து எவரும் களியார் என்றவாறு.

இது, போலித்துறவின் புன்மை புகல்கின்றது.

கொண்டமடம் என்றது அகத்தே மண்டியுள்ள அறியாமையை. உண்மையை உணராமல் மூடமாயிருப்பது மடம் என வந்தது.

கோலமடம் என்றது தருமநிலையமாய் அமைந்துள்ள அழகிய தவச்சாலைகளை. உலக நிலையை உணராமல் ஒதுங்கி யுள்ளமையால் தவம் புரியும் இடம் மடம் என நேர்ந்தது. உலக மடங்களை ஒழித்து, உள்ளமடங்களைக் கழித்து, உயர் பரத்தை அறிதற்கு உரியதானமாயிருக்கும் அரிய தவப்பள்ளியை மடம் என்றமை யால் அந்த நிலையத்தின் நிலைமையும் தலைமையும் இனிது புலனும்.

அத்தகைய புனிதமான ஞானத்தானத்தை ஈனப்படுத்தித் தவவேடம் தாங்கியும் அவவேடராய் ஓங்கி உழல்வது உலகிற்குப்

பெருங்கேடாம். ஆதலால் அவர் திருந்தி உய்யவேண்டி இது இரங்கி வேண்டியது.

ஐம்பொறிகளையும் அடக்கி அருள்நலம் சுரந்து ஆன்மதரிசனம் செய்து மகாத்துமாக்களாய் மருவியிருக்க வேண்டியவர் மாறுபட்டு இஞ்ஞான்று அஞ்ஞான சீலராய்ப்பெருகியிருக்கின்றார்.

கண்டபடி செய்து களிப்பரோ? என்றது மனம் போனபடியெல்லாம் போய்ப் பொறிகளில் வெறிமண்டி விழுந்து அவர் கொண்டாடும் களியாட்டங்களை நினைந்து கழிவிரக்கம்கொண்டது.

இரவெலாம் காமக் கணிகையர் முயக்கில்
இன்பமுற் றியற்பக லெல்லாம்
குரவராய் அணிவெண் ணீற்றுருத் திராட்சம்
கோலமார்ச் சாலமாம் குழைவும்
பரவுபா வனையும் தேவதார்ச் சனைதாம்
பண்ணல்போல் உருப்பல பரப்பி
விரவுமா மணிதொட்டு ஆட்டலும் பார்க்கின்
மிகக்கொடி திவர்வஞ்ச வேடம். (1)

திருத்தகு மூவர் புகல்திருப் பாட்டுத்
தெள்ளமுதத்தையும் தேக்காது,
உருக்கெடுத் தகற்று நற்றிரு மூலர்
ஓது மந்திரத்தையும் உணராது,
அருட்கெடுத் தறம்தாம் காட்டுவார் தமைப்போன்று
அரும்பொருள் கவர்ந்தவ ரவர்க்குக்
குருக்கொடுத் தொருசாண் கும்பிதூர்க் கின்ற
கொடியரால் இந்நிறை குழுவோர். (2)

நிறைந்திடக் குடத்தின் மலமுறப் புறத்தில்
நீர்கொடு கழுவினால் நிகர்ப்ப
அறந்துடைத் தன்புந் துடைத்துத்தம் உளத்தில்
அருமல மிருக்கத்தண் புனலால்
புறந்துடைத்து அங்க முழுதும்வெண் ணீற்றைப்
பூசணிக்காய் எனப் பொதிந்து
பறந்துபற் பலர்கைப் பொருள்கொளச் சைவப்
பழங்கள்போன் றவரிவர் பலரால். (3)

(பிரபோதசந்திரோதயம்)

இந்தப் பழம்பாடல்களுக்குப் புதுப்படங்களாய் மடங்களில் அதிபதிகள் இடங்கொண்டிருத்தலைப் பெரும்பாலும் இடங்கள் தோறும் காணலாகும்.

உலக வாழ்வில் அழுந்தியுள்ள பொது மக்களுக்கு மதிநலம் காட்டும்படி முதுமக்கள் அமைத்து வைத்துள்ள தரும நிலையங்க ளில் மருவியிருப்பவர் நல்ல ஞானசீலராயிலராயின் அது அந்நாட் டிற்கும், ஞாலத்திற்கும் பெருங்குறையேயாம்.

இல்லறத்தைத் துறந்து பிறந்த பயனை விரைந்து அடையத் தருமமடம் புகுந்தும் கருமமடம் படிந்து கழியாட்டம் புரிபவர் இறந்துபடின் யமனிடம் என்னபாடு படுவோம்? என்பதை ஒரு சிறிது உணர்ந்தாலும் உள்ளம் கலங்கி உய்திபெற விழைவர்.

சற்றே என்றது, செத்துப்போவோம்; பின்பு கடுநரகில் ஆழ்ந்து அடுதுயரடைவோம் என்னும் உண்மையை கொஞ்சம் சிந்தித்தாலும் நெஞ்சம் திருந்தி நிலைபெறுவர் என்றபடி.

உள்ளத்தே ஞானமின்றி வெளியே தவவேடம் கொள்வது அவமாம் என்பது கருத்து.

---

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

வெளிப் பகட்டு இளிப்பிற்கே இடமாம்.

போலி நிலை புலையேயாகும்.

தனக்கு நல்லவனே பிறர்க்கு நல்லவனாவான்.

கீழ்மையாளர் யாண்டும் மேன்மை காணார்.

உருவப்போலி விரைவில் வெளிப்படும்.

புல்லர் துள்ளினும் புகழ்மிகப் பெறார்.

சீலமில்லார் கோலம் சாலவும் பிழையாம்.

தன்பெருமை பேசுவோன் புன்சிறுமை காணுவான்.

உணர்ந்து படியான் இழிந்து படுவான்.

தவமில் வேடம் அவமேயாகும்.

கரு-வது போலி நிலை முற்றிற்று.

# பதினான்காம் அதிகாரம்.

## பொய்.

அஃதாவது பொய்யினது தீமை. மனிதனுக்கு மாட்சிமையாய் வாய்ந்துள்ள வாக்கை மாசுபடுத்தி நாசம் செய்வதால் போய் நீசம் என நேர்ந்தது. உருவத் தோற்றத்திலும் செயலிலும் பொய்யாடும் போலித்தனம் போல் வாக்கின் நீலித்தனத்தையும் நீக்கவேண்டும் என்று உணர்த்துகின்றமையால் போலி நிலையின் பின் இது வைக்கப்பட்டது.

131. உள்ளத்தைக் கொன்று உயர்நாவைப் பாழ்படுத்தி
எள்ளப் படுபொய் இயம்புகின்றாய்—கள்ளத்தே
இட்ட வழியும் இருநாள் கழியுமுனே
வெட்ட வெளியாய் விடும். (க)

இ-ள்.

உன் உள்ளத்தைக் கொன்று, உயர்ந்த நாவைப் பாழ்படுத்தி ஈனமான பொய்யைப் பேசுகின்றாய்! நீ ஒளித்துக் கூறினும் இரண்டு நாளுள் உண்மை வெளியே தெளிவாம் என்றவாறு.

பொய் என்பது மனம் அறிந்த உண்மையை மறைத்துக் கூறுதல். கொன்று, படுத்தி என்றது பொய்யின் விளைவில் விளையும் இழவுகளை இனந்தெரிந்துகொள்ள.

ஒருவன் பொய் பேசத் தொடங்கின் முதலில் அவன்நெஞ்சு நடுங்கி நிலை குலைகின்றது. குலையினும் புலையாகத்துணிந்து பேசி விடுகின்றான். அது உயிர்க்கு நாசம் ஆகின்றது.

உயர்நா என்றது மனிதனது உயர் நிலைக்கெல்லாம் மூல முதலாய் வாய்ந்துள்ள அதன் நிலைமை கருதி. விலங்கினும் வேறுபாடு தெரிய அது விளங்கியுள்ளது.

அரிய நூல்கள் பயின்று இனியனபேசி இருமையினும் பெருமைபெற உரிய அருமை நா பொய்யுரையால் சிறுமையடைந்து சீரழிகின்றது.

எள்ளப் படுபொய் என்றது எல்லாரும் இகழ்ந்து வெறுத்தல் கருதி. புலைப்படு பொய்யைத் தலைப்படாதே.

"வெட்ட வெளியாய் விடும்"

என்றது பொய்யை எவ்வளவு கட்டிப் புனைந்துவிட்டாலும் உலகம் ஒட்டித்தெளிந்து கொள்ளும் என்பதாம். "கெட்டிக்காரன் புளுகு எட்டு நாளைக்கு" என்னும் பழமொழியால் அதன் அழி நிலை புலனும்.

ஒரு பொய்யுரையால் உள்ளம் மாழ்கின்றது; உயர் நா பாழ்படுகின்றது; எள்ளல் உறுகின்றது; சொல்லியதும் எவ்வழியும் நில்லாது ஒழிகின்றது; ஆதலால் அந்த அல்லலை யாண்டும் சொல்லாதே என்பது கருத்து.

விலங்கினும் மனிதன் பெரியவன் என்னும்
மேன்மையை நாவினல் பெற்ருய்
நலங்கிளர் அந்த நாவினி தாயின்
நரர்களுள் தேவனாய் மிளிர்வாய்!
புலம்படு வாயில் பொய்படு மாயின்
புலையனாய் நிலையினில் இழிந்து
நிலம்படு பழியுள் ஆழ்குவாய் நாவை
நெறியுடன் பேணுக நினைந்தே.

மனிதன் நாவால் உயர்ந்துள்ளான்; அதனைப் பொய்யால் புலைப்படுத்தாமல் புனிதமாகப் போற்றி வரவேண்டும் என்க.

---

132. ஊக்கம் அழிக்கும் உயர்வொழிக்கும் ஒள்ளியதன்
ஆக்கம் சிதைக்கும் அறிவகற்றும்—மீக்குயர்ந்த
நன்மையொன்றும் இல்லாமல் நாசப் படுத்துமே
புன்மையுறும் பொய்வாய் புகின். (உ)

இ-ள்.

பொய் ஒருவன் வாயில் புகுந்தால், உள்ளே அவனது ஊக்கம் அழியும்; உயர்வு ஒழியும்; செல்வம் தொலையும்; அறிவு குலையும்; நன்மைகள் யாவும் நாசமாகும் என்றவாறு.

இது, பொய்யால் விளையும் கேடுகளை உணர்த்துகின்றது.

மீக்கு உயர்ந்த = மிகவும் மேலான. நன்மை என்றது கல்வி அழகு புகழ் புண்ணியம் முதலிய உயர் நலங்களை.

பொய் பேசுகின்றவனுக்கு நெஞ்சில் தைரியம் இராது; எப்பொழுதும் அச்சமும் திகிலுமே நிறைந்திருக்கும் ஆதலால்,

"ஊக்கம் அழிக்கும்" என அதன் அழிவு நிலை அறிய வந்தது. "உயர்வு ஒழிக்கும்" என்றது பொய்யன் மதிப்பிழந்து எங்கும் இழிக்கப்படுதல் கருதி.

புன்மையுறும் பொய் என்றது, அதன் புலை நிலை தெரிய. தன்னை வாயில் வைத்தவனை ஈனன் ஆக்கி எல்லா நலங்களையும் அடியோடு கெடுத்துக் குடிகேடு செய்து முடிவில் நரகத்தில் வைத்துவிடும் என்க.

நாசப் படுத்துமே! என்றது பொய்யால் விளையும் நீச நிலைகளை நினைந்து இரங்கிய படியிது. ஏகாரம் இரக்கம் குறித்து நின்றது.

"அண்ணிய கிளையும் இல்லும் அரும்பெறல் மகவும் அன்பும்
திண்ணிய அறிவும் சீரும் செல்வமும் திறலும் தேசும்
எண்ணிய பொருள்கள் யாவும் இயற்றிய தவமும் ஏனைப்
புண்ணியம் அனைத்தும் சேரப்போய்ம்மையால்பொன்றுமன்றே."
(பாரதம்)

பொய்மையே பாவம் எல்லாம் விளைதரு பூமியாகும்
பொய்மையே பிறவி எல்லாம் புகப்புரி வித்தும் ஆகும்
பொய்மையே வறுமை எல்லாம் போதரப் புரிவதாகும்
பொய்மையே நரகம் எல்லாம் புகுதரப் புகுத்தா நிற்கும். (1)

ஏனைநல் லொழுக்கம் முற்ற இருப்பினும் இன்மை செய்யும்
ஊனமில் ஈன்றுள் மாட்டும் அருவருப்பு ஒருங்கு செய்யும்
மானமிக் கவராம் சான்றோர் மருங்குநான் புகல்வ தென்னே?
ஈனமார் பொய்மை கூறல் எற்றைக்கும் பொல்லா தாகும். (2)
(காசி ரகசியம்)

பொய்யின் நீசமும், அதன் நாசங்களும் இவற்றால் அறியலாகும்.

---

133. பொய்யொன்று சொல்லப் புகுவீர் புகுமுன்னே
ஐயோநீர் ஒன்றை அறிமினோ—வையமெங்கும்
கண்ணுடையான் நேர்நின்று காண்கின்றான் நீர்துணிந்த
எண்ணமபின் என்னும் இடர். (ங)

இ-ள்.

பொய்யைச் சொல்லப் புகுகின்ற நீவிர் முதலில் ஒன்று சிந்திக்க வேண்டும்! எங்கும் நிறைந்துள்ள தெய்வம் கண்களை விழித்துப் பார்த்துக் கொண்டிருக்கின்றதே! உங்கள்கதி என்னும்? அதனை மதிநலத்தோடு உணர்க என்றவாறு.

இது, பொய் கூறுவோர்க்கு ஓர் உய்தி கூறுகின்றது. ஒன்று என்றது புதிதாகப் புளுகைப் பழகத்தொடங்கும் இளமை நிலை கருதி. புகுந்த பின் அறிந்து பயன் இல்லை ஆதலால் புகுமுன்னே என எச்சரிக்க நேர்ந்தது. ஐயோ! என்றது பொய்யால் விளையும் வெய்யநிலைக்கு இரங்கி.

வையம் எங்கும் கண் உடையான் என்றது கடவுளை. உலகத்திலே யாருக்கும் தெரியாது என்றுகருதி மனிதர் எதிரே பொய்யை நீ துணிந்து பேசுகின்றாய்; எங்கும் நிறைந்து எல்லாவற்றையும் நன்கு பார்த்துக் கொண்டிருக்கின்ற தெய்வம் உன் நிலையைக்கண்டு சிரிக்கின்றது; ஆதலால் தெய்வ தண்டனையை உணர்ந்து தீய பொய் மொழியை உடனே ஒழித்து விடுக.

கள்ளப்பொய்யைச் சொல்ல உள்ளம் துணியுங்கால் உடனே கடவுள் நேரே கண்டு கொண்டிருக்கிறாரே! என்னும் உண்மையை எண்ணுக; அந்த எண்ணம் உனக்கு நன்மையை விளைக்கும்.

"செய்தான் அறியும் செழுங்கடல் வட்டத்துப்
பொய்தான் மிகவும் புலம்பு மனிதர்கள்
மெய்தான் உரைக்கில் விண்ணோர் தொழச்செய்வன்
மைதாழ்ந் திலங்கு மிடறுடை யோனே." (திருமந்திரம்)

இந்தச் செய்யுளை ஈண்டுச் சிந்தனை செய்துகொள்க. பொய் பேசின் தெய்வ கோபம் உண்டாம்; அதனால் வெய்யதுயர் விளையும் ஆதலால் அதனை அறவே ஒழித்து மெய் பேசி வாழ்க என்பது கருத்து.

---

134. பொய்யுரைக்கும் வாய்க்குநற் போசனமும் கிட்டாதென்
றையோ உலகுரைக்கும் அச்சொல்லை—மெய்யாகக்
கேட்டும் கெடுமதியர் கேடான பொய்யையே
மீட்டும் புகல்வர் மிகுந்து. (௪)

இ-ள்.

பொய் பேசுகின்ற வாய்க்கு நல்ல போசனம் கிடையாது என்று உலகம் கூறி வருவதை உணர்ந்தும் மீண்டும் பொய்யே பேசி மக்கள் மாண்டு போகின்றார் என்றவாறு.

கெடுமதியர் என்றது தமக்கே படுகேடு விளைத்துவரும் அறிவு கேட்டை நோக்கி. எல்லாம் வல்ல கடவுள் நேரே பார்த்துக்

கொண்டிருக்கிறார்; பொய் பேசினால் உன்னை அவர் வெகுண்டு தண்டிப்பார் என முன்னம் கூறினார்; இதில், உலகம் பழித்திருத்தலை உணர்த்துகின்றார்.

"பொய்சொன்ன வாய்க்குப் போசனம் கிடையாது" என்பது இந்நாட்டில் வழங்கிவரும் பழமொழி. பொய்யின் தீமையைக் குறித்து முன்னோர் என்னவாறு எண்ணியுள்ளார்? என்பது இதனால் அறியலாகும். பொய் பேசுதலால் பாவம் உண்டாகின்றது; அப்பாவம் துன்பங்களுக்கு ஏது ஆகின்றது. ஆகவே வறுமை, பசி முதலிய கொடிய துயரங்களுக்கு மூலகாரணமாய் அது மூண்டு நிற்கின்றது. அந்நிலையை இம்முதுமொழி இவ்வாறு குறித்திருக்கிறது.

இங்கே சில ஐயங்கள் தோன்றலாம்.

பெரும் பொருள்களைத்திரட்டி நல்ல உணவுகளை உண்டு செல்வ நிலையில் செழித்திருப்பவர் எல்லாருமே பெரும்பாலும் பொய் சொல்லியுள்ளவர்களே; பொய்யில் அவர் நல்ல பலன் கண்டுள்ளனர். "வாயில் பொய் சொல்லாவழிக் கையில் பொருள் கூடாது" என்பது அவர் கண்ட முடிவு. பொய் சொன்னவாய்க்கு அன்னம் கிடையாது என முன்னம் சொன்னது தவறு; சொல்லும் வாய்க்கே எல்லாம் வரும் என்று அவர் துணிந்து நிற்கின்றார்.

இத்தகைய நிலைகளைக் கண்டு பலர் மயங்கி விடுகின்றார்; பொய்யை மதித்து மெய்யை அவமதிக்க நேர்கின்றார் "அறத்தான் வருவதே இன்பம்" என்றபடி புண்ணிய நிலையில் வரும் பொருளே என்றும் கண்ணியமாய் இன்பம் தரும். பாவ வழியில் வருவது முதலில் பெருகுவதுபோல் தோன்றினும் முடிவில் பழியும் துன்பமும் பயந்து ஒழிந்தே போகும் ஆதலால் எதிரிலுள்ளதை நோக்கி எதையும் முடிவு செய்யலாகாது; நீண்டு நிலைபெற்று வருவதை நெடிது சிந்தித்து ஆன்ற அறிவால் ஆராய்ந்து ஓர்ந்து கொள்ளவேண்டும்.

பொய் யாண்டும் பாவமாய் நீண்டு படுதுயரையே விளைக்கும் ஆதலால் அதனை மனிதன் ஒழித்தொழுக வேண்டும் என்க.

135. பொய்யரெனப் பேரெடுத்த பின்பவர்தாம் மெய்யினையே
செய்ய வகையாகச் செப்பிடினும்—ஐயகோ
நன்றென்று நம்பாரே நம்புவரோ வேசையர்தாம்
நின்றாலும் கற்பா நினை. (ரு)

இ-ள்.

பொய்யர் என்று ஒருமுறை பேர்பெற்றவர் பின்பு எவ்வளவு மெய்யுரைகளைப் பேசினும் உலகம் அவரை நம்பாது; ஒருநாள் வேசியாடினவள் பின்பு நிறை வழுவாதவளாய் மருவி யிருந்தாலும் யாரும் நம்பார் என்றவாறு.

மனிதன் பேசுகின்ற பொய் எப்படியும் தப்பாமல் வெளியாகிவிடுகின்றது; விடவே பொய்யன் என்று எல்லாரும் தெரிந்து கொள்ளுகின்றனர். அதன் பின் அக்கொள்கையை மாற்றுதல் அரிதாகின்றது. நல்ல நெறியுடையளாய் நின்றாலும் வேசையை மெய்யாக மதியாதது போல் பொய்யனையும் வையம் ஐயமாய் அவமதித்தே நிற்கும்.

"அரைக்காசுக்கு அழிந்திட்ட கற்பு
ஆயிரம் மரக்கால் பொன் கொடுத்தாலும் வருமோ நீ செப்பு"

என்றபடி, ஒரு முறை உற்ற வழு உடலழியும்வரையும் ஒழியாது பற்றி இழிவு செய்கின்றது.

புனிதமான நா பொய்யால் புலைப்படுகின்றது; படவே மனிதன் நீசமான பழியடைந்து நாசமடைகின்றான்.

வறியனாயினும் மெய் பேசுகின்றவனை உலகம் மதித்துப் போற்றுகின்றது; செல்வனாயிருந்தாலும் பொய்யனை இகழ்ந்து தள்ளுகின்றது.

"பொய்யுளான் மறந்தோர் மெய்ம்மை புகலினும் பொய்ம்மையாகும்
உய்யுமாறென்றும் இல்லை உறுதியென் பதும்சாராது;
கொய்யுமா மலர்ப்பூஞ் சோலை சூழ்குவலயத்து நாளும்
நையுமாறெதுசெய் தாலும் பொய்நவி லாமைவேண்டும்."

(காசி ரகசியம்)

பொய்யுடையானுக்கு யாண்டும் உய்தியில்லை ஆதலால் அவ்வெய்ய தீமையை எவ்வகையினும் அணுகாதே என்பது கருத்து.

136. பொய்யனென்று சொன்னால் புகைந்து சினந்தெதிரே
வைய விரைந்து வருகின்றார்—பொய்யதனைக்
கூசாமல் வாய்பேசிக் கூடிக் குலாவுகின்றார்
ஆசாரம் என்னே அது. (௬)

இ-ள்,

பொய்யன் என்று சொன்னால் எவனும் சினந்து வைய வருகின்றான்; அத்தகைய வெய்ய பொய்யை மக்கள் விழைந்து பேசுகின்றார்; ஐயோ! இது என்ன ஆசாரம்? என்றவாறு.

உலகம் இயல்பாகவே பொய்யை வெறுக்கின்றது; அப்படியிருந்தும் அது எங்கும் பரந்து விரிந்து நாளும் பெருகி வருகின்றதே என மறுகிய படியிது.

புகைந்து என்றது அவனது உள்ளக் கொதிப்பை உணர்த்தி நின்றது. ஒருவனைப் பார்த்து நீ பொய்யன் என்று சொன்னால் அவன் சகிக்க மாட்டான்; சீறி எழுகின்றான்; சொன்னவனை மாறி வைகின்றான். அதனால், பொய் மிகவும் இழிவானது; மனிதன் உள்ளூற அதனை வெறுத்துள்ளான் என்று தெரிகின்றது.

இவ்வாறு ஈனமான பொய்யை மான மனிதர் நாணாமல் பேசி வருவதும்; அப்பிழையில் பெருகி நிற்பதும் அதிசயமாகின்றன.

கூசாமல் என்றது கூச வேண்டியதில் கூச்சம் இல்லை என்றவாறு. அந்த நீசப் பழக்கத்தின் நிலைமையை விளக்கியது.

ஆசாரம் என்னே அது! என்றது இகழ்ச்சிக் குறிப்பு.

நீசமான பொய்யைப் பேசிக்கொண்டு உயர்ந்த மனிதர் என உலகில் உலாவி வருவது மிகவும் இழிந்த பேதைமை யாம்.

"நீசனோ நீசன் நினையுங்கால் சொல்தவறும்
நீசனே நீசன் அவனையே—நீசப்
புலையனும் என்றுரைக்கும் புல்லியனே மேலாம்
புலையனும் என்றே புகல்." (நீதி வெண்பா)

பிறப்பில் எவனும் நீசன் அல்லன்; பொய் பேசுகின்றவனே நீசன்; இப் பொய்யனைப் புலையன் என்று உணராதவரே புலையராகின்றார் என இது குறித்திருத்தலறிக.

நீசமான பொய்யைப் பேசலாகாது என்பது கருத்து.

---

137. மெய்யாம் அமுதம் விரும்பி நுகராமல்
பொய்யாம் விடத்தைப் புசிக்கின்றார்—ஐயோதாம்
சாகாமல் செத்த சவமாய் இருப்பதனை
ஆகா அறியார் அவர். (எ)

இ-ள்.

மெய்யாகிய அமுதத்தை விழைந்து நுகராமல் பொய்யாகிய விடத்தை உவந்து உண்ணுகின்றாரே! அழிந்து படுதலை அந்தோ! அவர் அறிய வில்லையே என்றவாறு.

சத்தியத்தை அமுதம் என்றது உயிர்க்கு உறுதியாய் உயர்வு அருள்கின்ற அதன் இயல்பும் இனிமையும் கருதி.

தன்னைத் தொட்ட உயிர்களை நீசப்படுத்தி நாசமாக்கி விடுதலால் பொய் நஞ்சு என நின்றது.

நஞ்சைக் குடித்தவன் உடனே செத்து விழுகின்றான்; பொய்யை வாயில் வைத்தவன் அங்ஙனம் சாகவில்லையே? எனின், உள்ளே ஈனமாய் அவன் அழிந்து தொலைந்தான்; வெளியே ஊனுடம்பனாய் வீணே உலாவித் திரிகின்றான் என்க.

ஐயோ என்றது பொய்யின் இழவறியாமல் தழுவிநின்று மனிதர் அநியாயமாய் அழிகின்றமைக்கு இரங்கி. உயிர் உடலை விட்டுப் போகாமலே செத்தவர் நிலைமையைப் பொய்த்தவர் பெற்று நிற்றலால் "சாகாமல் செத்த சவம்" என அவரது விசித்திர இருப்பை விளக்கி நின்றது.

ஆகா என்றது வியப்பில் விளைந்த இரகக்குறிப்பு.

மெய்யுடைய தூயர் அமிர்தம் உண்டவர்போல் யாண்டும் இன்பமும் மகிமையும் வாய்ந்து இனிது வாழ்கின்றார்.

பொய்யுடைய தீயர் நஞ்சு குடித்தவராய்த் துன்பமும் பழியும் தோய்ந்து என்றும் துடித்து மாழ்கின்றார். பொய்யின் தீமை தெளிவுற மெய்யின் மகிமை உடன் கூற நேர்ந்தது. கொடிய பொய்யை ஒழித்து இனிய மெய்யைக் கொள்க என்பது குறிப்பு.

இம்மை நலனழிக்கும் எச்சம் குறைபடுக்கும்
அம்மை அருநரகத் தாழ்விக்கும்—மெய்ம்மை
அறம்தேயும் பின்னும் அலர்மகளை நீக்கும்
மறந்தேயும் பொய்யுரைக்கும் வாய். (சிறுபஞ்சமூலம்)

138. மெய்பேசு வாயாயின் மெய்யான தெய்வமுன்னைக்
கையேந்திக் கண்வைத்துக் காக்குமே—பொய்பேசின்
நீசனென ஈசன் நெடிதகல்வான் நீயந்தோ
நாசமுடன் வீழ்ந்தாய் நரகு. (அ)

இ-ள்.

நீ உண்மை பேசுவாய் ஆனால் உண்மையான தெய்வம் உன்னைக் கையில் ஏந்திக் கண்வைத்துக் காத்தருளும்; பொய் பேசின், நீசன் என்று இகழ்ந்து ஈசன் அகன்று போவான்; போகவே, நீ நாசமாய் நரகில் வீழ்வாய் என்றவாறு.

இது, மெய்யனைத் தெய்வம் கை ஏந்திக் காக்கும் என்கின்றது. சத்தியம் யாண்டும் என்றும் நிலை குலையாமல் நின்று நிலவுதல் போல் கடவுள் நித்தனாய் நிலைத்து நிற்றலால் மெய்யான தெய்வம் என வந்தது.

"தெய்வம், கை ஏந்திக் கண்வைத்துக் காக்குமே"

என்றது மெய் ஏந்தி நிற்கும் புண்ணிய சீலனது மேன்மை தெரிய வந்தது. அருமை மகனை உரிமைத் தந்தை உள்ளம் கனிந்து உவந்து பேணுதல் போல், உண்மையாளனைக் கடவுள் களி கூர்ந்து காத்தருளுகின்றார். உண்மை கடவுளது தன்மை ஆதலால் அதனை யுடையவன் தேவ குமாரனாய்த் திகழ்கின்றான்.

பொய் நீசம் ஆனமையால் அதனைப் பேசுகின்றவன் நீசன் ஆகின்றான். ஆகவே பரிசுத்தனான ஈசன் அவனை வெறுத்து விலகிவிடுகின்றான். விடவே படுதுயரங்களுக்கு ஆளாய் அவன் அடுநரகில் ஆழ்கின்றான். வீழ்ந்தாய் என இறந்த காலத்தால் கூறியது அந்த அழிவின் தெளிவு தோன்ற வந்தது.

மெய் பேசுகின்றவன் தெய்வக் குழந்தையாய்ச் சிறந்து சீர் பல பெறுகின்றான்; பொய்யன் ஈன மகனாய் இழிந்து பழி துயரங்கள் அடைந்து பாழ்படுகின்றான்.

மறைமுழு துணர்ந்தா ரேனும் மகம்பல புரிந்தா ரேனும்
குறைவறு தானம் எல்லாம் கொடுத்தறம் கூர்ந்தா ரேனும்
நிறைபெருந் தீர்த்தம் எல்லாம் நிரம்புறத் துளைந்தா ரேனும்
கறையுறும் ஒருபொய் கூறில் கடுநர கழுந்து வாரே.

(காசி ரகசியம்)

பொய்யின் இழிவும் அழிவும் இதனால் இனிது புலனும். புலையான பொய்யைப் புகலாதே என்பது கருத்து.

139. ஓர்பொய் யுரைக்க உளம்கூசி ஓரரசன்
பாரரசெல் லாம்விட்டுப் பண்டுநின்றான்—நேர்சிறிதும்
நாணுமல் கோடிபொய்யை நாவளைத்துக் கூறுகின்றார்
காணார்கொல் அன்னான் கருத்து. (௯)

இ-ள்.

ஒரு பொய் சொல்ல உள்ளம் நாணித் தனது அரசு முழுவதும் துறந்து முன்னம் ஒரு மன்னன் சத்திய சீலனாய் நிலைத்து நின்றான்; அந்த உத்தமனது உண்மையை ஒரு சிறிதும் உணராமல் நாளும் பல பொய்களைப் பேசி மக்கள் நாசம் அடைகின்றாரே என்றவாறு.

மெய் பேசுவோன் கடவுளைக் காணுவான் என முன்னம் கூறியதற்கு இனமாக ஓர் இதிகாசம் இங்கே தெளிவுற வந்தது.

ஓர் அரசன் என்றது அரிச்சந்திரனை. பேர் குறியாமல் உரைத்தது உலகப் பிரசித்தமான அவனது உயர் நிலை கருதி.

ஓர் என்னும் அடை, ஒப்பற்ற தனி நிலைமையை உணர்த்தி நின்றது. சத்தியசீலன் என அன்று முதல் இன்றுவரை அவன் ஒருவனே தலைசிறந்து நின்று வருகின்றான்.

பொய் பலவகைப்படும். உள்ளதை மறைத்துச் சொல்வது; இல்லதை இசைப்பது; நடந்ததை ஒளிப்பது; நாகரீகமாய் நடிப்பது; ஒரு பயனுமில்லாமல் இடம்பமாய்ப் புளுகுவது; சொன்ன சொல்லை மாற்றுவது; இன்னவாறு பலவகை நிலைகளில் பொய் புலையாடி வருகின்றது.

இம்மன்னன் எந்நிலையிலும் யாதும் பொய்யிலனாய் மெய்யே வடிவமாய் மேவி நின்றான். உண்மையை உயிரினும் பேணி எவ்வகையிலும் வழுவாமல் அதனைப் பாதுகாத்து வந்தான்.

"There is a truthfulness in action as well as in words, which is essential to uprightness of Character." (Smiles)

"சொல்லிலும் செயலிலும் உண்மையா யிருப்பதே செவ்விய ஒழுக்கத்தின் திவ்விய உயிர் நிலை" என ஸ்மைல்ஸ் என்னும் ஆங்கில ஆசிரியர் கூறியிருக்கிறார். மேல் நாட்டாரும் மெய்மையைப் போற்றியுள்ள முறைமை இதனால் அறியலாகும்.

உயிரினும் சிறந்த ஒழுக்கத்திற்கு மெய் உயிராயுள்ளது என்றமையால் அதன் இயல்பும் உயர்வும் இனிது புலனும்.

இத்தகைய மெய்யை அரிச்சந்திரன் மெய்யாகக் கொண்டு நின்றான். வசிட்டருடன் வாதிட்டு விசுவாமித்திரர் இவன் நிலைமையைச் சோதிக்க வந்தார். சூழ்ச்சி புரிந்து அரசு முழுவதையும் கவர்ந்து கொண்டார். மன்னன் மணி முடி துறந்து மனை மகவுடன் அயல் நாடு போனான். முனிவர் தொடர்ந்து பொய்யனாக்க முயன்றார்; முடியவில்லை. மீண்டும் பெரும் பொருள் தரும்படி வேண்டினார். தனது அருமை மனைவியையும், இனிய மகனையும் விற்றுக் கொடுத்துத் தானும் ஓர் புலையனுக்கு அடிமையாய் மயானம் காத்தான். இன்னல் பல அடைந்து இளைத்து நொந்தான். முடிவில் முனிவர் வந்து எதிரே நின்று, "இப்பொழுதாவது நீ கொடுத்ததை மட்டும் இல்லை என்று ஒரு பொய் சொல்லிவிடுக; அரசும் பிறவும் பெற்று மகிழலாம்" என்று பேதித்தார். அப்பொழுது மன்னன் என்ன சொன்னான்?

## அரிச்சந்திரன் உரைத்தது.

சேய்மை அண்மையில் உயிர்க்கொரு துணையெனச் சிறந்த
வாய்மை யாலகம் தூய்மையாம்; மற்றிலை புறத்தைத்
தூய்மை செய்வது நீர் அலால் சொல்லின்வே றுளதோ?
நோய்மை செய்யினும் வாய்மையே நோன்பெமக் கறிதி. (1)

புலைய னும்விரும் பாதஇப் புன்புலால் யாக்கை
நிலையெ னுமருண் டுயிரினும் நெடிதுறச் சிறந்தே
தலைமை சேர்தரு சத்தியம் பிறழ்வது தரியேம்
கலை யுணர்ந்தநீ எமக்கிது கழறுவது அழகோ? (2)

இம்மை அம்மைவீ டெனமறை புலங்கொள இயம்பும்
மும்மை யுந்தரு முறையுடைத் தெனுநிலை முரணி
எம்மை யாழ்வயிற் றடக்கிமீட் டுமிழ்கலா எரிவாய்
வெம்மை கூர்நர குய்க்கினும் மெய்மையை விடேமால். (3)

பதி இழந்தனம்; பாலனை இழந்தனம்; படைத்த
நிதி இழந்தனம்; இனிநமக் குளதென நினைக்கும்
கதி இழக்கினும், கட்டுரை இழக்கிலேம் என்றான்;
மதி இழந்துதன் வாயிழந் தருந்தவன் மறைந்தான். (4)

(அரிச்சந்திர புராணம், மயானகாண்டம்)

பொய்யாத அந்த அதிபதி மொழிந்துள்ள இப்பொருளுரைகளை ஒவ்வொருவரும் உள்ளங்கொண்டு உணரவேண்டும்.

இங்ஙனம் சத்தியம் காத்த இவ்வுத்தமன் எதிரே முத்தேவரும் தோன்றி அருள் புரிந்து சென்றார். இழந்தன யாவும் பெற்று அயோத்தியை அடைந்து அரசன் இன்புற்றிருந்தான். இவன் புகழ் உலகை முழுவதும் பரவியுள்ளது. இவனுடைய சரிதம் நாடகமாகவும் எங்கும் நடிக்கப்படுகின்றது. சத்தியவாக்கி என எல்லாரும் இவனை ஏத்திப் போற்றி வருகின்றார்.

உள்ளத்தால் பொய்யா தொழுகின் உலகத்தார்
உள்ளத்துள் எல்லாம் உளன். (குறள்)

என்னும் நம் பொய்யா மொழியின் பொருள் ஒளியை வையம் எங்கும் காண இம் மெய்யன் விளக்கியுள்ளான்.

ஒரு பொய் கூற நாணி யாவும் துறந்த இப்புனிதன் நிலைமையைத் தினையளவு உணர்ந்தாலும் மெய்யே பேசி வையம் உய்யுமே! ஐயோ! அந்தப் பலனைக் காணுமே! "அன்னான் கருத்து காணார் கொல்?" என்றது கண்டால் திருந்தியிருப்பரே என்று வருந்தியபடி. மன்னனை நோக்கி மன்னுயிர் திருந்தவில்லையே!

"நாணமல் கோடி பொய்யை நாவளைத்துக் கூறுகின்றார்" என்றது பொய்யுள் ஓடிப் புலையாடி நிற்கும் மக்களுடைய பழி கேடான பாழ் நிலையை விளக்கி நின்றது. யாண்டும் பொய்யாமல் நின்று புகழும் புண்ணியமும் அடைந்தபுனிதனை நினைந்து மனித சமூகம் உய்ய வேண்டும் என்பது கருத்து.

---

140. நெஞ்சம் வெறுத்துன்னை நேரிகழ நீணிலமும்
பஞ்சையென எள்ளிப் பழித்தகல—வஞ்சமுடன்
பொய்பேசி ஏனோ புலையாடிப் போகின்றாய்
மெய்பேசி வாழ்க விரைந்து. (ம)

இ-ள்.

உன் நெஞ்சமே உன்னை உள்ளே வெறுத்து இகழ, உலகம் பழிக்க நீ ஏன் பொய் பேசிப் புலைப்படுகின்றாய்? மெய்பேசி மேன்மை யடைக என்றவாறு.

தன் உள்ளம் தெரியாத கள்ளம் இல்லை; ஒளி மறைவாய் மனிதன் வெளியே பொய் பேசுங்கால் அவன் மனம் அகத்தே

வருந்தி இகழ்கின்றது; புறத்தே உலகத்தாரும் பொய்யன் எனப் பழித்து வெறுக்கின்றார். ஆகவே அகமும் புறமும் இளிக்கப் படுகின்றான். பஞ்சை=எளியன், ஈனன்.

"பொய் பேசி ஏனோ புலையாடிப் போகின்றாய்!"

என்றது ஒரு பொய்யால் பலவகையான கேடுகள் விளைகின்றனவே! அதனை உணராமல் ஒழிகின்றாயே! என்றவாறு.

முதலில் தன்மனம் அசுத்தமாய் மலினமடைகின்றது; அறிவு நலம் குன்றுகின்றது; ஆன்ம ஒளி மழுங்குகின்றது; குடும்பமும் தன்னைப் பின்பற்றி இழிகின்றது; பழியும் பாவமும் விளைகின்றன; இங்ஙனம் எல்லா ஈனங்களுக்கும் பொய் ஏதுவாகின்றமையால் அப்பாதகத்தை ஒழித்துவிட வேண்டும் என்றபடி.

"வாய்மை தவறின் வழிதவறும் வண்புலத்தின்
ஆய்மை அழியும் அருளகலும்—நோய்மையெலாம்
வந்துபுகும் நின்ற வளம்தொலையும் மானிடங்காள்!
சிந்திமினோ அந்தோபொய் தீது."

இதனை ஈண்டுச் சிந்தனை செய்து கொள்க. பொய்யினால் நேரும் தீமைகளை உணர்ந்து அதனை யாண்டும் தீண்டாது ஒதுக்கி மெய்யே பேசி உய்க என்பதாம்.

பொய்யின் நீங்குமின் பொய்யின்மை பூண்டுகொண்டு
ஐய மின்றி அறநெறி ஆற்றுமின்
வைகல் வேதனை வந்துறல் ஒன்றின்றிக்
கவ்வை யில்லுல கெய்துதல் கண்டதே. (வளையாபதி)

---

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

பொய்யால் உள்ளம் கெடுகின்றது.
உயர்வு ஒழிகின்றது.
தெய்வ தண்டனை நேர்கின்றது.
வறுமை சேர்கின்றது.
பொய்யனை யாரும் நம்பார்.
பொய் மிகவும் நீசமானது.
அதனைப் பேசுகின்றவன் நாசமாகின்றான்.
நரகில் வீழ்கின்றான்.
பொய் பேசாதவன் தெய்வம் ஆகின்றான்.
மெய்யே பேசி மேன்மை பெறுக.

கச-வது பொய் முற்றிற்று.

# பதினைந்தாம் அதிகாரம்

## குறளை.

அஃதாவது பிறரைக் குறித்து மறைவாக இகழ்ந்து கூறுதல். இப்பழிமொழி இழிந்த புன்மக்கள் வாயில் விளைவது என்னும் உளவறியக் குறளை என வந்தது. குறள் = குறுகியது : உள்ளம் குறுகிய புல்லர் நாவின் பொல்லாச் சொற்கள் என்றவாறு. பொய்யைப்போல் வெறுத்து ஒதுக்கத்தக்கது ஆகலான் அதன் பின் இது வைக்கப்பட்டது.

141. இல்லென் றிரத்தல் இழிவாம் இரந்தவர்பால்
இல்லென் றுரைத்தல் இழிவிழிவாம்—கொல்வோர்கை
வாளோ கொடிதிந்த வையகத்தில் புல்லியர்வாய்க்
கோளே மிகவும் கொடிது. (க).

இ-ள்.

இல்லை என்று சொல்லிப் பிறரிடம்போய் ஒரு பொருளை இரந்து நிற்றல் இளிவு; அங்ஙனம் இரந்து வந்தவர்க்கு இரங்கி உதவாமல் ஒழிவது அதனினும் இளிவாம்; கொலைஞர் கையிலிருக்கும் வாள் கொடியது; அவ்வாளினும் புல்லர்வாய்க்கோளே மிகவும் தீயதாம் என்றவாறு.

இது, கோளின் கொடுமை கூறுகின்றது.

முயன்று வாழாமல் பிறரிடம் போய் இரந்து நின்றால்மானம் கெடும் ஆதலால் அந்த ஈன நிலை இழிவு என வந்தது. வறுமைத் துயரால் மறுகி வந்தவர்க்கு உள்ளம் உருகி அருளாமல் இல்லை என்று சொல்வது பொல்லாத ஈனமாம். இழிவு இழிவு என்ற மொழி அடுக்கு அருவருப்பில் நிகழ்ந்தது.

இரந்து திரிபவரினும் கரந்தும் நிற்கும் ஈயா உலோபிகள் இழிந்தவர் என்றது மானம் மரியாதைகளை உணராத ஈனமுடைமை கருதி. இரத்தலும் கரத்தலும் ஈனச் செயல்கள் ஆதலால் இங்கே ஈனச் சொற்களால் இழித்துக் கூற நேர்ந்தன.

கொல்வோர் கை என்றது கொலையில் மூண்டு நிற்கும் அந் நிலைமை தெரிய. கொலைஞன் கையில் வாளோடு கண்ணெதிரே வருதலால் அவனை எதிர்த்துத் தப்பலாம்; அல்லது ஒதுங்கி விலகலாம். கோளில் அவ்வாறு மீள முடியாது.

கோளர் கண்ணுக்குத் தெரியாமல் மறைவாய் நின்று கோளை மூட்டிக் குடிகேடு செய்துவிடுதலால் கொலைவாளினும் புலையானகோள் கொடிதாயது. வாள் ஆளை மாத்திரம் கொல்லும்; கோள் குடியை அடியோடு கல்லும். வாளைக் காட்டிலும் கோள் மிகவும் அஞ்சத்தக்கது. புல்லியர்=அற்பர். புன்மை பழுத்த அவர்தம் புலை நிலையை உணர்த்தி நின்றது.

கொலைபாதகனினும் கோளன் கொடும்பாதகன்; அவன் நிலைமை தெரிந்து நீங்குக; அவனை நெருங்கவிடின் பெருங்கேடாம்.

யாரிடமும் இரவாதே; எவருக்கும் இல்லை என்று சொல்லாதே; கொடுமை செய்யாதே; கோள் கூறாதே என்பது குறிப்பு. வாளினும் கோள் கொடியது என்பது இதனால் கூறப்பட்டது.

---

142. தேளும் கொடும்பாம்பும் தீண்டிமிதித் தாலன்றி
வாளாமெய் தீண்டி வருத்தாவே—கோளார்ந்த
புல்லியரோ வீணே புனிதர்க்கும் பொய்ப்பழிமேல்
சொல்லி விளைப்பார் துயர். (௨)

இ-ள்.

தம்மைத் தொட்டு மிதித்தவர்களை அன்றித் தேளும் பாம்பும் யாரையும் வீணாகக் கொட்டி வருத்தா; கோள் நிறைந்த புல்லரோ, அல்லல் யாதும் புரியாத நல்லவர்க்கும் அடாப்பழி கூறி அழிதுயர் செய்வர் என்றவாறு.

இது, கோளர் தேளினும் பாம்பினும் தீயர் என்கிறது.

தீண்டுதலைத் தேளுக்கும், மிதித்தலைப் பாம்புக்கும் நிரலே ஒட்டுக. கொடுமை இரண்டுக்கும் பொது.

தேளைத் தொட்டால், அது கொட்டும்; பாம்பை மிதித்தால் கடிக்கும். சும்மா இருந்தால் அவை யாதொரு தீங்கும் செய்யா.

வாளா=வீணாக. வருத்தாவே என்பதில் ஏகாரம் தெளிவு காட்டி அந்த எளிய பிராணிகளின் இயல் புணர்த்தி நின்றது.

தேளையும் பாம்பையும் கண்டபொழுது கொடியன என்று கருதி மனிதர் அவற்றைக் கொல்ல நேர்கின்றனர். உண்மையில் அவை கொடியன அல்ல; தமக்கு இடர் இழைத்தவர்க்கே துயர் இழைக்கும். அதுவும் குறிக்கோளுடன் புரியா; படைப்பில்

தமக்கு இயல்பாக அமைந்துள்ள விட உறுப்பால் இடர் உறுகின்றது. நம் மீது ஏறிய ஈ எறும்புகளை நாம் கையால் துடைப்பது போல் அவை வாலாலும் வாயாலும் தட்டுகின்றன. அந்தப் பாது காப்பில் சிறிது ஏதம் நிகழ்கின்றது. இது கொடுமை ஆமோ? நீதியோடு நினைந்து சிந்திக்கவும்.

இதைக் காட்டிலும் கொடிய பிராணிகள் மனித உருவில் மருவியிருக்கின்றன. தமக்கு யாதொரு தீங்கும் எண்ணுமல் அமைதியாளராய் அடங்கியிருக்கும் நல்லவர்க்கும் பொல்லாதன சூழ்ந்து இல்லாதன எல்லாம் ஏற்றிச் சொல்லி அல்லல் பல விளைத்துப் புல்லர்கள் பொங்கி நிற்கின்றனர். தொட்டால் கொட்டும் பாம்பினும் தொடாமலே உயிர்க் கேடு செய்யும் தீம்பர் எவ்வளவு கெட்டவர்?

தேளினும் பாம்பினும் மிகவும் கொடியரான அப்பொல்லாக் கோளரை உலகம் கொல்லாது விட்டிருப்பது அறிவும் ஆற்றலும் இல்லாமையாலேயாம். ஆயினும், தரும வுருவனை ஆண்டவன் சந்நிதியில் நாளும் கொல்லப்பட்டு மீளா நரகிற்கே கோளர் ஆளாய்ச் செல்கின்றார். செலவு நிலை தெரியாமல் திமிர்ந்து திரிகின்றார்.

அநியாயமாய் இங்ஙனம் அழிநிலைக்குச் செல்கின்ற கோளர் வாய்ச் சொல்லைக் கேளாதிருப்பின் பேரிழவு நேராதபடி ஓரளவு அவர்க்கு உதவி செய்தபடியாம்.

கோளனை ஒரு ஆளாக நினையாதே; இரண்டுகால்களையுடைய தாய் நீண்டு திரிந்து பேசத் தெரிந்த கொடிய ஓர் நீசப் பாம்பாகவே நினைந்து நீங்குக என்பது கருத்து.

---

143. கொடியவிடப் பாம்பினுமே கோளன் கொடியன்
கொடியஅது தீண்டினரைக் கொல்லும்—கொடியஇவன்
வாயொருவன் காதோரம் வைக்குமுன்னே ஐயகோ
மாயுமே மற்றை யவன். (ஙு)

இ-ள்.

கோளன் கொடியவிடப் பாம்பினும் கொடியன்; தன்னைத் தீண்டினவரை மட்டும் அது கொல்லும்; இவன் ஒருவன் காதில் வாய் வைக்க வேறு ஒருவன் இறந்து படுகின்றான் என்றவாறு.

பாம்பு தேள்களினும் கோளன் கொடியவன் என முன்னம் கண்டோம்; அக்கொடுமையின் நிலைமையையும் காரணத்தையும் இதில் காண்கின்றோம்.

கொடிய விடப் பாம்பு என்றது குக்குடசர்ப்பம், கருநாகம் விருசம் முதலிய கொடிய பாம்புகளை. தீண்டிய வுடனே மாண்டு படும்படியான நஞ்சுடைமையை அடைமொழி குறித்து நின்றது.

கொடியவிடம், கோளுக்கும், பாம்பு, கோளனுக்கும் ஒப்பாம். பாம்பு எவனைக் கடித்ததோ, அவனை மாத்திரம் கொல்லும்; கோளன் மறைவாக ஒருவனிடம் உரையாடி மற்றவரை மாய்த்து விடுகிறான். கோட் சொல்லி ஆட் கொல்லி யாதலை அறிந்துகொள்க.

கோளன் என்னும் பேர் தீச் சொல்லை எங்கும் கொண்டு செல்பவன்; தன் குறிப்பைப் பிறர் உள்ளங்கொள்ளக் கொளுவிச் சொல்பவன் என்னும் ஏதுவான் வந்தது. கோள் என்னும் சொல் பகை தீமை கொலை முதலியவற்றைக் குறித்துவரும். கொடிய இவன் என்றது கோளனை. சுட்டு அதிகாரத்தான் வந்தது. தீய வாய் ஒரு செவி அருகு போக அரிய உயிர்கள் பல மாயலாயின.

"ஒருவன் காது ஓரம் இவன் வாய்வைக்கு முன்னே மற்றை யவன் மாயுமே!" என்றமையால் கோளின் கொலைத்தீமை புலனும். நிலைமையை நினைந்து நோக்குக. ஐயகோ! என்றது வெய்ய கொலையின் திகிலால் விளைந்தது. ஏகாரம் இரண்டனுள் முன்னது விரைவையும், பின்னது பரிதாபத்தையும் விளக்கி நின்றது. விழி யறியாமல் வெங்கொலைகள் விளைதலை நினைந்து இரங்கியது.

பழிமொழிகளை வழியாகத் தொடுத்துச் சொல்லிக் கேட்டவன் உள்ளம் உடனே கொலையில் மூளும்படி கோள் மூட்டி விடுகின்றான்; விடவே குறித்தவன் மாண்டு மடிகின்றான்.

அரசன் காதில் பொற்கொல்லன் கோள்மூட்டக் கோவலன் மாண்டதையும், அதனால் நேர்ந்த பல கொலைகளையும் ஈண்டு எண்ணிக் கொள்க.

தான் கிட்ட நெருங்காமலும், தன் கையால் ஒன்றும் செய் யாமலும் அயலே மறைந்து நின்று சொல்லாலேயே எல்லாக்

கொலைகளையும் செய்து விடுதலால் பல்லால் கொல்லும் அரவி னும் குறளன் பொல்லாக் கொடியனுயினன்.

கடுங்காளத்தினும் கோளன் கொடுந்தீயன்; அக்கொடிய படு பாவியை அருகே அணுகவிடாதே என்பது குறிப்பு.

---

144. வில்லுக்கும் வாளுக்கும் வெய்யவடிவேலுக்கும்
கல்லுக்கும் தப்பிக் கடந்திடலாம்—பொல்லாத
கோளன்வாய்ச் சொல்லின் கொடுமைக்குத் தப்பியிறை
மீள முடியுமோ மேல். (௪)

இ-ள்.

வில் வாள் வேல் கல் முதலிய கொலைக் கருவிகளுக்கு எளிதே தப்பி உய்யலாம்; பொல்லாத கோளுக்குத் தப்பி உய்தல் அரிது என்பதாம்.

வில்லை முதலில் குறித்தது தொலைவிலுள்ளவர்களையும் விரை வில் எய்து கொல்ல வல்ல அதன் வேகநிலை கருதி.

வெய்ய என்னும் அடையை மற்ற மூன்றுக்கும் கூட்டுக. வடி=கூர்மை. கடத்தல்=அபாயத்தினின்று நீங்குதல்.

பொல்லாத கோளன் என்றது கொலை பாதகங்களை நிலையாக விளைத்து வரும் கொடுமை நோக்கி. பாம்பின் பல்லில் உள்ளது போல் அவனுடைய சொல்லில் நஞ்சுள்ளமையால் அவ்வாய்ச் சொல் தீச் சொல்லாயது.

வேல் வாள் முதலிய படைக்கலங்கள் வெளிப்படையாகக் கண் எதிரே வருவன ஆதலால், ஆவன ஆற்றி அவற்றின் கேடு களுக்கு விலகிப் பிழைக்கலாம். கோள் யாரும் அறியாமல் ஊழ் வினை போல் உள்ளே உருத்து வருதலால் அதனை எதிரறிந்து விலக்குவது மிகவும் அரிதாம்.

மேல் மீள முடியுமோ? என்றது கோளின் தீமையிலிருந்து தப்பி யாதும் வாழ முடியாது என்றவாறு. இறை=சிறிது, கொஞ்சம். எதிரறிந்து பாதுகாக்கமுடியாமையால் கோள் எவ்வழி யும் குடிகேடு செய்தே விடும். இறை என்னும் குறிப்பால் பெருவலியுடைய அரசனும் கோள் வலியைக் கடந்து மீள முடியாது என்பது புலனும்.

பெரிய போர் வீரனை இராமனும் கூனியின் கோளால் முடி துறந்து படாத பாடுகள் பட்டுப் பதைத்து உழந்தான்.

நெடிய மகுட மன்னரும் கொடிய கோளனால் குடி கெடுவர் என்றமையால் படுபாதகமான அவனது பழி நிலைமை தெளிவாம்.

---

145. காற்றோடு சேர்ந்த கடுநெருப்பி னும்கொடிதாய்
வீற்றோடு வெய்து விரைந்துமே—மாற்றான
கோளன்சொல் மூண்டு குடிகெடுத்துப் பல்லுயிர்கள்
மாளப் புரியுமே மற்று. (ரு)

இ-ள்.

கோளனுடைய சொல் காற்றோடு சேர்ந்த நெருப்பினும் கொடிதாய் எங்கும் விரைந்து பரந்து வெந்துயர் விளைக்கும் என்றவாறு. இது, கோளின் கொடு வேகம் கூறுகின்றது.

கடுநெருப்பு என்றது அதன் அடுநிலை கருதி.

வீற்றோடு விரைதல், யாதும் எதிரே தடுத்து ஆற்ற முடியாத படி பாய்தல். வீறு=வலி. மாறு=பகை, தீமை.

கடுங் காற்றுடன் கலந்த சுடு தீயைக் கோளன் வாய்ச் சொல் லுக்கு ஒப்பு உரைத்தது, அது கடுமையாய்ப் பாவி அடுதுயர் புரியும் கொடுமை நோக்கி.

குடி கெடுத்துப் பல் உயிர்கள் மாளப் புரியுமே!
என்றது மூண்ட தியால் பல உயிர்கள் மாண்டுபடுதல் போல் மூட்டிய கோளால் குடிகள் பல அழிந்து போம் என்றவாறு அழிவில் நேர்ந்த கழி விரக்கத்தை ஏகாரம் உணர்த்தி நின்றது.

கோளனுடைய ஒரு சொல்லால் பலகுடிகள் கெடும் ஆதலால் அது நெருப்பினும் கொடிது என நேர்ந்தது.

பற்றிய தீயை நீரால் அவித்து விடலாம்; எரிந்து கரிந்த வீட்டைத் திரும்பவும் சிறந்ததாகப் புதுக்கிக் கொள்ளலாம். கோளால் விளைந்த குடிகேட்டை மீளப் பெறுதல் மிகவும் அரிதாம்.

கோளன் வாய்ச் சொல் ஊழித்தீ என உயிர்க்கேடு புரியும்; அத் தீயனை எவ்வகையினும் அணுகாதே என்பதாம். கோளர் தீயினும் கொடியர் என்பது குறிப்பு.

---

146. கொடும்பாம்பின் பல்லினுமே கோளன்வாய்ச் சொல்லில்
கடுங்காளம் மிக்கிருக்கும் கண்டாய்—நெடுந்தூரம்
கண்ட பொழுதே கடிதகல்க கையணுகின்
மண்டும் துயரம் மதி. (சு)

இ. ள்.

கொடிய பாம்பின் பல்லினும் கோளன் வாய்ச்சொல் நஞ்சு மிக வுடையது; அவனை அஞ்சி அகல்க; அருகு நெருங்கின் அழி துயர் பெருகும் என்றவாறு.

இது, கோளனைக் கொடிய காளமாகக் கருதுக என்கின்றது. பல்லினும் என்றதில் இன் உருபு எல்லைப் பொருளது.

பல்லில் உள்ள விடம் கடிவாயில் புகுந்து கொல்லும்; அந்தச் சொல்விடம் ஒருமூலமும் தெரியாமலே நிருமூலம் ஆக்கி விடும்.

காளம்=நஞ்சு. கருநிறம் உடைமையால் காளம் எனவந்தது. கடும் காளம் என்றது ஒரு நொடியிலே பல குடிகளை அடியோடு கெடுக்கும் அதன் கொடுநிலை கருதி.

கோளன் சொல் கொடுந்தீமையுடையது; அவனை ஒரு கொடிய பாம்பாகவே கருதி ஒதுங்குக.

நெடுந்தூரம் கண்ட பொழுதே கடிது அகல்க என்றது, அவன் கண்ணில் படாமல் விரைந்து நீங்குக என்றவாறு. கடிது=விரைவாக. கடிது நீங்கா வழி, கொடிய தீங்கு நெடிது ஓங்கும்.

கோளனை நெருங்கவிடின், அவன் வாய்திறந்து ஏதாவது ஒரு கோளை இதமாகப்புனைந்து சொல்லுவன்; அச்சொல்லைக் கேட்டால் உள்ளம் கெடும்; கெடவே, பழியும் பாவமும் விளையும் ஆதலால் அப் படுபாதகனுடைய வாய் மொழி யாதும் காதில் படாதபடி பாதுகாத்துக் கொள்ள வேண்டும் என்க.

கை அணுகின் துயரம் மண்டும் என்றது, அவன் தீமையைக் கண்டு தெளிய வந்தது. கோளன் சொல்லை எவ்வழியும் யாண்டும் செவி புகாமல் செவ்விதாகப் பேணிக் கொள்க.

---

147. கண்டுநேர் பேசிநின்று காணாமல் வேறொன்று
கொண்டு புகன்று குடிகேடு—மண்டவே
பண்ணுகின்ற தீயரையிப் பாரும் கொடுஞ்சுமையா
எண்ணி யிருக்கும் இனைந்து. (எ)

இ. ள்.

கண் எதிரே கண்ட பொழுது இனியராய்ப் பேசி நின்று காணாத இடத்தில் கோள் உரைத்துக் குடிகேடு செய்யும் தீயரைப் பூமி தேவியும் பொறுத்திருக்க வருந்துவள் என்றவாறு.

இது, கடுங்கோளன் கொடும்பாரம் என்கின்றது.

வேறுஒன்று—நேரே பேசியதற்கு மாறான பழிமொழிகளை. ஒருவன் முகத்தின் முன்னே நண்புடையவர் போல் நடித்து அன்புரைகள் ஆடிப் புறத்தே போய் அவனை இளித்துக்கூறும் ஈன மக்களைத் தியர் என்றது, அவர்தம் தீமை நிலை கருதி.

கோள் உரையால் பலகேடுகள் விளைகின்றமையால் கோளன் கொடிய பாவி ஆகின்றான்; ஆகவே, அப் பாவியைப் புண்ணியவதியாகிய பூமிதேவி பொறுக்க மாட்டாமல் தவிக்கலாயினாள்.

மலை கடல் முதலிய அரிய பெரிய சுமைகள் பலவும் பொறுக்கின்ற நிலமகள் கோளனை ஒரு கொடிய பாரமாகக் கருதியது, அவனது நெடிய தீமையை நினைந்து.

பார்—பூமி. உம்மை அதன் பொறுமையும் திண்மையும் உரிமையும் உணர்த்தி நின்றது. இனைந்து—வருந்தி.

பொறுமையில் சிறந்த பூமாதேவியே கோளனை வெறுத்து இகழும் என்றமையால் அவனுடைய பழி பாவங்களின் கனம் அறியலாகும். இந்தப் படுபாவி எப்பொழுது தொலைவான் என வையம் வைதிருக்கும் என்பதாம்.

---

148. வாள்வாய்க்குத் தப்பியுயிர் வாழ்ந்தாலும் வஞ்சன்வெங்
கோள்வாய்க்குத் தப்பியுய்தல் கூடாதே—தேள்வாயில்
கொட்டியது போலக் கொடுமொழியே கூறுமந்தப்
பட்டிகளைக் காணல் பழி. (அ)

இ-ள்.

கொலை வாளினும் கோளர் கொடிய புலைவாயர்; தேள் வாயில் கொட்டியது போல் காதில் கோள் உரைத்துக் குடி கெடுக்கின்ற அந்த ஈன மக்களைக் காணலாகாது என்றவாறு.

இது, கோளின் கொலைக்குறி கூறுகின்றது.

கண் எதிரே வீசும் வாளும், காணாமல் பேசும் கோளும் இங்கே காட்சிக்கு வந்துள்ளன. முன்னதினும் பின்னது, கொடியது; குறி தவறாமல் கொலைக் கேடு செய்வது.

தப்பி உய்தல்—ஆபத்தைக் கடந்து வாழ்தல்.

கூடாதே—முடியாதே. ஏகாரம் தெளிவும் இரக்கமும் தழுவி நின்றது. அப் பழிமகனது அழிவின் வேகம் அறிவித்த படியிது.

நெஞ்சம் கரவாய் நேரே இனிது பேசி மறைவாகப் போய்ப் புறங்கூறும் வஞ்சமகன் மிகவும் அஞ்சத்தக்கவன்; நஞ்சனைய அவனது வெஞ்செயல் தெளிய வஞ்சன் வெங்கோள் என வந்தது.

மெல்லிய வாயில் கொள்ளித்தேள் கொட்டியது போல் நல்ல செவிகளில் நவைச் சொல் உகுத்துப் பொல்லாத கோளர் புலைக் கேடு செய்வர். வாயைக் குறித்துக் காட்டியது பேசுகின்ற அதன் பெருமையும் இனிமையும் கருதி உரைநிலையின் உயர் நலம் உணர வந்தது. நீசக்கோள் பட்ட செவி நாசப்படும் என்க.

பட்டிகள் = கள்ளத்தனமாய் நடிக்கும் கபடிகள்.

கோளனுக்கு நெஞ்சில் நேர்மை ஆண்மை முதலிய மேன்மைக் குணங்கள் யாதும் இராது; கீழ்மையான பேடித்தனமே பெருகி யிருக்கும்; அந்த ஈனமகனை அணுகவிடின் ஏதாவது ஒரு பழி மொழியைக்கூறி உள்ளத்தையும் உயிரையும் பாழ்படுத்தி விடுவன் ஆதலால் அப்பழிகாரனை எவ்வழியும் பாராதே என எச்சரிக்க நேர்ந்தது.

பட்டிகளைக் காணல் பழி

என்றதனல் அவரை ஒட்டின் உளவாம் இழவுகள் உணரலாகும். கண்ணுக்கு எட்டினல் காதில் சொல் விடத்தைக் கொட்டிக் கடுங் கேடு விளைப்பர்; காணுமல் நெடுந் தூரத்தே ஒதுங்கி உய்க. வஞ்சக் கோளர் நஞ்சினும் தீயர்; அஞ்சி நீங்குக என்பது கருத்து.

---

149. நாக்கில் சுணையின்றி நாளும் துயர்கூரப்
போக்குரையே கூறிப் புலையாடும்—தீக்கோளர்
கண்டபயன் ஒன்றுமின்றே காண்பவெலாம் நிந்தைபழி
கொண்டவிதம் என்னே கொடிது. (கூ)

இ-ள்.

தீய கோளர் பிறரைக் குறித்து நாளும் பழிமொழி கூறி வீணே புலையாடுகின்ருர்; அதனல் ஒரு நலமும் கண்டிலர்; பழியும் நிந்தையுமே எவ்வழியும் அடைகின்ருர் என்றவாறு.

இது, கோளின் கொடு விளைவு கூறுகின்றது.

நாக்கில் சுணை இன்றி என்றது ஈனமான பழிமொழிகளைப் பேசுகின்ற அதன் இழிநிலை கருதி. சுணை = உணர்ச்சி, சுரணை.

இனியன கூறுதற்குரிய புனித நாவை ஈனமொழியால் பாழ் படுத்தி மான அவமானங்களைக் கருதாமல் ஊனமாயுழல்கின்றமை யால் கோளன் சுணை கெட்டவன் எனச் சுட்ட நேர்ந்தான்.

துயர்கூர = துன்பம் பெருக. கோள் உரையால் உயிரினங்களுக்குத் துயர்கள் மிகும் ஆதலால் அந்த இயல்பு தெரிய வந்தது.

போக்கு = குற்றம். பிறர்மேல் குறைகளையும் குற்றங்களையும் கூர்ந்து குறித்துக் கொடும் பழியாளனாய்க் குறளன் இழிந்து படுகின்றான். இங்ஙனம் பழி பாவங்களை அடைந்தும் அந்த அழி நிலையை உணராமல் இழி நிலையிலே களித்து ஈனம் அடைகின்றானே! என்று இரங்கிய படியிது.

காண்ப எலாம் நிந்தை பழி என்றது கோளனுக்கு உண்டாகின்ற கொடிய துயரநிலைகளைக் குறித்துக் காட்டியவாறு.

பிறரை மறைவாக நிந்தித்து வருபவனை எல்லோரும் எதிரே சினந்து இகழ்ந்து வைவர் ஆதலால் நிந்தையும் பழியும் அவனுக்குச் சொந்தமாயின.

எல்லாரும் இயல்பாக வெறுக்கின்றபழிகேடுகளை அடைந்தும் தனது கோளாடலை ஒழியாமல் எங்கும் கொண்டாடி வருகின்ற அவனது மதிகேட்டை நினைந்து மறுகி நின்றமையால், "கொண்ட விதம் என்னோ?" என வியந்து வினவ நேர்ந்தது.

கோளன் வாழ்வு பாழான நிலையில் பழி பட்டுள்ளது.

---

150. பொய்யோடு கூடப் புலையும் கொலையுமே
வெய்ய புறங்கூற்றில் மேவியுள — ஐயகோ
அத்தீமை யாளர் அடுநரகுக் காளாகிச்
செத்தேறு கின்றார் செறிந்து. (ய)

இ. ள்.

பொய்யும் புலையும் கொலையும் புறங்கூற்றில் பொருந்தியுள்ளன ஆதலால் கோளனுடைய அத்தீமையாளர் கொடிய நரகிற்கே ஆளாகி அழிந்து படுகின்றார் என்றவாறு.

கோளில் நிறைந்துள்ள கொடும் பாதகங்களைக் குறித்த படியிது. புறங்கூற்று = ஒருவனைக்குறித்து மறைவாகப் புறத்தே பழித்துச்சொல்லுவது. வெய்ய என்றது அக் கூற்றின் கொடுமையைவிளக்கி நின்றது.

இல்லாத பழிகளை யெல்லாம் ஏற்றிச் சொல்லுதலால் பொய் முதலிய பொல்லாமைகள் பல அதில் புல்லி நின்றன.

கொலை முதலிய தீமைகள் பலவற்றையும் கோள் விளைத்து விடுதலால் கோளன் கொடிய பாதகன் ஆகின்றான்; ஆகவே அடு நரகிற்கே ஆளாய் அவன் அடியோடு அழிகின்றான் என்க.

பாவம் செய்த உயிர்களை யாதனா சரீரத்தில் வைத்துப் பதைக்கப் பதைக்க வதைக்கின்ற இடத்திற்கு நரகம் என்று பேர். அடு என்றது அதன் கொடிய துன்ப நிலை தெரிய வந்தது.

"வெம்மை யோடு பிறர் தம்பழி விளம்பி யுழலும்
செம்மை யில்லவர்கள் தீயுமிழும் வாயில், அயலார்
தம்மில் வாழ்பவரை நோக்கினர் தடங்கண் மிசையும்,
அம்மலோ! என இருப்பு முளை கொண்டறைதியால், (1)

மின்னும் நக்க கதிர் வேல்விகடபத்திரமிகப்
புன்மை இல்லவர் தமைப்பழி புகன்ற இவரைத்
துன்னு முளைதசை சோரி நிறை பாழ்நரகின்வாய்ச்
சென்னி கீழுற மடுத்தனல் செறித்திடுதியால்."

(காசிகாண்டம்)

இங்கே கோட் சொல்லித் திரிந்தவர் நரகத்தில் எமபடர்களால் படும் துயர நிலைகளை இவற்றால் அறியலாகும்.

சேர்த்து ஏறுகின்றார் செறிந்து என்றது இறந்துபட்ட பின் அவர் விரைந்து போகின்ற இட நிலையை உணர்த்தி நின்றது.

கோளால் இம்மையில் பழியும், மறுமையில் நரகத்துன்பமே யாம்; அந்தப் பாழான சொல்லை மனிதன் யாண்டும் பழகாமலும் கேளாமலும் இருக்க வேண்டும் என்பது கருத்து.

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

கோள் கூறல் கொடிய பாவம்.
கோளன் தேளினும் பாம்பினும் தீயவன்.
அவன் சொல்லால் பொல்லாத கொலைகள் விளையும்.
கோள் வாளினும் கொடியது.
நெருப்பினும் தீயது.
காளகூட விடம் போன்றது.
கோளனைப் பூமியும் பொறுக்க வருந்துவள்.
அப் பாழ்மகனைப் பார்க்கலாகாது.
பழி நிந்தைகளால் அவன் உழல்கின்றான்.
அழி நரகில் ஆழ்கின்றான்.

கஉ-வது குறளை முற்றிற்று.

# பதினாறாம் அதிகாரம்

## கொடுஞ்சொல்.

அஃதாவது கொடிய சொற்களைக் கூசாது பேசுதல். காணாத இடத்தில் மறைவாகப் பிறர்மேல் குறைகளைக் கொழித்துக்கூறும் குறளைபோலக் கண் எதிரே இழித்துக்கூறும் இதனையும் ஒழித்து ஒழுகவேண்டும் என உணர்த்துகின்றமையால் அதன் பின் இது வைக்கப்பட்டது. வைப்பு முறையை உய்த்து உணர்க.

151 இன்சொல் இயம்ப இனியவாய் எய்தியுள்ளாய்
✓ வன்சொல் வழங்கி மகிழ்கின்றாய்—உன்சொல்
இழைத்து வருகின்ற ஈனமெல்லாம் உன்னை
அழைத்து வருமே அவம். (க)

இ. ள்.

இனியன கூற எய்தியுள்ள புனிதவாயால் கொடியன பேசி நெடிது மகிழ்கின்றாய்; உன் சொல் விளைந்து வருகின்ற பழிகளெல்லாம் உன்னை அழி நிலைக்கே அழைத்துச் செல்லுகின்றன என்றவாறு.

இது, கொடுமொழியால் வரும் படுகேடு கூறுகின்றது.

அன்பும் அறனும் அமைந்து பண்பும் பயனும் படிந்த இதமொழியே இன்சொல். இச்சொல்லுடையான் புண்ணிய சீலனாய்ப் பொலிந்து யாண்டும் நல்லவன் ஆகின்றான்.

வன்சொல் என்றது கேட்பவர்க்கு வெறுப்பையும் துன்பத்தையும் விளைக்கின்ற கொடுஞ்சொற்களை. பிறர் வருந்தும்படி ஈனவார்த்தைகளைப் பேசுகின்றவன் பாவியாய் இழிகின்றான்.

இனிய வாய் என்றது மனிதனை மகிமைப்படுத்தியுள்ள அதன் தனி நலம் காண. இனிய சுவை தெரிந்து நல்ல உணவுகளை உள்ளே உண்டு உடலை வளர்த்தல்போல் அரிய உணர்வுகளை இதமாக வெளியேபேசி வாய் உயிரை வளர்க்கின்றது. உட்கொள்ளுகின்ற உணவு பழுதாயின், உடல்கெடும்; வெளிவருகின்ற உரைவழுவாயின் உயிர்பழுதாம்.

உணவை நாளும் சுவைகண்டு உண்டல்போல் உரையை யாண்டும் இனிமையாகப் பேச வேண்டும் என்க.

இன்புறப் பேசத்தக்க இனிய வாயால் பிறர் துன்புறும் படி பேசலாகாது; பேசின், அத்துன்பங்களெல்லாம் பேசினவனையே வந்து பற்றி நீசப்படுத்தும்.

"உன்னை அழைத்து வருமே அவம்"

என உணர்த்தியது பேச்சில் பிழை இழையாமல் பிழைக்க வேண்டி. ஈனம்=இழிவு, துயர். அவம்=கேடு. தீயன பேசுகின்ற வாயன் தீயனுய்க் கொடிய நோயினுள்ளே போய் மாய்கின்றான்.

கொடுஞ்சொல் லுடையவன் கடுங்கேடு அடைதலால் தீமையான அவ்வார்த்தைகளைப் பேசாதவன் தன்னை இனிது பாதுகாத்தவனாகின்றான்.

எவ்வழியும் இன்சொல்லே கூறவேண்டும் என்பது குறிப்பு.

---

152. சொல்லே ஒருவன்றன் தொன்மை வழிமுறையை
மெல்ல வுரைத்து விளக்குமால்—சொல்லில்
இனியர் எவர்க்கும் இனியர்; இனியார்
துனியர் அவர்க்கே துயர். (உ)

இ-ள்.

ஒருவன் வாய்ச் சொல்லே அவனுடைய பிறப்பு நிலைமையை விளக்கியருளும்; சொல்லில் இனிமையாளர் எல்லார்க்கும் இனியராகின்றார்; இனிமை யில்லாதவர் யாண்டும் வெறுக்கப் படுகின்றார் என்றவாறு.

இது, மனிதனது மேன்மையின் எல்லையைச் சொல்லால் அறியலாம் என்கின்றது. மெல்ல விளக்கும்=நளினமாக உணர்த்தியருளும். உள்ள நிலையைச் சொல்லால் உணர்ந்துகொள்ளலாம் என்றமையால் உரையின் அதிசய அமைதி தெளிவாம்.

தொன்மை=பழைமை. வழிமுறையே சிறந்த விழுமிய குடியில் பிறந்தவர் வாயில் இழி மொழிகள் வாரா. எவன் வாயில் பயனும் பண்பும் நிறைந்த இனிய சொல் வருகின்றதோ, அவன் உயர் குல மகனும். பயனற்ற பழிமொழிகள் கூறுவோன் இழி மகன் ஆகின்றான்.

சொல் உணர்வின் வழியே எழுவது ஆகலான் அது மனிதனது உயர்வு தாழ்வுகளை அறிதற்கு உரை கல்லாய் நின்றது.

*நிலத்தில் கிடந்தமை கால்காட்டும் காட்டும்*
*குலத்தில் பிறந்தார்வாய்ச் சொல்,* (குறள், 959)

நிலத்தின் தன்மையை அதில் எழுந்த மூளை காட்டும்; அது போல் குலத்தின் நன்மையை அதில் பிறந்தார் வாய்ச் சொல் காட்டும் என்னும் இது ஈண்டுச் சூழ்ந்து காணத்தக்கது. கால்=மூளை.

சொல்லில் இனியார் துனியர்=வாய்ச் சொல்லில் இனிப்பு இல்லாதவர் வெறுப்புக்கு உரியராவர். துனி=வெறுப்பு.

அவர்க்கே துயர்=கடுஞ் சொல்லுடையவர் தமக்கே கொடுந் துயர் செய்தவராகின்றார்.

வாய் தீயதாயின் வையம் வெறுத்து விடுகின்றது; விடவே, அவர் வெய்ய துயரில் வெய்துயிர்க்க நேர்கின்றார்.

நீ உயர்ந்த மனிதனாக விரும்பின் யாண்டும் இழிந்த மொழிகளைப் பேசாதே; என்றும் இனிய சொற்களையே பழகி வருக.

---

*153. சொல்லிடையே நஞ்சுகக்கத் துன்மதியர் சொல்லாடி*
*வல்லரென எண்ணி மகிழ்கின்றார்—புல்லரிவர்*
*வாக்குச் சனியனென வையம் எதிர்வையப்*
*போக்கிழிந் துள்ளார் புறம்.* (௩)

இ-ள்.

துன்மதியாளர் நச்சுமொழிகளை இச்சையுடன் பேசி இறுமாந்து களிக்கின்றார்; அற்பரான அவரை வாக்குச் சனியன் என உலகம் எள்ளி இகழ்ந்து அயலே தள்ளியுள்ளது என்றவாறு.

கெட்ட வழியில் தம் அறிவைச் செலுத்தும் பட்டிகள் துன்மதியர் என நின்றார். நன்மதியர் நம்மை மதியாரே என்னும் மதியின்றிப் புன்மொழி யாடி வன்மையுடையராய் மனங்களித்து மதிகேடர் மருண்டு திரிந்து திரண்ட பழியில்புரண்டுஉழல்கின்றார்.

நெஞ்சு பாழ்பட்ட வஞ்சமக்கள் மொழிக்கு மொழி நஞ்சு துளிக்க வெஞ்சொல் ஆடி வீணே பாழ்படுதலை நினைந்து பரிந்து அவர்க்கு ஊழறிவு ஊட்டிய படியிது.

நஞ்சு கக்க என்றது கேட்டவர் நெஞ்சம் கொதிக்கும்படி நீசவார்த்தைகளைக் கூசாது பேசும் நாசம் தெரியவந்தது.

நஞ்சு என்ற குறிப்பால் அப்புன்சொல் உயிர் பதைக்கச் செய்யும் இயல்பறியலாகும். கக்க = உமிழ. வாய் உமிழ்ந்த சொல் நஞ்சு உமிழ்ந்துவரும் எனப் புல்லர் சொல்லின் புலை உணர்த்தி நின்றது.

சுடுமொழிகளை விநயமாகப்பேசிப் பிறரை வாயடக்கி மடக்கி விட்டோம் என மடத்தனமாகப் புல்லர் செருக்கி மகிழ்கின்றார்; அவரை வையம் எள்ளி இகழ்ந்து தள்ளிவைத்துள்ளதை ஐயோ! உணரவில்லையே! என்று அவரது அறிவுகேட்டைநினைந்துஇரங்கிய வாறிது. போக்கு = குற்றம்.

வாக்குச் சனியன் என்றது கொடுமைக்கு ஓர் எடுத்துக்காட்டாக வந்தது. இராசி மண்டலத்தில் இரண்டாம் இடத்தில் சனி இருந்தால் அந்தச் சாதகனுக்கு ஏதம்பலதரும் ஆதலால் அந்தக் கொடுங்கோள் இங்கே கடுங்கோளனுக்கு உவமையாய் நேர்ந்தது.

கீழ்மகன், கெட்டவன், துன்பம் முதலிய பல கெடு பொருள்களையும் சனி என்னும் சொல் தொனியாகக் குறித்து நிற்கும். "உனக்குச் சனியன் பிடித்திருக்கின்றான்" என்னும் உலக வழக்கிலும் அதன் நிலைமை அறியலாம்.

வாக்கில் தீயவன் வாக்குச் சனியன் என நேர்ந்தான்.

பிறரை இகழ்ந்து பேசாதே; பேசின் உலகம் உன்னை ஈனமாக எள்ளி இகழ்ந்துவிடும்; இவ்வுண்மையை உணர்ந்துகொள்க.

---

154\. செருக்குமிகு பொல்லாச் சிறுவர்வாய்த் தீச்சொல்
வெருக்கொள் விடத்தினும் வெய்தாம்—சுருக்காக
அவ்விடத்தைப் போக்கின் அகலுமால் அத்தீச்சொல்
எவ்விடத்தும் போகாதே எண். (௪)

இ. ள்.

உள்ளச் செருக்குடைய பொல்லாச் சிறுவர் வாய்த்தீச்சொல் விடத்தினும் கொடியது; அந்த விடத்தை மந்திரத்தால் போக்கலாம்; இந்தக் கொடுஞ்சொல் எவ்விதத்திலும் நீங்காது.

சிறுவர் என்றது பருவ நிலையைக் கருதி அன்று; அறிவு பாழ் போய் வறிதுரையாடிச் சின்னத்தனமாய்த் திமிர்ந்து திரியும் புன்மக்களைக் குறித்து நின்றது.

அவர் வாய்ச் சொல்லே விடத்தினும் கொடிது என்றது கடுந் துயர் விளைத்து நிற்கும் கொடுமை நோக்கி.

• பாம்பின் பல்விடம் உடம்பில்பட்டு உதிரந் திரித்து உயிர்க் கேடு செய்தலால் அதனை இடையே மந்திர மருந்துகளால் தடை செய்து நீக்கிவிடலாம்; தீம்பர் வாய்ச் சொல் செவிவழியே உள்ளத்துள் பாய்ந்து உடனே உயிரை வதைத்தலால் தீராவிடமாய் இது பேரிழவு கூட்டிவிடுகின்றது.

> தீயர் வாய்ச் சொல் தீயினும் விடத்தினும் தீயதாம்.
>
> தீயினால் சுட்டபுண் உள்ளாறும்; ஆறாதே
> நாவினால் சுட்ட வடு. (குறள், 129)
>
> தீயினால் சுட்டசெம்புண் ஆறுமத் தீயிற் றீய
> வாயினால் சுட்டமாற்ற மாறுமோ வடுவே அன்றோ?
> (பாரதம்).

சுடுதீயினும் படுபழிச் சொல் கொடிது என இவை குறித்திருத்தலறிக. குலை துடிக்கச் செய்யும் அதன் கொடுமை புலனும்.

> "Of all the griefs that harass the distressed,
> Sure the most bitter is a scornful jest;
> Fate never wounds more deep the generous heart,
> Than when a blockhead's insult points the dart."
> (Johnson)

"புல்லன் இகழ்ந்து கூறும் பழிச்சொல்லே துன்பங்களெல்லாவற்றினும் கொடுந் துன்பமாம்; மேலோர் உள்ளத்தை அது வதைப்பதுபோல் தீவிதியும் வருத்தா" என ஜாண்ஸன் என்னும் ஆங்கில ஆசிரியர் கூறியுள்ளதும் ஈண்டு அறியத்தக்கது.

---

155. வில்லாலும் வாளாலும் வெய்யவடி வேலாலும்
கொல்லார் எனினும் கொலைஞரே—சொல்லாலே
மற்றவர்கள் உள்ளம் மறுகித் துயரமுற
எற்றேனும் சொல்வர் எனின். (ரு)

இ-ள்.

வில் வாள் வேல் முதலிய கொலைக் கருவிகளால் கொல்லாதவராயினும் பிறர் உள்ளம் துடிக்கக் கொடிய சொற்களைச் சொல்லுவரேல் அவர் பொல்லாத கொலைஞரேயாவர் என்றவாறு.

இது, கொடுஞ்சொல் கொலை ஒக்கும் என்கின்றது.

மறுகுதல்—நிலைகுலைந்து தவித்தல்.

எற்றுஎனும்—யாதாயினும். சிற்றளவு சொல்லினும் கொடிய குற்றமாம் என்க. சுடு சொல் படுதுயர் விளைக்கும்; அவ் வடுவுரையை யாதும் வழங்காதே என்பதாம்.

கொலை என்பது உயிரை உடலிலிருந்து நீக்கிவிடுவது. இது, பாவங்களுள் தலைமையானது. கொலை செய்பவர் கொலைஞர்என நின்றார்.

உடல் துடிக்க உயிர் பதைக்க வதைப்பது கொலையாம்; கொடுஞ் சொல்லும் உள்ளம் பதைத்து உயிர் துடிக்கச் செய்தலால் அதுவும் கொலை என நின்றது.

உடலைவிட்டு உயிர் பிரிந்துபோதலால் கொலைத்துயரை உயிர் உடனே மறந்துவிடுகின்றது. புலைச்சொல் அங்ஙனமின்றி உடல் நீங்கும் அளவும் உளத்தில் நிலையாக நிலைத்து உயிரை வதைத்து வருதலால் அக்கொலையினும் இப்புலையின்கொடுமை அறியலாகும்.

வாள் வேல் கொண்டு வெட்டிக் குத்திக்கொல்வது மட்டும் கொலையன்று; வாய்கொண்டு கொடுஞ்சொற் சொல்வதும் கொடிய கொலையாம் என்க.

அது, உடற்கொலை; இது, உயிர்க்கொலை. சத்திரவதை அது; சித்திரவதை இது என நிலைமையைஉய்த்துணர்ந்துகொள்க. விற்கொலை முதலியவற்றினும் சொற்கொலை தீயதாம்.

பொல்லாத கொலைப் பழியைச் சொல்லால் விளைக்காதே. பிறர் உள்ளம் நோகும்படி யாதும் பேசாதே என்பது கருத்து.

---

156. மன்றில் ஒருவன் மறுகி மனமுளைய
நன்றில் உரையை நவிலுநா—என்றுமே
ஈனநா வாகி இழிந்துபின் பேசாத
ஊனம் அடையும் உணர். (சு)

இ-ள்.

பலர் குழுமிய சபையில் ஒருவன் உளம் மறுகி உளைய இழிவுரை கூறுகின்ற நா பின் மொழி வழக்கு அற்று ஈனமான பிறப்பில் இழிந்துபடும் என்றவாறு.

மன்று—பலர் கூடியிருக்கும் இடம்.

நன்று இல் உரை=கெட்ட வார்த்தை. மனிதனுடைய மானம் கெடும்படியான ஈன மொழிகள். நவிலல்=சொல்லல்.

• தனியே இருக்கும்பொழுது இகழ்ந்து பேசுவதினும், பலர் நடுவே ஒருவனைப் பழித்துக் கூறின், அவன் உள்ளம் மிகவும் கொதிக்கும் ஆதலால் அக் கொடிய நிலைமை உணர வந்தது.

மறுகி உளைய என்றதனால் அந்த உயிரின் பரதவிப்பை அறியலாகும். அவையில் இகழப்படுதல் மிகவும் துயரமாம்.

எய்தி இருந்த அவைமுன்னர்ச் சென்றெள்ளி
வைதான் ஒருவன் ஒருவனை—வைய
வயப்பட்டான் வாளா இருப்பானேல் வைதான்
வியத்தக்கான் வாழும் எனின். (நாலடியார், 325)

சபையில் ஒருவனை எள்ளி இகழ, அவன் உள்ளம் பொறுத்திருப்பானாயின், இகழ்ந்து பேசினவன் அந்த இடத்திலேயே துள்ளித் துடித்து இறந்து படாமல் நின்றால் அது ஒரு அதிசயமாம் என இது குறித்திருக்கும் குறிப்பைக் கூர்ந்து பார்க்க. மன்றில் பழிப்பது மா பாவம். அப் படுபாவி உடனே பொன்றி ஒழிய வேண்டும். ஒழியானாயின் தெய்வம் ஒளித்திருக்கின்றதே! என்று உலகம் வருந்தும் என்பதாம்.

இதனால் பலர் முன் இகழும் பழிக் கொடுமை தெளிவாம்.

" ஈன நாவாகி இழிந்து பின் பேசாத ஊனம் அடையும் " என்றது கொடிய பழி மொழி கூறினவன் அப் பாவத்தால் பன்றி நாய் முதலிய இழி பிறவிகளில் விழுந்து பேச முடியாத ஈன நாவனாய் நீசமுறுவன் என்றவாறு.

அரிய மனிதப் பிறவியை அடைந்து இனிது பேசத்தக்க உயர்ந்த நாவைப் பெற்றுள்ளாய்! பழி மொழியாடி அதனைப் பாழ் படுத்தாதே என உறுதி நலம் உணர்த்திய படியிது.

---

157. பொய்ச்சொல் புறஞ்சொல் புலையான புன்சொல்வாய்
வைத்தால் வசைமேல் வளருமே—மெய்ச்சொல்லே
பேசக் கொடுத்த பெருநாவைப் பேணுமல்
நாசப் படுத்தல் நவை. (எ)

இ-ள்.

பொய் பேசல் புறங்கூறல் இழி மொழி பகர்தல் ஆகிய இவற்றால் பழிகள் வளருகின்றன; மெய்யே பேசும்படி கிடைத்த

அருமை நாவை உரிமையுடன் பேணுமல் நீசப்படுத்தி வருதல் நாசமாம் என்றவாறு.

இது, நாவை நன்கு காத்து வருக என்கின்றது.

புலையான புன்சொல் என்றது ஈனமான இழிமொழிகளை. கேட்பவர் உள்ளம் துடிக்கும்படியான கெட்ட வார்த்தைகளால் கொலை பாதகங்கள் விளையும் ஆதலால் அந்நிலைமை உணரப் புலையும் புன்மையும் அடைகளாய் வந்தன.

பொய் முதலாகத் தனித்தனியே பெயர் குறித்துக் கூறியது சொற்களின் நீச வகைகளைத் தொகையாக நினைந்து விலக்க.

வாய் வைத்தால் வசை வளருமே!

என்றது ஈனவார்த்தைகளைப் பேசுகின்றவர் ஈனராய் இழிபழி யடைவர் ஆகலான் அந்த அழிவு நிலை அறியவந்தது.

வசை = பழி. மனிதன் பழியுற விரும்பான்; என்றும் புகழையே விழைகின்றான்; இயல்பாகவே உயர்விழைவுடைய அவன் மயலுழந்து செயலழிந்து இழிவுரையாடி அழிவுற நேர்கின்றான். அந்த அழிவைக் குறித்துக் காட்டி விழுமிய நிலையில் ஒழுகிவர வழி உணர்த்திய வகையாய் இது வந்துள்ளது.

பெருநா என்றது மிருகப் பிறவியினும் வேறுக்கி மனிதப் பிறவியைப் பெருமைப்படுத்தியுள்ள அதன் அருமை கருதி. கொடுத்த என்னும் குறிப்பால் அது தெய்வக்கொடையாய் வாய்ந்துள்ளமையை ஓர்ந்துகொள்க

பேணுதலாவது பொய் புன்சொல்கள் யாதும் புகாமல் பாது காத்து மெய் இன்சொல்களுக்கே இடமாக இனிது போற்றுதல்.

நாவில் நீசமொழிகள் ஆடின் அது நிலைகுறுகி நாசப்படும். நவை = குற்றம். நாவை நவை ஆக்காதே என்பதாம்.

நெடிய புகழ் புண்ணியங்களை விளைத்து உயிரை உயர்த்து கின்ற இனிய நாவைக் கொடியன பேசி இழிவுபடுத்தல் மனித வாழ்வை அழிவுபடுத்திய படியாம். பூவைப் போல் நாவைப் புனிதமாகப் போற்றி வாழ்க என்பது கருத்து.

158. கண்டு புகழ்ந்துரைத்துக் காணாத போதுபழி
கொண்டு பிதற்றும் குடிகேடர்—மண்டுபுழு
வாய்ச்சொரிய நாய்ப்பிறப்பாய் மாறி இழிநிலைக்கே
போய்ச்செறிவார் மீளார் புறம். (அ)

இ-ள்.

நேரே கண்டபொழுது இனியராய்ப் புகழ்ந்து கூறிக் காணாத இடத்தில் பழித்து நிற்கும் கொடியர், முடிவில் தம் வாயில் புழுக்கள் நெளிந்து சொரிய மடிந்து நாய்ப் பிறப்பை அடைந்து பின்பு நரகில் இழிந்து உழலுவர் என்றவாறு.

இது, பழிகூறும் வாயர்க்கு வரும் அறிவு கூறுகின்றது.

பிதற்றுதல், இல்லாத பழிகளைப் பொல்லாத்தனமாய்ப் புகுத்தித் தூற்றுதல். பழிகொண்டு என்றது எங்கும் வலியச் சென்று வசை கூறுகின்ற அவரது இழி நிலை தெரியவந்தது.

முகத்து எதிரே உரிமையோடு உவந்து பேசுகின்றவரை எவரும் நண்பராக நம்பிவிடுவர்; உண்மைகள் சிலவற்றை உரைக்கவும் செய்வர்; அந்த நம்பிக்கைக்குத் துரோகமாய் அயலே போய் இகழ்ந்து கூறுதல் கொடும் பாவமாம்; ஆகவே அப்படு பாவிகள் இம்மையிலே கொடிய துயரங்களை அடைந்து, இழிந்த பிறப்புக்களில் உழந்து, இறுதியில் எரிவாய் நரகிலும் அழுந்தி வருந்துவாராயினர்.

"கண்ட போதுநல் அன்பரைப் போலவே காட்டி
விண்ட போதுபுன் புறமொழி புகல்கின்ற வீணர்
கொண்ட பெண்டையும் பிறர்கொளக் கொடுத்துமே கொடுமை
மண்டு தீயெரி நரகிடை மறுகியே அழிவார்"

பழிவாயர் அடையும் துயர நிலைகளை இதனால் அறியலாகும்.

வாய் புழுச் சொரிய என்றது பழிச் சொல் கூறிய அப்பாவ நிலை தெரிய. அரிய மனிதப் பிறப்பிற்கு உரிய இனிய நாவைப் பாழ்படுத்தினமையால் ஈன நாயாய்ப் பிறக்க நேர்ந்தார்.

முன்னின்று ஒருவன் முகத்தினும் வாயினும்
கல்நின் றுருகக் கலந்துரைத்துப்—பின்னின்று
இழித்துரைக்கும் சான்றோரை அஞ்சியே தேவர்
விழித்திமையார் நின்ற நிலை. (அறநெறிச்சாரம்)

முன்னே புகழ்ந்து பின்னேபோய்ப் பழிக்கும் பாவிகளைப் பார்த்துப் பயந்துதான் மேலே உள்ள தேவர்கள் விழித்த கண் இமையாமல் வியந்து நிற்கின்றார் என இதில் குறித்திருக்கும் நிலையைக் கூர்ந்து அறிக. சான்றோர் என்றது இகழ்ச்சிக் குறிப்பு.

இழிவுரை கூறுவார் அழிநாகு ஏறுவார் என்பது கருத்து.

---

159. கடுவாய் வரஓரி காட்டொலிபோல் கோளர்
கொடுவாய் திறந்து குலைப்பின்—கடிதாக
ஓடிஒரு தீமை உறுவதென ஓர்ந்தகல்க
நீடினே பீடை நினை. (கூ)

இ-ள்,

கடுவாய் வருவதை ஓரி ஒலித்துக்காட்டுதல்போல் கொடிய தீமை உறுவதைக் கோளர் கொடுவாய் திறந்து குலைத்துக் காட்டுவர்; அதனை உணர்ந்து ஒதுங்குக; அயர்ந்து நின்றால் இழிந்து படுவாய் என்றவாறு.

ஓரி, முதுநரி. மிகுவிரகுடையது. மலைச் சரிவில் மாடுகள் தனியே மேய்ந்து கொண்டிருத்தலைக் கண்டால், ஒருவகை ஒலி எழுப்பி மெல்ல ஊளையிடும். அந்த ஒலியைக் கேட்டதும் புதருளிருந்து கடுவாய் வெளியேறி வரும்; வரவே, ஓரி இரை நிற்கும் இடத்தைக் குறிப்பாகக் காட்டும்; அது பாய்ந்து கொல்லும்; அந்த இரையில் அதற்குக் கொஞ்சம் பங்கு கிடைக்கும். ஓரி வாய் திறந்தவுடனே கடுவாய் வருகின்றது என்று மலைவேடர் தெரிந்து கொள்வர்.

ஓரி, கோளனுக்கும்; அதன் ஒலி, கோட்சொல்லுக்கும்; கடுவாய், தீமைக்கும் இங்கே உவமைகளாய் வந்தன.

ஓரியின் ஊளை கடுவாய் வருவதைக் காட்டுதல் போல, கோளன்வாய்ச்சொல் குடிகேடு நேர்வதைக் குறிக்கும் என்க.

கொடுவாய் என்றது அந்த வாயின் படுதீமை கருதி.

குலைப்பின் என்றது அவாது இழிவும் ஈனமும் உணர்த்தி நின்றது கொடுஞ் சொல்லுடைய கோளர் வாய் திறந்தால் ஏதோ ஓர் கடுங்கேடு விளைகின்றது எனக் கருதி விலகி விடுக.

நீடினோ பீடை நினை என்றது கோடிய வாயுடைய அத்திய ேனாடு கூடி நின்றால் பழியும் பாபமும் படரும் ஆதலால் அருகு நில்லாமல் உறுதி யுணர்ந்து ஒதுங்கிக் கொள்க என்பதாம்.

---

160. இன்சொல்லால் அஞ்சுமான் இன்புற் றிசைகொண்டான்
வன்சொல்லால் வெஞ்சகரர் மாண்டொழிந்தார்-தன்சொல்லால்
ஆக்கமும் கேடும் அணையுமென இவ்வுலகம்
நோக்கஇவர் நின்றார் நுழைந்து. (௧௦)

இ-ள்.

அஞ்சுமான் இன்சொல்லால் இன்பமும் புகழும் எய்தி விளங்கினான்; சகரர் வன் சொல்லால் மாண்டு ஒழிந்தார்; தன் சொல்லாலேயே ஆக்கமும் கேடும் மனிதனுக்கு உண்டாகும் என்பதை உலகம் அறிய முறையே இவர் உணர்த்தி நின்றார்.

இனிய மொழிகளையே யாண்டும் பேசவேண்டும்; கொடிய சொற்களைக் கூறலாகாது என இதுவரை உணர்த்தி வந்து, முடிவில் இன்சொல்லாளர் புகழும் இன்பமும் பெறுவர்; வன் சொல்லாளர் பழியும் துன்பமும் அடைவர் என்பதற்கு இரண்டு இதிகாசங்கள் ஈண்டு எடுத்துக் காட்டப்பட்டன.

அஞ்சுமான் என்பவன் சூரியகுலத் தோன்றல். அசமஞ்சனுடைய அருமைத் திருமகன். சகர மன்னனுக்குப் பேரன். இவன் சாந்தகுண சீலன். யாரிடமும் இதவசனங்கள் பேசும் இனிய இயல்பினன். தனது சிறிய தந்தையராகிய சகரர் என்பவர் கபிலமுனிவரிடம் போய் மாறுபாடு கொண்டு சீறி வைது அம்மாதவரது சாபத்தீயால் மாண்டு போயினர். இவன் சென்று பணிவும் பண்பும் உடையனாய் வணங்கி நின்று நிகழ்ந்ததை இனிது கூறினான். முனிவர் உவந்து இவனை ஆசீர்வதித்து வேள்விக் குதிரையைக் கொடுத்தருளினார். இவன் அதனைக் கொண்டு வந்து பாட்டனது யாகத்தை முடிப்பித்தான். அதன் பின் முடி மன்னனாய் அரசை இவன் நெடிது ஆண்டு வந்தான். இன்சொல்லாளன் புகழும் புண்ணியமும் அடைந்து மகிழ்வான் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்துகொண்டது. வன்சொல்லாளர் பழி படர்ந்து மடிவார் என்பதை சகரர் சரிதம் தெளிவாக்கி நின்றது.

இன்சொல் ஆக்கம் தரும்; வன்சொல்லால் கேடு வரும்; ஆதலால் நல்லதை நாடி ஒல்லையில் உயர்ந்து கொள்க.

கொடுஞ்சொல் பழியும் இழிவும் பயந்து படுகேடுகளை விளைக்கும்; அதனை எவ்வகையினும் யாதும்பேசாமல் நாவைச் செவ்வையாகப் பாதுகாத்து ஒழுகுக என்பது கருத்து.

நாவின் நுனியில் நயமிருக்கில் பூமாதும்
நாவினிய நல்லோரும் நண்ணுவார்—நாவினுனி
யாங்கடின மாகில் அத்திருவும் சேராள்முன்
ஆங்கே வருமரண மாம். (நீதி வெண்பா)

இன்சொல் அளாவல் இடமினிதூண் யார்யார்க்கும்
வன்சொல் களைந்து வகுப்பானேல்—மென்சொல்
முருந்தேய்க்கு முட்போல் எயிற்றினாய் நாளும்
விருந்தேற்பர் விண்ணோர் விரைந்து. (ஏலாதி)

சிலம்பிற்குத் தன்சினை கூற்றநீள் கோடு
விலங்கிற்குக் கூற்றம் மயிர்தான்—வலம்படா
மாவிற்குக் கூற்றமா ஞெண்டிற்குத் தன்பார்ப்பு
நாவிற்கு நன்றல் வசை. (சிறு பஞ்ச மூலம்)

கெட்ட கழுதைக் குரலதென்பர் குயில்கூவின்
நட்டவர்கள் போல்மகிழ்வர் நண்பதனொடு என்னை?
பட்டபொருள் சொல்லலுற லுண்டெனினும் யாரும்
வெட்டென வுரைத்தலை விடுத்திடுமின் என்றான்.
(குண்டல கேசி)

---

இவ் அதிகாரத்தின் தோகைக் குறிப்பு.

இன் சொல் இனியது.
வன்சொல் கொடியது.
கொடுஞ் சொல்லாளனை உலகம் இகழ்ந்து வையும்.
அவனை நஞ்சு என வெறுக்கும்.
கொலைஞன் என்று குறிக்கும்.
அவன் ஈனம் உறுகின்றான்.
இழி பழி அடைகின்றான்.
துயரில் அயர்கின்றான்.
தீயன் ஆகின்றான்.
கடுங் கேடுடையனாய்க் கழிந்து படுகின்றான்.

கசு-வது கொடுஞ் சொல் முற்றிற்று.

---

# பதினேழாம் அதிகாரம்.

## குறும்பு.

அஃதாவது சின்னத்தனமாய்ச் சிறுமொழி பேசிச் சிலுகு புரிதல். குறுமகன் செய்கை குறும்பு என வந்தது. கோட்சொல் கொடுஞ்சொல்லுகள் போல் இதுவும் நெடும் பழி யுடையது. விழுமிய மனிதன் எவ்வழியும் இதனைப் பழகலாகாது என உணர்த்துகின்றமையால் ஈண்டு இது வைக்கப்பட்டது.

161. கண்ணும் முகமும் கருத்துரைக்கும் ஆனாலும்
திண்ணம் தெளியத் தெரிப்பதுதான்—நண்ணிவரு
சொல்லே அதனிலையைச் சூழ்ந்தே மனிதனிலை
எல்லாம் அறிக எதிர்ந்து. (க)

இ-ள்.

மனிதனுடைய எண்ணத்தைக் கண்ணும் முகமும் வெளி அறியக் காட்டுமாயினும் அதன் உண்மை நிலையை வாய்ச்சொல்லே தெளிவாக உணர்த்தும் என்றவாறு.

இது, சொல்லின் பயனும் நயனும் கூறுகின்றது.

திண்ணம்=உறுதியான உண்மை; நிச்சயம்.

தெரிப்பது=தெளிவாகத் தெரியப்படுத்துவது.

ஒருவனுடைய உள்ள நிலையை அறிதற்குக் கண் முகம் சொல் செயல் என்பன கருவிகளாய் அமைந்துள்ளன. கண் நோக்கம் எல்லாவற்றினும் மிகவும் நுண்மையுடையது ஆகலின் அது முன்னுற நின்றது.

இந்த நான்கினும் யாரும் எளிதாகவும் தெளிவாகவும் அறிந்து கொள்ளுதற்குரிய கருவி சொல்லேயாம்.

"நண்ணிவரு சொல்லே திண்ணம் தெளியத் தெரிப்பது" என்றது ஒருவன் வாயிலிருந்து வருகின்ற சொல்லே அவனுடைய மனநிலை குணநல முதலிய இயல்புகளை எல்லாம் வெளியே தெளிவாக விளக்கிவிடும் என்றவாறு.

மனிதனை உள்ளபடி அளந்துகொள்ளுதற்குச் சொல் நல்ல அளவுகோலாயுள்ளது; அதனை நல்ல வகையாகப் பயன்படுத்திக் கொள்க என உரிமையோடு உணர்வுரைத்த படியிது.

"ஒருவன் இயல்பை உரையுரை கல்லாய்
உருவில் உணர்த்தும் உணர்."

பொன்னை மாற்று அறிதற்கு உரைகல் போல் மனிதனை அறிதற்கு உரை அமைந்துள்ளது என்றமையால் அதன் நிறையும் நீர்மையும் நிலை தெரியலாகும்.

சொல் மிக அருமையுடையது; மனிதன் மதிப்பை மதித்துக் காட்டுவது; அதனைப் புனிதமாக இனிது போற்றி வருக.

---

162. வீண்சொல் அதிகம் வெளிவிரிப்போன் தன்னுள்ளே
மாண்பில்லை என்னும் வகைவிளக்கிக்—காண்கவெனக்
காட்டினன் வாயிற் கதவு திறந்துவிடின்
வீட்டிலுள்ள வெல்லாம் வெளி. (உ)

இ-ள்

பயன் அற்ற வீண் சொற்களைப் பலபடியாக விரித்துப்பேசுகின்றவன், தன் அகத்தே அறிவு நலம் யாதும் இல்லை என்பதை விளக்கிக் காட்டினவன் ஆகின்றான் என்றவாறு.

மாண்பு=மதித்துப் போற்றத்தக்க உயர்ந்த தன்மை.

வீண் சொற்கள் ஒருவன் வாயிலிருந்து எவ்வளவுக்கு எவ்வளவு வெளிவருகின்றனவோ அவ்வளவுக்கு அவ்வளவு அவன் உள்ளே மாண்பு இல்லை என்பதை விளக்கி நின்றது.

கண்ணாடி உருவத்தைக் காட்டுதல்போல் சொல் ஒருவன் உள்ளத்தைக் காட்டுகின்றது.

பயன் நிறைந்து சொல் இனிமையாய்வரின், அம் மனிதன் நயன் நிறைந்த நன்மையாளன்; பயன்இன்றிக் கொடிதாயின், அவன் நயன் அற்ற புன்மையாளன் என்க.

வீண் சொல்லாளன் வீணன் ஆகின்றான்.

ஒரு வீட்டுக்கு வாசலும் கதவும் பூட்டும்போல மனிதனுக்கு வாயும் நாவும் சொல்லும் வாய்ந்துள்ளன.

கதவைத் திறந்தபொழுது மனையுள் இருக்கும் பொருள்கள் யாரும் எளிதாக வெளியே காண நேர்கின்றன. வாயைத் திறந்தவுடன் அகத்தில் உள்ளன புறத்தே புலனாகின்றன.

பேசுகின்ற வார்த்தையைக் கொண்டே மனிதனது உயர்வு தாழ்வுகளை நன்கு கண்டுகொள்ளலாம் என்பது கருத்து.

வீண் பேச்சுப் பேசி வீணன் ஆகாதே என்பது குறிப்பு.

---

163. பன்னிப் பயனிலாப் பாழுரையைப் பாராட்டல்
தன்னை முழு மூடனெனத் தான்காட்டி—மன்னிழிவு
கண்டுணரா தோங்கும் கடையியல்பாம் கண்ணூன்றிக்
கொண்டுணர்க சொல்லின் குணம். (ங)

இ-ள்.

பயன் இல்லாத பாழ் மொழிகளை விழைந்து கூறுகின்றவன் தன்னை மூடன் எனக் காட்டுகிறான்; சொல்லின் தகைமையைக் கண் ஊன்றி உணர்ந்து கொள்க என்றவாறு.

பாழ்உரை=பொருளற்ற புன்மொழி. பன்னி=சொன்னதை மாறி மாறி ஓயாது சொல்லி. பாராட்டல்=இழிந்த மொழிகளை உவந்து கொண்டாடல். மன் இழிவு=நிலைபெற்ற ஈனம்.

இழிவுரையால் நேர்கின்ற இளிவை உணராமல் அதனையே விழைந்து பேசுவது ஈனமக்கள் இயல்பாம்; ஆகவே அவரை மானமக்கள் மதியாராயினர்.

கடை என்றது அறிவு ஒழுக்கங்களில் கடைப்பட்டுள்ள இழிமக்களை. பாழ் உரை ஆடுவது கீழ்இனத்தின் இயல்பு என்றதனால் அவர்தம் செயலும் தெரிய நின்றது.

வாசத்தால் மலர் நிலை அறிதல்போல் வாசகத்தால் மனிதர் நிலை அறியப்படுகின்றது. பேசும் இயல்புடைய மக்கள் அப் பேச்சின் தகைமைக்குத் தக்கபடியே வகைமையா யுள்ளனர்.

பயன் உடைய இனியசொல் உணர்விலிருந்து ஊறிவருவது ஆதலால் பயன் இலாத புன்சொல் உணர்வின்மையாகிய தனது மூலநிலைமையை உலகம் அறிய உணர்த்தி நின்றது.

உருவத்தைக் கண்டு மயங்காதே உரையைக் கண்டு ஒருவன் நிறையை உணர்ந்துகொள்க.

பழுதான இழிமொழிகளைப் பேசுகின்றவன் தன்னை முழு மூடன் என்று காட்டித் தனது இயல்பினை அயல் உணர விளக்கினான் என்க.

"பயனில்சொற் பாராட்டு வானை மகன் எனல்
மக்கட் பதடி எனல்." (குறள், 196)

பயனில பேசுவோன் பதர் என இஃது அறிவுறுத்தி யுள்ளமை காண்க. பயனுள பேசி நயனுறுக என்பது கருத்து.

---

164. பண்பும் பயனும் படியாப் பதடிகளே
வெண்புன்சொல் எங்கும் விளம்புவார்—பண்பமைந்த
மேலோர் நயனிறைந்த மெய்ம்மொழியே இன்பநலம்
காலோங்கச் சொல்வர் கனிந்து. (௪)

இ-ள்.

நல்ல பண்பில்லாத புன்மக்களே புன்சொல்கூறிப் பொங்கித் திரிவர்; பண்புடைய மேன்மக்கள் பயன் நிறைந்த இனியமொழிகளையே எங்கும் இன்புறப் பேசுவர் என்றவாறு.

பண்பு = அன்பு அமைதி முதலிய அரிய குணநலங்கள்.

பயன் = இனிய நீர்மையான இதவுரிமைகள்.

படியா = பொருந்தா. படிதல் = உள்ளே பதிந்திருத்தல்.

குளத்தில் நீர் நிறைவுபோல் மனிதன் உளத்தில் குண நிறைவுகள்; அந்நீர்வளம் எவர்க்கும் பயன்படுதல்போல் இவன் இயல்பு பிறர்க்கு நயன்புரிதல். இனிய பழமும் சுவையும்போல் பண்பும் பயனும் மனிதனது விழுமிய நிலைகளாய்விளங்கியுள்ளன.

இத்தகைய தன்மை இல்லாதவர் மனிதருள்ளே பதர் என நின்றார். பதடி = பதர். நெல்லில் உள்ளே மணி இல்லாமல் உமி மட்டும் புறத்தே மூடி இருப்பது பதர் எனப்படும். அதுபோல் வெளியே தோல் மாத்திரம் போர்த்து அகத்தே உயிரின் சாரமாகிய குண நலம் இல்லாத மனிதன் பதடி என நேர்ந்தான்.

இந்த மனிதப் பதர்களே பயன் இல்லாத சொற்களைப்பேசிப் பாழாய்த் திரிவர். எவன் வாயிலிருந்து வீணான புன்சொல் வருகின்றதோ அவன் பதடி என்க. வெண்மையும் புன்மையும் உடையது வெண்புன் சொல் என நின்றது.

அறிவு அமைந்த மேலோர் என்னாது பண்பு அமைந்த என்றது, கல்வி யறிவு இருந்தாலும் உள்ளப் பண்பு இல்லாமையால் புல்லியராய்த் திரிந்து குறும்பு பலபேசி இளிகளிப்புடன் சிலர்

இழிந்துபடுகின்றார் ஆதலால் அந்த வெறும் அறிவு மட்டும் போதாது என்பதை விளக்குதற்குப் பண்பமைதி இங்கே நன்கு அமையவந்தது. மேலோர் இன்பநலம் கால் ஓங்கச் சொல்வர் என்றதனால் அவருடைய சீலமும் செம்மையும் அறிய நின்றன. கால்=வழி, நிலை.

இன்ப நலம் = கேட்குங்கால் செவிக்கு இனிமையாயும், பின்பு உயிர்க்கு ஊதியமாயும் உதவியருள்வது.

உள்ளப்பண்பும் இன்சொல்லும் உடையவனே மனிதன்; நெஞ்சில் புன்மையும் வாயில் குறும்பும் வாய்ந்தவன் பதர் என்க.

---

165. சொற்சாலம் துன்னித் துதைந்திருக்கும் அவ்விடத்தே
நற்சால் பமைந்தபொருள் நண்ணாதே—பச்சை
இலைகள் அடர்ந்துழி இன்கனிகள் காணா
இலைகாண் கனிகள் எழின். (ரு)

இ-ள்.

இலைகள் நெருங்கியுள்ள கிளையில் பழங்கள் மருவி இரா; அதுபோல் சொற்கள் அதிகம் நிறைந்திருக்கும் இடத்தில் அறிவு நலம் கனிந்த இனிய பொருள்கள் உறா என்றவாறு.

இது, சொல் வீணா விரியலாகாது என்கின்றது.

சாலம்=கூட்டம். துன்னி=நெருங்கி. துதைந்து=செறிந்து. நல் சால்பு அமைந்த பொருள்=நல்ல விழுமிய கருத்து.

இலைகள், சொற்களுக்கும்; கனிகள், பொருள்களுக்கும் உவமைகளாய் வந்தன. நண்ணுதல்=பொருந்தி யிருத்தல்.

மரத்தில் இலைகள் மிகவும் தழைத்துள்ளபோது பழங்கள் பழா; பழங்கள் பழுக்குங்கால் இலைகள் உதிர்ந்துபோம்; கவியில் வார்த்தைகள் மிகுந்த பொழுது அங்கே தகுந்த பொருள்கள் நிறைந்து நில்லா; சிறந்த பொருள்கள் செறிந்தால் சொற்கள் சுருங்கிவிடும்.

கருத்துப் பொருளைக் கனி என்றது அது உணவின் இனமாய் உண்ண இனித்தல் போல் இது உணர்வின் நலமாய்க்கனிந்து எண்ணுந் தோறும் இனித்து வருதல் கருதி.

கனிகள் எழின் இலைகள் இலைகாண் என்றது இனியபொருள் நிறையின் மொழிகள் குறையும் என்பதைத் தெளிவாக உணர்த்த வந்தது. உணர்வுரையில் இனிமை சுரந்துள்ளமையால் கனி ஆயது.

பொருட் பெருக்கமும் சொற்சுருக்கமும் மதிநலத்தின் மாட்சிகளாய் மருவியுள்ளன என்க.

சுருங்கிய சொல்லில் உயர்ந்த எண்ணங்களைச் சிறந்த முறையில் அறிவு மணம் நிறைந்து கமழும்படி இனிது பொதிந்து தெளிவாக வெளியிட வேண்டும் என்பது கருத்து.

---

166. நெல்லெறிந்து கல்லெறியை நேர்ந்ததுபோல் முன்புறஓர்
சொல்லெறிந்து தொல்லைபல சூழவே—புல்லர்தம்
வாய்வழியே நோயை வளர்த்து வழியெங்கும்
சீசியென நிற்பர் திரிந்து. (௬)

இ-ள்,

சிறிய நெல்லை எறிந்து பெரிய கல் எறியைப் பெறுதல்போல் புல்லிய ஒரு சொல்லை எறிந்து தொல்லைகள் பல அடைந்து எல்லாரும் இகழ்ந்து தள்ளக் குறும்பர் இழிந்துபடுவர் என்றவாறு.

நெல் கல் என்பன மென்மை வன்மைகளைக் காட்சிப்படுத்தி நின்றன. கருத்துக்களைக் கண்ணூன்றி உணர்ந்து கொள்க.

பிறனைப்பார்த்துக் குறும்பாக ஒருவன் சிறு பரிகாச வார்த்தை கூறின், மாறி அவன் எரிபோல் சீறி இழிமொழிகளை வாரி வீசி இகழ்ந்து போகின்றான்; அவ்வளவோடு அமையாமல் உயிருள்ள வரையும் பகையாய் அவனை எள்ளி நிற்கின்றான்.

சிறிய ஒரு சொல்லால் கொடிய பகையையும் பழியையும் உளவாக்கி இளிவும் துயரும் அடைதலால் நெல் எறிந்து கல் எறி நேர்தலை ஒப்புச்சொல்ல நேர்ந்தது.

தொல்லை பல சூழ என்றது அச்சொல்லால் விளையும் அல்லல் பலவற்றையும் ஆழ நோக்கி ஆய்ந்துகொள்ள.

கல் எறி உடம்பில்பட்டுச் சிறிது காயத்தை உண்டாக்கும்; சால் எறி உள்ளத்தில் பாய்ந்து உயிரைக் கொதிக்கச் செய்யும். இங்ஙனம் கொடுமையானமையால் கடுமையான துயரங்களுக்கு அது காரணமாய் மாரண நிலையை மருவி நின்றது.

சீசி என்பது இகழ்ச்சியைக் காட்டும் ஒலிக்குறிப்பு. அருவருப்பையும் வெறுப்பையும் விளக்கிவரும். இங்ஙனம் வருவதைச் சங்கேதம் என்பர்.

வாய்வழியே நோயை வளர்த்து=வாய்ச் சொல்லாலேயே துன்பங்களை விளைத்து. நோய் வந்த வழியைச் சுட்டியது, அது விட்டிய தீங்கு நிலை தெரிய.

வழி எங்கும் சீசி என நிற்பர் என்றது ஈனமான இழி மொழிகளைப் பேசுபவர் போன இடம் எல்லாம் வெறுத்து எள்ளித் தள்ளப்படுவர் என்றவாறு.

நல்ல வாயால் தீயநோயை வளர்த்து வீணே இழிந்து வெந்துயரடையாதே என்பது குறிப்பு.

---

167. உன்தாய்முன் இங்குவந்த துண்டோ எனஒருவன்
நின்றானை நோக்கி நிகழ்த்தவே—அன்றீண்டென்
தந்தைவந்தான் என்றானத் தன்மைபோல் தான்வருமே
நிந்தையால் நிந்தை நினை. (எ)

இ-ள்.

தன் எதிரே நின்றவனை நோக்கி உன் தாய் முன்னே இங்கு வந்தது உண்டோ? என்று குறும்பன் வினவினான்; அதற்குப் பதிலாக என் தந்தை வந்தான் என்று வந்தவன் சொன்னான்; ஆதலால் நிந்தையால் நிந்தைவரும் என்பதை நினைக என்றவாறு.

இது, பழித்தவன் பழிக்கப்படுவான் என்கின்றது.

சிறிய ஒரு நெல்லை எறிந்து பெரிய கல்லெறியைவாங்குவார் போல் மெல்ல ஏளனமாக ஒன்று சொல்லி வலியபழியைக் குறுமொழியாளர் சிலர் அடைந்து இழிகின்றார் என முன்னே கூறியதற்கு உரிய நிகழ்ச்சி ஒன்று இதில் குறிக்கப்பட்டது.

சாரகன் என்பவன் ஒரு சமீன்தாரன். நல்லஅழகன். உல்லாசப் பிரியன். சிறுது கல்வியுள்ளவனாயினும்விகடங்களிலும் வேடிக்கைகளிலும் ஈடுபட்டுக் காமச்சுவையில் ஆழ்ந்து களிப்பூர்ந்திருந்தான். பரிகாச வார்த்தைகளிலேயே தன் பொழுதை வறிதாகப் போக்கி வந்தான். இடக்குரை யாடுவதும், யாரையும் மடக்கிப் பேசுவதும் தொடக்க முதலே இவனுக்குப் பழக்கமாயிருந்தன.

குறுநில மன்னனான இவனைக் குறும்பன் என்றே அறிவுடைய வர்கள் குறித்து வந்தனர். ஒரு நாள் இவன் சாவடியில் அமர்ந் திருக்கும்பொழுது அவ்வழியே வாலிபன் ஒருவன் போனான். அவனை இவன் அழைத்தான். அவன் வந்து எதிரே மரியாதை யாய் நின்றான். அயலே இயல்பாகப் பரிவாரங்களும் புடை சூழ்ந்து நின்றனர். வந்தவனுக்கு வயது இருபத்தைந்து இருக் கும். உருவம் பருவம் அழகு முதலியவற்றில் இவனை ஒத்திருந் தான். அரசிளங்குமரன் போலவே தன்னை ஒத்து நிற்கின்ற அவனை இவன் கூர்ந்து பார்த்து ஊர் பேர் முதலியவற்றை விசா ரித்தான். பின்பு தன் இயல்பின்படி கேலி வார்த்தைகள் பேசி விட்டு இறுதியில், "தங்கள் தாய் இந்தப் பக்கம் வந்து போனது உண்டோ?" என்றான். இந்தக் குறும்பு வார்த்தையின்பொருளை அவன் உணர்ந்துகொண்டான். உடனே பதில் சொன்னான்: "என் தந்தையார்தான் இங்கே வந்திருந்ததாகக் கேள்வி" என்று கூறிவிட்டு அவன் விரைந்துவெளியே சென்றான். இவன்வெட்கித் தலைகுனிந்தான்.

நிந்தையால் நிந்தைவரும் என்பதை இந்த வரலாறு அன்று நன்கு விளக்கின்றது. சாதுரியமாகப் பிறரை நீ ஏளனம் செய் யின் நேரே கொடுமையாக நிந்திக்கப்படுவாய்; இதனைச் சிந்தனை செய்து எங்கும் வாயடங்கி வாழ்க என்பது கருத்து.

---

168. மாமன் பிழையை மருகனுரைத் தானவன்றன்
தோமை அவனும்பின் சூழ்ந்துசொன்னான்-ஏமமுறத்
தங்குற்றம் காணார் தருக்கிப் பிறர்குற்றம்
பொங்குற்றுக் காண்பர் புகுந்து. (அ)

இ-ள்.

மருமகனுடைய குறையை மாமன் கூற, அம்மாமன் பிழை யை மருகன் மாறிச் சொன்னான்; தம் குற்றம் காணாதவராய்ப் பிறர் குற்றங்களைக் கொழித்துக் கூறுவதே மக்கள் இயல்பாய்ப் பெருகியுள்ளது என்றவாறு.

சூழ்ந்து என்றது குறைகளைத் துருவி ஆராய்ந்தமை கருதி. தோம்=குற்றம். ஏமம்=சேமம், பாதுகாவல்.
பொங்குதல்=உள்ளம் களித்துத் துள்ளுதல்.

பிறர் குற்றங்களை வீணாக விரைந்து கூறல் இழிந்த செயலாம்; அதனை இனிது தெளிதற்கு நேர்ந்த ஒரு நிகழ்ச்சி இங்கே ஓர்ந்துகொள்ள வந்தது.

தன் மகளை மணந்த மருமகன் மாமன் வீட்டிற்கு ஒருமுறை வந்திருந்தான். மாமன் பெருஞ் செல்வன். கடும் உலோபி. பிறர் என்ன இன்னல் அடைந்தாலும் யாதும் இரங்காதவன். தன்னலமே கருதுபவன். மருமகனோ கொஞ்சம் படித்தவன். யாரோடும் சரசமாகப் பேசுபவன். இந்தப்பேச்சு மாமனுக்கு வெறுப்பை விளைத்தது. ஒரு நாள் மருமகனை அழைத்தான். நளினமாகச் சில மொழிகளை உரைத்தான்.

மாமன்: கடவுள் நமக்கு இரண்டு காதுகளைப் படைத்து ஒரு வாயைக் கொடுத்திருக்கிறார். அது எதற்காக?

மருகன்: அதன் பொருளை நீங்கள் தான் சொல்லவேண்டும்.

மாமன்: பிறர் உரைகளைப் பெருக்கமாகக் கேள்; நீ எங்கும் சுருக்கமாகப் பேசு என்னும் அந்தக் குறிப்பை உணர்த்தியே இந்த உறுப்புக்களை இப்படிப்படைத்திருக்கிறார். இதனை உணராமல் ஓயாமல் உளறுவது மனிதனுக்கு இளிவாம்.

தன்னைக் குறித்துத் தான் இன்னவாறு குறும்பாகக் குத்திச் சொல்லுகிறார் என்று மருமகன் தெரிந்து கொண்டான்; அந்த முறையிலேயே சாதுரியமாக மாமனை நோக்கி மறுமொழி கூறினன்.

மருகன்: கடவுள் படைப்பைக் குறித்து எனக்கு ஒரு பெரிய சந்தேகம் நெடுநாளாக இருக்கிறது மாமா?

மாமன்: என்ன அது?

மருகன்: ஆண்டவன் நமக்கு இரண்டு கைகளை உண்டாக்கி ஒரு வயிற்றைத் தந்திருக்கிறாரே! என்ன குறிப்போடு இப்படிச் செய்திருக்கிறார்?

மாமன்: அதன் கருத்துத் தெளிவாகத் தெரியவில்லையே.

மருகன்: நான் சொல்லட்டுமா?

மாமன்: சொல்லுக.

மருகன்: இரண்டு கைகளும் உழைத்து வயிற்றுக்குத் தந்துவிட்டுத் தாம் ஒரு பலனையும் வேண்டாது இருத்தல்போல் நல்ல மேன்மக்கள் அரிய வினைகள் பலசெய்து பிறர் இன்புற உதவி என்றும் பரோபகாரிகளாய் இருக்க வேண்டும் என்பதை உணர்த்தற்காகவே இவ்வாறு அமைத்திருக்கிறார்; இந்த அமைதியை உணராமல் தந்நலமே கருதிப் படுலோபிகளாய் இழிந்து மனிதர் பலர் கீழ்மையாளராய்ப் பாழ்படுகின்றனர்.

இதனைக் கேட்டதும் மாமன் வாட்டம் அடைந்தான். தன்னைச் சுட்டியே திட்டியுள்ளதைத் தெரிந்துவெட்கிப்போனான். பிறரை நளினமாக இகழ்பவன் வலிமையாக எள்ளப்படுவான் என்பதை உலகம் அறிய இச்சரிதம் உணர்த்தி நின்றது.

---

169. சிறுமொழி யாடிச் சிலுகு புரியும்
வறுமொழி யாளர் வரினே—மறுமொழி
கூறா தகல்க குறுகின் பழிதுயர்
வேறா விளையும் விரைந்து. (௯)

இ-ள்.

சிறு மொழிகளைப் பேசிச் சிலுகு புரிகின்ற வறுமொழியாளரைக் காணின் மறுமொழி கூறாமல் உடனே அகலுக; அகலாது நிற்பின் பழியும் துயரும் விளையும் என்றவாறு.

இது, குறும்புக்காரரைக் கூடாதே என்கின்றது.

சிறுமொழி என்றது கேலி குறும்பு கோள் முதலிய ஈன வார்த்தைகளை. தம்மை மருவினரைச் சிறுமைப் படுத்தி வருதலால் சிறுமொழி என நேர்ந்தன. சிலுகு=சேட்டை, கலகம்.

வறுமொழியாளர் என்றது வீண் வார்த்தைகளையே விழைந்து பேசி யாண்டும் நுழைந்து திரியும் வீணர்களை.

பொருள் அற்ற புன்சொல் வறுமொழி என வந்தது.

கெட்ட வார்த்தைகளையே பேசித்திரிகின்ற பட்டிகளைக் கிட்ட நெருங்கவிடின் தொத்துவியாதிகள்போல் ஒட்டிக்கெடுத்து விடுவர்; அக்கெடு காலிகளின் வாய்க்கு எட்டாமல் ஒதுங்கிவிடுக

நீ மறுமொழி கூறின் அச்சிறுமொழி உன்னைச் சிறுமைப் படுத்திவிடும். என்னை? வறுமொழியாளர் வாய்திறந்தால் இழி

மொழிகளே வெளிவரும்; அவை உன் உள்ளத்தைக் கெடுத்து எவ்வழியும் எள்ளற்பாடே விளைக்கும் என்க.

பழிதுயர் விளையும் என்றது கொடியாரது கொடுமொழியால் மனம் கெடும்; அது கெடவே எல்லாத் தீமைகளும் எளிதே புகுந்து அல்லல் பல பயந்து அழிவுதரும்; அதனை எதிரறிந்து இனிது தெளிக என விளைவு உணர்த்தி விளக்கியபடியிது.

கேலிக்குறும்புகள் செய்யும் காலிகளை அணுகாதே என்பதாம்.

---

170. பல்லார் இடையே பரிகாசம் செய்துவாய்
வல்லார் எனவே மனங்களிக்கும்—பொல்லாரை
நாக்குத்தேள் என்றெண்ணி நண்ணுதே எவ்வழியும்
நீக்கி விடுக நெடிது. (ய)

இ-ள்.

பலர் நடுவே பரிகாச வார்த்தைகளைப் பேசி அதனால் தம்மைச் சமர்த்தராகக் கருதிக் களிக்கும் இழிமக்களை நாக்குத்தேள்களாக நினைந்து அயலே நீக்கி விடுக என்றவாறு.

நண்ணுதே=நெருங்காதே. நெடிது=நெடுந்தூரம்.

வல்லார் எனவே மனம் களிக்கும் என்றது அப்பொல்லாதாரது புன்மை நிலை உணர வந்தது.

பிறரைக் குறும்பாக இகழ்ந்துபேசி அதில் தம்மைக் கெட்டிக்காரராக எண்ணிக் களித்தலால், அந்த மட்டிகளுடைய வாழ்வும் சூழ்வும் வறிதே பாழ்பட்டுள்ளமை வெளிப்பட்டு நின்றது.

நல்லது பேசும் வாயால் நவை பேசி வல்லவர் எனச்செருக்கும் புல்லியரைப் பொல்லார் என்றது அவரது புலைத்தீமையின் நிலை நோக்கி.

நாக்குத் தேள்=நாக்கையுடைய தேள். கருந்தேள், செந்தேள், கொள்ளித்தேள் எனத் தேளில் பலவகை உண்டு. அந்தப் பழைய சிருட்டிகளினும் வேறுபாடுடையதாய் இங்கே இது ஒரு புதுமை தோன்ற வந்தது.

தேளுக்குக் கொடுக்கில் விடம்; குறும்பனுக்கு நாக்கில் விடம். தேள் கிட்டவந்து நம் உடம்பை ஒட்டிக் கொட்டிய

பொழுதுதான் கடுத்துவருத்தும்; குறும்பன் எட்ட நின்று நாவை அசைத்தாலே சொல்விடம் துள்ளிப் பாய்ந்து உள்ளத்தைச் சுட்டு உயிர் துடிக்கச்செய்யும். தேட் கடுப்பு ஒரு நாட் கழிப்பின் தானாக நீங்கிப்போம். அந்தப் பொல்லாத சொல் கடுப்பு ஆயுள் வரையும் தீயுள் வைத்ததுபோல் நோயுள்வைக்கும்.

குறுமொழியாளனை உருவம் நோக்கி ஆள் என எண்ணி அருகே அணுகாதே; ஒரு கொடிய நாக்குத்தேள் என்று உணர்ந்து அயலே விரைந்து தள்ளிவிடுக.

வீணே பிறரைப் பரிகசித்துப் பழிக்கும் இழி குறும்பால் அழிதுயர் நேரும் ஆதலால் அவரை எவ்வழியும் நெருங்காமல் அஞ்சி நீங்கவேண்டும் என்க.

பகையின்று பல்லார் பழிஎடுத் தோதி
நகைஒன்றே நன்பயனாக் கொள்வான் பயமின்று
மெய்விதிர்ப்புக்காண்பான் கொடிறுடைத்துக்கொல்வான்போல்
கைவிதிர்த் தஞ்சப் படும். (நீதிநெறிவிளக்கம், 73.)

பழி கூறுவோனைக் கொலைகாரனாக அஞ்சவேண்டும் என இஃது உணர்த்தி நிற்கும் அழகை ஊன்றிப்பார்க்க.

---

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

சொல்லால் மனிதன் நிலையை அறியலாம்.
வீண்வார்த்தை பேசுகின்றவன் வீணன் ஆகின்றான்.
முழுமூடன் என்பதை மொழி காட்டுகின்றது.
பயனில பகர்வோர் பதர்கள் என நின்றார்.
வெறுமொழி நிறையின் அறிவொளி குறையும்.
புல்லிய சொல்லால் அல்லல்கள் விளையும்.
இழிவுரை கூறுவோன் இழிக்கப்படுவான்.
பிறர்பிழை பேசல் பெரும் பிழையாகும்.
குறும்பு பேசுவோனைக் கூடலாகாது.
நாக்குத்தேள் என அவனை நீக்கி விடுக.

கஎ வது குறும்பு முற்றிற்று.

---

# பதினெட்டாம் அதிகாரம்.

## தாய்மொழி.

மனிதனுக்குத் தனி உரிமையாக வாய்த்துள்ள இனிய நாவைப் பொய் முதலியன பேசிப் புலைப்படுத்தாமல் புனிதமாகப் பாதுகாத்து வரவேண்டும் என்பதை இதுவரை உணர்ந்து வந்தோம்; இனி, அந் நாவால் அடைந்து கொள்ள வேண்டிய சிறந்த பயனை விழைந்து காண வருகின்றோம். பேசும் இயல்பால் மனிதன் உயர்ந்துள்ளான்; அங்ஙனம் உயர்ந்தவன் அப் பேச்சுக்கு மூலமான மொழியை நன்றியறிவோடு நன்கு பயிலவேண்டும் ஆதலால் அம்மொழியின் கிழமையை வழிமுறையே இஃது உணர்த்துகின்றது. அதிகார அமைதியை ஆய்ந்து கொள்க.

171. அம்மா எனமொழிந்த அம்மொழியை ஆய்ந்துகற்றார்
இம்மா நிலம்பிறந்த இன்படைந்தார்—சும்மாவாய்
பேசி உழலுவார் பேசாத வாயினராய்
ஆசில் இழிவர் அயர்ந்து. (க)

இ-ள்.

குழவிப் பருவத்தில் அம்மா! என்று முதலில் வாய்திறந்து பேசிய அந்தத் தாய் மொழியை உவந்து கற்றவர் பிறந்த பயனைப் பெற்றவர்; அங்ஙனம் கல்லாமல் பேச்சளவில் நின்றவர் பின்பு பேசாவாயராய்ப் பிழைபட்டு இழிவர் என்றவாறு.

இது, தாய் மொழியின் தகைமை கூறுகின்றது.

செய்மொழியும் வாய்மொழியே தாய்மொழிஎன்றது, அதன் இயல் உரிமையும் உயர் நிலைமையும் உணர வந்தது.

பிறந்த குழந்தை இயல்பாகப் பேசத் தொடங்குங்கால் அம்மா எனவே தொடங்குகின்றது; அந்த எழுத்தும் ஒலியும் மிகவும் மென்மையாகவும் எளிமையாகவும் உள்ளன; சும்மா வாய்திறக்கும்போதே அம்மா எனும் தொனியே எழுகின்றது.

பசுவும்கூடக் கன்றை நினைந்து கத்துங்கால் அம்மா என ஒலித்தலை அறியலாகும். இதய ஒலியின் இயல்பு தெளிக.

இங்ஙனம் தனி உரிமையாக இனிது வாய்த்த தாய்மொழியை ஒவ்வொருவரும் ஆன்ற ஆர்வத்துடன் ஊன்றிப் படிக்க

வேண்டும்; அவ்வாறு படித்தவரே மனிதப் பிறப்பின் மாட்சியை அடைந்தவர் ஆகின்றார்.

நூல்களைப் படியாமல் வெறும் வாய்ப் பேச்சு அளவில் காலம் கழிப்பவர் மொழியின் விழுமிய பயனை இழந்து வீணே இழிந்துபடுகின்றார்.

முன்னோர்களுடைய உயர்ந்த எண்ணங்களையும் கலைப்பண்புகளையும் காணாமல் உளக் கண் குருடுபட்டு உண்டதையே உண்டு, உழைத்ததையே உழைத்து ஒழிந்து போதலால் விலங்கினங்களாய் அவர் விலகலாயினர்.

"பேசாத வாயினராய் ஆசில் இழிவர்" என்றது பேசக் கிடைத்த அரிய பிறவியை அடைந்தும் அதனைச் சரியாகப் பயன்படுத்தாமல் வறிதே பாழ்படுத்தினமையால் ஊமைகளாகவும் மிருகங்களாகவும் மருவியபடியாய் அவர் மறுகி அழிவார் என்றவாறு. ஆசு = குற்றம். அயர்ந்து = மயங்கி.

வாய்மொழியும் பாக்கியத்தைப்பெற்ற நீ பிறப்புரிமையாய்க் கிடைத்துள்ள உனது தாய் மொழியைச் சிறப்பாக மதித்துப் படித்துக்கொள்ளவேண்டும் என்பது கருத்து.

---

172\. பாலருந்தும் போதே படிந்த மொழிபயின்று
நூலருந்தி இன்பம் நுகராயேல்—மேலிருந்து
வந்த மரபின் வரவென்னும் நீ கொஞ்சம்
அந்த வகையை அறி. (உ)

இ-ள்,

பால் குடிக்கும் பொழுதே உன்பால் படிந்த மொழியைப் பயின்று முடிந்த நூல்களை உணர்ந்து சிறந்த இன்பத்தை நுகரவில்லையானால், உயர்ந்த மனிதனாய் நீ பிறந்து வந்ததனால் யாது பயன்? அதனைச் சிறிது சிந்தனை செய்து தெரிக என்றவாறு.

குழவிப் பருவத்தே குதலைவாய் திறந்து மழலைமொழிபேசிய வளமையைக் குறித்தது அம்மொழியின் கிழமையை உணர.

படிந்த = இயல்பாக அமைந்த. தாய்ப் பாலோடு தழுவி வளர்ந்த வாய்ப்பால் என்க. படிந்த மொழியைப் படித்த வழியே பால்குடித்து வளர்ந்த பயனை அடைந்த படியாம்.

பயின்று என்றது பயிற்சியின் முயற்சி நிலைகள் தெரிய.

மொழியைத் தெளிவாக முதலில் படித்துத் தேறிய பின்பு தான் அதில் விளைந்துள்ள நூல்களை நுழைந்து காண முடியும் ஆதலால் அம்முறை தெரிய மொழிப் பயிற்சி முன்னுற வந்தது.

நூல் அருந்தி என்றமையால் அதன் சால்பு அறிந்து கொள்ளலாம். அருந்தல் = உண்டல். உணர்வுக்கு இனிய உணவு என்க. அறியாப் பிள்ளைக்குப் பால் போல் அறியும் மனிதனுக்கு நூல். அது உடலை வளர்க்கும்; இது உயிரை வளர்க்கும். அது வாயால் பருகுவது; இது அறிவால் அருந்துவது.

தாய் வலியவந்து ஊட்டுதலால் பாலை எளிதில் அருந்தலாம்; இவன் வலிந்து புகுந்து முயன்று பயின்ற போதுதான் நூலை அருந்த முடியும்: அம்முடிவை அடை உணர்த்தி நின்றது.

பால் அருந்திப் பாலகனாய் இருந்த நீ நூல் அருந்தி மேலோன் ஆய்த் திருந்துக. உயர்ந்த உணர்வின்பமான நூலின் சுவையை மனிதன் நுகரவில்லையானால் அவன் பிறந்த பிறப்பு இழிந்ததாய்க் கழிந்து படுகின்றது.

மேல் இருந்து வந்த மரபின் வரவு என்னும்?

ஆடு மாடு முதலிய இழிந்த பிறவிகளை யெல்லாம் கடந்து உயர்ந்த மனித மரபில் எழுந்ததற்குப் பயன் உணர்வு நூல்களை ஓர்ந்து சால்புடையனாய் மேன்மை அடைதலேயாம். அஃது இல்லையாயின் அப் பிறப்பு பிழை பட்டதாம் என்க.

" அந்த வகையை நீ கொஞ்சம் அறி " என்றது மனிதனாய் வந்துள்ள உனது நிலைமையைச் சிறிது சிந்தனை செய்து பார் என்றபடி. அரிய பிறவியில் பிறந்துள்ள நீ உரிய மொழியைப் பயின்று பெரிய நூல்களை ஆய்ந்து பேரின்பம் பெறுக என்பது கருத்து.

---

173, தான்பிறந்த தாய்மொழியைச் சார்ந்துநன்கு கல்லாமல்
கான்பறந்து வேறொன்று கற்றுநிற்றல்—மான்பிறந்த
ஆடை புனையா தணியணிந்து நோக்குதல்போல்
பீடை பெருகும் பிழை. (ரு)

இ-ள்,

தனது தாய் மொழியை ஒருவன் உவந்து படியாமல் அயல் மொழியை விழைந்து படித்தல் ஆடை வனையாமல் அணிகளை அணிந்து கொள்வதுபோல் ஓர் பிழைபாடான பீடையாம் என்க.

இது தாய்மொழிப் பயிற்சியின் தகவுரைக்கின்றது.

சார்ந்து நன்கு கற்றல் = தகுந்த ஆசிரியரை அடுத்து வரன் முறையாகப்பயின்று தெளிதல். உள்ளம் பதிந்து ஊன்றிப்பயிலின் உணர்வு நலங்கள் பெருகும் என்க. மேலெழுந்தபடி பாராதே; நூல்களை அழுந்தி நோக்குக என்றபடி.

கான் பறந்து என்றது இயல்பான நாட்டு மொழியை விட்டு அயலான காட்டு மொழியை விழைந்து மயலுழந்து ஓடும் அச் செயல் தெரிய வந்தது.

வேறு ஒன்று என்றது அந்நிய மொழியை. தன் பேச்சுவழக் கோடு மாறுபட்டுள்ளமையான் வேறு என நேர்ந்தது.

வாய் மொழிகின்றதைத் தாய் மொழி என்றது இயற்கை இனிமை எளிமை தெளிவு உரிமை பெருமை முதலிய உறுதி நலங்களை நோக்கி. அதனை ஆடை என்று குறித்தது, இன்றியமை யாத அதன் இயல்பும் உயர்வும் கருதி.

தான் பிறந்த நாட்டிற்கு உரிய இனியமொழியை உரிமை யோடு உவந்து கல்லாமல், அயல் நாட்டு மொழியை அலந்து கற்றல் அரையில் உடை உடுக்காமல் உடலில் அணி அணிந்து உள்ளம் களிப்பது போல் ஒரு பித்தமயக்கமான எள்ளற் பாடாம்.

ஆடை யில்லாமல் நிருவாணமாயுள்ள ஒருவன் காதில் கடுக் கன், கழுத்தில் மணிவடம், கையில் கடகம், விரலில் மோதிரம் முதலியன அணிந்து கொண்டு வீதி நடுவே போனால் அந்தக் காட்சி எப்படி யிருக்கும்? அது போல் தன் சொந்த மொழியை முந்திப்படியாமல் அயலானதை மயலோடு படித்துஆடம்பரமாய்ப் பிலுக்கி வெளி வருவார் நிலையும் இழிப்பிற்கே இடமாம்.

தாய்மொழியை இழந்து தருக்கி வருகின்ற அவரை இகழ்ந்து நோக்காமல் புகழ்ந்து ஊக்குவரேல் அவர் நாட்டுணர்ச்சி யில்லாத காட்டு மாக்களே யாவார்.

ஆடைக்குப் பின் அணி என்றபடி. தன் மொழியைத் தகவு டன் கற்றபின் மற்ற அந்நிய மொழிகளையும் ஆர்வமுடன் கற்க லாம். ஆடை அணி என்ற உவமைகளால் பொருள் நிலைகளை ஊன்றி உணர்ந்து உண்மையான உறுதி நலங்களை ஓர்ந்து கொள்க.

ஆடை யுடையவன் அணி அணிந்து கொண்டால் அழகாம்; தன் மொழி பயின்று தெளிந்தவன் மன் மொழி பயிலின் மாண்பாம் என்க. உன்னதை முன்னதாக உன்னி உயர்க.

தனக்கு உரிமையான மொழியை உணராதவன் தனது முன்னோர்களுடைய அருமையான உணர்வு நலங்களையெல்லாம் ஒருங்கே இழந்தவனுகின்றான்; அந்த இழவு நேராமல் உளவறிந்து கற்று உற்ற பிறவியை உயர்வு செய்து கொள்ளுக.

ஒவ்வொருவரும் தத்தமக்குரிய தாய்மொழியை மூந்துற நன்கு கற்றறிந்து கொள்ள வேண்டும் என்பது கருத்து.

---

174. ஈன்றெடுத்த மாதாவை எள்ளி இகழ்ந்தொதுக்கி
ஊன்றொடுத்த பெண்ணைவிழைந் துள்மயங்கி—ஏன்றெடுத்துத்
தாங்கி அலைவார்போல் தாய்மொழியை விட்டயலே
ஏங்கி யுழலல் இளிவு. (௪)

இ-ள்.

பெற்ற தாயை உவந்து பேணுமல் இகழ்ந்து கைவிட்டுப் புதிதாய் உற்ற ஒருத்தியை நயந்து களிக்கும் களியர் போல உரிய மொழியை விழைந்து கொள்ளாமல் அயலே நுழைந்து திரிதல் இளிவாம் என்றவாறு.

தமிழ் தாய்போல் கண் கண்ட தெய்வம்; அதனைக் கருதி உணர்ந்து உறுதி பெறுக; காணுதனைக் காதலித்து விழி கண் குருடாய் வீணே இழிந்து படாதே என இனத்தவர்க்கு இது இதம் புகல்கின்றது.

ஊன் தொடுத்த பெண்=சதைப்பற்றுள்ள மங்கை. எதைப் பற்றி விழைந்து உழல்கின்றுனே அந்த உருவநிலையும் பருவ அமைதியும் உணர வந்தது, விழைவையும் நுழைவையும் விளக்கிய படியிது.

உள் மயங்கி என்றது அதி மோகியாய் மதி மயங்கிப் பெண் ஏவல் செய்துவரும் பேதைமையை எண்ணவந்தது.

அன்னை என்பவள் மூன் அறி தெய்வமாய் முதன்மை எய்தியுள்ளவள். பத்து மாதம் சுமந்து பெற்றுப் பால் ஊட்டித் தால் ஆட்டி வளர்த்து வாலிபம் செய்து விட்டவள். யாண்டும் உள்ளம்

உருகி உரிமை கூர்ந்து வருபவள். அத்தகைய அருமைத் தாயை ஆர்வமுடன் ஓம்பி ஆதரியாமல் இடையே புகுந்த மனைவியிடம் மால் கொண்டு அவள் சொன்னபடியெல்லாம் தொழும்பு புரிந்து இழிந்து திரிவாரை ஈண்டு உவமையாக எடுத்துக் காட்டியது, உவமேயமாகக் குறித்த பொருளைக் கருத்தூன்றி உணர்ந்து கழிந்ததற்கு இரங்கித் திருத்தமடைந்து கொள்ள.

வீட்டில் பேசி வருகின்ற நாட்டு மொழியைத் தாயோடு ஒப்பவைத்தது, அதன் தகைமை கருதி. தாய், உடலைப் பேணி உருவை வளர்க்கின்றாள்; மொழி, அறிவைப் பேணி உயிரை வளர்க்கின்றது. பெற்ற தாய் போலவே உற்ற மொழியும் மக்களுக்கு உரிமை சுரந்து உணர்வுநலம் உதவி உயர்வு புரிந்தருள்கின்றது.

பால் குடிக்கும் போதே தால் குடித்துப் பழகிவந்த வாய்மொழி எளிமைகனிந்த அளியோடு இனிய ஒளி உதவிவருதலால் தாய்மொழி என உரிமை கூர்ந்து உரையாட நேர்ந்தது.

எந்த நாட்டவரும் தம்தம் சொந்தப்பேச்சைத் தாய்மொழி என்றே அன்புரிமையுடன் வழங்கி வருகின்றனர். தந்தைமொழி, பெண்டாட்டி மொழி, பிள்ளைமொழி என யாண்டும் எவரும் வழங்குவதில்லை. ஆகவே தாய் மொழி மிகவும் பயபத்தியுடன் பாராட்டத்தக்கது என்னும் நயனும் வியனும் நன்கு புலனும்.

பிறந்த மொழியை விழைந்து படியாதவன் பெற்ற தாயை இகழ்ந்த படியாய் இழிந்து படுகின்றான். மாதாவை இழந்தவன் நீதாயுழந்து சீரழிந்துழலுதல் போல் ஆதாரமான உரிய மொழியை ஓதாது ஒழிந்தவன் அறிவு கேடனாய் வறுமையிலுழந்து சிறுமை மிக அடைகின்றான்.

அயல் மொழியை அவாவி மயல் மிகுந்து உழலாதே; உனது இயல் மொழியைப் பயின்று உயர்வடைந்து கொள்க.

---

175. தாயின்பால் போலத் தமிழ்க்கல்வி தானிருக்கப்
பேயின்பால் வேட்டுழலும் பேயர்போல்—மாயம்
பயிலும் அயல்மொழியே பன்னி மயலார்
செயலில் இழிவர் செறிந்து. (இ)

இ·ள்.

தாயின் பால் போல இயல்பான இனிய தமிழ் மொழியைப் பயிலாது விட்டுப் பேயின் பாலை விரும்பி உழலும் பேயர் போல மயலான அயல் மொழியை விழைந்து திரிந்து பலர் செயல் இழிந்து படுகின்றார் என்றவாறு.

தமிழ்க் கல்வியைத் தாயின்பால் என்றது அதன் உள்ளப் பண்பும் உரிமையும் இனிமையும் உறுதியும் கருதி.

பேயின் பால் என்றது அந்நிய பாடையை. ஈன்ற தாயை இகழ்ந்து தூற்றும்படி மனந்திரிந்து மயல்ஏற்றித் தூய்மை ஒழுக்கங்களைத் தொலைத்துத் தீமைகளில் களிப்பூட்டி மனிதனைப் பிசாசு ஆக மாற்றி விடுதலால் அது பேய்ப்பால் என வந்தது.

இவ் இரண்டனுள் முன்னது இனிமைப் பண்பு குறித்தது. பின்னது ஆறும் வேற்றுமை உருபாய் நின்றது.

பேய்ப்பால் குடிக்கவே தாய்ப்பால் புளித்தது. காமப்பாலும் தீமைப்பாலும் ஏமப்பால்களாய் எப்பாலும் எழுந்து வளைந்தன.

தன் நாட்டம் பட்டபோதே இனிய இந்நாட்டவர் இன்று நாட்டமுடையராய் இறுமாந்து எழலாயினர். களிப்பு மீதூர்ந்து வெளிப்பகட்டாய்க் கிளர்ந்துள்ள அவ்வெழுச்சி உள்ளுயிரைப் பாழாக்கி ஊனம் விளைத்துள்ளமையை உணரும் தோறும் உள்ளம் உருகி அயர்ந்து பரிவு மீதூர்கின்றது.

வேட்டு உழலும் பேயர் என்றது பேய்த் தன்மையைப் பெருக்கித் தம்மை அவமாக்கும் அவலநிலையை உணராமல் அதனை அவாவி அலையும் அவாது பேதைமைக்கு இரங்கிய வாறும்.

உயிரைப் புனிதமாக்கி எவ்வழியும் இனிமையாய் உய்தி தருகின்ற செவ்விய உனது தாய்மொழியைப் பயிலுக; திவ்விய மகிமைகள் உளவாம். பேய்மொழி பயிலின் முதலில் வாய்மொழிந்து வயிறு வளர்ப்பினும் பின்பு நோய் மலிந்து நொந்துபட நேர்கின்றாய்! இதனைச் சிந்தனை செய்து கொள்க. தாய்ப்பால் அருந்திய பின் பேய்ப்பால் பருகின் அதனால் அவ்வளவு பிழை நேராது வெறும் வயிற்றில் அதனைக் குடியாதே.

பொருட்கேடு அறிவுக்கேடு முதலாகப் பலகேடுகளை நிலையாக விளைத்து வரினும் தன்னையே தலையாகக் காதலித்து வரும்படி

மக்களை மயக்கி நிற்றலால் "மாயம் பயிலும் அயல்மொழி" என அதன் இயல் தெளிய வந்தது.

தாய் எனத் தழுவித் தனக்கு உயிர்க்கேடு செய்ய வந்த பேயைக் கண்ணபிரான் ஒழித்ததுபோல் இம் மண்ணவர் உண் மயக்கம் ஒழிந்து கண் விழிக்க வேண்டும்.

அயல் மொழியில் மயலுழந்து படாதே; உரிமையான உனது இயல் மொழியை உறுதியுடன் நயன் உணர்ந்து பயிலுக. அப்பயிற்சி உண்மையான உயர்ச்சி நலங்களை உதவியருளும்.

---

176. தந்தம் மொழியில் தலைமைப் புலமைகொண்டு
வந்த மொழிபயிலல் மாண்பாகும்—சொந்தமொழி
முந்த உணராமல் முண்டி அயலோடல்
அந்தகமே அன்றோ அது. (சு)

இ-ள்.

தமக்கு உரிய தாய் மொழியில் தலைமையான புலமை அடைந்தபின் அயல் மொழியில் பயிலல் நலமாம்; அங்ஙனம் சொந்தமானதை முந்துறப் பயிலாமல் வேற்று மொழியை விழைந்து ஓடல் இழிந்த மருளாம் என்றவாறு.

தம் தம் என்றது மக்கள் இனங்களைச் சுட்டியது. உலகில் பல நாடுகள் உள்ளன. ஒவ்வொரு நாட்டினரும் தனித் தனியே தமக்கு என உரிய மொழியை வழக்கமாய்ப் பேசி வருகின்றனர். பழக்கமான சுயமொழியில் அம் முன்னோர்களுடைய எண்ணங்களும் அனுபவங்களும் சரித்திரங்களும் நூல்களாய் வெளி வந்துள்ளன. சொந்த மொழியாளருக்கு அந் நூல்கள் எளிதாகவும் இனிமையாகவும் தெளிவாம். ஆகவே அந்தக் கல்வியறிவு வேறு எந்த மொழி நூல்களையும் எளிதில் அறிவதற்கு வழியாய் ஒளி செய்து அருளும் ஆதலால் தாய்மொழிப் பயிற்சி ஒவ்வொரு மனிதனுக்கும் உள்ளுறுதியாய் உயர்ச்சி புரிகின்றது.

சுயமொழி உணர்வை முதலில் பெற்று அயல்மொழி பயில்க. அப்பயிற்சி ஒளியுற்ற விழிபோல் எதையும் தெளிவாக விரைந்து கண்டு உயர்ந்து கொள்ள இனிதாய் உதவுகின்றது.

வந்தமொழி என்றது இடையே நாட்டுள் வந்து புகுந்தது என அதன் வேற்றுமை தெரிய வந்தது. பிறப்புரிமையாக உற்ற மொழியை முன்பு முற்றக் கற்று, பின்பு மற்றதைப் பார். அப் பார்வை சீர்மை பயக்கும்.

முண்டி அயல் ஓடல் என்றது ஏதோ புதையல் கண்டவர் போல் அந்நிய பாடை மேல் மோகம் கொண்டு அவாவிப்பாய்ந்து அறிவு மாய்ந்து படுகின்ற அவரது மாய மயக்கத்தைக் குறித்தது.

அந்நியத்தை மிக மதித்துத் தன்னதை அவமதித்தல் கொடுமையான மடமையாகும் ஆதலால் குருட்டுத் தனமான அம் மடத்தனத்தை நினைந்து, "அது அந்தகமே அன்றோ?" என்று சிந்தை கவல நேர்ந்தது. அந்தகம் = குருடு. உண்மை உணர்ச்சியின்றி உழன்று படுதலை உணர்த்தி நின்றது.

சொந்த மொழியை முந்துறப்படியாமல் இடையே வந்ததைச் சிந்தையுள் படியவிடின், அது உன் பிறப்பு நலனை மாற்றிப் பிழை மிகச் செய்யும். படித்த மொழிப்படியே மனிதன் தடித்து வளர்கின்றான். இனிய இயல்மொழி பயிலின் மனிதன் கனிவு மிகவுடையனாய்க் கனிந்து திகழ்கின்றான்.

இயற்கை யுரிமையாய் அமைந்ததே எவர்க்கும் இனிமையாகும். தெய்வக் கொடையாய் வந்துள்ள உன் சொந்த மொழியை முந்துற உரிமையோடு படியாது அயலில் மயலாய் ஒழியின் அது தெய்வத்தையும் தேசத்தையும் நிந்தனை செய்த படியாம்; அதனை யோசனை செய்து உரிமையை ஓர்ந்து கற்று உயர்ந்து கொள்ளுக.

---

177. தாகம் தணியநல்ல தண்ணீர் பருகாமல்
சாக மதுவருந்தும் தன்மைபோல்—ஊகம்
பெருக்குமுயர் கல்விநலம் பேணுமல் வீணே
பரக்கப் பயிலல் பழி. (எ)

இ-ள்.

உணர்வைப் பெருக்கி உயிர்க்கு உறுதிதருகின்ற உயர்ந்த கல்வியைக் கல்லாமல் இழிந்தன பயின்று வீணே உழந்து படுதல் ஈனம் என்றவாறு.

இது, நல்ல மொழியை நயந்து பயில்க என்கின்றது.
ஊகம் = நுண்ணிய அறிவு நலம்

தண்ணீர் தாய் மொழியையும், மது அந்நிய மொழியையும் குறிப்பாக உணர்த்தி நின்றன. இனிமையான குளிர்ந்த நீர் பருகின் உயிர்க்கு இதமாய் இன்பம் பயக்கும். கள் அருந்தின், வெறியைக் கிளப்பி வெம்மை விளைக்கும்.

தண்ணளி நிறைந்து யாண்டும் புண்ணிய நீர்மையாய்ப் பொலிந்துள்ள புனிதத் தமிழை இனிது படித்தால் மனிதன் சிறந்த மனநலமும் உயர்ந்த மதிநலமும் பொருந்தி மறுமை நோக்குடன் மாண்புறுகின்றான். அங்ஙனம் அருமைத் தாய் மொழியை உணர்ந்து பயிலாமல் அயல் மொழியை விழைந்து நின்றால், அது மேலெழுந்த படியாய் மேனி மினுக்கி வெறியனுக்கி வறிதே அல் வழியில் ஈர்த்துப் போம்; அப் போக்கின் புலையினை நோக்கி நிலையான ஆக்கத்தை நீ தலைமையாக ஓர்ந்து கொள்க.

தாகம் தீர நல்ல தண்ணீரைப் பருகுவது போல் உன் சோகம் தீர இனிய தமிழைப் படி; அயலானதில் மோகம் படியாதே! படின், சாக மது அருந்தியது போல் நீ போக நேரும் என்க.

தமிழைத் தண்ணீரோடு ஒப்புரைத்தது இயற்கை உணவாய் இன்புறுதல் கருதி. எளிமையும் இனிமையும் உரிமையும் உடைய விழுமிய மொழியைப் பயின்று மெய்யான மேன்மையுறுக. பொய்யான களிமயக்கில் புகுந்து புலையுறாதே.

குடிப்பது ஒன்றாயினும் தண்ணீரும் கள்ளும் வேறு வேறு நிலைகளை விளைத்து விடுகின்றன. படிப்பது ஒன்றாயினும் நல்ல தாய் மொழி புரியும் நயனும் பயனும் அல்லாத மொழியில் அமையா.

இனிமைப் பண்பமைந்து இன்ப நிலையமாயுள்ள உன் சொந்தத் தமிழை அன்புரிமையுடன் நன்கு படித்துக் கொள்ளுக.

---

178. பெற்று வளர்த்துவிட்ட பிள்ளையொரு பெண்கூடி
உற்றதாய் ஓம்பா தொழிதல்போல்—இற்றைநாள்
நம்மனோர் நந்தமிழை நாடா தயலோடி
வெம்மை புரிகின்றார் வீழ்ந்து. (அ)

இ-ள்.

ஒரு பெண்ணைக் கலியாணம் செய்து கொண்டு தன்னைப் பெற்ற தாயை அவமதித்து நிற்கும் அவமகனைப் போல இந்நாளில்

நம்மவர் நமது தாய் மொழியை இகழ்ந்து பேய்வழியாய் விரைந்து பிழை பட்டுள்ளனர் என்றவாறு.

தாய்மொழி மிகவும் சிறந்தது; அதனை எவரும் உரிமையோடு பேணி வரவேண்டும் என மேலே கண்டோம்; இதில் நமது நாட்டவர் நிலைமையைக் காண்கின்றோம்.

பெறுதல் வளர்த்தல்களைக் குறித்தது தாயின் உரிமையும் உதவியும் உணர. பிள்ளை பெரியவன் ஆனவுடன் ஒரு மகளை மணந்து கொள்கிறான். பின்பு அம் மனைவியின் சொல் வழியே மாலுழந்து திரிகின்றான். அத்தையலின் மையலால் தாய் தந்தையர்களை மறந்து விடுகின்றான். அப் பேய்மகன் நிலைமை இங்கே தாய் மொழியைத் துறந்து ஒழியும் சேய்களுக்கு உவமையாய் வந்தது.

பால் அருந்தும் பொழுதே வாய் மொழிந்து வந்த தமிழை வயது ஏறியவுடனே அறவே மறந்து விட்டு வேறொரு மொழியை விழைந்து நம்மக்கள் விரைந்து படுகின்றார். இப் பாடு இந்நாட்டில் பழி நிலையில் வளர்ந்திருக்கின்றது.

வயிறு வளர்த்தற்காக வாய் மொழிகின்ற ஒன்றை மேலாக மதித்து மாலுழந்து நிற்கின்றார்; அங்ஙனம் நின்றதோடு அமையாமல் உயிரை வளர்த்தருளும் அருமைத் தாய்மொழியைக் கீழாக எண்ணிப் பாழ்வாய் திறந்து பழி கூறவும் நேர்கின்றார்; இது எவ்வளவு கொடுமை! எத்துணை மடமை! எத்தகைய நன்றி மறப்பு! உய்த்துணர வேண்டும்.

அதிகாரம், பொருள், கொஞ்சம் பகட்டு மதிப்பு அந்நிய மொழியால் அடைகின்றாய்; உயிரின்பம் அருளொழுக்கம் உண்மைநிலை முதலிய உயர் நலங்களெல்லாம் உன் மொழியால் பெறுகின்றாய். முன்னது பெருமை போலக் காட்டிப்பேயாட்டம் ஆட்டி முடிவில் உன்னைச் சிறுமைப் படுத்தி ஒழியும். உன்னது, என்றும் உறுதித் துணையாய் உய்தி புரிந்து உடனிருந்து உதவி அருளும்.

இந்த அருட் செல்வத்தை மறந்து விடலாமா?

பகட்டு மனைவி போல் ஐம்பொறிகளுக்கும் வெறிமயமான பொய்யின்பத்தைப் பொருந்தக் கொடுத்தலால் அந்த இன்ப நிலையில் இழிந்து அந்நிய மொழியை நீ வியந்து கொள்ளுகின்றாய்; ஆயினும் தாய் மொழியை இகழ்ந்து தவறு படாதே.

உடலை மினுக்கி உயிரை ஒழிப்பார் போல் கடல் கடந்து வந்த வெளி மொழியை விழைந்து உள் மொழியை இகழ்ந்து பலர் ஞான சூனியராய் ஈனமடைந்துள்ளார். அவ் வீன நிலையில் மான மனிதர் மடியலாகாது.

உலக ஆடம்பரமான அதனை மையல் மதியால் மனைவிபோல் விழைந்து கொண்டாலும், உனது உரிமை மொழியை அருமைத் தாயாகப் பாவித்துப் பெருமை புரிய வேண்டும். மனைவியினும் தாய் எவ்வளவு சிறந்தவள்! அவளைத் தொழுவது தெய்வத்தைத் தொழுத படியாம்; அதனால் புகழும் புண்ணியமும் விளையும். என்றும் உனக்கு உயர்வு உண்டாகும். உண்மை தெளிந்து உன் மொழியைப் பேணி நன்மை அடைக.

---

179. மானமுள்ள மாமி வலிய மருமகள்முன்
தானடங்கி நிற்கும் தகைமைபோல்—ஞானமுயர்
நற்றமிழும் இந்நாட்டில் நண்ணியுள்ள ஆங்கிலத்தால்
பற்றழிந்த தென்பர் பலர். (கூ)

இ-ள்.

பொல்லாத மருமகள் எதிரே நல்ல மானமுள்ள மாமி அடங்கிநிற்றல் போல் ஞான நலங்கனிந்த நமது தாய் மொழி ஆங்கிலத்தால் நிலைகுலைந்து உள்ளது என அறிஞர்பலர் அவல மிகுந்து கவலை உறுகின்றனர் என்றவாறு.

தமிழ் மொழியின் தற்கால நிலைமையை உணர்த்தியபடியிது.

இந்நாட்டில் தலை நீட்டித் திரியும் தமிழர் நிலையினை முன்னம் கண்டோம்; இதில் தமிழின் நிலைமையைக் காண வந்துள்ளோம்.

ஆங்கிலம் என்பது இங்கிலாந்து தேசத்தில் பேசப்படுகின்ற மொழி. அது இந்தியாவில் வந்து ஏறி இத்தேசத்தவரைப் பாசப் படுத்தி ஆட்சி புரியும் அதிசய நிலையை எண்ணுந்தோறும் வியப்பும் விம்மிதமும் விசைத்து எழுகின்றன.

ஆங்கில மோகம் இந்நாட்டில் ஓங்கி யுள்ளதுபோல வேறு யாங்கணும் இவ்வளவுநிலையில் ஓங்கவில்லை. அதனால் தமிழ்தாழ்ந்துள்ளது போல் மற்ற எம்மொழியும் தாழவில்லை.

"தமிழ் நூல்களைத் தலைகீழாக முழுதும் படித்தாலும் ஒரு ஓலைத்தடுக்குத் தானே கிடைக்கும்; ஆங்கிலத்தில் இரண்டொரு

எழுத்துப் படித்தாலும் நல்ல நாற்காலி கிடைக்குமே!" என்று பாட்டிமாரும் பாராட்ட நேர்ந்தார். இதனால் இந்நாட்டில் அதன் சீராட்டு நிலை எவ்வளவு செழித்துள்ளது என்பது தெளிவாம்.

மானம் உள்ள மாமி என்றது தமிழை.

வலிய மருமகள் என்றது ஆங்கிலத்தை.

இந்த உவமக்குறிப்புகளால் பொருள்நிலைகளை ஓர்ந்து நன்கு உணர்ந்து கொள்ள வேண்டும். இந்நாட்டவர் ஆங்கிலவயப்பட்டுத் தமது தாய்மொழியை அவமதித்திருக்கும் பாங்கினை ஆங்கு அறிந்தோம்; ஈங்கு அதன் இயல்பினை அறிகின்றோம்.

பெண்டாட்டியைக்கொண்டாடிப் பெற்ற தாயைத்திண்டாட விட்டிருக்கும் பேதை மக்கள் நிலை பெரிதும் இரங்கத்தக்கது.

> "பெண்ஏவல் செய்தொழுகும் ஆண்மையின் நாணுடைப்
> பெண்ணே பெருமை யுடைத்து" (குறள், 907)

என்றபடி நம்மவர் நிலை புன்மை படிந்து புலைமிகுந்துள்ளது.

வீட்டுக்கு வந்த மருமகள் மேட்டிமை காட்டுவதெல்லாம் வாய்த்த கணவனது வாயிளிப்பாலேயாம். உரியவன் உணர்வுடையனாயின் உற்ற மனைவியினும் பெற்ற தாயைப் பெருமைப் படுத்தி வருவன்; அதனால் அவளும் வாயடங்கி யிருப்பள். அவன் இளிச்சவாயனாயின் வந்தவள் எல்லாரையும் தனக்குள் அடக்கிப் பொல்லாதவளாய்ப் பொங்கி நிற்பள்.

அத்தகைய பொல்லாத வாயாடியான மருமகள் எதிரே நல்ல மரியாதையுடைய மாமி மறுகி இருத்தல்போல் ஆங்கிலத்தின் முன்னே தமிழ் தனது இனிய பொலிவிழந்து இன்னல் நிலையில் நலிவடைந்துள்ளது என்க.

உண்மையை உணர்ந்து உரிமைக்கு முதலில் பெருமை கொடுத்து மக்கள் உயர்ந்துகொள்ளவேண்டும் என்பது குறிப்பு.

---

180. தாய்ப்பால் இழந்த குழவியும் தாழாத
நோய்ப்பால் விழுந்த மனிதனும்—வாய்ப்பான
தன்மொழியைத் தேராத் தனையனும் இம்மூவர்
மன்னொழிந்து நிற்பர் மருண்டு. (ம)

இ-ள்.

நேரான தாயின்பால் இழந்த பிள்ளையும், தீராத நோயின்பால் விழுந்த மனிதனும், தனது சீரான தாய் மொழியை நன்கு கல்லாத மகனும் வலியிழந்து மெலிவடைந்து மதியழிந்து மருண்டு கிடப்பர் என்றவாறு.

தன் மொழி என்றது தனக்குப் பிறப்புரிமையாய் வாய்த்த பேச்சு மொழியை. வீட்டுள் வழங்கும் நாட்டு மொழியை நன்கு கற்றுக்கொள்ள வேண்டும்; அக்கல்வி எல்லா நலங்களையும் இனிது நல்கும்; அங்ஙனம் கல்லாது கைவிடின் பொல்லாத பிழைகள் பல புகுந்து வருத்தும் என இதுவரை அறிந்து வந்தோம்; இதில் இரண்டு உவமைகளோடு இணைத்து அதன் நிலைமையும் தலைமையும் தெளிவாக உணர்த்தப்படுகின்றன.

ஈன்ற தாயினுடைய பால் குழந்தைக்கு ஆன்ற உறுதியாம். அப்பால் இன்றி வேறு எப்பால் ஊட்டினும் அது அவ்வளவு உரம் ஆகாது. இயற்கை யுரிமையாய் இனிதமைந்துள்ள உணர்வு மொழியை உயிர்க்கு உறுதியா ஓர்ந்துகொள்க.

தாழாத நோய்=நீங்காத கொடிய பிணி. பால்=இடம்.

தீராத நோய் வாய்ப்பட்ட மனிதன் உடலுறுதி குன்றித் துயருழந்து உயிர் அயர்ந்து உழல்வன்.

தேர்தல்=கல்வியை நன்கு கற்றுத் தெளிதல். மன்=வலி.

உரிய தாய்மொழியை ஊன்றிப் பயின்று பொருள்நலங்களை ஓர்ந்து தேர்ந்துகொள்ளாவழி உணர்வுவலி குன்றி ஒளிமழுங்கிப் போம். போகவே அம்மனிதன் உருவுடையனாய் வெளியில் அலையினும் உள்ளே உயிர் நிலையில் மெலிந்து இழிந்து நிற்பன்.

பால் இழந்த குழந்தையும், நோயுழந்த மனிதனும் உடல் உரங் குன்றி உயிர் தளர்ந்து படுவர் ஆதலால் நூல் இழந்த மகனோடு அவர் ஈண்டு எண்ண வந்தனர்.

மொழியைத் தேராவழி விளையும் பழி துயரங்களைத் தெளிவாக உணர்ந்துகொள்ளுமாறு எளிதா எடுத்துக்காட்டிய படியிது.

தன் சொந்த மொழியை நன்கு பயின்று மனிதன் எந்த வழியும் சிந்தை தெளிய வேண்டும் என்பது கருத்து.

## மனிதனும் மொழியும்

எண்ணரும் பிறப்பில் யாவும் கடந்து
மண்ணிடை உயர்ந்த மானுட மாய்வரல்
புண்ணிய வினையின் பொலிவே என்ப ;
விலங்கினும் மனிதன் பெரியவன் என்பது
5 பேசும் வகையில் பெருகி வந்தது ;
பிள்ளையில் தொடர்ந்து பேசிய மொழியே
ஒள்ளிய உயிரின் உயர்தாய் மொழியாய்த்
தெள்ளிய நீர்மையில் சிறந்து நின்றது ;
பிறந்த நாடும் பேசும் மொழியும்
10 சிறந்த தாயெனும் சீர்மையில் அமைந்தன ;
வாய்மொழி யானஅத் தாய்மொழி ஒன்றே
அறிவருள் ஈகை ஆண்மை வீரம்
மானம் மேன்மை மாண்புடன் நல்கும் ;
உயிரின் கிழமையாய் உற்றஅம் மொழியைப்
15 பயிலுந் தோறும் பான்மை மிகப்பெறும் ;
உரிமையின் அமைந்ததை உவந்து பேணின்
மறுமை நலங்கள் மருவி
இருமையும் பெருமையாய் இன்புற வருமே.

---

### இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

தாய்மொழி எவர்க்கும் தலைசிறந்தது.
அதனைச் சிறப்பாக மதித்துப் படிக்கவேண்டும்.
படியாது விடின் பழி படியும்.
உற்ற மொழியே பெற்ற தாயாம்.
இயல்மொழி தெளிந்தபின் அயல்மொழி பயில்க.
உரிய மொழியே உய்தி யருளும்.
மற்றது மதி மயக்கும்.
அயலில் மோகம் அவமதிப்பாகும்.
சொந்த மொழி மறந்தவர் நிந்தனையுறுவர்.
எந்த வழியும் அதனை இனிது பேணுக.

**18**-வது தாய்மொழி முற்றிற்று.

# பத்தொன்பதாம் அதிகாரம்.

## தமிழ்.

இது தமிழ் மொழியின் தலைமையும் நிலைமையும் கூறுகின்றது. நிலவகையால் பலவேறு பிரிவுகளாய் மருவியுள்ள மனித இனம் தனித்தனியே தனக்கு உரித்தாக அமைந்துள்ள மொழியை வழக்கமாய்ப் பேசி வருகின்றது. அம் முறையில் இந்நிலத்தவர் வாய் மொழிந்து வருகின்ற தமிழின் தகைமையை உணர்த்துகின்றமையால் இது தாய்மொழியின் பின் வைக்கப்பட்டது.

181. அமிழ்தம் அனைய அரிய சுவையால்
தமிழினிமை என்னும் தகையாய்—இமிழ்திரைசூழ்
ஞாலம் புகழ நளின நடம்புரியும்
கோலம் தெளிக குவிந்து. (க)

இ-ள்.

இனிய சுவையால் அமிழ்தம் என அமைந்துள்ள தமிழ் உலகம் புகழ உயர்ந்து தலைமை புரிந்து நிற்கும் நிலைமையை நினைந்து தெளிக என்றவாறு.

இது, தமிழின் தன்மை கூறுகின்றது.

அமிழ்தம் தெய்வ உணவு; அதிமதுரமானது; தன்னை உண்டவர்களை நெடிது வாழச் செய்யும் நிலையது; திவ்விய மகிமையுடையது. அத்தகைய அமிழ்தினது அரியசுவை தமிழிடம் இயல்பாக அமைந்துள்ளமையால் அது இனிமைஎன்னும் பேரால் இசைந்து கனிவு மிகுந்து வருகின்றது.

தமிழ் மொழிக்கு இனிமை என ஒரு திருநாமம் தனி அமைந்துள்ளது. இப்பெயர் அதன் இயல்பான தகைமையை நயமாக விளக்கி வியன் துலக்கி நின்றது.

"இனிமையும் நீர்மையும் தமிழ்எனல்ஆகும்," (பிங்கலந்தை)

பெயர் விளக்கம் தொகுத்த இலக்கண நூலார் இங்ஙனம் குறித்திருக்கின்றார். இயலின் குறிப்பு நுனித்து நோக்க உரியது.

"தமிழ் தழிய சாயலவர்" (சிந்தாமணி, 2026)

"தன்பால் தழுவும் குழல்வண்டு தமிழ்ப் பாட்டு இசைக்கும் தாமரையே" (இராமா. கிட்கிந்தா, பம்பாநதி, 29)

இவற்றுள் தமிழ் இனிமை என்னும் பொருளில் வந்துள்ளமை காண்க. இதன் நிலைமையை விளக்கியிருக்கும் தலைமையான விசேடணங்கள் பல.

செந்தமிழ், பைந்தமிழ், தீந்தமிழ், தண்தமிழ், வண்தமிழ், நறுந்தமிழ், பசுந்தமிழ், இருந்தமிழ், இன் தமிழ், தெய்வத் தமிழ் கன்னித்தமிழ் என இன்னவாறு நன்னய அடைகளால் பண்டு தொட்டு வழங்கப்பட்டு வருகின்றமையால் இதன் இயல்பும் உயர்வும் நயனும் பயனும் நன்கு அறியலாகும்.

"தித்திக்கும் தெள்ளமுதாய்த் தெள்ளமுதின் மேலான
முத்திக் கனியே! என் முத்தமிழே! புத்திக்குள்
உண்ணப் படுந்தேனே!" (தமிழ்விடுதூது)

தமிழை இதில் உவந்து விளித்திருக்கும் அருமை தெரிக. அறிவுக்கு விருந்தாய் அமைந்திருக்கும் அதன் உரிமையும் பெருமையும் கருதி இங்ஙனம் உருகலாயினர்.

"ஞாலம் புகழ நனிந நடம் புரியும்" என்றது உயர்ந்த மதிமான்கள் வியந்து பாராட்டிப் புகழ்ந்து போற்றத் தமிழ் வளர்ந்து வந்துள்ள வளமை கருதி. பண்டு இருந்த தலைமை உலகநிலையில் இன்று குன்றி யிருப்பினும் உணர்வுடையார் உள்ளத்தே என்றும் ஒரு படியாய் நின்று களிநடம் புரிந்து ஒளி சிறந்து வருதலால் நிகழ்காலத்தால் கூறப்பட்டது.

அருந்தவக் குரிசிலாகிய அகத்தியர் ஆதி இருடிகளும், பாண்டியன் சோழன் முதலிய முடிமன்னர்களும், பாரி குமணன் முதலிய சிற்றரசர்களும், மற்றக் குடிமக்களும் பெற்ற தாயினும் அருமையாகத் தமிழை உரிமையுடன் போற்றி வந்துள்ளனர். அந்தச் சரிதச் சான்றுகளை ஈண்டு விளக்கப் புகின் மிகவும் விரியும். இத்தகைய புனிதமான இனிய தமிழை அன்புடன் ஆய்ந்து பேணி நீ இன்பம் அடையவேண்டும் என்பது கருத்து.

---

182. பத்திச் சுவையும் பழுத்த கலைச்சுவையும்
முத்திச் சுவையும் முழுதுமாய்—எத்திக்கும்
ஞான மணமே நவிலும் தொறுங்கமழ்ந்து
கானம் புரியும் கனிந்து. (உ)

இ-ள்.

அன்பமைதி கலைப்பண்பு முத்திப்பேறு முதலிய நலங்கள் ததும்பியாண்டும் ஞான மணம் கமழ்ந்து இனிய கானம் புரிந்து அரிய சுவை சுரந்து தமிழ் தனியே தழைத்துள்ளது என்றவாறு.

தமிழ் இனிமைப் பண்புடையது என முன்னம் கண்டோம்; இதில் அதன் பலவகை நலங்களையும் சுவைகளையும்காண்கின்றோம்.

கடவுளை நினைந்து உள்ளம் கரைந்து உயிர் உருகி நிற்கும் பேரன்புக்குப் பத்தி என்று பெயர். இந்த அன்பு நிலைகள் அலைகளை வீசித் தமிழில் எங்கும் பொங்கியுள்ளன.

தேவாரம் திருவாசகம் திருவாய்மொழி முதலிய நூல்கள் எல்லாம் அன்பின் உருவங்களாய்ப் பெருகியெழுந்தன. பேரின்பப் பிழம்பான இறைவனையே கருதிக் கருதி உருகி இருத்தலால் இவை யாண்டும் தெய்வ மணம் கமழ்ந்து ஓதி யுணருந்தோறும் உயிர்களைப் பரவசமாக்கி உய்திபுரிந்து வருகின்றன.

"வேதம் ஓதின் விழிநீர் பெருக்கி
நெஞ்சம் நெக்குருகி நிற்பவர்க் காண்கிலேம்;
திருவாசகம் இங்கு ஒருகால் ஓதின்
கருங்கல் மனமும் கரைந்துகக் கண்கள்
தொடுமணல் கேணியிற் சுரந்துநீர் பாய
மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப்பு எய்தி
அன்பர் ஆகுநர் அன்றி
மன்பதை உலகில் மற்றையர் இலரே."
(நால்வர் நான்மணிமாலை)

இங்ஙனம் அனுபவ வாசகங்கள் பல உள.

கலைச்சுவை என்றது அறிவு நலம் கனிந்த இன்பநுகர்ச்சியை. இராமாயணம் சிந்தாமணி முதலிய காவியங்களில் இந்த அறிவு விருந்து அதிசய நிலையில் பெருகி யிருக்கிறது.

நாவின் சுவையை நாடி உழலும் நாட்டு மக்கள் தம் தாய் மொழியில் விளைந்துள்ள பாவின் சுவையைப் பருகி மகிழும் பாக்கியம் இலராய்ப் பெரும்பாலும் இஞ்ஞான்று நோக்கிழந்துள்ளார்.

அறிவு நுகர்ச்சி குன்றி அவலநிலையில் வெறியராய் நம்மவர் அலமந்து திரியும் நிலைமை மிகவும் பரிதாபமாயுள்ளது.

முத்திச்சுவை என்றது மோட்ச இன்பத்தை. நிலையில்லாத இந்த உலகப் பற்றுக்களையெல்லாம் அறவே துறந்து உள்ளப் பற்று அற்று உரிய பரம் பொருளோடு தோய்ந்து ஆன்மா அனுபவிக்கும் பேரானந்த நிலையை நேரே தெளிவாக விளக்கித் தமிழ் மொழி ஓர் ஆனந்தமாய் ஒளிசெய்து நிற்கின்றது. அந்த நிலைகள் அனுபவித்து மகிழ உரியன.

கானம் புரியும் என்றது அதிமதுரமான இனிய ஓசை நயம் கருதி.

அன்பு அமைதி கலைப்பண்பு முதலிய நலங்கள் பலசுரந்து ஞானம் கனிந்துள்ள தமிழை நீ நன்கு பயின்று நலம் பெறுக.

---

183. வீரம் உயர்காதல் மேன்மை அருளீகை
ஈரம் இயல்நீதி எங்குமே—சாரமாய்
ஓங்கி ஒளிவீசும் ஒண்தமிழை ஓராதார்
ஏங்கி இழிவர் இனைந்து. (௩)

இ-ள்.

வீரம் காதல் முதலிய அரிய நலங்கள் பலவும் கனிந்து புனித நிலையில் பொங்கியுள்ள இனிய தமிழை உரிமையுடன் ஓதி யுணராதார் மறுமை நலம் குன்றி மறுகி வருந்துவர் என்றவாறு. ஈரம் = இரக்கம், அன்பு.

வீரம் ஆவது போரில் அஞ்சாது புகுந்து பகைவரை வெல்லும் நெஞ்சுறுதி. இது அரசனுக்கு உயிரினும் சிறந்த ஒண் குணம். கள்வர் பகைவர் முதலிய பொல்லாதவரால் அல்லல் நேராமல் தன் நாட்டையும் மக்களையும் நன்கு பாதுகாத்து மன்னனுக்கு மாட்சி மிகத் தருவது இவ்வீரமே யாம். தரும நலம் தழுவிச் சத்தியம் தோய்ந்த பொழுது வீரம் சீரிய வெற்றியில் சிறந்து திகழ்கின்றது.

இத்தகைய உத்தம வீரம் தமிழில் ஒளிவீசியுள்ளது. இதன் இயல் செயல் நிலைமை தலைமை முதலிய வகைகளை எல்லாம் நயனுற விளக்கித் தமிழ்மொழி வியன் அமைந்து நிற்கின்றது.

விழித்தகண் வேல்கொண் டெறிய அழித்திமைப்பின்
ஓட்டன்றோ வன்க ணவர்க்கு. (குறள், 775)

போரில் ஏறிய வீரன், எதிரி வீசிய வேல் நேரே பாய்ந்தாலும் அவனைச் சினந்து விழித்த கண்ணை இமையான். சிறிது

இமைத்தாலும் அதனையும் ஒரு பெரிய தோல்வியாகக் கருதி நாணுவான் என்னும் இதனை நுணுகி ஆராயவேண்டும்.

உத்தம வீரனுடைய மனப் பான்மையைக் குறித்து உணர்த்தியுள்ள இது எத்துணை உய்த்துணர்வுடையது! எவ்வளவு அதிசயமானது!

சிறு தூசி எதிரே நேரினும் கண் இமைக்கும் இயல்பினது; அது கொடிய வேலின் எதிரேயும் இமையாது நின்று பகைவனை வென்று வெற்றியை விளைப்பது வீரரது அமைதியாம். எப்படிப்பட்ட வீரம் இது? இத்தகைய வீரர்கள் பலர் முன்னம் இங்கு இருந்துள்ளமையினாலேதான் இந்நாட்டு மொழியில் இப்படிப் பாட்டு எழுந்தது.

"ஏற்றவர் இமைப்பினும் இகழ்ந்து எறிதல் செய்யார்" (சூளாமணி)

"வெல்வது விதியின் ஆகும் வேல்வரின் இமைப்பேன் ஆயின்
சொல்லிநீ நகவும் பெறுவாய்! (சீவகசிந்தாமணி)

கண் இமைத்தாலும் போரில் புறங்கொடுத்தவராக எண்ணி அவர்மேல் அமர் தொடார் என்பது இவற்றால் அறியலாகும்.

ஆடவரே யன்றி மகளிரும் ஈங்குப் பெருவீரமுடையராய் மருவியிருந்தார். அவரது மான வீரம் மாட்சிமிக்கது.

பெற்ற தந்தையும் உற்ற கணவனும் முதலில் மூண்ட போரில் மாண்டு போயினர். பருவம் முதிர்ந்த அவளுக்கு ஒருமகன் இருந்தான். அவனுக்கு வயது இருபத்து நான்கு. பகை அரசரால் மீண்டும் போர் மூண்டது. தனது அருமை மகனை உரிமையுடன் போருக்கு அனுப்பினாள். அவன் பொருகளம் புகுந்து அருஞ்சமர் புரிந்து முடிவில் உடல் இருபிளவாய் இறந்துபட்டான். அவனது வீரத்திறலைக் கண்டு அனைவரும் வியந்தார். அக்குலமகனை அனுப்பிய தாயின் மனநிலையைச் சோதிக்கக்கருதி "உன் மகன் போரில் புறங்காட்டி ஓடிப் போனான்" எனச் சிலர் மாறுபாடாக வந்து சொன்னார். அதனைக் கேட்டவுடனே அவள் நாட்டம் சிவந்தது. பிள்ளை பிழைத்தான் என்று எண்ணி மகிழாமல் உள்ளம் கொதித்தாள். நீங்கள் சொல்லுகின்றபடி என் மகன் உண்மையாகவே போருக்கு அஞ்சிப் புறங்கொடுத்திருப்பானாயின், "அவனைப் பால் ஊட்டி வளர்த்த என் முலைகளை

அடியோடு அறுத்து எறிவேன்" என்று கொடிய வாள் ஒன்றைக் கையில் எடுத்துக்கொண்டு போர்க் களத்துக்கு நேரே ஓடினாள். பிணங்களைத் துருவிப் பார்த்தாள். தன் அருமை மகன் உடல் சிதைந்து கிடப்பதைக் கண்டாள். பிடித்த வாளை அடுத்து அயலே வீசினாள். இரண்டு கைகளாலும் பிள்ளை உடம்பைச் சேர்த்து ஆர்த்தி மீதூர்ந்து பார்த்தாள். உள்ளப் பாசத்தால் கண்ணீர் வெள்ளம் என வெளி வந்தது; ஆயினும் அமரில் இறந்ததை நினைந்து மிகவும் மகிழ்ந்தாள். அவளது குலவீரத்தை வியந்து உலகம் புகழ்ந்து நின்றது.

> "நரம்பெழுந்து உலறிய நிரம்பா மென்தோள்
> முளரி மருங்கின் முதியோள் சிறுவன்
> படையழிந்து மாறினன் என்றுபலர் கூற
> மண்டமர்க்கு உடைந்தனன் ஆயின், உண்டஎன்
> முலைஅறுத் திடுவென் யான்எனச் சினைஇக்
> கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்
> செங்களம் துழவுவோள் சிதைந்து வேறாகிய
> படுமகன் கிடக்கை காணூஉ
> ஈன்ற ஞான்றினும் பெரிது உவந்தனளே." (புறம், 278)

இது காக்கைபாடினியார் நச்செள்ளையார் என்னும் சங்கப் புலவர் பாடியது. மேலே குறித்த வீரக்கிழவியின் தீரச்சரிதம் இதில் பாராட்டப்பட்டுள்ளமை காண்க. இவ்வாறு வீரப்பான்மை சுரந்து வந்திருக்கும் கவிகள் பல உள.

இந்நாட்டு வீரம் மிகவும் பெருந்தன்மையுடையது. எதிரி தளர்ந்தால் உடனே அமரை நிறுத்தி அவனை ஆற்றித் தேற்றி அயல் அகலவிடுவது தமிழ் வீரத்தின் இயல்பாம்.

> "பேராண்மை என்ப தறுகண் ; ஒன்று உற்றக்கால்
> ஊராண்மை மற்றதன் எஃகு." (குறள், 773)

உத்தம வீரத்தின் இலக்கணம் இங்ஙனம் உதித்திருக்கிறது.

முதல்நாள் போரில் வலியிழந்து நின்ற இராவணனை நோக்கி, "ஐயா! இன்று போய் நாளை வா" என்று இராமன் அருள் புரிந்துவிட்ட அற்புத வீரம் இந்நாட்டிலிருந்து விளைந்தது. தமிழ் இலக்கியத்தில் வீரம் தலை சிறந்து மிளிர்தலால் அந்நிலைமை தெரிய இங்கு அது முதலில் நின்றது. இதன் விரிவெல்லாம் காவிய நிலையங்களாகிய கலையுலகில் கண்டுமகிழவேண்டும்.

காதல் என்பது ஆடவரும் மகளிரும் உள்ளம் கலந்து உயிர்க்கேண்மை கொண்டு உவந்து நிற்கும் பேரன்பு. ஆண்மையின் தனி நிலையமாயுள்ள வீரம் முன்னுற வந்தது. இருபாலும் ஒருமையுடன் மருவி மகிழும் காதல் அதன்பின் வைக்கப்பட்டது. இதன் தன்மையும் தகைமையும் பலவகைத் துறைகளாய்ப் பரந்து விரிந்து இன்பச்சுவை சுரந்துள்ளன.

வீரமும் காதலும் தமிழ்மொழியில் விளங்கி நிற்றல்போல் வேறு எம்மொழியிலும் இத்தகைய விழுமிய நிலையில் விளங்கவில்லை. இவற்றின் இயல்பைச் சிறிது விளக்கப் புகினும் ஈண்டுப் பெரிதும் இடம் விரியும். அருள் ஈகை முதலியனவும் அவ்வாறேயாம்.

இவ்வண்ணம் உயர்நலங்கள் பல சுரந்துள்ள தமிழை ஊன்றி உணராமல் ஊன முற்றிருத்தல் ஈனமாகும். உயிர்க்கு உறுதி நலம் தருகின்ற தெய்வத்தமிழை உய்திபெற உணர்ந்து கொள்ளுக.

---

184. ஊழி யளவும் ஒருநூலே ஓர்ந்துயிர்கள்
வாழி புரியும் வகைபெருகி—ஆழியென
ஆழ்ந்து பரந்த அருந்தமிழை ஆய்ந்து நீ
சூழ்ந்து தெளிக துணிந்து. (௪)

இ-ள்.

ஒரு நூலே ஊழி அளவும் ஓதி உணர்தற்குரிய உயர் நலமுடையது. அத்தகைய நூல்கள் பல சுரந்து அமிர்தக் கடல் போல் ஆழ்ந்து பரந்து பெருகியுள்ள அருமைத் தமிழை நீ ஓர்ந்து உணர்ந்து உண்மையைத் தேர்ந்து கொள்ளவேண்டும் என்றவாறு.

இது, தமிழ் நூல்களின் நிலைமையைக் கூறுகின்றது.

ஊழி என்றது பல ஆண்டுகள் என்றபடி. நீண்ட கால அளவைக்கு ஓர் ஆன்ற எல்லை தோன்ற வந்தது.

தமிழிலுள்ள விழுமிய நூல்கள் தொகை அளவில் சுருங்கியிருப்பினும், ஒவ்வொரு நூலும் அரிய பொருள் வளங்கள் நிறைந்து உணர்வுக்கடலாய் ஒளி சிறந்துள்ளது. தன் வாழ்நாள் முழுவதும் ஒரு நூலையே ஆராய்ந்து மனிதன் முடிவுகாணாதபடி அறிவு நலம் சுரந்து பெரிதும் விரிந்து உறுதி நலம் அமைந்திருக்கின்றது.

ஆழி என்றது ஆழம் மிக வுடையதாய் அளவிடலரிய உணர்வு நலங்கள் பெருகி யிருக்கும் நிலைமை கருதி. ஆழி = கடல்.

ஓதி உணருந்தோறும் உள் ஒளி மிகுந்து உவகை சுரந்து வரும் வகைமையில் நூல்கள் தகைமையாய் விளைந்திருக்கின்றன.

தொல்காப்பியம், திருக்குறள், சிந்தாமணி, சிலப்பதிகாரம், பத்துப்பாட்டு, எட்டுத் தொகை, மணிமேகலை, பெருங்கதை, சூளாமணி, கல்லாடம், இராமாயணம், பாரதம், கந்தபுராணம், பெரியபுராணம் முதலிய இலக்கிய நூல்களும் திருவாசகம் தேவாரம் திருவாய்மொழி திருவருட்பா முதலிய அன்பு நூல்களும் இங்கே சிந்திக்கற்பாலன.

" ஆன்ம உருக்கமும் அருட்பெருந் தகவும்
மேன்மையும் பான்மையும் மேதக வமைந்து
தெய்வமணம் கமழ்ந்து தேசு மிளிர்ந்து
முந்தமிழ் தென்னச் செந்தமிழ் எழுந்த
அந்தமில் இன்புயர் அரிய நூல்கள்
பல்லூழி காலம் பாடு கிடப்பினும்
மறுபுல மொழிகள் எதுவும்
பெறுமோ இந்தப் பேருல கிடையே."

என இவ்வாறு பெருமிதநிலையில் பெருமையுறும்படி அருமை நூல்களை நாம் அடைந்திருக்கிறோம். இருந்தும், பெரும்பாலும் அவற்றை விரும்பி உணராமல் நம்மவர் விலகி நிற்கின்றார். அந் நிலை பல வகை இழிவுகளில் உணர்வைப் பாழ் படுத்தி யுள்ளது.

தாய்மொழி அமுதம் உண்டு அந்நோய் ஒழிய வேண்டும்.

---

185. வானுண்ட தேவரையும் மண்ணுண்ட மன்னரையும்
தானுண்டு வந்த தமிழ்மொழிதான்—கானுண்ட
சீராமன் என்னவே சீர்மை நிலைகுலைந்து
பாராமல் உள்ளது பார். (ரு)

இ-ள்.

விண்ணில் உள்ள தேவரையும் மண்ணில் உயர்ந்த மன்னரையும் தன்வசப்படுத்தித் தனிஆட்சி புரிந்துவந்த தமிழ்மொழி இஞ்ஞான்று தலை மறைந்துள்ளது; உலகம் அதன் நிலைமையை உணராமல் கலையறிவு குன்றி உழல்கின்றது என்றவாறு.

இது தமிழின் பழமையான ஆட்சியின் மாட்சியை உணர்த்துகின்றது. உவமை நிலையால் பொருள் நலனை ஓர்ந்து கொள்க.

தேவ தேவர்களும் தமிழின் சுவையில் ஈடுபட்டு அதன் வழி ஒழுகி யுள்ளனர். சிவபரம் பொருளே அன்பு நிலையை விளக்கித் தமிழில் ஓர் இன்ப நூல் இயற்றி யுள்ளார். அது இறையனார் அகப் பொருள் என வழங்கி வருகின்றது.

" மாறனும் புலவரும் மயங்குறு காலை
முந்துறும் பெருமறை முளைத்தருள் வாக்கால்
அன்பின் ஐந்திணைஎன்று அறுபது சூத்திரம்
கடலமுது எடுத்துக் கரையில் வைத்தது போல்
பரப்பின் தமிழ்ச்சுவை திரட்டி மற்றவர்க்குத்
தெளிதரக் கொடுத்த தென் தமிழ்க் கடவுள். "

(கல்லாடம், 3)

இறைவன் நூல் அருளிய உண்மை இதனால் அறியலாகும். முழுமுதற் பரமனைத் தமிழ்க்கடவுள் என்றதில் உள்ள கிழமை காண்க. தருமிக்கும், பாணருக்கும் கவிகள் பாடிக் கொடுத்துக் கவிஞர் என நிலவினர்.

" பாட்டுக்கு உருகும் தமிழ்ச் சொக்கநாதர் "

(மதுரைக் கலம்பகம், 80)

என்றமையால் தமிழின்பால் இவர்க்கு உரிய அன்பு புலனும்.

"எனக்கு அருச்சனை பாட்டேயாகும்" என்று சுந்தரமூர்த்தி நாயனரிடம் குறித்திருக்கிறார். தமிழில் பரமன் இங்ஙனம் பரவசமாயுள்ளமையால் நாயன்மார் தமிழ்ப் பாடல்களால் பல அற்புதங்களை விளைக்கலாயினர்.

" தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்ததும், முதலை
உண்ட பாலனை அழைத்ததும், எலும்பு பெண் உருவாக்
கண்டதும் மறைக் கதவினைத் திறந்ததும், கன்னித்
தண்டமிழ்ச் சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்! "

(திருவிளையாடல்)

என இவ்வாறு தமிழ்மொழியின் மாட்சி குறித்துள்ளன பல.

தமிழ் மீது கொண்டுள்ள ஆர்வத்தாலேயே தனது மனைவி மக்களுடன் ஆண்டவன் பாண்டிய மன்னனாய் ஈண்டு அவதரித்து மதுரையம் பதியில் அமர்ந்து அரசு புரிந்தான் என்ப,

" தமரநீர்ப் புவன முழுது ஒருங்கு ஈன்ருள்
 தடாதகா தேவி என்று ஒரு பேர்
தரிக்கவந்ததுவும், தனி முதல் ஒருநீ
 சவுந்தர மாறன் ஆனதுவும்,
குமரவேள் வழுதி உக்கிரன் எனப்பேர்
 கொண்டதும், தண்டமிழ் மதுரம்
கூட்டுண எழுந்த வேட்கையால் எனிலிக்
 கொழிதமிழ்ப் பெருமை யார் அறிவார்? "

(மதுரைக்கலம்பகம், 93)

மாணிக்கவாசகரது தமிழ்ப் பாடல்களின் அருமையை வியந்து தனது கையினுலேயே பரமன் எழுதிக் கொண்டான்.

" ஊழி முடிவில் ஒருவனுய் நீயிருக்கும்
நாழிகையை நன்கு கழிக்கவோ—ஆழியெனும்
அன்பனுயர் வாசகத்தை ஆர்வ முடன்எழுதி
முன்புவந்து கொண்டாய் முனைந்து."

தனியே இருக்கும் பொழுது இனிய பொழுது போக்காக இன்பம் நுகர்தற்குத் தமிழே உரியது என இறைவன் எதிரறிந்து கருமம் புரிந்துள்ளார் என்றமையால் அம் மொழியின் விழுமிய நிலைமை வெளியாம்.

" தமிழால் வைதாரையும் அங்கு வாழ வைப்போன்."

(கந்தர் அலங்காரம், 23)

என முருகவேளை அருணகிரியார் இங்ஙனம் குறித்திருக்கிருர். இம் மூர்த்தி தமிழ் மீது ஆர்த்திகொண்டு புரிந்துள்ள அற்புத ஆடல்கள் பல.

திருமாலும் தமிழில் பெருமால் கொண்டு உரிமை பூண்டிருக்கிருர். செந்திருமார்பன் செந்தமிழ் மொழியில் அந்தமில் இன்பனுய் அமர்ந்துள்ளமையை ஆழ்வார் பாசுரங்களில் அறியலாம்.

காஞ்சிபுரத்தில் கணிகண்ணன் என்று ஒரு புலவன் இருந்தான். நல்ல சீல முள்ளவன். திருமழிசை ஆழ்வாரிடம் பேரன்புடையவன். சீர்மை நிறைந்த அக்கவிஞனை ஒரு நாள் அரசன் பார்த்தான். தன் மீது ஒரு கவி பாட வேண்டினுன். மனிதனைப் பாடேன் என்று அவன் துணிவுடன் சொன்னுன்.

மன்னன் சினந்து, "என் நாட்டில் இராதே; வெளியேபோ!" என்றான். "சரி போகின்றேன்" என அப்பொழுதே அவன் ஆழ்வாரிடம் வந்து சொல்லி அயலே போனான். ஆழ்வாரும் பிரிந்திருக்கமாட்டாமல் அவனைத் தொடர்ந்து பின் சென்றார். செல்லுங்கால் பெருமாள் சந்நிதியில் நின்று ஒரு பாட்டுப் பாடினார்.

> "கணிகண்ணன் போகின்றான் காமருபூங் கச்சி
> மணிவண்ணா நீகிடக்க வேண்டாம்—துணிவுடைய
> செந்நாப் புலவனும் செல்கின்றேன் நீயுமுன்றன்
> பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்." (திருமழிசை)

இக் கவியைப் பாடிவிட்டு அவர் போகவே திருமாலும் தம்படுக்கையைச் சுருட்டித் தோளில் வைத்துக்கொண்டு திருமகளுடன் அப்புலவர் இருவர் பின்னே வயலில் நடந்து சென்றார். அச்செலவு நிலை புலவர் உள்ளங்களை மிகவும் உருக்கி யுள்ளது.

> "கணிகொண்ட தண்துழாய்க் காடலைத்து ஓடுதேம்
> கலுழிபாய்ந் தளறு செய்யக்
> கழனிபடு நடவையிற் கமலத் தணங்கரசு ஓர்
> கையணை முகந்து செல்லப்
> பணி கொண்ட முடவுப் படப்பாய்ச் சுருட்டுப்
> பணைத்தோள் எருத்து அலைப்பப்
> பழமறைகள் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற
> பச்சைப் பசுங் கொண்டலே."
>
> (மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்)

இக் கவியின் பொருள் நிலைகளைக் கண்ணூன்றிக் கருதிக் காண வேண்டும். திருமகள் நாயகன் அழகிய அடி கழி சேற்றில் நடந்து செல்கின்றதே! என்று ஆற்றாமையோடு வேதங்கள் புலம்பி வர, வேதநாயகன் தமிழின் பின் போனான் என்னும் இது இந்நாள் அனுபவத்திலும் வழங்கி வருகின்றது. பெருமாள் வீதியில் எழுந்தருளும் பொழுது முன்னே தமிழ்த் திருவாய் மொழியும், பின்னே வட மொழி வேதமும் ஓதப் படுகின்றன. தமிழ் மொழி மாலையும் மாலுறுத்தி யுள்ளமை இதனால் அறியலாகும்.

பாண்டியன் சோழன் சேரன் என்னும் முடி மன்னர் மூவரும் தமிழை மிகவும் உரிமையுடன் உவந்து போற்றியிருக்கின்றார்.

ஒரு தமிழ்ப்பாட்டுக்குப் பல ஊர்களைப் பரிசிலாகப் புலவர்களுக்கு வரிசை புரிந்து தந்துள்ளனர்.

பாரி, நள்ளி, ஆய், பேகன், குமணன் முதலிய சிற்றரசர்களும் தமிழை உயிரினும் இனிதாகப் பேணி யிருக்கின்றனர்.

திருஞான சம்பந்தர் சமணர்களோடு வாது புரிந்த பொழுது தாம் எழுதிய தமிழ்ப்பாடலை வையை நதியில் விட்டனர். வெள்ளத்தில் அது எதிர் ஏறிச்சென்றது. நெருப்பில் இட்டனர்; யாதும் கருகாமல் பசுமையாயிருந்தது.

புனலில் ஏடுஎதிர் போகெனப் போகுமே;
　　புத்தனார் தலை தத்தெனத் தத்துமே;
கனலில் ஏடிடப் பச்சென் றிருக்குமே
　　கதவம் மாமறைக் காட்டில் அடைக்குமே
பனையில் ஆண்பனை பெண்பனை ஆக்குமே
　　பழைய என்புபொற் பாவையது ஆக்குமே
சினஅரா விடம் தீரெனத் தீருமே
　　செய்ய சம்பந்தர் செந்தமிழ்ப் பாடலே. (1)

அப்பர் பாடல்.

தலைகொள் நஞ்சமு தாக விளையுமே
　　தழல்கொள் நீறு தடாகம தாகுமே
கொலைசெய் யானை குனிந்து பணியுமே
　　கோளராவின் கொடுவிடம் தீருமே
கலைகொள் வேத வனப்பதி தன்னிலே
　　கதவு தானும் கடுகத் திறக்குமே
அலைகொள் வாரியில் கல்லும் மிதக்குமே
　　அப்பர் செப்பும் அருந்தமிழ்ப் பாடலே.

தமிழ்க்கவிகள் விளைத்துள்ள அதிசயங்களை இவற்றால் அறிகின்றோம். இங்ஙனம் திவ்விய மகிமைகள் வாய்ந்துள்ளமையான் தெய்வத் தமிழ் என வந்தது. தமிழறியும் பெருமாள் என்பது சிவபெருமானுக்கு ஒரு பெயர். அதன் அருமையை அப்பரமனே தனியுரிமையாக அறிய உரியன்.

பாரறியும் அறிவினுமிப் பார்மேல் நின்ற
　　பசுஞானத் தானும் எட்டிப் பார்க்கொணாத
பேரறிவே! சிற்றறிவேற்கு இருளை நீக்கும்
　　பேரொளியே! அங்கயற்கண் பிரியாதானே!

யார்அறிவார் தமிழருமை? என்கின்றேன் என்
அறிவீன மன்றோஉன் மதுரை மூதூர்
நீர்அறியும், நெருப்பறியும், அறிவுண்டாக்கி
நீயறிவித் தாலறியும் நிலமும் தானே.
(மதுரைப் பதிற்றுப்பத்தந்தாதி 45)

நாட்டில் தமிழின் அருமையை அறிவார் இல்லையே! என்று வருந்தி நொந்தபொழுது பரஞ்சோதி முனிவர் மனம் உருகிப் பாடிய பாடல் இது. பொருட் குறிப்புக்கள் கருத்தூன்றிக் காண உரியன.

வானும் வையமும் இவ்வாறு வசமாயுள்ளமையான் " வான் ஆண்ட தேவரையும், மண் ஆண்ட மன்னரையும், தான் ஆண்டு வந்த தமிழ் " என வந்தது.

அத்தகைய ஞானத் தமிழ் இஞ்ஞான்று அஞ்ஞாத வாசமாய் இருக்கின்றது. எஞ்ஞான்று ஒளிவீசி வெளிவருமோ?

இராமன் அரசு துறந்து வனவாசம் செய்ததுபோல் தமிழ் தலைமறைந்துள்ளது. அவ்வீர மூர்த்தி மீண்டுவந்து மணிமுடி புனைந்து செங்கோல் செலுத்தி அரசுபுரிந்தருளினன். நம் அருமைத் தமிழும் பழைய பெருமையுடன் தலை சிறந்து தனி அரசு புரியும் நாளே இந்நாடு நலம் பலசுரந்து ஒளிமிகப்பெற்று உயர்ந்து விளங்கும்.

பார் பாராமல் உள்ளது என்றது உலகம் தமிழின் அருமையை உணராமல் இருக்கின்றது என்றவாறு. பார் பார்வை குன்றியுள்ளமையால் மொழியின் நீர்மை குன்றி நிற்கின்றது.

தேசமக்கள் தம் தாய்மொழியை ஆசையுடன் பேணிய பொழுது தான் ஈசன் அருள் எய்தி இன்பம் உறுவர்.

---

186. பாராளும் வேந்தரெலாம் பாவலரென் றுலவரைச்
சீராளும் தெய்வமெனத் தேர்ந்துகொண்டார்-ஓராளும்
அந்த இருநிலையில் யாண்டுமே இல்லையே
எந்தநாள் எய்தும் இவண். (சு)

இ-ள்.

உலகம் ஆண்டுவந்த அரசர் எல்லாரும், புலவரைத் தமக்கு மகிமை தரவந்த தெய்வம் என மதித்துப் போற்றி வந்தார்; அந்த

இருவகை நிலையிலும் ஓர் ஆளும் இந்நாள் ஈண்டு இல்லையே என்றவாறு.

இது, புவி அரசுக்கும் கவி அரசுக்கும் உள்ள உரிமை கூறுகின்றது. பழமையின் கிழமை நினைந்து பரிவு கூர்ந்தபடியிது.

செல்வ அரசுக்குக் கல்வி அறிவு உடம்புக்குக் கண்போல் ஒளி சிறந்து உறுதி புரிந்து உரிமை சுரந்துள்ளமையால் காவலர் பாவலரை ஆவலுடன் ஆதரித்து வந்தனர்.

"சீர் ஆளும் தெய்வம் எனத் தேர்ந்து கொண்டார்"

என்றது புகழ் புண்ணியங்களை விளைத்துக் கண்ணியங்களை வளர்த்து எவ்வழியும் தம்மைச் செவ்வியநிலையில் உயர்த்தும் திவ்விய நிலையினர் எனப் புலவரை வேந்தர் போற்றி வந்திருக்கும் அந்த ஏற்றம் தெரிய வந்தது.

மூவேந்தரும் தனித் தனியே தக்க புலவர்களைத் தமக்கு ஒக்கலாக உவந்து பக்கம் வைத்துப் பாராட்டி வந்தனர். பிசிராந்தையாரையும், பொய்கையாரையும் கோப்பெருஞ் சோழன் உயிரினும் கண்ணினும் உவந்து நின்றான்.

அறிவுடை நம்பி என்னும் பாண்டிய மன்னன் பிசிராந்தையாருடன் ஒருநாள் உரையாடிக்கொண்டிருந்தான். குடிகளிடம் மிகுதியாக வரி வாங்கவேண்டுமென்று அரசன் கருதியுள்ளதைப் புலவர் குறிப்பால் அறிந்தார். திறைபெறும் முறை குறித்து ஓர் உறுதி நலனை உரைத்தார். அடியில் வருவது காண்க.

"காய்நெல் அறுத்துக் கவளம் கொளினே
மாநிறைவு இல்லதும் பன்னாட்கு ஆகும்;
நூறுசெறு வாயினும் தமித்துப்புக்கு உணினே
வாய்புகு வதனினும் கால்பெரிது கெடுக்கும்
அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே,
கோடி யாத்து நாடுபெரிது நந்தும்;
மெல்லியன் கிழவன் ஆகி வைகலும்
வரிசை அறியாக் கல்லென் சுற்றமொடு
பரிவு தப எடுக்கும் பிண்டம் நச்சின்
யானை புக்க புலம்போலத்
தானும் உண்ணான் உலகமும் கெடுமே." (புறம் 184)

ஒரு காணியினும் குறைந்த நிலமாயிருந்தாலும் மதயானை க்கு நெடுநாள் உணவுக்கு உரிய நெல்லை விளைத்தருளும். அதுவே புகுந்து மேயத் தொடங்கின், நூறு வேலியாயினும் காலில் மிதி பட்டு விளைவு பாழ்படும்; வேந்தன் குடிகளை வருத்தாமல் முறை யறிந்து இதமாக வரி பெறின், பெரும் பொருள் சேரும்; குடி களும் சுகமாக வளம் பெற்று வாழ்வர்; அரசும் நெடிது நின்று நிலவும்; புல்லியரைக் கூடி அறிவு மெல்லியனாய் அரசன் வலித்து திறைபெற நேரின், நாட்டுக்கும் அரசுக்கும் ஒருங்கே கேடாம் எனப் புலவர் உணர்த்திய இந்த உறுதிமொழியைக் கேட்டு மன் னன் பெரிதும் மகிழ்ந்தான். அவரது அறிவுரையின் படியே நெறி முறை ஒழுகினான்.

நெடுஞ்செழியன் என்னும் வேந்தன் குடபுலவியனார் என் னும் புலவரைத் தனக்கு உரிமைத் துணையாக உவந்து பேணி வந்தான். புலவர் பலவகையிலும் அரசை ஆதரித்து அறிவு நலங்களை அருளி உறுதி புரிந்து வந்தார்.

நாட்டில் நீர் நிலைகளை உளவாக்கி நிலங்களை வளம்படுத்த வேண்டும் என்று ஒரு முறை அரசனுக்கு அவர் உரிமையுடன் போதித்தார். அவ்வுணர் வுரை அதிசயமுடையது.

"மல்லல் மூதூர் வய வேந்தே!
செல்லும் உலகத்துச் செல்வம் வேண்டினும்,
ஞாலம் காவலர் தோள்வலி முருக்கி
ஒருநீ ஆகல் வேண்டினும், சிறந்த
நல்லிசை நிறுத்தல் வேண்டினும், மற்றதன்
தகுதி கேள் இனி மிகுதி யாள!
நீர் இன்று அமையா யாக்கைக்கு எல்லாம்;
உண்டி கொடுத்தோர், உயிர்கொடுத் தோரே;
உண்டி முதற்றே உணவின் பிண்டம்
உணவெனப் படுவது நிலத்தொடு நீரே
நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு
உடம்பும் உயிரும் படைத்திசி னோரே;
வித்தி வான்நோக்கும் புன்புலம் கண்ணகன்
வைப்பிற்று ஆயினும் நண்ணி ஆளும்
இறைவன் தாட்குஉத வாதே; அதனால்,
அடுபோர்ச் செழிய! இகழாது வல்லே
நிலன்நெளி மருங்கின் நீர்நிலை பெருகத்
தட்டோர் அம்ம இவண் தட்டோரே;
தள்ளாதோர் இவண் தள்ளாதோரே." (புறம், 18)

இதில் அடங்கியுள்ள பொருள் நலங்களை ஊன்றி உணர்ந்து கொள்ளவேண்டும். தட்டோர்=நிலத்தில் நீரைப் பெருக்கித் தளைத்தவர். நீரைத் தளைத்தவரே தம் பேரையும் சீரையும் நிலை நிறுத்தினவர்; அல்லாதார் இவ்வுலகில் அவை இல்லாதவரே என்பார், "தள்ளாதோர் இவண் தள்ளாதோரே." என்றார்.

இங்ஙனம் நாட்டுக்கு உரிய உறுதி நலங்கள் பல அரசுக்கு அவர் உரிமையுடன் இனிமையாக உரைத்திருக்கிறார்.

மன்னர்க்கு இன்னவாறு நன்னயமான நீதி நலங்களைப் புலவர்கள் உடனிருந்து உணர்த்தி வந்துள்ளனர். வேந்தர்களும் இம்மதிமான்களை மந்திரிகளினும் மேன்மையாக மதித்துப் போற்றி மாண்புசெய்து வந்தனர்.

அந்த நிலையில் இப்பொழுது அரசு எங்கே உள்ளது? புலவர் தாம் யாண்டு உள்ளனர்?

ஓர் ஆளும் அந்த இருநிலையில் யாண்டுமே இல்லையே!

என்றது அரசரும் கவிஞரும் பண்டு தழுவியிருந்த அருமைபெருமைகளையும் இன்றுள்ள வறுமை நிலையையும் எண்ணி இரங்கியவாறும். செங்கோலும் செந்தமிழும் தங்கோலம் காட்டிப் பொங்கொளி வீசிப் பழமைபோல் இங்கு இனிது நிலவும் நாளை இறைவன் அருள வேண்டும்.

---

187. உண்ணச்சோ றில்லை உடுக்க உடையில்லை
எண்ணப் பெருமைக் கிடமில்லை—வண்ணமிகு
தண்டமிழை நாம்படித்துச் சாகவா என்றுபலர்
கொண்டழுவார் என்னே குறி. (எ)

இ-ள்.

உண்ண உணவும், உடுக்க உடையும், உலகமதிப்புகளும் நன்கு கிடையா; ஆகவே தமிழைப் படித்து நாம் சாகவா? என்று பலர் அழுது புலம்பிப் பழுது படுகின்றார் என்றவாறு.

தமிழ்ப் படிப்பைக் குறித்து இக்காலத்தில் உலகம் கருதி நிற்கும் நிலையை இது உணர்த்துகின்றது. வண்ணம் மிகு என்றது தமிழின் இயல் உருவங்களை எண்ணியுணர.

சிந்தைக்கு உவகையாய்ச் செவிக்கு இனிமையாய் வாய்ந்து சந்தப் பொலிவு முதலிய நலங்கள் பலவும் தோய்ந்து, அந்தமில்

இன்பமுடையதாய் அமைந்திருக்கும் செந்தமிழ் நிலைமையை அடைகள் விளக்கி நின்றன.

இந்த அருமைத் தாய் மொழியை உரிமையுடன் படியாமல் நம் மக்கள் பலர் பக்கம் ஒதுங்கிப் பராமுகமாய்ப் போகின்றார். அங்ஙனம் அவர் போதற்குக் காரணம் அதற்குத் தக்க ஆதரவு இன்மையாலேயாம்.

இந்நாட்டுக்கு உரிய மன்னனும், தன்மதிப்புள்ள நன்மக்களும் முன்னம் பெருகி யிருந்தமையால் தமிழைப் படித்தவர்கள் மிகவும் பெருமை யுடையராய் அரசனோடு சரியாசனத்தில் அமர்ந்து வரிசைகள் பல பெற்று வாழ்ந்து வந்தனர்.

இக்காலத்தில் உரிமையான அரசு இல்லை. செல்வம் உள்ளவர்களோ, உள்ளினும் உள்ளம் வேம்படியான எள்ளல்களில் இழிந்து இறுமாந்து உழல்கின்றனர். ஆகவே கல்வியாளரைக் கருதிப்போற்றும் உணர்வு ஒரு சிறிதும் இல்லாது போயது.

"வம்மின் புலவீர்! நும்மெய் வருந்திக் கைசெய்து உய்ம்மினோ!
இம்மன்னுலகில் செல்வர் இப்போது இல்லை; நோக்கினோம்;
நும்இன் கவிகொண்டு நும்நும் இட்டாதெய்வம் ஏத்தினல்,
செம்மின் சுடர்முடி என் திருமாலுக்குச் சேருமே."

(திருவாய்மொழி 3, 9)

புலவர்களை நோக்கி நம்மாழ்வார் இப்படி இரங்கி மொழிந்திருக்கிறார். உரையின் பொருள்கள் ஊன்றி உணர வுரியன.

"தமிழறிஞர்களே! நீங்கள் பண்டைக்காலம்போல இக்காலத்தில் செல்வர்களை எதிர்பாராதீர்கள்! தமிழருமை தெரிந்து உரிமையுடன் உவந்து பேணும் செல்வர் இந்நாட்டில் இப்பொழுது ஒருவருமே இல்லை. முழுவதும் நன்றாக நான் சோதித்துப் பார்த்துவிட்டேன். ஏதாவது ஒரு தொழிலைச் செய்து உடம்பைப் பேணிக்கொள்ளுங்கள். உங்கள் கவிகளைத் தெய்வங்களை நோக்கிப் பாடுங்கள்" என அந்நாவலர் பெருமான் பாவலர்க்கு உணர்த்தியிருக்கும் அருமை உணர்வொளி வீசியுள்ளது.

கல்விக்குச் செல்வம் செவிலித்தாய். அப்பொருளுடையார் மருளுடையராய் இருளடைந்து போனமையால் தெருளுடைய கல்வி தியங்க நேர்ந்தது. அருளடைந்து இயங்கவேண்டும்.

தமிழைப் படியுங்கள் எனின், பட்டினி கிடந்து சாகவா? என்று எதிர் ஒலி வருவதானால் அம்மொழி பராமரிப்பின்றி எவ்வளவு பரிதாப நிலையில் உள்ளது! என்பது எளிது புலனும்.

உணவை முதலில் குறித்தது அதன் தலைமைகருதி.

என்னே குறி! என்றது சோறு முதலியவற்றை எண்ணி மாறுபட்டு மக்கள் மறுகி நிற்கும் சிறுமையை எண்ணி இரங்கியவாறும்.

செல்வம் ஈட்டுதல், அதிகாரம் காட்டுதல் முதலிய உலக ஆடம்பரங்களை ஒரு பொருளாக மதியாமல் உணர்வு நலம் கருதி உயிரின்பம் பெறத் தமிழை உவந்து படி என்பது கருத்து.

---

188. ஏழைத் தமிழென் றிளிவாக எண்ணியெதிர்
பீழைக் கிடமாப் பெருகியே—கோழைப்
புலைமதியர் நல்ல புலமை தனையும்
நிலைமை மதியார் நிமிர்ந்து. (அ)

இ-ள்,

தமிழ் எளிய நிலையது என்று இளிவாக எண்ணி ஈனமுடன் நின்று ஞான நலம் உணராமல் மனத்திமிரால் சிலர் மதியழிந்துள்ளார் என்றவாறு.

பொருள் வருவாய் முதலிய பெருவளங்கள் தமிழ்ப் படிப்பால் அடைய முடியா என்னும் நினைவால் ஏழைத்தமிழ் என இகழ நேர்ந்தார்.

எண்ணி என்றது அந்த எண்ணம் பிழைபாடுடையது என்னும் உண்மை உணர. உறுதி நலங்களை ஓராமல் சிறுமையில் மாறி சிறுமொழி கூறுகின்றார். பொருள் ஈட்டமும் அறிவீட்டமும் வேறு வேறான துறைகளை யுடையது. பொருள் வெளி அலைந்து தொகுப்பது. கல்வி உள்ளிருந்து சுரப்பது. அது பொய் வஞ்சம் முதலிய தீயவழிகளால் சேர்வது. இது மெய் அருள் முதலிய தூய நிலைகளால் வருவது.

இத்தகைய புனிதக் கல்வியைத் தொடங்கும் பொழுதே புன்மை நோக்கில் புகுந்து மனிதன் நன்மை இழந்து படுகிறான்.

உணர்வு நலம் கருதி உயிர்க்கு உறுதி புரிவதே தமிழ்க்கல்வியின் தலைமைப் பயனும். அந்நிலைமையை மறந்து போனமையால் அதன்பெருமையை உணராமல் பிழை பேசலாயினர்.

நல்ல செல்வத் தமிழை ஏழை என்றது அவர் தம் உள்ளப் புன்மையை உணர்த்தி நின்றது. வெள்ளிய வெயில் காமாலைக் கண்ணுக்கு மஞ்சள் நிறம் ஆதல்போல தெள்ளிய தமிழ் புல்லிய நெஞ்சுக்கு மெல்லியதாயது.

கோழைப் புலை மதியர் என்றது உள்ளுறுதி இல்லாத ஊனமான ஈன அறிவினர் என்றபடி.

வீரத் தமிழை வினைத்துணையாய் எண்ணினமையால் அவர் மதி கோழைப் புலையாகக் கூற நேர்ந்தது.

பொருள் வருவாய் பெருவரவாயில்லை எனப் பிழைபடக் கருதி விழுமிய தமிழை இகழ்ந்து நின்றார். அவ்வளவோடு ஒழியாமல் அம்மொழியை நன்கு கற்றுப் புலமை நிறைந்துள்ள அறிஞர்களையும் எளிதாக எண்ணி இழிவுறுகின்றனர்.

“புலமை தன்னையும் நிலைமை மதியார்” என்றது அவரது நிலைமை தெரிய வந்தது. அறிஞரை அறிஞர் மதிப்பர்; அறிவிலிகள் மதியார்.

> “கற்ற அறிவினரைக் காமுறுவர் மேன்மக்கள்
> மற்றையர் தாம் என்றும் மதியாரே—வெற்றிநெடும்
> வேல்வேண்டும் வாள்விழியாய்! வேண்டா புளிங்காடி
> பால்வேண்டும் வாழைப் பழம்.” (நன்னெறி)

புளித்த பழங்காடிபோல்பவர் இனித்த தமிழ்ப்புலமையை மதியாதொழிதலினால் அதன் தலைமை குறைந்து போகாது.

மதியாதவரே மதிகேடராகின்றார். நல்ல அறிவாளிகளை மதியாத பாவத்தால் அவர் வழி முறையிலும் சிறந்த கல்வி நலம் சேராது போகின்றது. இவ்வுண்மையை உணர்ந்து புன்மை ஒழித்து நன்மையான தமிழ்ப் புலமையை நயந்து போற்றுக.

---

189. தாங்கள் தமிழ்ப்பேசச் சார்ந்ததே தண்டமிழின்
ஓங்கு தவமா வுளஞ்செருக்கிப்—பாங்கு
படியாமல் எல்லாம் படித்ததா எண்ணி
மடியாமல் உள்ளார் மலிந்து. (௯)

இ-ள்.

தாங்கள் தமிழில் பேசநேர்ந்ததே தமிழ் செய்த புண்ணியம் என்று உள்ளம் செருக்கி ஒன்றும்படியாமல் எல்லாம் படித்ததாகப் பொல்லாத நிலையில் பலர் புலையாடி நிற்கின்றார் என்றவாறு.

சில விசித்திரப் பிறவிகளை விளக்கிய படி யிது.

தாங்கள் என்றது தமிழராய்ப் பிறந்தும் தமிழைப் படியாமலும் மதியாமலும் அதிகார மமதையில் களிப்பு மீறி நிற்கும் வெளிப்பகட்டாளரை

இப்பகடிகள் நடித்துவரும் கபடநாடகங்கள் புலநல முடையார்க்கு நகை விளைத்து நிற்கின்றன; பொது மக்களுக்கு மிகை வளர்த்து வருகின்றன.

பதவி மினுக்கில் மித மீறி மதங்கொண்டுள்ள இவர் தமிழைத் தம் வாயால் பேச வந்ததே அம்மொழிக்கு ஓர் பெருமை தந்ததாகக் கருதிக் களிக்கின்றார். அப்பொல்லாக் களிப்பு புல்லர் சிலரால் மேலும் பொங்கி வளர்கின்றது. உண்மையுணர்வு குன்றிப் புன்மையான உலக நாட்டங்களில் உழன்று திரிபவர் தம்மைத் தலைமையாகப் புகழ்ந்து வருதலால் அவர் நிலைமை மறந்து படுகின்றார்.

தமிழில் ஒரு நூலும் படியாதிருந்தும் பலநூல்களும் படித்தவர் சபைக்கு அவரைத் தலைமை வகிக்க அழைக்கின்றார். அவர் தருக்கி வருகின்றார். வந்து வாயைத் திறக்கின்றார். வார்த்தைகள் வெளி வருகின்றன; அறிஞர்க்கு நகை விருந்து ஆகின்றன.

"எனக்குத் தமிழில் அவ்வளவு பேச வராது" எனவும் சில சமயம் அவர் பேசிவிடுகின்றார். அதைக் கேட்டு உவந்து கொள்வாரும் உண்டு. என்னே இந்நாட்டு நிலை!

"பெற்ற தாய்க்கு நான் சோறு போடமாட்டேன். அவளை மதிப்பதும் இல்லை; பெருந்தன்மையுடன் சமயம் வாய்த்தால் அவமதித்து மிதிப்பதும் உண்டு" என ஒரு பட்டி மகன் தன் பாழ்வாய் திறந்து பேசின் நல்ல குலமக்களுக்கு அது எப்படி இருக்கும்?

தனக்குரிய தாய்மொழியில் தான்பேச
மாட்டாமல் சபையில் ஏறி
எனக்கிதுநேர் தெரியாதென் றயல்மொழியில்
ஏதேதோ இயம்பி நின்று
மனக்கினிய புகழ்ச்சியுடன் மாட்சிமிகப்
பெற்றதா மகிழ்ச்சி கூர்வார்
உனக்கினிய புதல்வராய் உற்றிருந்தும்
உனை அறியார் ஊனம் என்னே! (இந்தியத்தாய்நிலை)

என அந்த ஞான சூனியமாது நிலைமைக்கு இரங்கித் தமிழ்த் தாயை நினைந்து உலகம் இவ்வாறு வருந்த நேர்ந்துள்ளது. அவர் பெருந்தகைமையுடன் திருந்த வேண்டும்.

பாங்கு படியாமல் என்றது ஈங்கு வந்தவாது இயல்பு அறிய நின்றது. அரிய நூல்களையும் படியாமல், நல்ல ஒழுக்க நெறிகளையும் உள்ளம் கொள்ளாமல் எல்லாம் தெரிந்ததாக இறுமாந்திருக்கும் சிறு மாந்தரது அப்பொல்லா நிலைமை புலன் கொள வந்தது. பாங்கு = ஒழுங்கு, முறை.

வடியாமல் உள்ளார் வலிந்து என்றது அகத்தில் நிறைந்துள்ள சிறுமைகளெல்லாம் ஒரு சிறிதும் குறையாமல் உள்ளம் களித்து இழிந்த நிலையிலேயே வலிந்து உறுதிகொண்டுள்ளனர் என்றவாறு. அந்த மூடக்களிப்பு நாட்டுக்கு ஒரு பீடை ஆதலால் அதனை அறவே ஒழித்து உண்மையான நன்மையை அவர் உணர வேண்டும். புன்மையான தீமையில் புலையாடலாகாது.

அருமைத் தமிழைத் தாய்மொழியாகப் பெற்றும் அதன் பெருமையை உணர்ந்து பேணாமல் இருப்பது பேதைமையாம் என்பது கருத்து.

"நல்ல தமிழை நயந்து படியாதார்
வல்ல சபைத்தலைமை வாய்ந்துகொண்டு—சொல்லும்
புலமையார்க் கெல்லாம் புலைமை புரிவார்
நிலைமையி தென்னே நினை."

என்னும் இதனால் இக்காலநிலை புலனாம்.

---

190. காலக் கொடுமையால் கன்னித் தமிழ் நிலைமை
சாலத் தளர்ந்து தவித்தாலும்—சீலம்
உடையார் அதனை உடைமையா ஏந்தி
இடையேறு கின்றார் எதிர்ந்து. (ம)

இ-ள்.

நம் கன்னித் தமிழ் காலக் கொடுமையால் சாலத்தளர்ந்து தவித்தாலும் சீலம் உடையார் சிலர் அதனை உவந்து பேணி உறுதி குன்றாமல் உயர்ந்து வருகிறார் என்றவாறு.

கன்னித்தமிழ் என்றது என்றும் இளமை எழில் குன்றாமல் வளமை சுரந்துள்ள அதன் நிலைமை கருதி.

"அகிலாண்ட கோடி ஈன்ற அன்னையே! பின்னையும் கன்னி என மறை பேசும் ஆனந்த ரூப மயிலே!" என்று அம்பிகை துதிக்க நின்றதுபோல் தமிழும் பல நூல்களைப் பெற்று ஆண்டுகள் பல நீண்டு பழமை மிகுந்திருந்தும் நாளும் புதுமையாய் இளமை பொலிந்து நிற்றலால் கன்னி என வந்தது.

"கோன்நிலை திரிந்து கோடை நீடினும்
தான்நிலை திரியாத் தண்தமிழ்ப் பாவை." (மணிமேகலை)

காவிரி நதியைத் தமிழ்ப் பாவை என இவ்வாறு குறித்திருக்கிறார். இனிய நீர்மையும் நிலைதிரியாமையும் தமிழின் தலைமையும் இதில் உணரலாகும்.

"நறை பழுத்த துறைத்தீந் தமிழின் ஒழுகும் நறுஞ்சுவையே" என மீனாட்சியம்மையைத் தமிழின் சுவையாக உருவகித்துள்ளார்.

தெய்வத் தன்மை, தாய்மை, தூய்மை, தண்மை, வண்மை முதலிய மேன்மையான தன்மைகளில் தலை சிறந்து தமிழ் தழைத்துள்ளமையை இவை உணர்த்தியுள்ளன. மன்பதைக்கு இன்பமாய் மருவி வருதலால் அன்புத்தாய் என அருமை பாராட்ட நேர்ந்தது. அதன் இன்பப் பால் பருகித் துன்பப்பால் ஒழிக.

முன்னம் அரசர்களும் குடிமக்களும் தமிழை உயிர் என மதித்து உவந்து போற்றி உரிமை யுணர்வுடன் உயர்ந்திருந்தனர்.

"இருந்தமிழே உன்னால் இருந்தேன் இமையோர்
விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்" (தமிழ் விடுதூது, 5)

எனச் சுவர்க்க போகத்தையும் வெறுத்துத் தமிழ்ச் சுவையை விழைந்து இந்நாட்டு மக்கள் நலம் புரிந்து வந்தார்.

அத்தகைய அருமைத் தமிழை அறவே மறந்து இந்நாள் நம்மவர் செய்துவரும் சிறுமையை எண்ணுந்தோறும் நெஞ்சம் புண்ணாய் எரிகின்றது.

வாய் மொழிந்துவரும் தம் தாய் மொழியில் எந்த நாட்டவரும் ஒரு தனி மதிப்பும் உரிமையும் கொண்டு அதனைப் பெருமையாகப் பேணி அருமை காட்டி வருகின்றனர்.

இந்நாட்டவர் பெரும்பாலும் தமிழை விரும்பாமலே பிழைபட்டு நிற்கின்றனர். பிழை நிலை பழி நிலையில் வளர்கின்றது,

"தாயாய் அமைந்த தமிழ்மொழியைப் பேணுமல்
பேயாய் அலைந்து பிறழ்கின்ருர்—நோயாக
வந்து பிறந்து வளர்ந்து வசைவளர்த்
தந்தோ அழிவர் அயல்."

என்றபடி மயலுழந்து அவர் மாண்டு போகின்ருர்.

இங்ஙனம் பலர் நிலை திரிந்து நின்ருலும் சிலர் தமிழை உரிமையுடன் உவந்துபயின்று உணர்வின்பம்நுகர்ந்துவருகின்ருர். பிறப்பு மொழியைச் சிறப்பாகப் பேணிப் பிறப்பின் பயனை அனைவரும் அடையவேண்டும் என்பது கருத்து.

பிறப்புரிமை யுடன்வளர்ந்து பேச்சுவழக்
கினிதமைந்து பெருகி உன்றன்
சிறப்புடைய தாய்மொழியாய்ச் சீர்மிகுந்த
தமிழ்மொழியைச் செவ்வையாக
உறப்பயின்று தெளியாமல் ஊன்படிந்து
திரிவாயேல் ஊனம் அன்ருே
இறப்படையு முன்புநீ பிறப்படைந்த
பயன்பெறுதல் இனிமை யாமே.

## இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

தமிழ் இனிமை என்னும் பொருளது.
அரிய சுவைகள் நிறைந்தது.
சிறந்த நீர்மைகள் செறிந்தது.
உயர்ந்த நூல்கள் அமைந்தது.
தெய்வத் தன்மை வாய்ந்தது.
அரசும் வணங்கி வந்தது.
இன்று அருமை குன்றி யுள்ளது.
உரியவர் உறங்கி யுள்ளனர்.
சிறுமைகள் பேசிச் சீரழிகின்றனர்.
பழம்பெருமை கிளர்ந்து வளம்பெறவேண்டும்.

19-வது தமிழ் முற்றிற்று.

# இருபதாவது அதிகாரம்

## நூல்

இது நூல்களின் பான்மையும் மேன்மையும் பகர்கின்றது. ஒரு நாட்டு மக்கள் தொன்று தொட்டுப் பேசி வருகின்ற மொழியில் விழுமிய எண்ணங்களும் அரிய சரிதங்களும் பாட்டுவடிவில் படிந்து வருகின்றன; இலை தளிர் தழை குழை அரும்பு பூ காய் கனி முதலியன மரத்தில் கிளைத்துச் செழித்திருத்தல் போல் மொழியில் நூல்கள் விளைந்திருக்கின்றன. அந்நிலையில் தமிழ்மொழியில் எழுந்துள்ள நூல்களைக் குறித்து உணர்த்த வந்துள்ளமையால் இது தமிழின் பின் வைக்கப்பட்டது.

191. நூலென்றல் மேலோர்தம் நுண்ணுணர்வால் ஆய்ந்துவைத்த
சால்பமைந்த நல்லறிவின் சாரங்காண்—மேல்வரும்
மன்பதை மாந்தி வழிவழியே மாண்புயர
இன்ப முதலாகும் எண். (க)

இ-ள்

மேலோர்களுடைய தெளிந்த மதி நலத்தால் ஆராய்ந்து வைத்த சிறந்த அறிவின் சாரங்களே நூல்களாய் விளைந்து வெளிவந்துள்ளன; பின் வருகின்ற சந்ததிகள் தொடர்ந்து அனுபவித்தற்குரிய இன்பமுதல்களா அவை இசைந்து நிற்கின்றன என்க.

இது நூலின் இயல்பு கூறுகின்றது.

மேலோர் என்றது மேன்மையான மதிநலமும் சீலமும் உடையாரை. நூல் விளையும் மூல நிலையை நுதலிய படி யிது.

வெண்மையான பஞ்சிலிருந்து நூல் நூற்றல்போல் செம்மையான சொற்களிலிருந்து நூற்றுவருதலால் நூல் என வந்தது. நுதி இழை மதியிலிருந்து விளைவது என்னும் உண்மையை நூல் என்னும் சொல் உணர்த்தி யுள்ளது.

அறிவுக்கு நன்மையாவது நெறி பிறழாமல் நிலைத்துத் தருமம் சத்தியங்களில் தழைத்துவரும் தன்மை. "கல்லாத பேர்களே நல்லவர்கள்; நல்லவர்கள்" என்னும்படி பொல்லாத அறிவும் உண்டு ஆதலால் அதனை விலக்குதற்கு நல் அறிவு எனவந்தது.

நல்ல அறிவிலிருந்துதான் எல்லா உயிர்களுக்கும் என்றும் இனிமையான நல்ல எண்ணங்கள் விளைந்துவரும்; அப்புனித விளைவு மனித வுலகிற்குத் தனி உரிமை யாகின்றது.

கூர்மையான அறிவுமட்டும் போதாது; அது சால்போடு சார்ந்த போதுதான் மேன்மை மிகப் பெற்று நூல் விளக்கும் பான்மை படிகின்றது. சால்பு=மனப்பண்பு.

கண்ணுக்கு ஒளிபோல் அறிவுக்குச் சால்பு. பல குணங்களும் இயல்பாக நிறைந்த சால்பு அமைந்தபொழுது அறிவு தெய்வ மணம் கமழ்ந்து தேசுமிகுந்து செழித்து விளங்குகின்றது.

அத்தகைய உத்தம உயிரிலிருந்து ஊறிவருகின்ற சீரிய கருத்துக்களே நூல்கள் ஆகின்றன; ஆகவே அவை அறிவுக்கு உணவாய் உயிரினங்களுக்கு உய்தி புரிகின்றன.

நூல், அறிவின் சாரம்; என்றமையால் அதன் நீர்மையும் நிலைமையும் தெரியலாகும். மேல்வரும் மன்பதை என்றது பின்னே இடையறாது தொடர்ந்து வருகின்ற மனுக் குலத்தை. மாந்துதல்=அள்ளி நுகர்தல். முன்னோர் ஈட்டி வைத்துள்ள அறிவமுதத்தை உள்ளூற நுகர்ந்த உயிர்கள் உறுதிநலம் பெறுகின்றன. நுகராதன இழிந்து கழிந்து ஈனமாய் ஒழிகின்றன.

உயர்ந்த உணர்வின் சாரங்களாய்த் திரண்டு மன்பதைக்கு இன்ப முதல்களாக நூல்கள் இசைந்திருக்கின்றன. அரிய பொருள்கள் நிறைந்த அந்த இனிய கருவூலங்களை இழந்துவிடாதே; விரைந்து உரிமை செய்து கொள்ளுக என்பது கருத்து.

---

192. தெள்ளமிர்தும் பாலும் தெளிதேனும் தீம்பாகும்
தள்ளரிய இன்சுவையே தாங்கிடினும்—உள்ளமுறு
நூலின்பம் போல நுகரும் தொறும்பெருகி
மேலின்பம் ஆமோ விளம்பு. (உ)

இ-ள்

தெள்ளிய அமிர்தம், வெள்ளிய பாலும், தெளிந்த தேனும், தீம்பாகும் இனிய சுவையுடையன ஆயினும், ஒள்ளிய நூலின் சுவை போல நுகரும் தோறும் பெருகி மேலும் மேலும் நிலையான இன்பம் நலமாகப் பயவா என்றவாறு.

ஆமோ என்று வினவியது ஆகாது என்னும் குறிப்பினது.

அமிர்தை முதலில் குறித்தது அதன் அருமை கருதி. விண்ணமர் பொருள் ஆதலின் மண்ணுறு பொருள்களினும் முன்னுற

வந்தது. தீம்பாகு = இனிய வெல்லப் பாகு. கருப்பஞ் சாறு, கனி ரசம் முதலிய இனிய பாகங்கள் எல்லாம் தீம்பாகு என நின்றன.

தள்ளரிய சுவை என்றது யாரும் எள்ளி இகழாமல் யாண்டும் அள்ளி நுகரும்படி இனிய சுவைகளை இயல்பாக எய்தியுள்ளமை கருதி. தாங்கிடினும் என்றது அசாரங்கள் யாதுமின்றி அதி மதுரமான சாரங்களை நிரம்பித் ததும்பி நிற்கும் நீர்மையும் நிலைமையும் நினைந்துகொள்ள.

அறிவின்பத்தின் அருமை தெரியப் பொறியின்பங்கள் புலனாய் வந்தன. மதி நலம் கனிந்தது மாண்பு மிக வுடையது.

உள்ளம் உறும் என்றது நூல் இன்பம் நுகரும் இடம் குறித்தது. உள்ளத்தே அனுபவிக்கின்ற ஓர் உயர்ந்த இன்ப நுகர்ச்சிக்குப் புறத்தே சிறந்த சுவையுடைய சில பொருள்களை இனமாக எடுத்துக் காட்டி அதன் பெருமையை விளக்கியபடி யிது.

அமிர்தம் முதலியன நாவில் உண்ட வுடனே உருக்குலைந்து ஒழியும். நூல் நயம், உள்ளங்கொண்டு உணருந்தோறும் உலவா இன்பம் பயந்து ஓங்கி வளரும். பருகிய பொழுது மட்டும் சிறிது சுவையாய் அவை வறிது கழியும்; இது கருதிய அளவே பெரிதும் சுவையாய்ப் பெருகி எழும். அவை உடலைக் கொழுக்கச் செய்து மயலில் ஆழ்த்தும்; இது, உயிரை வளர்த்து உயர்வில் ஊக்கும் என்க. புத்தி தத்துவத்தில் அனுபவிப்பது ஆதலால் முத்தி இன்பம் போல் என்றும் இது மூவா முதன்மையை மேவி யிருக்கின்றது.

தேக போகங்களின் நிலைமைகளையும் ஆன்ம போகத்தின் தலைமையையும் ஆய்ந்து தெளிக.

பொறி இன்பங்களினும் அறிவின்பமே சிறந்தது; அதனை மனித இனம் புனிதமாகப் போற்றிக் கொள்ள வேண்டும்.

"In the pursuit of intellectual pleasures lies every virtue; of sensual, every vice." (Goldsmith)

"அறிவுச் சுவையில் அறம்வளர்கின்றது; பொறி நுகர்ச்சியில் மறம் விளைகின்றது" என்னும் இது ஈண்டு அறிய வுரியது.

நூல் உணர்ச்சி என்றும் மேலான இன்பம் விளைக்கும் ஆதலால் அதனைச் சாலவும் விழைந்து பேணி உவந்து கொள்ளுக.

193. விழுமிய நூலுயர்ந்த மெய்ப்பொருளைத் தாங்கி
வழுவின்றி வாய்ந்து வயங்கி— அழகமைந்த
மெல்லுடம்போர் நல்லுயிரை மேவிநிற்றல் போலென்றும்
புல்லியின்பம் செய்யும் பொலிந்து (ங)

இ-ள்.

அழகு நிறைந்த மெல்லிய உடம்பில் நல்ல உயிர் அமைந்து நிற்றல்போல் உண்மைப் பொருள்களை மருவி உயர்ந்த நூல் ஒளி மிகுந்து என்றும் இன்பம் புரிந்து வருகின்றது என்றவாறு.

விழுமிய = மிகவும் மேன்மையான. விழுமம் என்னும் சொல் சீர்மை நீர்மைகளை உணர்த்திவரும்.

நல் உயிர் என்றது சத்தியம் சாந்தம் சீலம் முதலிய உத்தம நலங்கள் தோய்ந்து உள்ளதை. அந்தத் திவ்விய சீவன் எவ்வழியும் இன்பமாய் இனிதமர்ந்திருத்தல் போல் மேலான நூலும் ஞாலம் நலமுறக் கோலம்கொண்டு நிற்றலால் அஃது இங்ஙனம் உவமிக்க வந்தது. மெல் உடம்பு சொல்லுக்கும், நல் உயிர் பொருளுக்கும் ஒப்பாம்.

புல்லி இன்பம் செய்யும் என்றது, உள்ளம் உணர்ச்சிகளைப் பொருந்தி நின்று உயர்ந்த மகிழ்ச்சிகளை விளைத்து வருதல் கருதி. புல்லுதல் = பொருந்தல், தழுவல்.

புறத்தே உருவப்பொலிவும் அகத்தே இனிமைப் பண்பும் நிறைந்த ஒரு அருமைத் திருமகன் போல் சிறந்த நூல் செவ்வி சுரந்து திகழ்கின்றது.

சொல்லினும் பொருளினும் சுவை சுரந்து பல்வகை நலங்களும் படிந்து எல்லாரும் மகிழ்வுற இனிது எழுந்துள்ளதே நல்ல நூல் ஆம். அது சீவநதி போல் யாவருக்கும் ஆதரவருளும்.

அழகும் குணமும் அமைந்த விழுமிய குலமகளை உவமை குறித்தது காட்சிக்கும் கருத்துக்கும் இன்பம் பயந்து யாண்டும் மாட்சி புரிந்து வருகின்ற அதன் ஆட்சி நிலையை அறிய.

வெளியே மொழியில் இனிமையும், உள்ளே கருத்தில் அருமையும் கனிந்து செவிக்கும் சிந்தைக்கும் இனியனவாய்ச் செழித்து விளங்குவனவே சீரிய நூல்களாம் என்க.

என்றும் இன்பம் செய்யும் என்றது வருகின்ற சந்ததிகளுக்கு எல்லாம் அறிவு நலங்களை உதவி ஒரு சிறிதும் குன்றுமல் என்றும் நிலையாக நிலைத்துவரும் அதன் நிலைமை தெரிய வந்தது.

---

194. உள்ளக் கவலை ஒழியும் உயரின்ப
வெள்ளம் பெருகி விரியுமே—தெள்ளிய
நூலொன்று கையேந்தி நோக்கின் அதன்துணை
போலொன்றிங் குண்டோ புகல். (௪)

இ-ள்.

தெளிந்த நூல் ஒன்று கை ஏந்தி நோக்கின் உள்ளக்கவலை ஒழியும்; உயர்ந்த இன்பங்கள் பெருகி விரியும்; அந்நூல் போல் உயிர்க்கு உற்றதுணை வேறு யாதும் இல்லை என்றவாறு.

தெள்ளிய நூல் என்றது கருத்துக்கள் தெளிவாக விளங்கியுள்ள இனிய நூலை. தன்னைப் பயில்கின்றவர்க்கு உள்ளத்தெளிவும் உணர்வினிமையும் உதவ வல்லது என்க.

படிக்கின்ற நூல் இப்படி இருக்கவேண்டும் என்றபடியிது.

நல்ல நூலைப் படிக்கும்பொழுது உள்ளம் அதில் ஊடுருவிப் புகுந்து பொருள் நயங்களை உவந்து நுகர்தலால் உற்றிருந்த கவலைகள் முற்றும் ஒழிந்து போகின்றன. விளக்குப் புக இருள் மாய்ந்தது போல் கல்வி நூல் புகவே கவலை மாய்கின்றது. கவலையை முதலில் குறித்தது மனித வாழ்க்கையின் நிலைமை தெளிய. அரசர் முதலாயினேரது வாழ்க்கை வரலாறுகளும், வினை விளைவுகளும், விதி நியமங்களும், உலக அனுபவங்களும், தெய்வஅருள்களும், சீரிய அறிவுகளும் ஒவிய உருவங்களாய் நூல்களில் உலாவி வருதலால் அவை உணர்வுக்கு இனிமையும், உள்ளத்திற்கு ஆறுதலும், உயிர்க்கு உறுதியும் உதவி யருள்கின்றன.

உலகப் பொருள்களில் விளையும் பொறியின்பங்களைப் போல் இழிந்துபடாமல் நூல் நுகர்ச்சி உணர்வின் சுவையாய் உயர்ந்து பொங்குதலால் உயர் இன்பம் என வந்தது.

வெள்ளம் என்றது அந்த இன்பத்தின் எல்லை தெரிய.

நூலை நோக்கின், கவலை ஒழியும்; இன்பம் விளையும்; என்றமையால் அதன் பண்பும் பயனும் நன்கு புலனும்.

உற்ற துன்பங்களை ஒழித்து உயர்ந்த இன்பங்களை அளித்தருளுதலால் நூல்கள் உயிர்கட்கு உறுதித் துணைகளாய் அமைந்தன. அந்த அரிய சஞ்சீவிகளை வறிதே இழந்து விடாதே.

இங்கு அதன் துணைபோல் உண்டோ? என்றது இவ்வுலகத்தில் நூலைப் போல உயிர்க்கு உரிமையான இனிய துணை யாண்டும் யாதும் இல்லை என்றவாறு.

எவ்வழியும் இன்பமாய் இருமையும் பெருமை தருகின்ற அருமை நூல்களை ஆர்வத்துடன் போற்றிக் கொள்க.

---

195. அல்லலுறும் இவ்வுலகாம் ஆரணியத் தோரிரண்டே
நல்ல கனிகளுள நாடுமினே—சொல்லினொன்று
நூலாகும் மற்றொன்றே நுண்ணறிவு சீலமிக்க
மேலோர்நட் பாகுமிது மெய். (௫)

இ-ள்.

துன்பங்கள் நிறைந்த இவ் வுலகமாகிய நச்சுவனத்தில் இரண்டு இனிய கனிகள் உள்ளன; ஒன்று நூல்; மற்று ஒன்று சீல முடைய மேலோர் நட்பு ஆம் என்றவாறு.

இது, நல்ல நூலையும், நயத்தகு சீலரையும் நயந்து கொள்க என்கின்றது. பயிற்சியும் கூட்டமும் உயர்ச்சி புரிகின்றன.

அருந்தல் பொருந்தல்கள் இனிது அமையும்பொழுது சிறிது சுகமாய், அதன் பின் பெரிதும் அல்லல்களிலேயே உயிரினங்கள் மருவி உழலுதலால், "அல்லல் உறும்" என இவ்வுலக நிலைமை சொல்ல வந்தது.

"இன்பு ஓர் அணுவாம்; இடர் அதற்கு மாமலையாம்" என்றபடி புன்போக மான இவ் வையத்தின் வெய்ய நிலை மெய்யறிவுடையார் எவர்க்கும் நன்கு தெளிவாம்.

இவ் வுலகத்தைக் காடு என்றது கொடுமையும் கொதிப்பும் மடமையும் மண்டி யுள்ளமை கருதி. ஆரணியம் = வனம்.

வஞ்சம் பொறாமை சூது கோபம் முதலிய தீமைகளே நிரம்பி எங்கும் வெப்பமாய்க் கானல் பரந்துள்ள இம்மாநிலத்தில் மனிதர் இனிது தங்கித் தகையாறி இன்புறுதற்குக் கனி மரங்கள் நிறைந்த குளிர்பூஞ் சோலைகளாய் இரண்டு தனி நிலையங்கள் இருக்கின்றன என இனம் துலக்கி இடம் விளக்கியபடி யிது.

இந்த இனிய நிழல்களில் ஒதுங்க வில்லையானால் கோடை வெயிலில் சிக்கிய மானினம்போல் ஆருயிர்கள் அநாதரவாய் அலைந்து திரிந்து அலமந் துழல்வனவாம்.

நூலையும் நட்பையும் கனிகள் என்றது அவற்றின் நீர்மையும் சீர்மையும் நினைந்து. இனிய சுவை சுரந்து என்றும் இன்பம் புரிந்து வருதலால் அவை இங்ஙனம் இசைக்க வந்தன.

பல்வேறு வகைப்பட்ட நூல்களை எல்லாம் ஒருங்கே படித்து நுண்மாண் நுழைபுலம் உடையாராய் உலகில் ஓங்கி யிருப்பினும் உள்ளே சீலம் இலராயின் அவர் மேலோர் ஆகார் ஆதலால் நுண் அறிவோடு சீலமும் வேண்டும் எனச் சால்பின் கோலம் காண நேர்ந்தது.

சிறந்த கல்வி யறிவும் உயர்ந்த ஒழுக்கமு முடைய சான்றோர் கேண்மை வான்றோய் அமுது என என்றும் ஆன்ற மதிப்பும் அமைதியும் இன்பமும் அருளிவரும் என்க.

நூல், உருவம் மறைந்த மேலோரது உயிரின் சாரம்; சால்புடையார் நேரே உருவொடு திகழும் சீலவான்கள். நூலின் சுவை போல் இவரது கேண்மையும் ஆன்ம போகமாய் மேன்மையை விளைக்கும் ஆதலால் இரண்டும் இணைத்து எண்ண வந்தன.

"நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு." (குறள் 783)

நூலும் மேலோர் தொடர்பும் இன்ப ஊற்றும் என இஃது உணர்த்தி யுள்ளமை அறிக.

உயர்ந்த நூலையும் சிறந்த மேலோரையும் என்றும் உறுதித் துணையாக உவந்துகொள்க என்பது கருத்து.

---

196. மேலான எண்ணங்கள் மேவி வெளியுலகின்
பாலாகி நீதி படிந்துமே—நூலாகி
வந்துள அந்த வகைதெரிந்து மாண்புணர்ந்து
முந்துளங் கொள்க முனைந்து. (சு)

இ-ள்.

உயர்ந்த மேதைகளுடைய சிறந்த எண்ணங்களே நூல்கள் என உருவாகி உலகில் வெளிவந்துள்ளன; அவ் வுண்மையை உணர்ந்து உறுதி நலங்களை ஓர்ந்து கொள்க என்றவாறு.

நூல்கள் என்பன மேலோர்களுடைய சரித்திரங்கள், தெய்வத் துதிகள், நீதிமுறைகள், உலக நிலைமைகள், தத்துவ நியமங்கள் எனப் பல வகைகளாய்ப் பரந்து விரிந்துள்ளன.

இதிகாசம், புராணம், காவியம் முதலியன யாவும் உன்னதமான உறுதி நலங்களை நன்னயமாக உணர்த்தி மனித இனத்தைப் புனிதப் படுத்தி இனிது உயர்த்துவதையே குறிக்கோளாகக் கொண்டிருக்கின்றன.

மேல் ஆன எண்ணங்கள் என்றது தம்மை யுடையாரை மேலான நிலைமையில் உயர்த்தி மேன்மை புரியும் தன்மைகளை.

அத்தகைய நல்ல தகைமைகளே சொல்லுருவில் அமைந்து, பாவினங்களில் படிந்து காவியங்களாய்க் கனித்திருத்தலால் பூவுலகில் தேவியல்பாய் அவை சிறந்து நிற்கின்றன,

அந்த நிலைமையை உணர்ந்து நூல்களைப் பயின்று தலைமையான தன்மையை நீ அடைய வேண்டும்.

மூந்து உளம் கொள்க முனைந்து என்றது இளமையிலேயே நூல்களை விழைந்து பழகிக் கொள்க என்றவாறு.

ஏட்டில் எழுத்து வடிவாய் ஏதோ உள்ளது என உன் பாட்டில் உழன்று ஒழியாதே; புத்தகங்கள் புத்துயிர் அளிக்கும் புத்த முதங்கள் எனத் தெளிந்து உய்த்துணர்வுடன் ஊன்றி ஓதி உயர்ந்து கொள்க.

---

197. வள்ளுவர் கம்பரென மாண்டநம் முன்னோர்கள்
துள்ளுமுயர் நூலுருவாய்த் தோன்றியுள்ளார்—தெள்ளுபுகழ்
பூண்டு திகழுமப் புண்ணியரைக் கூடினின்பம்
நீண்டு விளையும் நிலத்து. (எ)

இ-ள்.

நம் முன்னோர்களாகிய வள்ளுவர் கம்பர் முதலிய மேலோர்களே நூல்களாய் மீண்டு ஈண்டு வந்துள்ளனர்; அந்தப் புண்ணிய சீலர்களைக் கண்டு மகிழ்ந்து நாளும் பழகிவரின் உயர்ந்த இன்ப நலங்கள் விளைந்துவரும் என்றவாறு.

நம் முன்னோர் என்றது உரிமை உணர்ந்து உள்ளம் உருக.

இந்நாட்டில் நமக்கு முன் வாழ்ந்து நமக்குப் பின் வருகின்ற சந்ததிகளுக்காக உறுதிநலங்களை அன்புரிமையுடன் அருளியிருக்கும் பெரியோர்களை அறியாதிருப்பது பெரிதும் பிழையாம். பிறந்த ஒவ்வொருவரும் தமது மூதாதையருடைய மேதா விலாசத்தில் ஏதாவது ஓரளவு பங்கு பெறவில்லையாயின் அவர் இங்கு வந்ததில் யாதும் பயனில்லையாம். உரிய மேதையை இழந்துவிடின் பெரிய பேதையாய் உழந்துபட நேரும்.

மாண்ட என்றது மாட்சிமை நிறைந்த அவரது மகிமை தெரியவந்தது. மாண்புடைய அம்மேலோர்கள் நூல் உருவங்களில் இன்று நம் இடையே உலாவி யிருக்கின்றனர்.

துள்ளும் உயர்நூல் என்றது உள்ளுந்தோறும் உள்ளமும் உயிரும் உவந்து களிக்கும்படி உணர்வு நலங்களை ஊட்டியருளும் உயர்வு நோக்கி.

பெற்ற தந்தை உற்ற பிள்ளைக்குச் சொல்வதினும் எத்தனையோ மடங்கு கருணையுடன் அரிய நலங்களை இனிமையாக உள்ளங்கனிந்து அவர் உரைத்துள்ளனர்.

> "பெற்றவரும் நற்குருவும் பேணி ஒருபொருளை
> உற்றிருகால் அன்றி உரைசெய்யார்—பற்றி
> ஒருபொருளைப் பத்துக் குறள்களால் செப்பித்
> தருகையால் வள்ளுவரே தாய்."

என்னும் இதனால் அத்தாதாவின் தகைமை புலனும். சொல்லுகின்ற இனிமையும் வியமும் அதிசயமுடையன.

> "கொல்லா நலத்தது நோன்மை; பிறர்தீமை
> சொல்லா நலத்தது சால்பு," (குறள், 984)

மனிதனது சொல்லும் செயலும் தூய்மையுறுமாறு சொல்லிய படியிது. இதன் உள்ளுறை உண்மையை உணரவேண்டும்.

எவ்வுயிர்க்கும் இடர்செய்யாதே; எவர் தீமையும் பேசாதே என்பார் இவ்வாறு நீர்மையும் சீர்மையும் கூர்மையும் குலாவக் கூறியிருக்கிறார். தவமும், சான்றாண்மையும் இங்கே நவமாய் நடிக்கின்றன. சிறந்த தவசீலனாகவும், உயர்ந்த குலமகனாகவும் நீ உயர வேண்டுமாயின் இவ் இயல்பு உன்னிடம் அமைந்திருக்க வேண்டும் என்பதாம். உணர்வுறுதி உயிர்க்கு அமுதமாகின்றது.

இங்ஙனம் அறிவுருவாய் அருகமர்ந்து அரிய பல உறுதி நலங்களை நாளும் தேவர் அருளி வருகின்றார். மேன்மையான எண்ணங்களை உணர்த்தி யருளும் இத்தகைய புண்ணியமூர்த்திகளைப் பொருந்தி யிருந்தால், உள்ளம் புனிதமாம்; ஆகவே இருமையும் பெருமையாய் இன்ப நலங்கள் பெருகி எழும் என்க. மேலோரான நூலோர் பலர் இருக்க இருவரை மாத்திரம் வரைந்து குறித்தது, தலைமையும் நிலைமையும் கருதி.

சுட்டிய இவர் முதலாக ஒட்டிய பலரையும் நினைந்து நூல்களில் படிந்து மால்களை ஒழிந்து சால்படைந்து கொள்க.

---

198. உண்மையுறு தூய வுயர்நூல் உயிரூறித்
தண்மையுறு கற்பகம்போல் தான்வளரும்-வெண்மையாய்
வன்பூ டுறக்கலித்த மாறுச் சிறுநூல்கள்
புன்பூடு போல்மறைந்து போம். (அ)

இ-ள்.

உண்மையான உயர்ந்த நூல்கள் மக்களுடைய உயிர்களில் ஊறிக் கற்பகம்போல் சிறந்து விளங்கும்; வெண்மையான புல்லிய நூல்கள் இழிந்த பூடுகள் போல் எழுந்து விரைந்து மறைந்து போம் என்றவாறு.

சத்தியமும் சித்த சுத்தியும் வாய்ந்த உத்தம உள்ளத்திலிருந்து உதித்த எண்ணங்கள் எல்லா உயிர்களுக்கும் இன்பமாய் எங்கும் ஒளிவீசி என்றும் குன்றாமல் நின்று நிலவும்.

அந்த அருமைக் கருத்துக்கள் நிறைந்த புனித நூல்கள் மனித இனத்துக்கு மகிமை மிகத்தந்து யாண்டும் இனிமை சுரந்து நாளும் புதுமையாய் விழுமிய நிலையில் விளங்கி நிற்றலால் அவை கற்பகம் என வந்தன.

"என்றும் புலராது யாணர்நாட் செல்லுகினும்
நின்றலர்ந்து தேன்பிலிற்றும் நீர்மையதாய்—குன்றாத
செந்தளிர்க் கற்பகத்தின் தெய்வத் திருமலர்போன்
மன்புலவன் வள்ளுவன்வாய்ச் சொல்."

(திருவள்ளுவ மாலை 3)

எனத் திருக்குறளைக் குறித்து இறையனார் அருளியுள்ளது ஈண்டு எண்ணத் தக்கது. பிலிற்றும் = சொரியும்.

கருதிய நலங்களை யெல்லாம் உரிமையுடன் உதவி யருளும் தெய்வத் தருவைப் போல் உயிர்களுக்கு இன்பமாய் உறுதி நலம் பயந்து உயர் நூல் உய்வைத் தரும் என்க. உண்மையும் தூய்மையும் தண்மையும் அதன் தன்மைகளாய் வந்தன.

மேலான நூல் மக்களுடைய உள்ளங்களுள் வேரூன்றி உள்ளமையால் அது என்றும் நிலையாய்ச் செழித்து நின்று யாண்டும் சிறந்து திகழ்கின்றது.

மாணுச் சிறுநூல் என்றது உணர்வு நலமின்றி ஊனமான ஈனங்களை. நல்ல கருத்துக்கள் இல்லாமல் புல்லிய சொற்களால் முடைந்தன நூல்கள் போல் மிடைந்து வெளிவரினும் விரைவில் அழிந்துபடும்.

"புன்பூடு போல் மறைந்து போம்" என்றது அவற்றின் விளைவும் அழிவும் தெளிய வந்தது. புன் பூடு=புல்லிய பூண்டு. என்றது காளானை.

மழைக் காலத்தில் குடைக் காளான்கள் பல நிலத்தில் கிளைத்து எழும்; எழுந்தபடியே அவை இருந்த இடமும் தெரியாமல் விரைந்து அழிந்து போம் ஞான சூனியமான புல்லிய நூல்களும் கால வேற்றுமையால் கலித்து எழும்; எழினும் உலகில் நிலைபெறாது விரைவில் அழிவுறும் என்க.

கற்பகம் போன்ற அற்புதமான உயர்ந்த நூல்களை உவந்து படி; அற்பங்களை விழைந்து பாராதே என்பது கருத்து.

---

199. பாலும் பழமும் பருகி விழுங்குவார்
மேலென் றிழிவை மிகவிழைவார்—சேலுண்ட
கண்ணாரைக் கண்ணிக் கருத்தழிவார் கல்விநூல்
எண்ணார் இவரிருந்தும் என்? (கூ)

இ-ள்.

பழங்களை விழுங்கிப் பாலைப் பருகி இழிவை மேலாக விரும்பிக் களிமயக்குடன் விழைவு மீதூர்ந்து உலகில் உலாவுகின்ற பலர் நல்ல கல்வி நூல்களை உவந்துகொள்ளாமல் ஒதுங்குகின்றனர்; என்னே இவர் வாழ்வு? என்றவாறு.

இது, நூல் பயிலாதார் சால்பு அடையார் என்கின்றது.

பால் பழம் என்றது செல்வ வளம் தெரிய வந்தது. பருகலும் விழுங்கலும் நிரல்நிறை. பழம்தின்று பாலைக் குடிப்பதுதான் முறை ஆயினும், பொறி நுகர்ச்சியில் வெறி மண்டி நிற்கும் அவரது மிருக இச்சையின் நிலை தெரிய முறை பிறழ்ந்து நின்றது. விழுங்கி என்றது இழிவுக் குறிப்பு.

மேல் என்று இழிவை மிக விழைவார் என்றது உலக நாட்டமான சிறிய பதவிகளில் பெரிய மோகிகளாய் மதமீறி நிற்பவரை.

சேல் உண்ட கண்ணார் என்றது மங்கையரை. கண்ணி அழிதலாவது அவரை எண்ணி இழிதலை. கண்ணுதல் = நினைந்து உருகுதல். மால் உண்ட மனத்தார் நூல் உண்ணாது ஒழிகின்றார்.

மனிதர் என வெளிவந்தவருள் பலர் உலக போகங்கள் எல்லாம் வேண்டும் என்று அல்லும் பகலும் அவாவி அலைகின்றார்; நல்ல உயர்ந்த போகமாகிய இனிய நூல்களை விழைந்து பாராமல் அவர் ஒழிந்து போகின்றார்; அப்போக்கை நினைந்து இரங்கியபடி யிது. நூல் நோக்கம் பெற்று அவர் மேல் நோக்க வேண்டும்.

நூல் அறிவை வளர்க்கும்; அதனால் ஆன்ம ஒளி யுண்டாம். இங்ஙனம் உயிருதியமான உயர்நூல்களைப் படியாமல் பெரிய மனிதர் என உலகில் தலைநீட்டி வருதல் பெரிய புலையாட்டமாம்.

செந்தமிழ் நூல்களை இந்த நாட்டவர் சிந்தியா திருத்தல் போல் வேறு எந்த நாடும் இருந்தது இல்லை. இருக்கவும் முடியாது. இத் தேசத்தில் இப்பொழுது இரண்டுகோடி தமிழ் மக்கள் உள்ளனர்; ஒரு நல்ல நூலை ஐந்நூறு புத்தகங்கள் அச்சிடுதற்கு அறிஞர் அஞ்சுகின்றனர். இந்த அச்சம் எதை உணர்த்துகின்றது? அதனை ஊன்றி உணர வேண்டும்.

" இருநூறு லட்சம்பேர் இனியதமிழ் மக்கள்என இந்நாட் டுள்ளார்;
ஒருநூறு புத்தகங்கள் ஒருபதிப்பில் பதிவுசெய்ய உள்ளம் அஞ்சிப்,
பெருநூல்கள் பதியாமல் கலைவல்லோர் பெயர்கின்றார்; பெயர்ச்சிஎல்லாம்
வருநூல்கள் பேணாத மதியிலிகள் எனும்பெயரை வளர்த்த தன்றே "

இவ்வாறு பழிவளர விழி துயின்று கிடக்கலாமா? தம் தாய்மொழி நூலைத் தகவுடன் விழைந்து உவந்து பயின்று ஒளி பெற வேண்டும். பிறந்த பயனை உணராதிருப்பது பேதைமை யாகும்.

கல்வி நூல் எண்ணுர் இவர் இருந்தும் என்? என்றது அவர் இருப்பதால் தமிழ் மொழிக்கு யாதும் பயன் இல்லையே! என்று வருந்திநொந்தவாறும். அவர் திருந்தி வாழ வேண்டும்.

பாலைக் குடித்து உன் உடலை வளர்ப்பதுபோல், நூலைப் படித்து உயிரை வளர்த்தருள்; இவ்வளர்ச்சி யின்றேல் அவ்வூனப் பெருக்கம் ஈனமாகும்.

உள் ஒளி சுரந்து, உணர்வு கனிந்து, உயர்இன்பம் தருகின்ற கல்வி நூலை உவந்துகொண்டவரே உயர்ந்தவராவர்; அவ் வுயர்ச்சியை இழந்து இழிந்துபடாமல் விரைந்து உயர்ந்து கொள்க.

---

200. பாலிழந்த பிள்ளை பதியிழந்த மங்கைசெங்
கோலிழந்த மன்னன் கொழுங்கலையின்—நூலிழந்த
மக்களிவர் வாழ்வு மதியிழந்த வானம்போல்
பக்கம் இருண்டு படும். (ய)

இ-ள்.

பால் இழந்த பிள்ளையும், பதி இழந்த மங்கையும், செங்கோல் இழந்த அரசனும், சிறந்த நூல் இழந்த மக்களும் ஆகிய இவர் மதி இழந்த வானம்போல் பொலிவிழந்து இழிந்து படுவர் என்க.

இது, மனித வாழ்வு ஒளிபெற வழி குறித்துள்ளது.

நூல் இழந்த மக்களது நிலைமையை விளக்குதற்குப் பால் இழந்த பிள்ளை முதலியன உடன் எண்ண நேர்ந்தன.

பிள்ளைக்குப் பால், மனைவிக்குப் பதி, மன்னனுக்குச் செங்கோல், மாந்தர்க்கு நூல், வானுக்கு மதி முறையே உறுதியும் இன்பமும் பெருமையும் உயர்வும் ஒளியும் உதவி யருள்கின்றன.

பாலை முதலில் எடுத்து மதியில் முடித்தது, பிள்ளையிலிருந்து தொடர்ந்து நோக்கி உள்ள நலங்களை ஊன்றி ஓர்ந்து கொள்ள.

பால் குடியாத பிள்ளை உடல் மெலிந்து ஊனம் அடைகின்றது; நூல் படியாத மனிதன் அறிவு குறைந்து அவலம் உறுகின்றான். உடற்குப் பால்போல் உயிர்க்கு நூல்.

பதி இழந்த மங்கை இன்ப நலங்களை இழந்து விதவையாய் இழிந்து படுகின்றாள். மதி நூல் இழந்தவன் உணர்வின்பங்கள் ஒழிந்து ஊனமாய் ஈனமடைகின்றான்.

நீதி நலம் கனிந்த செங்கோல் இலனாயின் வேந்தன் நீதில் இழிந்து தேய்ந்து ஒழிகின்றான்; ஓதி யுணரும் உயர் நூல் இலரேல் மாந்தர் பேதைகளாய் இழிந்து பிழைபடுகின்றார்.

வெள்ளிய சந்திரன் இல்லையாயின் வானம் ஒளியிழந்து இருளடைகின்றது; தெள்ளிய நூல் இன்றேல் மானுடர் உள்ளொளி குன்றி விழிகண் குருடராய் வறிதே மருளுறுகின்றனர்.

நூலறிவை இழந்தபொழுது மனிதன் இங்ஙனம் பலவகை நலங்களையும் இழந்து வீணே பாழ் படுகின்றான். அங்ஙனம் பாழ் போகாமல் வாழ்க என உரிமையுடன் வழி யுரைத்தபடி யிது.

கொழும் கலையின் நூல் என்றது பயிலுதற்குரிய நூல்களின் இயல்பு உணர்த்தி நின்றது. கொழுமை=குளிர்ந்த செழிப்பு. உணர்வு நலங்களின் இனிய வளங்கள் என்க.

வெள்ளையாயுள்ளன எல்லாம் ஆவின் பால் போல் இனியபால் ஆகா; புத்தக உருவில் வெளி வருவன எல்லாம் நல்ல நூல்கள் ஆகா. உணர்வு நலம் சுரந்து கலை மணம் கமழ்ந்து உயிர்க்கு உறுதி யான உயர்ந்த நூல்களையே தாம் தெரிந்து உவந்து கொள்க.

நூலறிவை மதியொளியோடு ஒப்ப வைத்தது வாழ்க்கையை எழிலுறுத்தி விளக்கியருளும் அதன் விழுமிய வளமை நோக்கி.

அறிவாற்றலும் ஆன்ம இன்பமும் உலகமதிப்பும் உயர்ந்த கீர்த்தியும் உறுதி நலனும் ஒருங்கே தருதலால் சிறந்த நூல்களை விழைந்து பயின்று பிறந்த பயனை விரைந்து பெறுக.

### இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

மேலோரது அறிவின் சாரமே நூலாய் வந்துள்ளது.
நூல் இன்பம் அமிர்தினும் சிறந்தது.
ஆன்ம நலம் வாய்ந்தது.
அல்லலை ஒழித்து ஆனந்தம் அருள்வது.
எல்லா இன்பநலங்களும் இயல்பாய் இசைந்தது.
நல்ல எண்ணங்களை நாளும் விளைப்பது.
புண்ணிய புருடரைக் கண்எதிர் தருவது.
கற்பகத் தருவைப்போல் அற்புதம் புரிவது.
உத்தம நூலே நித்தமாய் நிலவும்.
நூல் படியாதார் மால்படிந்து உழல்வர்.
நூலிழந்த வாழ்வு பால் இழந்த பிள்ளையாம்.

**20**-வது நூல் முற்றிற்று.

# இருபத்தொன்றும் அதிகாரம்

## கவி.

அஃதாவது கவியினது தன்மை. சிறந்த காவியங்களும், உயர்ந்த நீதிகளும், அரிய கருத்துக்களும் செய்யுள் வடிவிலேயே செழித்து வருகின்றன. உரையினும் பாட்டே பல வகையினும் உயர்ந்தது. இனிய ஓசையும் கனிவும் வாய்ந்து அழகு சுரந்து அறிவு நலம் பொதிந்துள்ள கவிகளின் தொகுதிகளே நூல்களாய் வெளி வருதலால் இது நூலின் பின் வைக்கப்பட்டது.

201. கண்காணு மாந்தரையும் காணுத வேந்தரையும்
விண்கா ணரிய விதங்களையும்—மண்காணு
மாட்சி களையும் மதிமுன் இனிதாகக்
காட்சி அருளும் கவி. (க)

இ-ள்

கண் எதிரே காணுத மக்களையும், கருதாத அரசரையும், அரிய அதிசயங்களையும், பெரிய மாட்சிகளையும் நம் மனக் கண் முன்னே கவிகள் கொண்டுவந்து இனிமையாகக் காட்டி இன்பம் அருள்கின்றன என்றவாறு.

இது, கவி காட்டும் காட்சிகளை உணர்த்துகின்றது.

மனிதன் நேரே கண்ட பொருள்களை மாத்திரம் காண்கின்றுன்; காணுதன பலகோடி யுள்ளன; அளவிடலரியபடி விரிந்து பரந்து மறைந்து போயுள்ள அவற்றுள் சிறந்தனவற்றை அழகாகப் புனைந்து விளக்கி உலகம் கண்டு மகிழ இனிதாகக் கொண்டு வந்து தந்து பாடல்கள் ஆடல் புரிந்து வருகின்றன.

பாட்டு, பா, செய்யுள், கவி என்பன ஒரு பொருள் சொற்கள்.

பல கலைகளையும் பயின்று தலைமையான புலமைவாய்ந்த கவிஞன் அறிவு நலம் கனிய இனிமையாகப் புனைந்து அருள்வது கவி என வந்தது. கவனத்தால் கவிந்து பிறந்தது என்பதாம்.

பாடப்படுவது பாட்டு; செய்யப்படுவது செய்யுள் என்க.

மனிதர் பேசி வருகின்ற மொழிகளில் நூல்கள் பல எழுந்துள்ளன; அவை அந்த அந்த நாட்டுப் புலவர் பெருமான்களால் செய்யப்பட்டன. கலை அறிவால் விளைந்தன.

வசன வடிவினும் செய்யுள் உருவில் விளைந்தனவே சிறந்தனவாகும். எதுகை மோனை முதலிய உரிய உறுப்புக்கள் பொருந்தி, அருமையாக அமைந்து உணர்வு நலம் ததும்பி என்றும் நினைவில் இருக்கும்படி இனிமையுடன் நிலைத்து வருதலால் கவிகளே உயிர்களுக்கு யாண்டும் உதவி புரிந்து நிற்கின்றன.

அவை அற்புத ஆற்றலுடையன. திவ்விய மகிமை தோய்ந்தன. எவற்றையும் அன்பு மணம் கமழ இன்ப நலம் கனிய அவை விளக்கி அருள்கின்றன. உன்னதமான உணர்ச்சிகளை உயிர்களுக்கு ஊட்டி மன்பதையை என்றும் உயர்த்தி வருகின்றன. உத்தமத் தலைமையில் ஒளிபெற்றுள்ளன.

"Poetry is a representation of the ideal." (Newman)

"கவி உயர்ந்த உணர்வுக் காட்சியின் உருவமாயுள்ளது" என நியூமன் என்னும் ஆங்கிலப் பேராசியர் கூறியுள்ளார்.

நாம் காணாத பொருளைக் கண் எதிரே காட்டிப் புதிய ஓர் மதிநலத்தை அதி மதுரமாகக் கவி நமக்கு நன்கு ஊட்டுகின்றது.

அதன் அருளும் கொடையும் பெருமதிப்புடையன; அறிவின் காணியாகக் கருதி அதனைப் பேணி ஒழுகவேண்டும்.

---

202. கவியின் சுவையைக் கருத்தூன்றி நோக்கின்
அவியின் சுவையும் அயலாம்—புவியிலொரு
புத்தமுத மாகிப் பொலியும் அதைநுகர்வார்
சித்தமுத மாவர் சிறந்து. (உ)

இ-ள்

கவியினது சுவையை உள்ளம் ஊன்றி உணரின் அமுதின் சுவையும் இழிந்துபோம்; அது புதிய ஒரு அதிசய அமுதமாய் உயர்ந்து மிளிர்கின்றது; அதை நுகர்கின்றவர் இனிய உணர்வுருவங்களாய்ச் சிறந்து விளங்குவர் என்றவாறு.

அவி என்றது தேவர் உணவை. மிகுந்த சுவையும் சிறந்த வீரியமும் உடையது ஆதலால் அஃது இங்கு வரைந்து காண வந்தது.

கவியின் சுவை என்றது பாடல்களில் படிந்துள்ள உணர்வு நலனை. அதனைத் தோய்ந்து நுகருங்கால் உள்ளமும் உயிரும் உவகையில் ஓங்கி ஒளிர்கின்றமையின் அது சுவை என நின்றது.

ஊன்றிய உணர்வுக் காட்சியில் கவி இன்பம் தோன்றுகின்றது; ஆகவே கருத்து ஊன்றி நோக்கல் நுகர்ச்சிக்குக் கருவியாய் நேர்ந்தது. உள்ளம் நுணுகி நோக்கிய பொழுதுதான் உணர் வின்பம் வெள்ளமாய் எழுகின்றது.

"The power of concentration is the only key to the treasure-house of knowledge." "அறிவின் கருவூலத்திற்கு மனஒருமையே திறவுகோல்" என விவேகானந்தர் கூறியுள்ளதும் ஈண்டு அறிய உரியது.

தோண்டச் சுரக்கும் நீர்; ஈயச்சுரக்கும் சீர்; உண்ணச் சுரக்கும் பால்; உணரச் சுரக்கும் நூல் என்க.

பிறப்பில் மனிதன் ஆயினும் கவியின் சுவையை நுகர்கின்றவன் சிறப்புடைய தேவரினும் சிறந்தவன் ஆகின்றான். அமுதத்தையும் எளிதாக நினைந்து அவன் இகழ்ந்துவிடுகின்றான்.

தன்னை நுகர்ந்தவரை உயர்ந்த பேரின்ப நிலையில் உயர்த்தி அருளுதலால் கவி புவியில் ஒரு புத்தமுதம் என வந்தது.

நுகருந்தோறும் புதிது புதிதாய்ப் பெருகி என்றும் குன்றாமல் அதிசய இன்பம் தந்துவருதலால் புதுமை அடைபெற்றது.

அவிச் சுவை ஏற ஏற உடல்கொழுத்து உள்ளம் மழுங்குகின்றது; கவிச்சுவை பருகப் பருக உணர்வொளி வீசி உயிர் உயரின்பம் ஆகின்றது.

சித்து = அறிவு. அமுதம் = இனிமை.

கவிச்சுவையாளர் ஞானநலங் கனிந்து ஆனந்த நிலையில் திகழ்கின்றார். அவருடைய உணர்வும் வாழ்வும் காட்சியும் கருத்தும் உயர்ந்த நெறியில் சிறந்து மிளிர்கின்றன.

கல்வியால் மிருகத் தன்மை நீங்கி மனிதன் உயர்கின்றான். அங்ஙனம் கற்று உயர்ந்தவர்களுள் கவிச்சுவை நுகரும் பேறு பெற்றவர்கள் புவியில் ஒரு தெய்வத் திருவினராய்த் திகழ்ந்து நிற்கின்றார்.

தம்மை நுகர்கின்றவர்களுக்கு அந்தமில் இன்பம் அளித்தருளுகின்ற செந்தமிழ்க் கவிகளை மன்பதை பருகி மகிழவேண்டும் என்பது கருத்து.

203. பொறியின்பம் எல்லாம் புலையாய் ஒழிய
அறிவின்பம் என்றும் அறமாய்—நெறியின்ப
நந்தருளும் அந்தத் தனிநலங்கள் இன்கவியுள்
வந்தருளும் நன்கு வளர்ந்து. (ங)

இ-ள்.

பொறிகளால் நுகர்கின்ற போகங்கள் யாவும் ஈனமாய் இழிந்து போகின்றன; அறிவின்பம் என்றும் புண்ணிய நிலையமாய்ப் பொலிந்து விளங்குகின்றது; அந்தப் பேரின்பங்கள் கவிகளில் விளைந்து வருகின்றன என்றவாறு.

பொறி என்றது மெய் வாய் கண் முதலிய கருவிகளை. போகங்களை நுகர்தற்கு உரிமையாய் அமைந்துள்ள இவை இந்திரியங்கள் எனப்படும்.

ஐந்து பொறிகளாலும் அருந்தல் முதலியனவற்றை உயிரினங்கள் நுகர்ந்து வருகின்றன. இப்பொறி நுகர்ச்சிகள் உடல் அளவில் நின்று இளிவாய் ஒழிந்துபோகின்றன.

இவை உடம்பின் புறத்தே உள்ளன. அகத்தில் அமர்ந்துள்ள அறிவின் நுகர்வு அதிமேன்மையானது.

இனிய உணவு, இன்னிசை, அரிய காட்சி முதலியன யாதும் இல்லாமலே அறிவு தனி நிலையில் இன்பம் நுகர்கின்றது. அந்த இன்பம் புனிதம் மிக வுடையது. புண்ணியம் நிறைந்தது. உன்னதமான உயிர்நிலையிலேயே உலாவி ஒளி சிறந்துவருதலால் அதில் என்றும் தெளிவான பேரின்ப விளைவே பெருகி எழுகின்றது.

தருமநலம் கனிந்த அத்தகைய அரிய அறிவின்சுவை கவியின் கண்ணேயே கனிந்திருக்கின்றது.

அவியினும் இனியதான கவியின் சுவையைக் கலைஞன் நுணுகி நுகருங்கால் புலையான உலகநிலையை மறந்துவிடுகின்றான். உள்ளம் உருகி உணர்வு பெருகி உயிர் பரவசமாகின்றான்.

"தேன்படிக்கும் அமுதாம்உன் திருப்பாட்டைத் தினந்தோறும்
நான்படிக்கும் போதென்னை நான்அறியேன்; நா ஒன்றோ,
ஊன்படிக்கும்; உளம்படிக்கும்; உயிர்படிக்கும்; உயிர்க்குயிரும்
தான்படிக்கும்; அநுபவம்காண் தனிக்கருணைப் பெருந்தகையே(1)

வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை
நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து, பால்கலந்து, செழுங்கனித்தீஞ் சுவைகலந்துஎன்
ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே.'' (2)

தேவார, திருவாசகங்களிலுள்ள பாடல்களின் இன்ப நலங்களை நுகர்ந்து மகிழ்ந்த இராமலிங்க சுவாமிகள் இங்ஙனம் அன்பு ததும்பத் தமது அனுபவத்தை வெளியிட்டிருக்கிறார்.

கவிச்சுவை அமுதினும் இனியது; உயிரைப் பரவசமாக்கி உயர் பேரின்பம் தருவது என்றதனால் அதன் அருமைப் பண்புகள் அறியலாகும்.

தெய்வத் திருவருள் தோய்ந்த சிறந்த மேதைகளிடமிருந்து பிறந்து வந்தன ஆதலால் கவிகள் உயிர்களுக்கு உயர்ந்த இன்ப நலங்களை உதவியருள்கின்றன.

அறிவமுதமான இனிய கவிச் சுவைகளை நுகர்ந்த போதே மனிதன் பிறந்த பெரும் பயனைப் பெற்றவன் ஆகின்றான்.

---

204. காலத் திரையில் கரந்து கழிந்தவெலாம்
சீலத் திரையில் தெளிவாக்கி—ஞாலத்தின்
கண்ணெதிரே அன்பாகக் காட்டும் கவியுருவை
எண்ணெதிரே இன்பம் எழும். (ச)

இ-ள்.

காலமாகிய திரையில் மறைந்து ஒளிந்து போன பொருள்களை எல்லாம் செவ்வையாகத் தெளிவாக்கி உலக மக்கள் கண்டு மகிழும்படி கவிகள் கொண்டு வந்து காட்டுகின்றன; அக் காட்சிகள் பேரின்ப நிலையங்களாய்ப் பெருகியுள்ளன என்றவாறு.

உலகில் தோன்றுகின்ற பொருள்கள் எல்லாம் பிறத்தல் வளர்தல் அழிதல் என்னும் மூவகை நிலைகளை என்றும் நிலையாக உடையன. இடம் பொழுதுகளால் இயங்கி மிளிர்கின்றன.

காலம் எல்லாவற்றையும் கவர்ந்து கொள்ளுகின்றன. அதனால் மறைக்கப்பட்டன அளவிடலரியன. இறந்த காலம் என்னும் பரந்த திரையால் மறைந்து போயுள்ள எத்தனையோ இனிய பொருள்களைக் கவிகள் நம் கண் முன் கொண்டுவந்து திறந்து காட்டுகின்றன. அதில் மாட்சியும் இன்பமும் மருவியுள்ளன.

அல்லன ஒழித்து நல்லனவே நயமாகக் காட்டுகின்றமையால் அக்காட்சியில் பல்வகை நலங்கள் படிந்து நல்லருள்புரிகின்றன.

"Poetry is the record of the best and happiest moments of the happiest and best minds" "உயர்ந்த நல்ல மனிதர்களுடைய அரிய பெரிய சம்பவங்களின் இனிய சாசன மாகக் கவிகள் அமைந்திருக்கின்றன." என்று ஷெல்லி என்னும் மேல்நாட்டுப் புலவர் சொல்லியுள்ளார்.

காணுத இடத்தில் அறியாத காலத்தில் இருந்த அரிய மனிதர்களை எல்லாம் கவிகளில் நேரே கண்டு நாம் உவந்து கொள்ளுகின்றோம். ஓர் அற்புதமான காட்சிச் சாலைபோல் அவை நமக்கு மாட்சி புரிந்து வருகின்றன.

எத்தனை அரசர்கள், எவ்வளவு வீரர்கள்; எத்துணை வள்ளல்கள் நம்முன் உத்தம நிலையில் தோன்றி உவகை விளைத்தருள்கின்றனர்.

"கலையினது அகலமும், காட்சிக்கு இன்பமும்,
சிலையினது அகலமும், வீணைச் செல்வமும்,
மலையினின் அகலிய மார்பன் அல்லதிவ்
உலகினில் இலைஎன ஒருவன் ஆயினன்." (சிந்தாமணி)

சீவகன் என்னும் அரசிளங் குமரனை இதில் காண்கின்றோம். அறிவு அழகு வீரம் முதலிய நீர்மைகளில் அவன் சீர்மை எய்தி யுள்ளமை தெரிந்து ஆர்வம் மீதூர்கின்றோம்.

அறுகுளத்து உகுத்தும் அகல்வயற் பொழிந்தும்
உறுமிடத்து உதவாது உவர்நிலம் ஊட்டியும்
வரையா மரபின் மாரி போலக்
கடாஅ யானைக் கழற்கால் பேகன்
கொடை மடம் படுதல் அல்லது
படைமடம் படான்பிறர் படைமயக் குறினே. (புறம்)

பேகன் என்னும் வள்ளலை இப்பாட்டு காட்டியுள்ளது. அறுகுளம் = நீர் அற்ற ஏரி. மேகம் போல் பேகன் யார்க்கும் வரையாது உதவினன். தகுதியில்லாதவர்க்கும் மிகுதியாகக் கொடுத்தான். அதனால் கொடைமடம் என ஓர் உயர்பெயர் பெற்றான். போரில் நேரியனாய் நின்று வீரியம் புரிந்தமையால் படை மடம் படாதவன் என்னும் பான்மையில் உயர்ந்தான் என அவனது மேன்மை நிலைகளை யெல்லாம் இதில் அறிந்து மகிழ்கின்றோம்.

இவ்வாறு எவ்வளவோ பேர்களைக் கவிகள் கொண்டுவந்து காட்டி நமக்கு அறிவின்பங்களை அருளுகின்றன. உயிர்க்கு உறுதியான உயர்ந்த உணர்வு நலங்களை உதவி என்றும் இன்ப நிலையங்களாய்ச் சுவை சுரந்து வருகின்ற கவிகளை அனைவரும் கருதிப் பயில்வேண்டும் என்பது கருத்து.

---

205. உண்ணும் சுவைபோல் ஒழியா துயிரூறி
எண்ணும் தொறும்புதிய இன்பமாய்ப்-பண்ணமைந்த
பாட்டிலுறும் அந்தப் பரமசுகம் விண்ணவர்தம்
நாட்டிலும் உண்டோ நவில். (௫)

இ-ள்.

உண்ணுகின்ற நாவின் சுவைபோல் உடனே குன்றி ஒழியாமல் பாவின் சுவை எண்ணுந்தோறும் புதிது புதிதாய் இன்பம் தழைத்து வருகின்றது; உயர்ந்த தேவருலகத்திலும் அந்த அரிய இன்ப நலம் இல்லை என்றவாறு.

இது, உண்ணும் சுவையும் எண்ணும் சுவையும் கண்ணுறக் காட்டி ஆன்ம போகத்தின் மேன்மையை விளக்குகின்றது.

அறிவு நலம் கனிந்த அரிய இனிய கருத்துக்கள் கவிகளில் அடங்கியிருக்கின்றன. அவை உயிர்க்கு உறுதி தருவன. அவற்றின் அருமை பெருமைகளை உணர்ந்து உரிமை செய்துகொள்வார் இருமைப் பயன்களையும் மருவி இன்பம் பெறுகின்றார். இந்த அறிவானந்தத்தை இழந்திருப்பது மிகவும் பரிதாபமாகின்றது.

நாவில் உண்கின்ற இனிய உணவின் சுவை உடனே ஒழிந்து போகின்றது; பாவில் உண்கின்ற அரிய அறிவின் சுவை கருதும்தோறும் புதிய இன்பமாய்ப் பெருகி வருகின்றது.

பண் அமைந்த என்றது இசையோடு அமைந்த அதன் இயல்பு கருதி. அறிவுக்கு உணவான எண்ணங்கள் இனிய இசையுடன் இயைந்து, செவிக்கும் சிந்தைக்கும் இன்பமாய்ச் சந்தம் பொலிந்து செந்தமிழ்க் கவிகள் வந்திருக்கின்றன.

"Poetry, we will call musical thought" "இசையோடு கலந்த எண்ணங்களை நாம் கவிகள் என்கின்றோம்" என மேல் நாட்டுப் பேரறிஞராகிய கார்லைல் Carlyle சொல்லியிருக்கிறார்.

எண்ணும்தொறும் என்றது கவிச் சுவையின் நுகர்ச்சி உணர வந்தது. உணர்வில் ஊறுகிற இன்பம் ஆதலால் கருத்தூன்றிக் காணும் அளவே அது கனிந்து பெருகுகின்றது.

"சேமமிகுந் திருவாத வூர்த்தேவென் றுலகுபுகழ்
மாமணியே! நீ உரைத்த வாசகத்தை எண்ணுதொறும்
காமமிகு காதலன் தன் கலவிதனைக் கருதுகின்ற
ஏமமுறு கற்புடையாள் இன்பினும் இன்பு எய்துவதே."

இராமலிங்க அடிகள் திருவாசகத்தை உவந்து இங்ஙனம் புகழ்ந்திருக்கிறார். ஆயும் தோறும் இன்பம் சுரக்கும் கவிச் சுவை, தோயும் தோறும் இன்பம் சுரக்கும் கலவிச்சுவையோடு கருத வந்தது. பேரின்ப நிலைக்குச் சிற்றின்பம் ஓரளவில் உவமையாயது.

"பாட்டில் உறும் அந்தப் பரமசுகம் விண்ணவர்தம்
நாட்டிலும் உண்டோ?" என்றது அதன் நயனை நயந்து காண. தேக போகங்கள் நிறைந்துள்ளது தெய்வ வுலகம். அங்கே ஆன்ம போகமாகிய அறிவின்பம் அருமையாயது.

"இம்பர் நாட்டில் செல்வம் எல்லாம் எய்தி அரசாண்டிருந்தாலும்
உம்பர் நாட்டில் கற்பகக்கா ஓங்கு நீழல் இருந்தாலும்
செம்பொன் மேரு வனையபுயத் திறல்சேர் இராமன் திருக்கதையில்
கம்பநாடன் கவிதையிற்போல் கற்றோர்க்கு இதயம் களியாதே."

இந்திர போகமும் கம்பன் கவி இன்பத்திற்கு ஈடாகாது என இஃது உணர்த்தி நிற்றல் அறிக. உணர்வொளி சுரந்து இனிமை கனிந்து கவிகள் உயர்பேரின்பமாய் நிலவியுள்ளன.

---

206. உருவுயிர் என்ன உரையும் பொருளும்
மருவி இனிது மணந்து—திருவிலுயர்
செய்யுளெனப் பேர்படைத்துச் செவ்வியபே ரின்பநலம்
செய்யும் நெடிது சிறந்து. (சு)

இ-ள்.

சொல்லும் பொருளும் உடலும் உயிரும்போல் மருவி அறிவு மணம் கமழ்ந்து அழகு நிறைந்து செய்யுள் என ஓர் திவ்விய நாமம் எய்தி மன்பதைக்கு என்றும் சிறந்த இன்பநலங்களைச் செய்து உய்தி செய்து வருகின்றன என்றவாறு.

இது, கவியின் அமைதியை உணர்த்துகின்றது.
உரையை உரு என உவமித்தது புற அமைதி நோக்கி. பொருளை உயிர்என்றது அக நிலை கருதி. அறிவு நலங்கள் சுரந்துள்ளமையால் பொருள் உயிர் என வந்தது.

அழகிய வடிவும் விழுமிய குணமும் மருவிய ஒரு குலமகன்போல் தனி அமைந்துள்ள இனிய கவிகளே இன்பம் நிறைந்து மன்பதைக்கு என்றும் இதம் புரிந்து வருகின்றன.

இராமனைக் காணுந்தோறும் கருதுந்தோறும் கழிபேருவகை ஆதல்போல் இனிய கவிகளை ஓதுந்தோறும் உணருந்தோறும் உயர் பேரின்பம் விளைகின்றது.

எழுத்து வடிவில் இசைந்திருப்பினும் அரிய கவிகள் ஒரு சக்கரவர்த்தித் திருமகன் என நின்று அறிவுலகை என்றும் ஆட்சிபுரிந்து வருகின்றன.

சிறந்த அரசனது ஆட்சி சிறிது காலம் விளங்கி நின்று பின்பு மறைந்து போகின்றது. கவியின் ஆட்சி என்றும் குன்றுமல் யாண்டும் நிலையாய் நின்று நிலவுகின்றது.

"நெடிது சிறந்து இன்பநலம் செய்யும்" என்றது செய்யுளின் நிலைமையும் நீர்மையும் அறிய வந்தது.

உணர்ச்சிக்கு உயர்ச்சி யுதவி ஒளி புரிந்து வருதலால் கவி உயிர்க்கு அமுதமாய்ச் சுவை சுரந்துள்ளது.

செய்யுள் மெய்யுயிர் உடையது; திவ்விய நலம் கனிந்தது; செவ்விய சுவை சுரந்தது; உய்வகை அருள்வது; அந்த உயர்ந்த உணர்வமுதத்தை உவந்து நுகர்க.

" வித்தகராய் மேவிநின்ற மேலோர்தம் மேதகவே
புத்தக மாகப் பொலிதலால்—நித்தமதைக்
கண்டு வருவார் கரைகாணு இன்ப நலம்
கொண்டு திகழ்வார் குணம்."

உயர்ந்த மேதைகளுடைய புத்திதத்துவங்களே புத்தகங்களாய்ப் பொலிந்திருக்கின்றன அவற்றை உய்த்துணர்ந்து கொள்க.

---

207. புண்ணியமன் வீரர் புகழுருக்கள் பேரெழிலாய்க்
கண்ணெதிரே தோன்றிக்களிப்பூட்டி—மண்ணியலின்
துன்பத் தொடர்பொன்றும் தோன்றுமல் தொல்கவிகள்
இன்பம் அருளும் இனிது. (எ)

புண்ணிய சீலர்களுடைய புகழ் வடிவங்களைக் கண் எதிரே காட்டி உலக அல்லலை நீக்கித் தலைமையான இன்ப நலங்களைப் பழைய கவிகள் தந்தருளுகின்றன என்றவாறு.

மண் இயலின் துன்பத் தொடர்பு என்றது உலகவாழ்க்கையில் நிகழுகின்ற கவலைகளை. கவி இன்பத்தைக் காணுங்கால் இப் புவியின் துன்பங்கள் புறம் ஒதுங்கிப் போகின்றன.

பாடல்கள் பலவகையான சுவைகளை யுடையன. தனியே அறிவு நலங்கள் நிறைந்தன; பழமையான சரித வளங்கள் அமைந்தன என இருவகை நிலையில் அவை மருவிமிளிர்கின்றன.

குணங்களை வரைந்து காட்டிக் குணிகளை அணியாக நேர் நிறுத்தி அறிவிற்கு ஓர் அதிசய விருந்தை அவை அருளி வருகின்றன.

கொடை, வீரம், சீலம், கல்வி முதலியவற்றில் உயர்ந்திருந்த நம் முன்னோர்களுடைய கீர்த்திகளைக் கவிகள் ஆர்த்தியுடன் அழகாகக் கொண்டு வந்து காட்டுகின்றன.

எடுத்த உடம்புகள் அழிந்து போயினும் தன் செயல்களால் எய்திய புகழ்கள் செய்யுள்களில் திவ்விய உருவங்களாய்த் தோன்றி வியப்பும் மகிழ்ச்சியும் விளைத்து வருகின்றன.

"பிறர்க்குஎன வாழ்தி யாகன் மாறே
எமக்கில் என்னார்நின் மறங்கூறு குழாத்தர்."
(பதிற்றுப்பத்து, 4)

நார்முடிச் சேரல் என்னும் மன்னன் நிலைமையை இது குறித்தது. பிறர் இன்புற்று வாழ அவன் அன்பு செய்து வந்தான். அவன் படைவீரரும் எவர்க்கும் இல்லை என்னுமல் கொடுத்து கொடைவீரராய் நின்றார். மறம் = வீரம்.

"இம்மைச் செய்தது மறுமைக்கு ஆமெனும்
அறவிலை வணிகன் ஆய் அல்லன்." (புறம், 134)

ஆய் என்னும் வள்ளல் மறுமையை விரும்பாமல், பிறரது வறுமைக்கு இரங்கியே கொடுத்தான் என அவனது உண்மையான கருணைக் கொடையை இது விளக்கி யுள்ளது.

தனக்குப் புண்ணியம் வரும் என்று கருதியோ, பிறர் மதிக்கவேண்டும் என்று எண்ணியோ கொடுப்பது கொடையா

காது; அங்ஙனம் கொடுப்பவர் பண்டம் மாற்றும் வியாபாரிகளே என அவரை இதில் இளித்திருத்தலறிக.

> " உயர்நிலை உலகம் அமிழ்தொடு பெறினும்
> பொய்சேண் நீங்கிய வாய்நட் பினையே;
> முழங்குதடல் ஏணி மலர்தலை உலகமொடு
> உயர்ந்த தேளத்து விழுமியோர் வரினும்
> பகைவர்க்கு அஞ்சிப் பணிந்தொழுகலையே. "
>
> (மதுரைக்காஞ்சி)

நெடுஞ்செழியன் என்னும் பாண்டிய மன்னன் சத்தியத்திலும் வீரத்திலும் தலை சிறந்து நின்ற நிலைமையை இதனால் அறிந்துகொள்கின்றோம்.

> " மலைகலங்கினும், மாதிரம் கலங்கினும், மாதிரங்களில் விண்ணோர்
> நிலைகலங்கினும், நெடுங்கடல் கலங்கினும், நிலம்நலங்கினும், சேடன்
> தலைகலங்கினும், பேரவைமூன்றினும் தளர்விலாதவர் கற்ற
> கலைகலங்கினும், போர்முகத்து என்மனம் கலங்குமோ? கலங்காதே. "
>
> (பாரதம்)

கன்னனது மனநிலையையும், வீரப்பிரதாபத்தையும் இதில் கண்டு மகிழ்கின்றோம். இன்னவாறே பலதுறைகளிலும் அரிய புகழ் உருவங்களை நம் கண்முன்கொண்டு வந்து காட்டிக் கவிகள் நமக்கு உறுதி நலங்களை ஊட்டி வருகின்றன.

---

208. உண்ணும் சுவையொழிய ஓர்சுவையும் காணுமல்
மண்ணின் சுவையாய் மடிகின்றாய்—எண்ணும்
கவியின் சுவைசிறிது கண்டேயேல் பின்னர்
அவியின் சுவைநுகர்வாய் ஆண்டு. (அ)

இ-ள்

உண்ணுகின்ற உணவுச் சுவை தவிர அறிவுச் சுவை யாதும் அறியாமல் மண்ணின் சுவையாய் மடிகின்றாயே! நீ கொஞ்சம் கவியின் சுவையைக் கண்டால் பின்பு ஆங்கே அவியின் சுவையை நுகர்வாய் என்றவாறு.

இது, உயிர்க்கு உறுதி தேடுக என்கின்றது.

நாவுக்குச் சுவையான உணவுகளை உண்டு உடம்பை மட்டும் ஓம்பி உழலுதல் மிருகத் தன்மையாம். விலங்கினங்கள் பகுத்

தறிவில்லாதன. மனிதன் விசேட அறிவுடையவன். அத்தகைய வித்தகப் பிறவியைப் பெற்றும் உய்த்துணர்வு இலனுயின் அவன் உயிருடன் செத்தவன் ஆகின்றான்.

உண்ணும் சுவையாளனாய் ஊனைப்பருக்கச் செய்து மண்ணுக்கே இரையாய் மடிந்துபோகாமல் மதி நலத்தால் கதி நலம் காணுக. ஆன்ற அறிவு ஊன்றிய பயிற்சியால் உதயமாகின்றது.

நல்ல அறிவுக்குப் பயன் கல்வியைப் பயின்று கலைஞானியாய்ச் சிறந்து வருதலே; அவ்வரவு இல்லையாயின் வந்த பிறவியின் பயனை இழந்து நொந்து படுகின்றான்.

கல்விமானாய் உயர்ந்தவன் கவியின் சுவையை நுகர்கின்றான். அந்நுகர்ச்சி பேரின்ப நிலையமாய்ப் பெருகி எழுகின்றது. அதனால் இவ்வுலகத்திலேயே சுவர்க்க போகத்தை அனுபவித்தவனாய்ச் சுகித்திருக்கின்றான். அதிவின்பம் பரமபதமாகின்றது.

உள்ளத்தில் உவகையை ஊட்டி உணர்வு நலம் பெருக்கி உயிர்க்கு உறுதி புரிந்தருளுதலால் கவி உயர் போகமாய்ச் சுவை சுரந்து நின்றது.

ஆடகச் செம்பொற் கிண்ணத்து ஏந்திய அலங்கல் தெண்ணீர்
கூடகம் கொண்ட வாழ்நாள் உலந்ததேல் கொல்லும்; பவ்வத்து
ஊடகம் புக்கு முந்நீர் அழுந்தினும் உய்வர் நல்லார்
பாடகம் போலச் சூழ்ந்த பழவினைப் பயத்தின் என்றான்.

(சிந்தாமணி)

பொன் கிண்ணத்தில் இட்ட குடி தண்ணீரும் மனிதனைக் கொல்லும்; கடல் நடுவே விழுந்தாலும் விதி வலிதேல் அவன் சாகான்; மகளிர் காலில் வளைந்த பாடகம் போல் வினைகள் உயிர்களை வளைந்துள்ளன; துன்ப ஏதுவான தீவினையை நீக்கி இன்ப நிலையமான நல்வினையை நாளும் நயந்து செய்க என்னும் போதனையை இக் கவி போதித்துள்ளது.

இவ்வாறு நல்ல உறுதி உண்மைகளை அனுபவங்களோடு இணைத்துக் கவிகள் இனிமையாக உணர்த்தி வருகின்றன. பல வகை நிலைகளிலும் அவை சுவை சுரந்து திகழ்கின்றன. அந்த உணர்வமுதங்களை நுகர்ந்து உயர் நலம் உறுக.

209. பொறியின்பம் நாடிப் புலன்வழியே ஓடி
வெறிகொண்டு மண்டி விழுவார்—அறிவின்பம்
ஒன்றும் கருதார் உளஞ்செருக்கி அந்தோ பின்
பொன்றி ஒழிவார் புறம். (௯)

இ-ள்

பொறி இன்பங்களையே நாடி ஓடி யாண்டும் வெறியராய் அலைந்து அறிவின்பத்தை இழந்து பலர் அவமே அழிகின்றார் என்றவாறு.

வெறி மண்டி என்றது அருந்தல் பொருந்தல்களில் அதி மோகிகளாய்ப் பறந்து திரியும் பாடு காண வந்தது.

உண்ணல் மருவல் உறங்கல்கள் விலங்குகளிடமும் உள்ளன; அவ்வளவிலேயே நின்றால் அவற்றிற்கும் மனிதனுக்கும் என்ன பேதம்? மதி நலமுடைய இவன் தனியே உறுதி நலங்களை உணர்ந்து புனித நிலையில் உயர்ந்து கொள்ளவேண்டும்.

அறிவின்பம் என்றது புத்தியினால் அடைகின்ற உத்தம சுகத்தை. கல்வி கேள்வி ஆராய்தல்களால் கலைஞானம் கனிந்து வருகின்றது. அதில் விளைகின்ற புனித இன்பமே மனிதன் இனிதடைய உரியவன்.

சிறந்த கலையில் உதிக்கின்ற சுகம் உயிர்க்கு உயர்ந்தபோகம் ஆகின்றது. பல வகை உறுதி நலங்களை உணர்த்தி உல்லாசமாய் உவகை விளைத்து வருதலால் அறிவுப் பயிற்சி ஓர் புதிய இன்ப ஆடலாய்ப் பொலிந்து நிற்கின்றது. அந்த இனப நலங்கள் பல வகை நிலைகளில் பரந்துள்ளன. மாதிரிக்குச் சில காண்போம்.

புண்ணியம் உலர்ந்தபின் பொருளி லார்களைக்
கண்ணிலர் துறந்திடும் கணிகை மாக்கள்போல்
எண்ணிலள் இகந்திடும் யாவர் தம்மையும்
நண்ணிய நண்பிலள் நங்கை வண்ணமே. (சூளாமணி)

செல்வம் எவரிடமும் நிலைத்திராது; புண்ணியத்தின் அளவே மனிதரை அது பொருந்தி நிற்கும். பொருள் இல்லாதவர்களை வேசியர் எள்ளித் தள்ளி விடுதல்போல் அறம் இல்லவரைத் திரு அவமதித்து அகன்றுவிடும் என இது அறிவுறுத்தியுள்ளது. உவமையும் பொருளும் நுணுகி உணர வுரியன.

செல்வத்தை நீ தேடி அலையாதே; தருமம் உடையனாய் இரு; அது உன்னை விழைந்து வலிய வந்து சேரும் என்பது குறிப்பு. பொருளின் இயல்மையும் அறத்தின் நிலையையும் நுனித்து நோக்கி மனிதன் உறுதி நலம்பெற இது உணர்த்தியிருக்கிறது. உணர்வு நலம் உவகையாய் உய்தி புரிகின்றது.

வைகல் தோறும் இன்பமும் இளமையும்
எய்கணை நிழலில் கழியும் இவ்வுலகத்து. (நற்றிணை)

இது, நிலையாமையை நினைவுறுத்தியது. வில்லில் இருந்து விடுபட்ட கணை குறியை நோக்கிப் பாயுங்கால் அதன் நிழல் எவ்வளவு விரைவில் கழிகின்றதோ, அவ்வளவு விரைவில் உன் இளமையும் வாழ்வும் ஒழிகின்றன; இவ்வுண்மையை உணர்ந்து உயிர்க்கு உறுதியை விரைந்து செய்துகொள்க என்பதாம்.

இழிந்த மாக்களோடு இன்பம் ஆர்தலின்
உயர்ந்த மக்களோடு உறுபகை இனிது. (பெருங்கதை)

இது அற்பர்களுடன் எவ்வழியும் கூடாதே என்கின்றது.

பேரஞர் இடும்பை எல்லாம் பிளந்திடும், பிறப்பு நீக்கும்,
ஆரமிர்து அரிதில் பெற்றும் அதன்பயன் கோடல்தேற்றும்;
ஓரும் ஐம்பொறியும் ஓம்பி உளபகல் கழிந்த பின்றைக்
கூரெரி கவரும் போழ்தில் கூடுமோ குறித்த வெல்லாம்?
(சிந்தாமணி)

மனிதப் பிறவி அருமை யுடையது; அமிர்தம் அனையது; துயரங்களை நீக்கவல்லது; அத்தகைய உயர் பிறப்பு அடைந்தும் உயிர்க்கு உறுதி புரியாமல் ஐம்பொறி இன்பங்களை அவாவி அலைகின்றாய்! இறுதியில் நீ இறந்துபடுங்கால் பெறுவதுஎன்னும்? அதனை உணர்ந்து பார் என இஃது உணர்த்தி யுள்ளது.

அறங்காட்டின் இருசெவிமீது அழற்காட்டி னற்போலும்அல்கை வாழும்
புறங்காட்டிற்கு ஒப்பதும்இப் புறங்காடே: வேறுண்டோ புறம்பு கூற.
(அஞ்ஞவதைப் பரணி)

தருமநெறி கூறின் அதனை உரிமையுடன் உவந்து கேளாமல் இகழ்ந்து போகின்ற மனிதப் பேய்கள் வாழ்கின்ற நாடே பாழான பெரிய சுடுகாடாம். புறங் காடு=ஊரின் புறத்தே இருப்பது; செத்த பிணங்களை வைத்து எரிக்கும் இடத்தைக் குறித்தது. அது இடுகாடு, சுடுகாடு என இருவகைப்படும்.

தவத்துறை மாக்கள் மிகப்பெருஞ் செல்வர்
ஈற்றிளம் பெண்டிர் ஆற்றாப் பாலகர்
முதியோர் என்னுன் இளையோர் என்னுன்
கொடுந்தொழி லாளன் கொன்றனன் குவிப்பஇவ்
அழல்வாய்ச் சுடலை தின்னக் கண்டும்
கழிபெருஞ் செல்வக் கள்ளாட் டயர்ந்து
மிக்க நல்லறம் விரும்பாது வாழும்
மக்களிற் சிறந்த மடவோர் உண்டோ ? (மணிமேகலை)

**எல்லாரும் இறந்து ஒழிந்து போவதை நேரே கண்ணூரக் கண்டும் உயிர்க்கு ஒரு நலமும் செய்யாமல் உளம் செருக்கி நிற்கும் மனிதரினும் பெரிய மூடர் எவரும் இலர் என்பதாம்.**

அறன்கடைப் படாஅ வாழ்க்கையும், என்றும்
பிறன்கடைச் செலாஅச் செல்வமும், இரண்டும்
பொருளின் ஆகும். (அகம், 155)

**பிறரை எதிர்பாராமல் தருமநெறி தழுவிவாழும் பெருமை பொருளால் உண்டாம் ; அதனை ஈட்டிக் காத்து ஈந்து வாழ்க.**

இரவறியா யாவரையும் பின்செல்லா நல்ல
தருநிழலும் தண்ணீரும் புல்லும்—ஒருவர்
படைத்தனவும் கொள்ளாஇப் புள்ளிமான் பார்மேல்
துடைத்தனவே அன்றே துயர். (தண்டியலங்காரம்,)

**எவரையும் பின் சென்று இரந்து நில்லாமல் தானுகவே முயன்று பொருளீட்டி மனிதன் புனிதமாக வாழவேண்டும் எனப் புள்ளிமானை எடுத்துக்காட்டி இது போதித்துள்ளது.**

**இன்னவாறே பலவகையான உணர்வு நலங்கள் கவிகளில் அமைந்து உயிர்க்கு உறுதி புரிந்து இனிமை சுரந்திருக்கின்றன.**

**ஆன்ம போகமாய் மேன்மை கனிந்துள்ள இந்த அறிவின் சுவைகளை நுகர்ந்து பிறவியின் பயனைப் பெறுதல் வேண்டும்.**

---

210. கலையறிவை மேலோர் கருத்தூன்றிப் பேணின்
பலரும் விழைந்து பயில்வார்—தலைமையுளார்
பேணு தொழியின் பிழையாய் உலகும்பின்
காணு தொழியும் கழிந்து. (ய)

இ-ள்

**கலைஞானங்களை மேலோர் கருதிப்பேணின் உலகமக்களும் அதனை உவந்து பயின்று உயர்ந்துகொள்வார்; அவர் பேணுது ஒழிவரேல் பலரும் அவற்றைக் காணுமல் இழிந்துபோவர் என்க.**

மேலோர் என்றது செல்வம் அதிகாரம் முதலியவற்றால் உயர்ந்து நிற்போரை. உலக நிலையில் சிறந்து நிற்கின்ற இவரைப் பின்பற்றியே பொதுமக்களும் நடந்து வருவர்.

அரசன் எவ்வழி அவ்வழி குடிகள் என்றபடி தலைமையான இவர் கலையறிவைப்போற்றி நல்ல நூல்களை விழைந்து பயின்று புகழ்ந்து பேணி வரின் எல்லாரும் கல்வி நலனை உவந்து கற்று உயர்ந்து திகழ்வர். பெரியராயுள்ள இவர் கலையை உரிமையுடன் பேணாது ஒழியின் பிறரும் அதனை மதியாது இழிவர்.

"Wit, when neglected by the great, is generally despised by the vilgur." (Goldsmith)

"கலையறிவைத் தலைமக்கள் பயிலாராயின் பொது சனங்களால் அது இகழப்படுகின்றது" என்னும் இந்த ஆங்கில வாசகம் ஈண்டு அறிய உரியது.

கலையையும் கலைஞரையும் மேலோர் கருதிப் பேணவிடின் அந்நாடு மூடமாம்; அப் பழியும் பாவமும் தலைமையாளராய் நிலவியுள்ள தம் தலையிலேயே ஏறுகின்றமையால் அவர் நிலைமை தெரிந்து நெறி செய்யவேண்டும்.

பண்டு அரசர் விழைந்து பாதுகாத்து வந்த இந்நாட்டுக் கலைஞானம் இன்று நாதியற்று நிற்கின்றது.

தமிழ்க்கலை தொன்று தொட்டே சிறந்த நிலையில் செழித்து வளர்ந்துள்ளது; இருந்தும் அதனை உவந்து விழைந்து பயில்வார் பெரும்பாலும் இன்று குறைந்திருக்கின்றனர். இக்குறை நீங்கிய போது தான் இந்நாடு சிறை நீங்கிச் சிறந்து விளங்கும்.

தம் முன்னோர் தமக்கு வைத்துப் போயுள்ள அரிய கரு வூலங்களை உரிமையாக உவந்து கொள்ளாமல் நம்மவர் கண்குருடு பட்டுச் சிறுமையாய் ஒதுங்கி உழலுதலைக் கருதும் தோறும் பெரிதும் பரிதாபமாகின்றது.

"துங்க யானைமுன் படுத்தினும் படுத்துக சுடர்மணிப் பகுவாய்வெம்
சிங்கம் வாயிடைச் செலுத்தினும் செலுத்துக தென்புலத் தவர்கோமான்
வெங்கண் மாநர கத்திடை வீழ்த்தினும் வீழ்த்துக விடையேறும்
எங்கள் நாயக தமிழறி யாருடன் இயம்புதல் தவிர்ப்பாயே."

என்றமையால் இந்நாட்டுத் தலைவர் தமிழ்க்கலையை அந்நாளில் போற்றிவந்துள்ள நிலைமை புலனும்.

அரிய பொருள்கள் அமைந்து இனிய சுவைகள் நிறைந்து விழுமிய நிலையில் விளைந்திருக்கின்ற கவி நயங்களைக் கருதி நுகர்ந்து உறுதி நலங்களைப் பெறுவதே அரிய பிறவிக்கு உரிய பயனும். பிறந்த பயனை விரைந்து பெறுக.

"பூமணி யானை பொன்என எடுத்துத்
திங்களும் புயலும் பருதியும் சுமந்த
மலைவரும் காட்சிக்கு உரிய ஆகலின்
நிறையுடைக் கல்வி பெறுமதி மாந்தர்
ஈன்றசெங் கவிஎனத் தோன்றி நனி பரந்து
பாரிடை இன்பம் நீளிடைப் பயக்கும்
பெருநீர் வையை வளைநீர்க் கூடல்
உடலுயிர் என்ன உறைதரு நாயகன்." (கல்லாடம்)

கவியின் இயல்பையும், அதனை இயற்றும் கவிஞரது உயர்வையும் கல்லாடர் இங்ஙனம் வியந்து சொல்லியிருக்கிறார். பூமணி முதலிய மங்கல மொழிகளை முதலில் அமைந்து அரிய சிவநதி போல் இனிய நீர்மை பொலிந்து மனித வுலகம் உய்யக் கவிகள் இனிது உதவி வருகின்றன, என இதில் வந்துள்ளமை காண்க.

## இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

கவி அரிய காட்சிகளை யுடையது.
அது அமுதினும் இனியது.
அறிவின்பம் ஆனது.
விண்ணையும் மண்ணையும் விளக்கிக்காட்டுவது.
சுவர்க்க போகத்திலும் உயர்ந்தது.
பேரின்ப நிலையமாய்ப் பெருகி யுள்ளது.
அதனைப் பருகினவர் பரவசமாகின்றார்.
புண்ணிய சீலராய்ப் பொலிந்து மிளிர்கின்றார்.
கவி நுகர்ச்சி உயிர் உயர்ச்சியாகின்றது.
அதனை உவந்து நுகர்ந்தவர் உயர்ந்து திகழ்கின்றார்.

21-வது கவி முற்றிற்று.

# இருபத்திரண்டாம் அதிகாரம்

## கவிஞர்.

அஃதாவது கவிகளை இயற்றியருளும் புலவர்களுடைய நிலைமை. சிறந்த கலையறிவும் தெய்வத் திருவருளும் கலந்த பொழுதுதான் உலகில் உயர்ந்த கவிஞர்கள் விளைந்து எழுகின்றனர். கவிகளின் இயல்பை முன்னம் கண்டோம்; இதில் அவற்றை ஆக்கியருளும் அதிபதிகளைக் காண வருகின்றோம்.

211. தாம்கருதி நின்ற தனிக்கருத்தைப் பின்பிந்த
வான்கவிந்த வையமெலாம் வாய்ந்தொளிர-ஊன்கவிந்த
மெய்யுயிர்போல் செய்யுளிடை மேவ அருள்புரிவார்
பொய்யில் புலவர் புனைந்து. (க)

இ-ள்.

தம் உள்ளத்தில் தோன்றிய நல்ல எண்ணங்களை உலகம் எல்லாம் அடைந்து மகிழக் கவிகளுள் பொதிந்து சுவையாகப் புலவர்கள் உதவி வருகின்றனர் என்றவாறு.

இது, கவிஞரின் அதிசய அமைதியை உணர்த்துகின்றது.

உயிர் வருக்கங்களுள் மனித இனம் உயர்ந்து விளங்குகின்றது. அவ்விளக்கம் உணர்ச்சி வலியால் அமைந்தது. அவ்வுணர்வு நலம் கலையறிவுடன் கலந்து புலவரிடம் தலை சிறந்து நிற்கின்றது. ஆகவே அவர் மனிதகோடிகளுள் ஓர் இனிய தனிநிலையாளராய்த் தழைத்து மிளிர்கின்றார்.

முன்னும் பின்னும் எண்ணி அறியும் தன்மை மிருகங்களுக்கு இல்லை. மனிதரிடமே அது மருவியுள்ளது. ஆயினும் அந்த எண்ணங்கள் நன்கு வெளிப்படாமல் தம்முள்ளேயே தயங்கி நின்று பொது மக்கள்பால் ஒழிந்து போகின்றன. தம் உள்ளக் கருத்தை உலகம் நலமுற வெளிப்படுத்தி யாண்டும் நிலை நிறுத்தும் வன்மை புலவரிடமே தலைமையாக என்றும் நிலவியுள்ளமையால் அவரது நிலைமை தெளிவுற வந்தது.

மனிதன் எண்ணங்களால் உயர்கின்றான்; அவ்வுயர் நலங்களை உயிர்கள் உய்வுற உதவியருள்பவர் எவ்வளவு உயர்ந்தவர்! அவ்வினைத்திறம் எனைத்துணை வியப்பது? அவருடைய சீர்மையும் நீர்மையும் எத்துணை நிலையின! உய்த்துணர வேண்டும்.

உயிர்களை உடல்களில் பொதிந்து பிரமன் படைக்கின்றான்; உணர்வுகளை மொழிகளுள் அமைத்துக் கவிஞன் படைக்கின்றான். அந்தப் பிரம சிருட்டி உருவநிலையில் தோன்றி விரைவில் அழிந்து படுகின்றது; இந்தக் கவி சிருட்டி அறிவு நிலையில் வளர்ந்து என்றும் அழியாமல் நிற்கின்றது. நிலைமையை நினைந்து தெளிக.

மெய், மொழிக்கும்; உயிர், பொருளுக்கும்; உருவக்காட்சி, செய்யுளுக்கும் ஒப்பாம். செவ்விய கவிகள் திவ்விய நிலையினவாய் என்றும் இன்பம் சுரந்து வருகின்றன.

நித்தியமான உறுதி உண்மைகளை உயிரினங்களுக்கு உணர்த்தித் தத்துவ தரிசிகளாய்த் தழைத்துள்ளமையால் கவிஞர் பொய்யில் புலவர் என நின்றார்.

உலகர்க்கு உரிமையுடன் அவர் அறிவு நலம் கூறும் முறைகள் அருமை மிக வுடையன.

குன்றின் அனையாரும் குன்றுவர் குன்றுவ
குன்றி அனைய செயின். (குறள், 965)

கல்வி செல்வம் குலம் முதலியவற்றால் மிகவும் தலைசிறந்தவர் ஆயினும் இளிவினை புரிவரேல் அவர் இழிந்து படுவர் என்பதை இங்ஙனம் தேவர் உணர்த்தியருளினார். மலையை உவமை காட்டியது அவரது நிலைமை தெரிய. குன்றி மணி அளவு சிறு பிழைசெய்யினும் குன்றம் அனையாரும் குன்றுவர் என்றது அவர் நிலைதிரியாமல் நின்று தலைமையுடன் தழைத்து வரவேண்டி.

தாம் கருதிய அரிய கருத்துக்களை உரிய மொழிகளில் அமைத்து இனிய கவிகள் ஆக்கி மனித இனம் புனித நிலையில் உயரும்படி இவ்வாறு புலவர்கள் உதவி யருள்கின்றார். அவரது தகவும் தன்மையும் தனி மகிமை யுடையன.

---

212. உண்ணத் தெவிட்டாத வெள்ளமிர்தம் போலென்றும்
எண்ணத் தெவிட்டாத இன்கவிநூல்—பண்ணவல்ல
பாவலர்தாம் மானுடராய்ப் பாருலகில் நின்றாலும்
தேவரே யாவர் சிறந்து. (உ)

இ-ள்.

அமுதம் போல் அரிய இனிய கவி நூல்களைச் செய்யவல்ல புலவர்கள் உருவில் மனிதராயினும் உயர்ந்த தேவரே யாவர் என்றவாறு.

அமிர்தம் அரிய சுவையும் பெரிய மகிமையும் உடையது; உண்டவர்க்கு உறுதி இன்பங்களை நெடிது தரவல்லது ஆதலால் நல்ல நூலுக்கு அது இங்கு உவமையாய் வந்தது.

எண்ணத் தெவிட்டாத என்றது பயிலுந்தோறும் புதிது புதிதான சுவைகள் பெருகி உயர்போகமாய் ஓங்கிநிற்கும் பாங்கு தெரிய. தெவிட்டல்=வேண்டாம் என்று வெறுத்தல்.

யாண்டும் இன்ப நிலையமாய்ப் பொங்கி மிளிரும் பண்பு நல முடைய இன் கவி நூல் மன்பதைக்கு என்றும் உவகை நலங்களை விளைத்து உறுதிபுரிந்து வருகின்றது.

வசன வடிவில் நூல்கள் அமையுமாயினும் அவை சிறந்த அணிநலங்கள் அமைந்து உயர்ந்த சுவை வளங்கள் சுரந்து நிரந்தரமாய் நிலைத்து நில்லா.

வாயால் பாடும்போது இனிய ஓசையும், நாடி ஆயும்போது அரிய பொருளும் மருவியுள்ளமையால் பாட்டு வடிவில் அமைந்தனவே நூல்களாக மேலோரால் பாராட்ட நேர்ந்தன.

அத்தகைய செய்யுள் நூல்களைச் செய்ய வல்லவர் திவ்விய நிலையினர். சீவகோடிகளுக்கெல்லாம் அறிவு நலங்களை உணர்த்தி ஆதரவுடன் அருள் புரிந்து மேதகவமைந்து மிளிர்தலால் அவர் தேவர் என நின்றார்.

பாவலர் = பாக்களில் வல்லவர். என்றது கவிஞரை.

உருவ நிலையில் மனிதராயினும் உணர்விலும் தகவிலும் உயர்ந்து அரியநிலையில் பெருகி நிற்கின்ற அவரைத் தமர் என விழைந்து அமரர் தழுவிக் கொள்கின்றனர்.

தேவர் மனிதரினும் மேம்பட்டவர்; விசேட அறிவுடையவர்; புண்ணிய நிலையினர்; தாம் எண்ணியபடியே சுயாதீனமாய் யாண்டும் இனிது வாழும் இயல்பினர். அத்தகைய உயர்நலங்கள் உத்தமக் கவிகளிடமும் இயல்பாக அமைந்துள்ளன.

புலவர் என்று தேவர்க்கு ஒரு பெயரும் உண்டு. பலவகை நிலைகளிலும் தலை சிறந்து உணர்வொளிமிகுந்துள்ளமையால் கவிகளைத் தெய்வங்கள் என்று மேலோர் போற்றி யுள்ளனர்.

"The poets are thus liberating gods." (Emerson)

"கவிஞர் சுதந்தரமான தேவர்கள்" என மேல்நாட்டு அறிஞரும் கூறியுள்ளனர். நிலைமை மிகவே தலைமையாயினர்.

கவிகளை எந்த நாடுகளும் சொந்த உரிமையுடன் மேன்மையாகப் போற்றி வந்திருக்கின்றன. அரிய பொருள்களைக்காட்டி இனிய அறிவு நலங்களை ஊட்டிப் பெரிய உதவிகளைப்புரிந்தருள்கின்ற கவிஞரை உரிய தெய்வங்களாகப் பாராட்டி வருவது நாட்டுக்கு உயர்ந்த நன்மையாம். பாட்டாளரால் நாட்டாண்மை ஆகின்றது.

---

213. வானும் நிலனும் மலையும் மறிகடலும்
காநும் புயலும் கதிர்மதியும்—ஞானவிழி
கொண்ட கவிமுன் குடியடிமை செய்யுமே
கண்டவழி எங்கும் கனிந்து. (ரு)

இ-ள்.

விண் மண் மலை கடல் வனம் மேகம் கதிர் மதி முதலிய யாவும் ஞான நோக்குடைய கவிஞன் முன் குடி அடிமைகள் போல் இனிது தொழில் செய்கின்றன என்றவாறு.

அகிலமும் கவிஞர்க்குத் தனியுரிமையான உடைமைகளே. எல்லாவற்றிற்கும் யாண்டும் என்றும் அவரே தலைமை அதிபதிகளாய்த் தழைத்து இயலுரிமைகளை நிலை நிறுத்துகின்றனர்.

ஞான விழி கொண்ட என்றது காலதேச வர்த்தமானங்கள் யாவும் கடந்து மூல நிலைகளை ஓர்ந்து ஞாலம் தெளிவுற அறிவொளியை நல்கும் அவரது பெருமித நிலை கருதி. யாருங்காணாத அரிய மறைகளை அவர் கண்டு காட்டுகின்றனர். அக் காட்சி அதிசய அழகாய் ஆனந்தம் பயந்து வருகின்றது.

தான் அசையாது நின்று கடவுள் அகிலமும் படைத்தல் போல் கவியும் எவையும் படைக்கின்றான்.

அவனது சங்கற்பம்போல் இவனது கற்பனையும் அற்புத நிலையில் தொழில் புரிகின்றது. அவன் சிருட்டிப் பொருள்கள் யாவும் இவன் சிருட்டிக்கு ஆவலோடு ஏவல் செய்கின்றன. கவி சிருட்டி உணர்வொளி பரந்து இயல்மணம் கமழ்ந்து உவகை நிலையமாய்ச் சுவை சுரந்து மிளிர்கின்றது.

புலவன் கருதியபடியெல்லாம் உலகப் பொருள்கள் உருகி உருவாகின்றன. வானம் நிலம் மலை முதலியன புலமைக்காட்சியில்

படிந்த பொழுது அதிசய அழகுகள் மலிந்து புதிய மாட்சிகளோடு பொலிந்து அவை மதிநலம் கனிந்து விளங்குகின்றன.

" அங்கொளி விசும்பில் தோன்றி
அந்திவான் அகட்டுக் கொண்ட
திங்களங் குழவி பால்வாய்த்
தீங்கதிர் முறுவல் நோக்கித்
தங்கொளி விரிந்த ஆம்பல்
தாமரை குவிந்த ஆங்கே
எங்குளர் உலகுக்கு எல்லாம்
ஒருவராய் இனிய நீரார் ?" (சூளாமணி)

இது சந்திரவுதயம் குறித்தது. அந்திவானம் ஆகிய செவிலித் தாயின் ஒக்கலில் அமர்ந்துள்ள திங்களங்குழவியை நோக்கிக் குமுதமலர்கள் மலர்ந்தன; தாமரைகள் குவிந்தன. ஒன்று உவந்தது ; மற்று ஒன்று வருந்தியது. எவ்வளவு நல்லவராயினும் எல்லார்க்கும் ஒருங்கே இனியராய் ஒருவர் இவ்வுலகில் உளராதல் அரிது என்பதை இஃது உணர்த்தி நின்றது. குழவி முறுவல் என்றது நிலவை. அமுத கிரணங்களையுடைய இனிய மதியை உருவகித்து வந்திருக்கும் இதில் அரிய மதிநலம் பெருகியுள்ளது. உரிய அழகினை ஊன்றி நோக்கி உறுதி நலனை உணர்ந்து கொள்க.

சொல்லரும் சூற்பசும் பாம்பின் தோற்றம்போல்
மெல்லவே கருவிருந் தீன்று மேல்அலார்
செல்வமே போல்தலை நிறுவித் தேர்ந்தநூல்
கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே. (சிந்தாமணி)

நெல்லின் பயிர் பசுமையாய் வளர்ந்து பொதிவாங்கிக் கதிர் முதிர்ந்து காய்த்த நிலைமையை இது காட்டியுள்ளது. சொல் = நெல். இதில் குறித்திருக்கும் உணர்ச்சி நலங்களை ஓர்ந்து கொள்க. அற்பச் செல்வரது நிலைமையையும், நல்ல கல்வி மான்களது தலைமையையும் விளக்கிப் பணிவும் பண்பும் உடையனாய் மனிதன் உயர்ந்து கொள்ளும்படி இங்ஙனம் உணர்த்தி யுள்ளார்.

தலையும் ஆகமும் தாளும் தழீஇ அதன்
நிலைநிலா திறை நின்றது போலவே
மலையின் உள்ளஎலாம் கொண்டு மண்டலால்
விலையின் மாதரை ஒத்ததவ் வெள்ளமே. (இராமாயணம்)

மழை பெய்த பொழுது மலையிலிருந்து வெள்ளம் பெருகி ஓடியதை உள்ளம் தெரிய உணர்த்தியது. மலை அனைய நல்லவளம்

உடைய் குலமகளைத் தழுவித் தோய்ந்து உள்ள பொருள்களைக் கவர்ந்து நீங்கும் வேசையர் போல வெள்ளநீர் அயலே துள்ளிப் போயது என்க. வான் நிலம் மலை முதலியவற்றைக் கவிஞர் கையாளும் முறையும், கருத்துக்களை விளக்கும் நிலையும், கலையின் காட்சியும், உணர்வு நலங்களும் இன்னவாறு பல உள்ளன.

---

214. கல்வி யறிவு கனிந்திவ் வுலகமெலாம்
நல்ல நெறியொழுக நன்கோர்ந்தே—எல்லை
தெரிவரிய மெய்யின்பம் செய்யும் அதுவே
அரிய புலமை அறி. (ச)

இ-ள்.

சிறந்த கல்வி அறிவு சுரந்து உலகம் எல்லாம் நல்லநெறியில் ஒழுகும்படி உணர்வுபுரிந்து பெரிய இன்ப நலங்களைச் செய்து வருவதே அரிய புலமையாம் என்றவாறு.

இது, உயர்ந்த புலமையின் நிலைமை கூறுகின்றது.

புலமைக்கு அருமையாவது உலகிற்கு உதவி செய்யும் நிலைமையில் தலைமை எய்தி நிற்கும் தகைமை.

அறிவு கனிதலும், நெறி ஓர்தலும், இன்பம் செய்தலும் முறையே தான் செழித்து வளர்ந்து பிறர்க்குப் பயன் அருளும் கற்பக நிலையின் விற்பன வகைமை காணவந்தன.

உயிரினங்கள் தெளிவடைந்து உயர்நலமுற ஒளி உதவலே கலையறிவின் பயனும் என்றதனால் அதன் தலைமையும் தகைமையும் தெரியலாகும். ஓதியுணர்ந்த பயன் தீது கழிந்துபட நீதியுணர்த் தலேயாம்.

"யாதும் ஊரே யாவரும் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா;
நோதலும் தணிதலும் அவற்றோரன்ன;
சாதலும் புதுவது அன்றே, வாழ்தல்
இனிதெ்தன மகிழ்ந்தன் றும் இலமே; முனிவின்
இன்னாது என்றலும் இலமே; மின்னெடு
வானம் தண்டுளி தலைஇ யானாது
கல்பொரு திரங்கு மல்லற் பேர்யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்

முறைவழிப் படூஉம் என்பது திறவோர்
காட்சியில் தெளிந்தனம் ஆகலின் மாட்சியிற்
பெரியோரை வியத்தலும் இலமே
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே.'' (புறம்,192)

எவரையும் தமராகக் கருதி, எல்லாவுயிர்களையும் தன்னுயிர் போல் இனிது பேணி, யாண்டும் நல்வினைகளையே நயந்து புரிந்து, யாரையும் இகழாமல், வீணே புகழாமல் மேன்மையாய் ஒழுகி உய்யும்படி உணர்த்தியிருக்கும் இந்த அருமைப் பாசுரம் நாளும் நினைந்து சிந்திக்கத் தக்கது.

இதன் பொருள் நலங்களை அமைதியாக ஆய்ந்து உணர்ந்து அனுபவத்திற்குக் கொண்டுவரவேண்டும். வரின், அருள் நலமுடையராய்த் தெருள் மிகுந்து அரிய பேரின்ப நிலையைக் காணலாகும். வாழ்க்கைத் தூய்மை வகுக்கப் பட்டுள்ளது.

பூங்குன்றனார் என்னும் புலவர் பெருந்தகை தமது அனுபவ நிலைகளை இதில் அருளியுள்ளார். இந்த ஒரு பாட்டால் அரியபல உறுதி நலங்களை உலகினுக்கு அவர் உதவியிருக்கிறார். இத்தகைய மதிமானிடமுள்ள கலைஞானமே அரிய புலமை யாம்.

பல்லாயிரம் பாடல்கள் பாட வல்லவராயினும் உலகம் நல்லது காணச் செய்யாராயின் அவர் புலமை புல்லிதாம்.

உணர்வுதவியின் பயன் அளவே வியனாய் விளங்கிப் புலமை போற்றப்படுகின்றது. அந் நிலைமை என்றும்நியமமாகின்றது.

---

215. உள்ளம் தெளிந்தமைந்த ஒண்புலவர் தம்முள்ளே
கொள்ளும் உணர்வையே கூர்ந்தெடுத்துத்-தெள்ளமுதம்
என்ன உலகிற் கினிதருள்வார் எஞ்ஞான்றும்
உன்ன இனிக்கும் உளம். (ரு)

இ-ள்.

தெளிந்த மனமுடைய உயர்ந்த புலவர்கள் தமது அறிவு அனுபவங்களையே வரைந்து எடுத்து உலக மக்களுக்கு உதவுகின்றனர்; அவ்வுணர்வுநலன் அரிய அமுதமாய் எண்ணுந்தோறும் இனிமைசுரந்து உறுதிநலம் அருளுகின்றது என்றவாறு.

இது புனித உள்ளத்தின் இனிமை கூறுகின்றது.

ஒண்புலவர் என்றது நுண்ணிய அறிவும் தண்ணிய சீலமும் பண்ணிய நிலைமையு முடைய புண்ணியக் கலைஞரை.

அரிய கருத்துக்களை எளிதே கூர்ந்து உணர்தற்கு மனத் தெளிவே மூலகாரணம் ஆதலால் அது முதலில் வந்தது. தான் அகம் தெளிந்து தூய்மை அடைந்தபொழுதுதான் புறம்தெளிந்து உயர்ந்து கொள்ளச் சிறந்த எண்ணங்களை ஒருவன்வழங்கமுடியும்.

பலவகையான கலைஞானங்களை யுடையனுயினும் சித்த சுத்தி இலனுயின் உத்தமமான தத்துவ நலங்கள் அவன் உள்ளத்தில் உதியா; ஆகவே உலக மகாகவியாய் வர உரிய ஒருவனுக்கு இதய பரிசுத்தம் தனி உரிமையாய் இனிதமைந்திருக்கவேண்டும்.

புனிதமான அந்த இனியவனிடத்தேதான் உயர்ந்த உணர்வு நலங்கள் சுரந்து பெருகி உலகம் இன்புறப் பரந்து பயன்படு கின்றன.

"The sublime vision comes to the pure and simple soul in a clean and chaste body." (Emerson.)

"புறமும் அகமும் புனிதமான உத்தமருக்குத்தான் அரிய தத்துவக் காட்சி எளிதில் உதயமாம்" என உயர்ந்த கவிஞரைக் குறித்து உரையாடும் பொழுது ஒரு அமெரிக்கப்புலவர் இவ்வாறு கூறியிருக்கிருர். இதய புனிதம் உதய ஒளி ஆகின்றது.

தெள்ளிய தமது உள்ளத்தில் ஊறிய நல்ல எண்ணங்களை உலகம் நலமுறக் கவிஞர் அள்ளி அருளுகின்றமையால் தெள்ளமு தம் என எல்லார்க்கும் யாண்டும் அவை நீண்ட இன்பம் பயந்து வருகின்றன. வரவே அவரது உதவி நிலையும் உயர்வும் தகவும் உணர நேர்கின்றன.

கலையறிவு உயிரின்பத்தின் உயரிய நிலையின ஆதலின் உள்ளுந் தோறும் உணர்வுக்கு இன்பமாய் அது உறுதி நலம் தருகின்றது.

அமுதம் என்றது உணர்வின் அருமையும் இனிமையும்கருதி.

புனித உளத்திலிருந்து விளைந்தது ஆதலால் மனித உள்ளங் களுக்கெல்லாம் ஏகபோகமான தனியுரிமையாய் இனிமை சுரந் தருள்கின்றது.

"என்ஞான்றும் உன்ன இனிக்கும் உளம்" என்றது, கவி யின் சுவை அழிவில் இன்பமாய் என்றும் நிலைத்து வருதலை

நினைந்து. கருதுந்தோறும் அறிவின்பம் பெருகி வருமாதலால் அஃது எல்லையில்லாத நித்திய ஆனந்தமாய் நிலைபெற்றுள்ளது.

இன்றாமை வேண்டின் இரவெழுக; இந்நிலத்து
மன்னுதல் வேண்டின் இசைநடுக; தன்னொடு
செல்வது வேண்டின் அறம்செய்க; வெல்வது
வேண்டின் வெகுளி விடல். (நான்மணிக்கடிகை.)

உனக்குத் துன்பம் வேண்டுமா, யாசகத்திற்குப் புறப்படு; இவ்வுலகத்தில் என்றும் அழியாமல் நிலைத்து நிற்க வேண்டின் கீர்த்தியைத் தேடு; உன் உயிர்க்கு மறுமையில் நல்ல உறுதியை விரும்பின் தருமத்தைச் செய்துகொள்; யாண்டும் வெற்றி வேண்டுமாயின் கோபத்தை ஒழித்துவிடு என இது உணர்த்தியுள்ளது. உணர்வு நலன் உயிர்நிலையை உயர்த்துகின்றது.

மானம் மரியாதைகளுடன் இனிது முயன்று புகழ் புண்ணியங்களை ஈட்டி மனிதர் உயர் நிலையில் வாழும்படி விளம்பி நாகனார் என்னும் புலவர் உலகை நோக்கி இவ்வாறு உரைத்திருக்கிறார்.

ஒரு காலத்தில் தம் உள்ளத்தில் தோன்றிய கருத்துக்களைக் கவிஞர் இங்ஙனம் உரைத்தருள்கின்றார்; அவை உலகமெங்கும் பரவி என்றும் நிலையாய் எல்லார்க்கும் இன்பம் பயந்து வருகின்றன.

கவிகளின் எண்ணங்கள் அமிர்த மயமானவை; அவ்வுணர்வு நலங்களை அருமையாகப்பேணி உரிமை செய்துகொள்ள வேண்டும்.

---

216. கைவல்லாள் கூர்ந்து கனிந்தட்ட நல்லடிசில்
மெய்ய சுவைமிக்கு மெய்க்குறுது—செய்கின்ற
பான்மைபோல் இன்புலவர் பாவும் உயிர்க்குறுதி
மேன்மை விளைக்கு மிகுந்து. (௬)

இ-ள்.

கைத்திறம் வாய்ந்த மங்கை கருத்துடன் சமைத்த நல்ல உணவின் சுவைபோல் அரிய புலவர் அமைத்த இனிய பாவும் உயிர்க்கு உறுதியாய் உயர்பேரின்பம் அருளும் என்றவாறு.

இது, கவியின் பாகம் காட்டுகின்றது.

அடிசில் = சோறு, அன்னம். அடுதல் = சமைத்தல்.

கைவல்லாள் என்றது சமையல் செய்வதில் கைதேர்ந்தவள் என்றவாறு. தேர்ச்சியிருந்தாலும் கருத்தும் கவனமும் இல்லையாயின் பாகம் விருத்தமாகிவிடும் ஆதலால் கூர்ந்து கனிந்து என்பன சேர்ந்து வந்தன.

அரிசி பருப்பு காய் கிழங்கு முதலிய உபகரணங்களை இனிதமைத்துப் பக்குவமாகச் சமைத்து நறுஞ்சுவை அமையச் செய்யின் அந் நல் உணவு உடலுக்கு உறுதியும்வனப்பும்உதவியருளும்.

சோற்றால் அமைந்த சுவர் என இவ்வுடம்பைச் சொல்லி வருதலால் உணவின் தகுதிக்குத் தக்கபடியே உடல்கள் உரம் பெற்று மிளிர்கின்றன என்பது தெளிவாம்.

"மக்கள் யாக்கை உணவின் பிண்டம்" (மணிமேகலை 10)

"உண்டி முதற்றே உணவின் பிண்டம்." (புறம், 18)

உடம்பை உணவின் பிண்டம் எனப் பண்டையோர் கண்டு கூறிய குறிப்பு கருதவுரியது. சுவை வீரியங்கள் நிறைந்த தூய உணவால் தேகம் திடமும் தேசும் அடைகின்றன. அதுபோல் தேகியும் தனக்கு உரிய ஆகாரத்தால் தழைத்து நிலவுகின்றது.

உணவின் பிண்டம் ஆகிய உடல் உண்டியால் வளர்தல் போல் உணர்வின் பிண்டம் ஆகிய உயிர் உணர்வால்ஒளிர்கின்றது.

உணவு பேதமாய்ப் பழுதாயின் உடல்நிலை கெடும்; உணர்வு திரிந்து மாறுபடின் உயிர் ஒளி குன்றும்.

இனிய சுவை உணவை இதமாக நாடி உண்டல்போல் நல்ல உணர்வு நலங்களை நயமாக ஆராய்ந்து நுகர்க.

புல்லிய பண்டங்களைப் புறந்தள்ளுதல்போல் பொல்லாத கதைகளையும் ஒல்லாத காதல்களையும் போலிப் பாடல்களையும் கேலித்தாள்களையும் அருவருத்து வெறுத்து அயலே தள்ளுக.

அரிய இனிய உணர்வு நலங்களைக் கவிகளாகிய தங்கக் கிண்ணங்களில் சுவையாக அமைத்துக் கவிஞர் கருணையுடன் வைத்துள்ளனர். அந்த அமுதத்திரளைகளை நுகர்ந்தவர் ஆனந்தம் அடைகின்றனர். நுகராதவர் உணவிழந்த உடலராய் உயிர் ஒளி குன்றி இழிந்து படுகின்றார். பாடு தெளிந்து பீடு பெறுக.

உணவில் ஆறு சுவைகளே அமைந்தன. உணர்வு நலம் ஒன்பது சுவைகளையுடையது அந்த விழுமிய இரசனைகள் உயிரினங்களுக்கு என்றும் இன்பம் புரிந்தருள்கின்றன

"கருணை வீரம் காமம் நகையே
அச்சம் வெகுளி இழிப்பு வியப்பு அமைதி,"

என அறிவுச் சுவை இங்ஙனம் ஒன்பது வகையாகப் பரவியிருக்கிறது. வடமொழியில் இவை நவரசம் என வழங்கப்படுகிறன. இந்தச் சுவை நிலைகளைத் தனித்தனியே உணர்த்தப் புகின் மிகவும் விரியும். தகவறிந்து தெளிக.

நாவின் சுவையினும் பாவின் சுவை பண்பாடுடையது. தேவியல்பமைந்தது; பயனறிந்து நுகர்ந்து நயனுயர்ந்து கொள்க.

---

217. மலர்தோறும் சென்று மதுநுகர்வண் டென்னப்
பலநூலும் ஆய்ந்து பயன்கொண் — டுலகமெலாம்
இன்பமுற நன்பொருளை இன்புலவர் ஈந்தருளித்
துன்பமறச் செய்வர் தொடர்ந்து. (எ)

இ-ள்.

பூக்கள் தோறும் பறந்து சென்று தேனைக் கவர்ந்துகொண்டு வந்து தொகுக்கும் வண்டுகளைப்போல் பல நூல்களையும் ஆராய்ந்து இனிய உணர்வு நலங்களை உலகம் இன்பமுறப் புலவர்கள் உதவியருள்வர் என்றவாறு.

இது, கவிகள் சுவைகளை உதவியருளும் இயல்புகூறுகின்றது.

மலர், நூல்களுக்கும்; மது, இனிய மதி நலங்களுக்கும்; வண்டு, கவிஞர்க்கும்; நுகர்வு ஆராய்வுக்கும் ஒப்பாம்.

பலவகையான மலர்கள் தோறும் வண்டுகள் பறந்து அமர்ந்து மதுவை நுகர்ந்து கொண்டுவந்து அடையில்சேர்த்துவைத்து உலகிற்கு உதவி வருகின்றன; கவிஞர் பல் வேறு வகைப்பட்ட நூல்களையும் ஆராய்ந்து தெளிந்து அரிய இனிய கருத்துக்களை மன்பதைக்கு இன்பமாக ஈந்தருளுகின்றார்; ஆகவே அவை இவர்க்கு உவமையாய் வந்தன.

உவமக் குறிப்பால் கவிகளுடைய அறிவு நுகர்ச்சியும் பிறவி இயற்கையும் அறியலாகும். மது அருள் வண்டுஎன மதி அருள்கின்றனர்.

நல்லனவற்றை நன்கு ஆராய்ந்து கைம்மாறு கருதாமல் உலகம் உவப்ப உதவி புரிதலால் புலவர்கள் தலைமையான உபகாரிகளாய்த் தழைத்து நிலவுகின்றார்.

"உலகம் எல்லாம் இன்பம் உற" என்றதனால் அவர் அருளுகின்ற பொருளின் இனிமையும் போகமும் புலனும்.

உணர்வுக்கினிய அரிய சுவையைக் கவிகள் ஊட்டி வருதலால் உயிர்கள் உயர்பேரின்பமாய் ஒளி சிறந்து வருகின்றன.

"துன்பம் அறச் செய்வர் தொடர்ந்து" கவிஞர் உணர்ச்சி நலனை உதவி அதனால் தீவினைகளை ஒழித்து நல்வினையைவளர்த்து விடுகின்றார்; விடவே மனிதர் துன்பத் தொடர்பு அற்று யாண்டும் இன்ப நிலைக்கே உரியராய் இசைந்து நிற்கின்றார்; அந் நிலையை இது உணர்த்தி நின்றது.

தேன்போல் இனிய எண்ணங்களை ஞானமணம் கமழப் பாவில் அமைத்துப் பாவலர்கள் ஆவலோடு பரிந்து அருளுகின்றார்; அவற்றை அருந்தி மகிழவேண்டும்.

"உள்ளது சிதைப்போர் உளர்எனப் படாஅர்
இல்லோர் வாழ்க்கை இரவினும்இளிவு." (பெருங்கடுங்கோ)

தந்தை முதலிய முந்தையோர் ஈட்டி வைத்த பொருளை வீணே இருந்து தின்று தொலைப்போர் உயிருடன் இருப்பவராகார்; வறுமை வாழ்க்கை இரத்தலினும் இழிந்தது என இஃது உணர்த்தியுள்ளது. தானாக முயன்று பொருள் தொகுத்துச் செல்வம் மிகப் பெற்று எல்லார்க்கும் இனிது உதவி மானம் பேணித் தானம் தாங்கி ஞானம் ஓங்கி வாழ்க என்பதாம்.

"இசையும் இன்பமும் ஈதலும் மூன்றும்
அசையுடன் இருந்தோர்க்கு அரும்புணர்வு இல்"
(கருவூர்க் கோசனார்)

முயலாது மடி மண்டியிருப்பவர்க்குப் புகழ் முதலியன கிடையா; முயன்று உயர்க என இவர் மொழிந்தருளினர்.

நெடிய மொழிதலும் கடிய வூர்தலும்
செல்வம் அன்று; தன்செய் வினைப் பயனே;
சான்றோர் செல்வம் என்பது, சேர்ந்தோர்
புன்கண் அஞ்சும் பண்பின்
மென்கட் செல்வம் செல்வம் என்பதுவே." (நல்வேட்டனார்)

தன்னை அடுத்தவரது துன்பம் கண்டு இரங்கி அருளுடன் உதவி புரிதலே பெரிய செல்வமாம்; அங்ஙனம் உதவாமல் தேர் குதிரைகளில் விரைந்து செல்லும் அரச திருவை அடைந்திருந்தாலும் சான்றோர் அவனை மதியார் என மதி நலம் ஊட்டினர்.

" நாளும் நாளும் ஆள்வினை அழுங்க
இல்லிருந்து மகிழ்வோர்க்கு இல்லையால் புகழ் "
(சிற்றடக்கம்)

முயற்சியைக் கைவிட்டுச் சோம்பேறிகளாய் வீட்டில் களித்திருப்பவருக்கு நாட்டில் புகழ் உண்டாகாது; ஓடித்தேடி உயர்க என இது உணர்த்தி யுள்ளது.

" இளமையும் நில்லா யாக்கையும் நில்லா
வளவிய வான்பெரும் செல்வமும் நில்லா
புத்தேள் உலகம் புதல்வரும் தாரார்
மிக்க அறமே விழுத்துணையாவது. " (சாத்தனார்)

" ஈரம் அல்லாதது கிளைநட்பு அன்று " (கூடலூர்க்கிழார்)

" தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது
இன்னுயிர் நீக்கும் வினை. " (திருவள்ளுவர்)

" தன்னுயிர் தான்பரிந்து ஓம்பு மாறுபோல்
மன்னுயிர் வைகலும் ஓம்பி வாழுமேல்
இன்னுயிர்க்கு இறைவனாய் இன்ப மூர்த்தியாய்ப்
பொன்னுயிராய்ப் பிறந்து உயர்ந்து போகுமே. "
(திருத்தக்கதேவர்)

உலகம் நலமுறப்புலவர்கள் இங்ஙனம் உறுதிநலங்களை அருளி யுள்ளனர். தமிழாகிய அமுதக் கடலிலிருந்து சில துளிகளை இங்கே கொண்டு வந்து காட்டினேன். பிறவும் கண்டு மகிழ்க.

---

218. மிக்க புலமை மிகமேவி நின்றாலும்
தக்க கவியியற்றும் தன்மைதான்—ஒக்கவே
இல்லானேல் நல்லமக்கள் இல்லாத வாழ்க்கையெனச்
செல்லா தவன்சீர் சிறந்து. (அ)

இ-ள்.

சிறந்த கல்வியறிவு நிறைந்திருந்தாலும் தகுந்த கவிஇயற்றும் தன்மை இலனாயின் அவனுடைய புலமை பொலிந்து விளங்காது; நல்ல பிள்ளைகளைப் பெறாதவனது மனை வாழ்க்கைபோல் எனை வகை மாட்சியும் புல்லிதாய் இழிந்துபடும் என்றவாறு.

தக்க கவி என்றது பொருள் நலமும் பொலிவும் உடைய தாய்க் கருதுந்தோறும் உள்ளத்தைப் பண்படுத்தி உயர் நலம் அருள்வதை. தகவும் சுவையும் உவகைகளாய் ஒளிர்கின்றன.

தகுதியில்லாத கவிகளை எவ்வளவு மிகுதியாகச் செய்தாலும் அவை உண்மையான கவிகளாகக் கருதப்படா.

செய்யுள் செய்யும் இயல்பு தெய்விகம் உடையது; கருவிலே திருவுறுதல்போல் பிறவியிலேயே தனியுரிமையாய் மருவி வந்தால் ஒழிய அது உயர்வாக ஒளி செய்யாது ஆதலால் அந்நிலைமை தெளிய இயற்றும் தன்மை என வந்தது.

"The poet is born, not made" "கவித்வம் பிறப்பில் அமைந்தது; முயன்று பெறுவது அன்று." என ஆங்கில நாட்டிலும் இத்தகைய பழமொழி வழங்கி வருகின்றது. ஆகவே கவிஞனது பிறப்பின் அருமையும் பெருமையும் அறியலாகும்.
சுவை நிறைந்த உயர்ந்த கவிகளைச் செய்தருளும் கவிஞரே சிறந்து விளங்குகின்றார்; அங்ஙனம் செய்யமாட்டாதவர் விளக்கமின்றி மறைந்து போகின்றார்.

அரிய பெரிய செல்வங்களையுடையனாயினும் பிள்ளைப் பேறு இலனாயின் அவன் பெருமைகுன்றி மறைகின்றான்; பலகலைகளையும் பயின்று தலைமையான புலமை எய்தியிருந்தாலும் செய்யுள் செய்யும் நிலைமை இலனேல் அப்புலவன் பொலிவிழந்து போகின்றான். நிலைத்த புகழின்றி நிலைகுலைந்து போதலால் மகவில்லாத வாழ்வு கவி இல்லாதவனுக்கு உவமையாய் வந்தது.

குடி விளக்கிக் குலமாபு துலக்கி வழிவழியே புகழ்பெருக்கி வரும் குலமக்கள் போல் கலைமக்களை என்றும் தலைமக்களாக்கிக் கவிகள் கவின் செய்து வருகின்றன.

பிள்ளை இல்லான் பேர் அழிகின்றான்; கவி இல்லான் சீர் அழிகின்றான். சீர்மையின் நீர்மை சிந்திக்கத்தக்கது.

இனிய கவிகளை ஈன்றருளினவர் கம்பர் வள்ளுவரைப்போல் என்றும் தனிமகிமையுடையராய்ப் புனித நிலையில் பொலிந்து விளங்குகின்றார். பொலிவு போதம் கனிந்து மிளிர்கின்றது.

புவி சிருட்டி செய்யும் பிரமன் தேவர்களுள் தலைமை எய்தி நிற்றல்போல் கவி சிருட்டி செய்யும் கவிஞன் புலவர்களுள் தலைசிறந்து திகழ்கின்றான். அரிய செயல் பெரிய புகழ் ஆகின்றது.

நல்ல மக்கள் என்ற உவமையைப் பொருளோடு பொருத்தி நோக்குக. பொல்லாத மக்களைப் பெறுவதைவிடப் பெறாமல் ஒழிவது நல்லது.

நன்றிதரும் பிள்ளைஒன்று பெற்றாலும்குலமுழுதும் நன்மைஉண்டாம்;
அன்றிஅறி வில்லாத பிள்ளைஒரு நூறுபெற்றும் ஆவ துண்டோ ?
மன்றில்நடம் புரிவாரே தண்டலையாரே சொன்னேன் வருடந்தோறும்
பன்றிபல ஈன்றும் என்ன குஞ்சரம் ஒன்றுஈன்றதனால் பயனுண்டாமே.
(தண்டலையார் சதகம்)

என்றபடி பன்றிக்குட்டிகள் போல் பல கவிகள் பாடுதலினும் யானைக் கன்று போல் ஒன்று பாடினும் நன்றாம். பெற்றவனுக்குப் பெருமையும் உலகிற்கு நன்மையும் விளைத்தலால் கவிகள் நல்ல மக்கள் என வந்தன.

"கல்வியே கற்புடைப் பெண்டிர்அப் பெண்டிர்க்குச்
செல்வப் புதல்வனே ஈர்ங்கவியாச்—சொல்வளம்
மல்லல் வெறுக்கையா மாணவை மண்ணுறுத்தும்
செல்வமும் உண்டு சிலர்க்கு." (நீதிநெறிவிளக்கம்)

இனிய நல்ல கவியைக் கல்வியின் செல்வப் புதல்வனாக இதில் குறித்திருத்தல் அறிக. எவ்வளவு நல்லவளாயிருந்தாலும் பிள்ளை இல்லாதவள் மலடி என இழிதல்போல் அரிய புலமையும் இனிய கவிநலம் இலையேல் வறிதே இழிவுறுகின்றது.

கவியின் அருமையும் அதனையுடைய கவிஞர் பெருமையும் நுணுகி உணர வுரியன.

---

219. வேந்தன்செங் கோலால் விளங்குவான் மேவிநின்ற
காந்தன் விளங்குவான் காதலினால்—தாந்தமது
நூலால் விளங்குவார் நுண்புலவர் நோன்மைதரும்
பாலால் விளங்கும் பசு. (கூ)

இ-ள்.

அரசன் செங்கோலாலும், கணவன் அன்புரிமையினாலும், புலவர் நூலாலும், பசு பாலாலும் சிறந்து விளங்குகின்றனர் என்றவாறு.

இது கலையறிவு தலைசிறந்து விளங்கும் நிலைமை கூறுகின்றது.

நீதி நிலை கோடாமல் யாண்டும் நேர்மையாய் நெறிமுறை புரியும் அரசனது சீரிய செம்மை செங்கோல் என வந்தது.

வேந்தனை முதலில் குறித்தது உலக நாயகனாய்த் தலைமை எய்தி நிற்கும் நிலைமை கருதி.

காந்தன் வீட்டுத் தலைவன் ஆதலால் நாட்டுத் தலைவனை அடுத்து நின்றான். பாட்டுத் தலைவனது நிலைமையை நன்கு காட்டுதற்கு முன்னும் பின்னும் மூன்று எடுத்துக் காட்டுகள் வந்தன. காந்தன் = கொழுநன்.

நுண்புலவர் என்றது கலையறிவு சுரந்து மதிநலம் வாய்ந்துள்ள மேதைகளை. உலக மக்கள் எளிதில் அறியமுடியாத அரிய பொருள் நலங்களைத் தெளிவாகக் கூர்ந்துணரும் நுண்ணிய நிலைமைக்குத் தக்க அளவே புலமை பொலிந்து விளங்கும் ஆதலால் நுண்மை அடை அதன் தன்மை தெரிய நேர்ந்தது.

அரசனது செங்கோலால் உலகம் நலம் அடைகின்றது; கணவனது அன்புரிமையால் மனை வாழ்க்கை மாண்புறுகின்றது; பசுவின் பாலால் உடல்கள் உரம் பெறுகின்றன; புலவரது நூலால் உயிரினங்கள் உயர்ந்து ஒளி பெறுகின்றன.

நோன்மை தரும் என்றது பாலின் பான்மை உணரவந்தது. நோன்மை = வலி. உடலுக்கு உரமாய் உணர்வுக்கு உறுதிபயந்து பிள்ளை முதல் பெரியவர் ஈறாக உள்ளவர் எவர்க்கும் உதவிபுரிந்து வருதலால் பசுவின்பால் எந்நாட்டிலும் எல்லாராலும் உயிராதாரமாக உவந்து போற்றப்பட்டுள்ளது.

ஆவின்பால் யாவருக்கும் ஆரா அமுதமாய்
நாவின்பால் இன்பம் நனிசுரந்து—பூவின்பால்
தேவர் உணவாய்ச் சிறந்து திகழ்தலால்
ஏவரதை ஏத்தார் இவண்.

இத்தகைய ஆவின் பாலினும் பாவின்பாலமைந்த நூல் மிகவும் மேலானது. அது புறத்தே உடலளவில் ஓம்பி நிற்கின்றது; இது அகத்தே உணர்வுயிர்களை ஓம்பி ஒளி செய்து வருகின்றது.

அரிய உயிரமுதமான இனிய நூல்களைச் செய்தருளும் புலவர்களை சுரபி சிந்தாமணி கற்பகங்களைப் போல் என்றென்றும் அற்புத நிலையில் துலங்கி நிற்கின்றார்.

"கற்பகம் அனைய அக்கவிஞர்" எனக் கவிச் சக்கரவர்த்தியாகிய கம்பர் சுட்டியிருக்கும் நுட்பம் நுனித்து நோக்கத்தக்கது.

இங்ஙனம் இனிய கவிகளை இயற்றும் புலவரே தனி மகிமை பெறுகின்றார். பால் இல்லாத மலட்டுப் பசுவைப்போல் நூல் இல்லாத புலவனையும் உலகம் விழைந்து பேணாமல் விலகிப்போகின்றது. கற்றதை உணர விரித்து உரையாதார் மணம் இல்லாத மலர்போல்வார் எனத் தேவர் கூறியதும் ஓரளவுஈண்டு உரிமையாகின்றது. பிறர்க்குப் பயன்படும் அளவே ஒருவன் பெருமை அடைகின்றான்.

உயர்ந்த காவியங்கள் உலகிற்கு என்றும் உணர்வு நலங்களை உதவி வருதலால் அந்நூல்களைச் செய்தருளினவர் தெய்வீக நிலையில் சிறந்து திகழ்கின்றார்.

---

220. ஆய்ந்து தெளிந்த அறிஞர் தமதுள்ளே
தோய்ந்துலகம் இன்பமுறச் சொல்லுவார்—சாய்ந்துநின்று
சோரப் புலவரயல் சொன்னதையே பன்னிவசை
கூரப் புகல்வர் குறி. (10)

இ-ள்.

ஆராய்ந்து தெளிந்த அரிய புலவர் தம் அகத்தே கூர்ந்து நோக்கி அனுபவமாய் ஓர்ந்து உணர்ந்த உண்மைகளையே உலகம் நன்மையுற இனிமையாக உவந்து சொல்லுவர்; புன்மையான சோரப்புலவர் பிறருடைய கருத்துக்களைக் கள்ளமாகக் கவர்ந்து எள்ளலுடன் சொல்லி இழிந்து நிற்பர் என்றவாறு.

இது புலமைச் சோரத்தின் புலைமை கூறுகின்றது.

தனது மதி நலத்தைப் பண்படுத்தித் தானாக ஆராய்ந்து சொல்வதே மேன்மையாம்; அங்ஙனமின்றிப் பிறர் கருதியுரைத்த கருத்துக்களையே களவாக எடுத்து மறைவாக வெளியிடுதல்மிகவும் கீழ்மையாம். ஆவதை அறியாமல் போவது புலை.

தன் சொந்த அறிவிலிருந்து வருவது இனிய ஊற்றில் ஊறும் நீர்போல் இன்பம் பயக்கும்; அயலாருடையதை மயலாக அள்ளிக் கொள்வது இட்டு வைத்த கட்டுக்கடை நீராய் ஒட்டி ஒழியும்.

முன்னோர் நூல்களையும் மேலோர் எண்ணங்களையும் சால்பாக ஆராய்ந்து நேர்மையுடன் தானாகவே நூல் செய்யவேண்டும்; அதுவே சீர்மையாம்.

ஒரு புலவன் நெடுங்காலம் ஆய்ந்து தெளிந்து அருமையாக வெளியிட்டுள்ள அறிவுநலங்களைச் சிறிது களவாடி உருக்குலைத்துத் தான் கண்டதாக உலகம் காணச் செய்ய முயல்வது பெரிதும் பரிதாபமாகின்றது.

தான் முயன்று தேடிய பொருள் அறமும் இன்பமும் அருளும்; களவில் கவர்ந்தது பழியும் துன்பமும் பயக்கும். அது போல் அறிவுப் பொருளையும் கருதிக் கொள்க.

கள்ளம் புரிந்து சுவை காணவே உள்ள அறிவின் உழைப்பு ஒழிந்து போகின்றது. போகவே நல்ல கருத்துக்களைத் தானாகக் காணமுடியாதபடி வீணே இழிந்து அது மெலிந்துதொலைகின்றது.

கள்ளத்தனம் தன் நல்ல உள்ளத்தைக் கெடுத்து விடுதலால் அது பொல்லாக் கொலையாய்ப் புலையாடி நிற்கின்றது.

"Imitation is suicide" "பிறர் நூலைக் கவர்ந்து செய்தல் தற்கொலையாம்" என எமர்சன் என்னும் அமெரிக்கப் பெரியார் கூறியுள்ளதும் ஈண்டு அறியற்பாலது.

பிறப்புரிமையில் தனக்கு வாய்த்த அறிவைப் பாழ்படுத்தி விடலால் கலைச் சோரம் கொலைச் சாரமாக் குறிக்க நேர்ந்தது.

"மலைச்சாரல் வனம் முதலாத் தனிவழியே
வருவாரை வழிமறித்துப்
புலைச்சோரர் பொருள்கவர்வார் பொல்லாதார்
எனப்புகல்வர்; புலக்கண் இன்றிக்
கலைச்சோரம் புகுந்து சிலர் களவாகப்
பிறர் நூலுட் பல கவர்ந்து
நிலைச்சோரம் புரிகின்றார் நெடுஞ்சோரர்
இவர்க்கு நேர் நிலத்தில் யாரே?"

(இந்தியத்தாய் நிலை)

புலமையில் சோரம் புரிதல் புலைமையாம் என்றதனால் அதன் நிலைமையும் தீமையும் நெடிது புலனாம்.

பிறருடைய அறிவுப் பொருள்களைக் களவாடித் தமதாகக் காட்டித் தருக்கி நிற்பாரைச் சோரப் புலவர் என்றது அவரது நீர்மை நிலை தெரிய. அவர் சீர்மையுற வேண்டும்.

உனக்கு வாய்த்த அறிவை நேரிய முறையில் கூர்மையாகப் பயன் படுத்து. அதனால் சீரிய நிலைமை செழித்து வரும்.

உத்தமக் கவிஞனை உயர்ந்து கொள்ளுக; சித்தத்தைக் கெடுத்துச் சீரழியாதே என்பது கருத்து.

வலமமுழு வுயரிய நலமலி கங்கை
நதிதலை சேர்ந்த நற்கருணைக் கடல்
முகந்து உலகுவப்ப உகந்த மாணிக்க
வாசகன் எனும் ஒரு மாமழை பொழிந்த
5. திருவாசகம் எனும் பெருநீர் ஒழுகி,
ஓதுவார் மனமெனும் ஒண்குளம் புகுந்து,
நாவெனும் மதகில் நடந்து, கேட்போர்
செவிஎனும் மடையில் செவ்விதிற் செல்லா
உளம் எனும் நிலம்புக ஊன்றிய அன்பாம்
10. வித்தில் சிவமெனும் மென்முளை தோன்றி
வளர்ந்து கருணை மலர்ந்து
விளங்குறு முத்தி மெய்ப்பயன் தருமே.

(நால்வர் நான்மணிமாலை 16)

தெய்வக் கடலிலிருந்து முகந்து மாணிக்க வாசகன் என்னும் கார்மேகம் திருவாசகம் என்னும் திவ்விய மழையைப் பொழிந்தது; அது உலகம் உய்யப் பரவியுள்ளது என உருவகித்து வந்திருக்கும் இந்த அருமைக் கவியை உரிமையுடன் ஊன்றியுணர்ந்து பொருள் நிலைகளை ஓர்ந்து தெருள் நலங்களைத் தேர்ந்து கொள்க.

புனிதக் கவிஞரிடமிருந்து விளைந்து வருகின்ற இனிய கவிகள் மனிதக் குலம் இன்புற அமுத தாரைகளாய் மருவி யுள்ளன.

## இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

தம் உள்ளக் கருத்தைக் கவிஞர் உலகறியச் செய்கின்றார்.
அவர் தேவர் என நிலவுகின்றார்.
வானம் நிலம் முதலியன அவர்க்கு ஏவல் புரிகின்றன.
அவரது புலமை உலகிற்குத் தலைமை ஆகின்றது.
கவிகள் அணிகள் என மிளிர்கின்றன.
அவரால் உயிர்கள் ஒளிபெறுகின்றன.
உலகம் இன்புற அவர் உதவி புரிகின்றார்.
கவிநலம் இல்லாத புலமை புவியில் ஒளிராது.
கவியால் புலமை கவினுறுகின்றது.
உண்மைக் கவிஞரே உலகில் உயர்ந்தவர்.

22-வது கவிஞர் முற்றிற்று.

# இருபத்து மூன்றாம் அதிகாரம்.

## புலவர் நிலை.

அஃதாவது கலையறிவில் தலை சிறந்துள்ள புலவரது நிலைமை. கவிஞருடைய இயலும் செயலும் உயர்வும் மேலே அறிந்தோம்; அத்தகைய மேதைகள் பேதையுலகில் நிற்கும் முறைமையை உணர்த்துகின்றமையால் அதன்பின் இது வைக்கப்பட்டது.

221. ஞாலமெலாம் நீதிநலம் நன்கறிந்து நல்லோராய்ச்
சீலங்கைக் கொண்டு சிறந்துய்ய—நூலறிவு
தந்தருளும் மெய்ப்புலவர் சந்ததமும் தெய்வநிலை
முந்தருள நின்றார் முனைந்து. (க)

இ. ள்.

நீதி நெறிகளை உலகம் எல்லாம் உணர்ந்து தெளிந்து உயர்ந்து உய்ய அருள் புரிகின்ற சிறந்த புலவர்கள் தெய்வத் தன்மையுடையராய் என்றும் விளங்கி நிற்கின்றார் என்றவாறு.

இது, உலகம் புலவரால் ஒளி பெறுகின்றமையை உணர்த்துகின்றது. முந்து = தலைமையாக.

பிறந்த மனித இனம் சிறந்த அறிவுநலனை அடைந்து உயர்ந்து கொள்ளுதல் கல்வியானேயாம். அந்தப் புனிதக் கலை இலையேல் மனிதன் இருகால் விலங்கு என இழிந்துபோக நேரும். அங்ஙனம் இழிவு நேராவகை கலை அமுதை உலகினுக்கு உதவி உயர்வு புரிந்து அருளுகின்றவர் புலவர்களே; அப் புண்ணிய சீலர்களுடைய கண்ணிய நிலைமையும் தண்ணிய நீர்மையும் நுண்ணிய நிலையின; மண்ணியல்பால் மயங்கி மறந்திருப்பினும் எண்ணி மகிழ வுரியன.

சிறந்த எண்ணங்களால் உலகம் உயர்ந்து வருகின்றது. அந்த எண்ணங்கள் நூல் வடிவங்களாய்ப் பரந்திருக்கின்றன. மேலான அந்நூல்கள் புலவர்களிடமிருந்து விளைந்து வருகின்றன. ஆகவே அவர் சீவ கோடிகளுக்குச் செய்துவரும் ஆதரவும் அருளும் அறியலாகும்.

"ஞாலமெல்லாம் உய்ய நூலறிவுதந்தருளும் மெய்ப்புலவர்" என்றது அவரது பான்மை மேன்மைகளைச் சிந்தனை செய்ய வந்தது. ஒத்தபிறப்பினர்எனினும் உண்மைநிலையை உய்த்துணர்க.

எஞ்ஞான்றும் மெய்ஞ்ஞான ஒளிகளைப் பாப்பி அஞ்ஞான இருள்களை அகற்றி அருளுதலால் அதிசயமான தெய்வத் தேசுடன் அவர் சிறந்து திகழ்கின்றார்.

உருவில் மனிதராயினும் உணர்வு நலங்களில் திவ்விய நிலையினராய் யாண்டும் அவர் நிலவி நிற்கின்றனர்.

"Poets are the hierophants of an unapprehended inspiration"
[Shelley]

"கவிஞர் தெய்வத்தன்மை வாய்ந்த திவ்விய போதகர்" என மேல் நாட்டாரும் பாராட்டி வருகின்றனர்.

மொழி விளக்கு ஏற்றி உணர்வொளி உதவி உயிர்கட்கு இதம்புரிந்தருள்கின்ற இந்த உபகாரிகள் ஞான மணங் கமழ்ந்து வான மழைபோல் என்றும் மருவி யுள்ளமையால் "சந்ததமும் தெய்வ நிலை மூந்து அருள நின்றார்" என இங்கே வந்தனை செய்ய வந்தார். சந்ததம்=எப்பொழுதும்.

தாம் பிறந்த இடத்தே இருந்து ஒரு நாள் வரைந்து வெளி விட்ட எண்ணங்கள் உலகம் முழுவதும் பரந்து ஊழியம் கடந்து உறுதி நலம் பயந்து ஒளிவீசி உலாவுகின்றன.

---

222. செல்வக்கள் ஊட்டின் தெளிவழிந்து சீரழிந்து
வல்விரைந்து போவரென மாதேவன்—கல்விநலம்
கொண்டார்க் களைதமிகவும் கூட்டா துலகமெலாம்
கொண்டாடச் செய்கின்றான் கூர்ந்து. (2)

இ-ள்.

செல்வம் ஆகிய கள்ளை அதிகம் ஊட்டின் மதிநலம் உடைய புலவர்கள் மதிமயங்கி விடுவர் என்று கருதி அதனை அளவாகத் தந்து உலகம் கண்டு கொண்டாடி மகிழ இறைவன் அவரை ஆட்டி அருள்கின்றான் என்றவாறு.

செல்வத்தைக் கள் என்றது களிப்பை விளைத்து அறிவை மயக்கி நெறியைக் குலைக்கும் அதன் வெறி நிலையை நோக்கி.

செல்வம் உலக ஆடம்பரங்களைத் தலைமையாகக்கொண்டது.

கல்வி உயிருணர்வில் அமைதியாய் ஒடுங்கி யுள்ளது.

அது மனத் திமிரை வளர்த்து மதம் மிகச் செய்வது ; இது மதிநலத்தைப் பெருக்கி இதம் உறப் புரிவது. பலவகையிலும் இரண்டும் வேறுபாடான மாறுபாடு உடையது; ஆதலால் இரு வகைத் திருவும் ஒரு முகமாய் மருவி நிற்றல் அருமை யாயது.

" திருவேறு ; தெள்ளியர் ஆதலும் வேறு " என வள்ளுவப் பெருந்தகை உள்ளி யுரைத்ததும் ஈண்டு ஊன்றி உணர வுரியது.

இங்ஙனம் இயற்கையாய் அமைந்துள்ள உலக நிலைக்கு ஒரு இனிய செயற்கைக் காரணத்தைக் கற்பித்துக் கற்பு நிலையை இது பொற்புறுத்தி யுள்ளது.

சிறந்த கல்வியாளர் பெரும்பாலும் உயர்ந்த செல்வராக இல்லையே என்பாரை நோக்கிச் சொல்லியபடி யிது.

கல்வி நலங் கனிந்த இனிய உள்ளத்தில் செல்வ வளம் விழுந் தால் பேராசையும் துடிதுடிப்பும் பெருகி எழும் ; எழவே உள்ள அமைதி குலைந்து உணர்வொளி மழுங்கிக் கலைநிலை குலையும் ஆத லால் கல்விக்குச் செல்வம் ஓரளவு களையாய் நேர்ந்தது.

தெளிவு அழிதல் சீர் அழிதலுக்கு ஏதுவாதலால் அது முத லில் வந்தது. " வல் விரைந்து போவர் " என்றது செல்வம் பெற்றவுடன் செல்லும் செலவு நிலை தெரிய வந்தது.

ஆரவாரமான உலகக் கொந்தளிப்பில் தலைகால் தெரியாமல் தாவிப் போய் ஆவி அலமராதபடி கலைவாணரை ஒரு நிலையில் நிறுத்தி இறைவன் கருணையோடு காத்தருளுகின்றான்.

நூலறிவாளரைப் பேணியருளுதல் வாலறிவனுக்கு மிகவும் உரிமை ஆதலால் அந்த உறவுநிலை உணரவந்தது.

" உலகம் எலாம் கொண்டாடச் செய்கின்றான் " என்றது யாண்டும் இனிய நீரராய் இதம் புரிந்துவரும் கல்வியாளரை எல் லாரும் உவந்து பாராட்டி விழைந்து போற்றுதல் கருதி.

கற்றோற்குச் சென்ற இடம் எல்லாம் சிறப்பு என்றார் ஔவை யாரும். கற்றோர் வெளி ஏறின் ஒளி ஏறுகின்றது. செல்வம்நிறைய இருந்தால் எங்கும் செல்ல இயலாது ஆதலால் அவரது செலவு நிலைக்குச் செல்வமின்மை வரவாய் வந்தது.

செல்வக் கள்ளைக் குடித்துச் சிந்தை திரியாமல் கல்வி அமு தம் பருகி உலகம் நலமுறப் புலவர் தலைமை எய்தி யுள்ளனர்.

---

223. கற்றார் வயிறொட்டக் கண்டவெலாம் தின்றுகொழுத்
துற்றார் பிறரென் றுளையற்க—வெற்றிபெற
ஓடும் பரிக்குமிக வூட்டார் உழுபரிக்கே
போடுவார் எல்லாம் புக. (௩)

இ. ள்.

கற்ற புலவர்கள் வறுமையால் வாடி வயிறுகாய, மற்றவர் தின்று கொழுத்துத் தொந்தி பெருத்துள்ளாரே என்று வருந்தலாகாது; வெற்றிபெற ஓடும் பந்தயக்குதிரைக்கு அதிகம் ஊட்டார்; உழுகின்ற குதிரைகளுக்கே எல்லாவற்றையும் அள்ளிப் போடுவார் என்றவாறு.

கல்வாணரைப் பந்தயக்குதிரையோடு ஒப்பவைத்தது அவரது நிலைமைகளை நினைந்து தெளிய.

எல்லாரும் வியந்து நோக்க வல்லாண்மை புரிவது; வெல்லாண்மை யுடையது; காட்சியின்பம் தருவது; மாட்சிகள் நிறைந்தது; மங்கலமானது; கம்பீரம் வாய்ந்தது; கதி வேகங்கள் தோய்ந்தது ஆதலால் உத்தமக்கலைஞருக்கு அது ஒப்பாய்வந்தது.

வெற்றி பெற ஓடும்பரி என்றது அதன் பீடும் தொழிலும் பெருமிதமும் கருதி. பரி=குதிரை. விரைந்து செல்வது என்னும் ஏதுப்பெயர்.

உழுதல் வண்டியிழுத்தல் சுமைஎடுத்தல் முதலிய முரட்டுத் தொழில்களைச் செய்கின்ற சண்டிக்குதிரைகள் கண்டவற்றை யெல்லாம் தின்று வயிறு பெருத்திருக்கும்; அவை விரைந்து செல்லா. பந்தயக்குதிரை அதிவேகமாய் ஓடவுரியது ஆதலால் உடல் சழியாதபடி உயர்ந்த உணவை அளவாக ஊட்டி அதனை உடையவர் பேணி வருவர். அதுபோல் காண்தகைய இன்பம் தருகின்ற புலவரை ஆண்டவன் அவ்வாறு ஆதரித்து வருகிறான்.

உழவு வாணிகம் முதலிய உலகத் தொழில்களில் மண்டியுள்ளவரினும் புலமைத் தொழிலில் தோய்ந்துள்ளவர் வளம் குறைந்துள்ளமையை நினைந்து உளங்கவைந்து அதற்கு ஓர் நலம் புனைந்து இது நவின்றுள்ளது. எனினும் நயம் தெரிய வேண்டும்.

ஒன்றும் படியாதவர் எல்லாச் செல்வங்களையும் அடைந்து உண்டு களித்து உல்லாச நிலைகளில் உலாவித் திரிகின்றார்; எல்லாம் படித்துப் பெரிய புலவனுயிருந்தும் வறுமையில் வாடுகின்றேனே! இது என்னே! என மறுகி மயங்கிய ஒரு புலவனை நோக்கி அறிவு கூறி ஆறுதல் செய்தபடி யிது.

பாலை நெருப்பில் காய்ச்ச அது மேலும் சுவை ஆதல்போல் வறுமையால் காயப் புலமையில் பெருமையும்இனிமையும் பெருகி எழுகின்றன. இயற்கை நியதி வியக்கத் தக்கது.

எவரையும் தாழ்த்த வல்ல வறுமை புலவரிடம் தனது நிலைமை குலைந்து இழிகின்றது. அவரது மன நிலையும் பெருமிதமும் அளவிடலரியனவாய் உளமகிழ்வு தருகின்றன.

இந்திரன் கலையாய் என்மருங்கு இருந்தான்;
அக்கினி உதரம்விட்டு அகலான்;
எமன்எனைக் கருதான் அரன்எனக் கருதி;
நிருதிவந்து என்னை என்செய்வான்?
அந்தமாம் வருணன் இருகண்விட்டு அகலான்;
அகத்தினில் மக்களும் யானும்
அநிலமதாகும் அமுதினைக் கொள்வோம்
யார்எதிர் எமக்குளார் உலகில்?
சந்ததம் இந்த வரிசையைப் பெற்றுத்
தரித்திர ராசனை வணங்கித்
தலைசெயும் எம்மை நிலைசெய் சற்கீர்த்திச்
சாளுவ கோப்பையன் உதவும்
மந்தர புயத்தான் திப்பைய ராயன்
மகிழ்வொடு விலையிலா அன்னேன்
வாக்கினல் குபேரன் ஆக்கினுன் அவனே
மாசில் ஈசானபூ பதியே." (சொக்கநாதப் புலவர்)

இந்தக் கவியைக் கொஞ்சம் படித்துப் பாருங்கள். வறுமையில் வாடிய புலவர் பாடிய பாடல் இது. அட்ட திக்குப் பாலகர்களும் தன்னைச் சூழ்ந்திருக்கத் தான் தலைமையுடன் வாழ்ந்திருப்பதாகத் தன் நிலைமையை மகிழ்ந்து கூறியிருக்கிறார்.

தான் உடுத்தியிருக்க ஆடை ஆயிரம் பொத்தல் உடையது என்பார் " இந்திரன் கலையாய் என்மருங்கு இருந்தான்" என்றார். வயிற்றில் எப்பொழுதும் பசித்தீ இருந்தது என்பார் " அக்கினி உதரம் விட்டு அகலான் " என்றார். உதரம் = வயிறு.

இந்த வறுமையில் இருப்பதை விட நான் இறந்துபோவது நல்லது; ஆனால் எமன் என்னிடம் வர அஞ்சி ஒதுங்கினான்; சடைத்தலையும் புழுதி படிந்த மெய்யுமாகிய எனது நிலைமையைக்

கண்டு "இவன் சிவனோ?" என்று பயந்து அந்தகன் சிந்தை நடுங்கிப்போனான். வருணன் என்றது கண்ணீர் நிலைமையைச் சுட்டியது. வீட்டில் மனைவியும் மக்களும் நானும் பட்டினிகிடந்தோம் என்பார் அநிலம் ஆகிய அமுதத்தைப் புசித்தோம் என்றார். அநிலம்=காற்று. "இந்திரன் முதலிய யாவரும் அருகமர்ந்து ஏவல் புரிய இனிதமர்ந்துள்ளோம்; எமக்கு நிகர் இந்த உலகில் யார் உளர்?" எனப் புலவர் சிந்தை மகிழ்ந்து பாடியிருக்கும் விந்தை வியந்து நோக்கத்தக்கது.

இந்தவாறு வறிய நிலையில் இருந்த இவரைத் திப்பையராயன் என்னும் வள்ளல் அரிய பெரிய செல்வங்களைக் கொடுத்துஆதரித்தருளினான். தமக்குக் குபேர சம்பத்தைத்தந்தமையால் அவனை ஈசன் என வாழ்த்தித் தமது நன்றி யறிவை வெளிப்படுத்திப் புலமை நிலையை உலகம் அறியச் செய்திருக்கிறார்.

வறுமைத் துயரிலும் பசிக்கொடுமையிலும் புலவர்கள் பட்டிருக்கும் பாடும், அந்நிலைமையிலும் தம் தலைமை குன்றாமல் நின்றிருக்கும் மேன்மையும், உலகம் இன்புறப் புலமையின் சுவையை உதவியிருக்கும் பான்மையும் உணர உணர உள்ளம் தளர்கின்றது; உணர்வு கிளர்கின்றது; உவகை வளர்கின்றது.

> "சென்னபுரி வந்து சிவன்ஆயி னேன்நல்ல
> அன்னமது காணா தவனாகி—மன்னுசிரங்
> கைக்கொண் டரைச்சோமன் கட்டிச் சடைமுறுக்கி
> மெய்க்கொண்ட நீறணிந்து மே." (இராமகவிராயர்)

இவர் சென்னைக்குச் சென்றிருந்தார்; அங்கே ஆதரிப்பாரின்றி வறுமையால் வருந்தினார். அந்நிலைமையை இப்படி வருணித்திருக்கிறார். பசியில் விளைந்த பட்டினிப் பாட்டு இது.

நல்ல உணவு இல்லாமல், சிரங்கு படிந்து, பாதியாய்க்கிழிந்த உடை புனைந்து, சடை பிடித்த தலையும், புழுதியளைந்த உடலுமாய் அவலமடைந்திருந்தமையை இதனால் அறிகின்றோம்.

இந்த எளிய நிலைமையிலிருந்து கொண்டு நான் முழு முதற் கடவுளானேன் என்று உல்லாசமாய் இவர் உளம் மகிழ்ந்து பாடியிருப்பது நமக்கு எவ்வளவு வியப்பைத் தருகின்றது!

அன்னம் என்றது அன்னவடிவமான பிரமனையும், சோற்றையும் குறித்தது. அவன் சிரம் கைக்கொண்டான்; நான் சிரங்

கைக்கொண்டேன் ; அவன் பாதி மதியான் ; நான் பாதி உடையேன் என இன்னவாறே ஐந்து ஒப்புமைகளை இணைத்து வைத்துத் தானும் சிவனும் சமம் எனச் சிலேடையில் அமைத்திருக்கிறார்.

அல்லல் நிலையிலும் இவரது உள்ளத்தின்செம்மையும், உணர்வின் தன்மையும், உரையின் சுவையும் உணர வந்தன.

ஒரு ஆடை அன்றி மறு உடையில்லாத ஏழைப்புலவர்; ஒரு நாள் நதியில் குளிக்கச் சென்றார். சிறிய துண்டு ஒன்றை உடுத்திக்கொண்டு பெரியஉடையைச்சேவகனிடம் கொடுத்துத்துவைக்கச் சொன்னார். அவன் துவைத்தான். ஆற்றில் வெள்ளம் அதிகமாய் இருந்தமையால் அதனை ஈர்த்துப் போயது. பையன் பயந்து, "ஐயோ !வேட்டிபோய்விட்டதே !" என்றான். அப்பொழுது அப்புலவர் வாயிலிருந்து வந்த பாட்டு இது:

"அப்பிலே தோய்த்திட்டு அடுத்தடுத்து நாமதனைத்
தப்பினல் நம்மைஅது தப்பாதோ—இப்புவியில்
இக்கலிங்கம் போனுல்என் ஏகலிங்க மாமதுரைச்
சொக்கலிங்கம் உண்டே துணை. (ஒப்பிலாமணி)

அப்பு= தண்ணீர். கலிங்கம்= ஆடை.

புலவர்களுடைய மனநிலையும் அமைதியும் பெருந்தகைமையும் அவர் தம் வாய்மொழிகளால் வெளியாகின்றன. தம் வாழ்க்கையில் நேர்ந்த நிகழ்ச்சிகளைக் கவிஞர் சொல்லும் பொழுது அவை அறிவு மணம் கமழ்ந்து இனிய சுவை பெருகி வருகின்றன.

மேல்வந்துள்ள குறிப்புக்களால் கல்வியாளரது செல்வநிலை இரங்கத்தக்கதாக இருந்துள்ளமை தெரிந்தோம்.

புலவர் வறுமை இந்நாட்டில் மட்டும் அன்று ;எந்நாட்டிலும் உண்டு. பேதை யுலகில் மேதைகள் நிலைமை பிழையாகின்றது.

"The poet's poverty is a standing topic of contempt"

"கவிஞர் வறுமை இகழ்ந்து பேசுதற்கு ஓர் பரிகாச நிலையமாயுள்ளது" என ஆங்கிலக் கவிஞராகிய கோல்டுஸ்மித் என்பவர் வருந்தி மொழிந்திருக்கிறார்.

கற்றவர் வறுமையுறினும் யாண்டும் பெருமையுடையராய் உலகம் உவந்து கொண்டாட அவர் உயர்ந்து விளங்குகின்றார்.

---

224. பொய்யும் களவும் புணைந்து வரும்பொருள்தான்
மெய்யும் அருளும் மிகமேவிச்—செய்ய
ஒருநிலையில் நிற்கின்ற ஒண்புலவர்க் கெங்ஙன்
பெருநிலையில் சேருமோ பேசு. (சு)

இ-ள்.

பொய் களவு முதலிய வஞ்சவினைகளால் பெருகி வருகின்ற பொருள் நெஞ்சம் தூய புலவர்களிடம் நிறையச்சேருதல் அரிது; சேர்மானத்தின் தீர்மானம் தெரிக என்றவாறு.

இது, கல்வியாளரது செல்வ நிலையை உரைக்கின்றது.

கற்றவரிடம் வறுமை பெருமை தருகின்றது; அதனால் உலகம் பயன் உறுகின்றது என மேலே கண்டோம்; பொருள் அவர் பால் பெருகி வராமல் அருகி நிற்றற்கு நேரான காரணத்தை இதில் நேரே காண வந்திருக்கின்றோம்.

உலக நிலையில் வெளியே பறந்து திரியும் தொழில் முயற்சிகளிலே தான் பொருள் விளைவுகள் பொருந்தி யிருக்கின்றன.

உழவு வாணிகம் கைத்தொழில் முதலிய செல்வத்துறைகளை யெல்லாம் அறவே கைவிட்டுக் கல்வித்துறை ஒன்றிலேயே கண்ணும் கருத்துமாய்ப் புலவர் எண்ணூன்றி நிற்கின்றனர்; ஆகவே அவர்க்குப் பொருள் வரவு பொருந்தாது போகின்றது.

பொருள் புறத்தே விரைந்து அலைந்து விழைந்து தேடும் நிலையது; அறிவு அகத்தே அமர்ந்திருந்து நுழைந்து நாடும் தகையது. அது வஞ்சம் சூதுகளால் வருவது; இது நெஞ்சம் தூய்மையால் நிறைவது. அது வன்கண்மையில் வளர்ந்து குவிவது; இது மென்கண்மையில் எழுந்து பொலிவது.

இங்ஙனம் மாறுன மருள் நிலையில் மருவி நிற்கும் பொருள் அருள் நிலையில் துருவியுள்ள புலவரிடம் அணுகாமல் அகல நேர்ந்தது.

உலக போகங்களுக்கெல்லாம் பொருள் மூலகாரணமாயுள்ளமையால் அதனை எவ்வழியும் எப்படியும் யாது செய்தாயினும் தேடிச் சேர்க்க வேண்டும் என்னும் பேராவல் மனிதரை நன்கு பிணித்திருக்கின்றது. அந்த ஆசையால் எந்த நிந்தனையையும் பொருள் செய்யாமல் பொருளையே பொருளாக நாடி மருள் மீதூர்ந்து ஓடி மக்கள் மால் கொண்டு உழல்கின்றனர்.

அவ்வாறான அவல நிலைகளில் செவ்விய புலவர் செல்ல இயலாது ஆதலால் செல்வ நிலையில் சேராது நின்றனர்.

புலமையாளரது இந்த நிலைமையை உருகி உணர்ந்தே பண்டைக் காலத்திலிருந்த அரசர்களும், செல்வர்களும், பொது சனங்களும் அவரை அன்புரிமையுடன் பண்பு பாராட்டி யாவும் உதவி ஆதரித்து வந்தனர். அந்த ஆதரவு ஆட்சி மாற்றத்தால் காட்சி மாறியது. அந்நாளில் அரசர் மதித்து வந்த வரிசை நலங்கள் பின்னாளில் விரசங்களாய் இழிந்தன.

---

225. உயிரனைய கல்வி யுடையார் உடலை
இயலளவில் ஓம்ப எளிதா—நயமுடைய
ஓர்தொழிலைப் பற்றி உயரா துணர்விலர்பால்
பேர்தல் பெரிதும் பிழை. (ரு)

இ-ள்.

உயிர்போன்ற அரிய கல்வி நலனை யுடையவர் உரிய ஒரு தொழிலைச் செய்து தமது உடலைப் பேணுமல் பிறரிடம் ஒன்று பெறப்போதல் பெரிதும் பிழையாம் என்றவாறு.

பல கலைகளையும் பயின்று உணர்வு நலம் கனிந்த புலவர் உலக நிலையில் ஒழுக வேண்டிய நிலைமையை இஃது உணர்த்துகின்றது.

அரிய புலமையை உரிமையாகப்பேணி வருவர் பெரிய செல்வம் பெறுதல் அரிதாயினும் சிறிய வறுமை சேராமல் உரிய உபாயத்தை உணர்ந்துகொள்ளவேண்டும்.

உடலை ஓம்ப என்றது கல்வி நலம் கனிந்த அந்தச் செல்வ உடலை நல்ல முறையில் மேன்மையாகப் பேணும் பான்மை தெரிய வந்தது. கல்வியை உயிர் என்றது அறிவுமயமாய் என்றும் அழியாமல் நின்று நிலவும் அதன் நிலைமை கருதி.

ஞான நலம் கனிந்த தானும் தன்னைச் சேர்ந்த மனைவி மக்களும் மானம் மரியாதைகளுடன் வாழும்படி ஆனதொரு தொழிலை ஆய்ந்து கைக்கொள்ளுதலே அறிவாண்மையாம்; அங்ஙனம் கொள்ளாமல் பிறரிடம் உதவியை நாடி அயலே செல்லல் மயலேயாம்; அப்புல்லிய செயலை ஒழிந்து நல்ல உயர்வினை நாடுக.

நயமுடைய தொழில் என்றது தன் தகுதிக்கு ஏற்ற இனிய முயற்சியை. கருதிய பொருள் வளங்களை இனிது சுரந்தருள்

வது கருமமேயாம்; அதனை மருவினவன் இருமையும் பெருமை அடைவன் ஆதலால் அதன் இயல்பு தெரிய உயர்வு வந்தது.

உரிமையான உறுதித் தொழிலைப் பற்றின் உயர்வாம்; சிறுமையான இரவுத் தொழிலை நாடின் இழிவாம்.

உணர்வு நலம் கனிந்த நீ உணவுக்காக உணர்வில்லாதாரிடம் போதல் ஞான சூனியமான ஓர் ஈனமேயாம்.

கல்வி யருமை தெரிந்து "இவர் வரப்பெற்றோமே!" என்று உவந்து உபசரித்து விழைந்து ஆதரிக்கும் உயர்ந்த உத்தமச் செல்வர்களிடம் போனால் அத்துணைப் பிழை நேராது; புலமை நலம் அறியாத புல்லிய செல்வரிடம் செல்லின் பொல்லாத் துயரமாம் ஆதலால், "உணர்விலர்பால் போதல் பெரிதும் பிழை" என வந்தது. வழுவில் விழுவது வாழ்வாகாது.

தருமநெறி தழுவிப் பெருமித நிலையில் யாண்டும் போராதிருக்கவேண்டிய நீ அருமையறியாரிடம் போய்ச் சிறுமை அடையலாமா? அந்த அவமான நிலைக்கு ஓர் உவமானம் உண்டா? உன் நிலைமையை உணர்ந்து உயிர் மானம் பேணுக.

தேக யாத்திரைக்கு வேண்டிய வசதிகளை நீயே முயன்று செய்துகொள்; யாண்டும் யாரிடமும் யாசகத்தை வேண்டாதே.

---

226. எள்ளென்னும் முன்னமே எண்ணெயா நின்றளந்த
வள்ளியோர் அன்றிருந்த வண்ணத்தால்—தெள்ளியோர்
தண்டிகைமேல் ஊர்ந்தார் தனியாட்சி யேபுரிந்தார்
உண்டியுமின் றுண்டோ வுரை. (௬)

இ-ள்

பண்டு கல்வியாளரை உரிமையுடன் போற்றிய வள்ளல்கள் பலர் இருந்தமையால் புலவர்கள் சிவிகைகளில் ஊர்ந்தார்; தேச ஆட்சிகள் புரிந்தார்; மன்னவர் குரவராய் மன்னி நின்றனர்; இன்று உண்ணவும் உணவு உண்டோ? என்றவாறு.

கல்வி யறிவு தெளிந்துள்ளமையால் புலவர் தெள்ளியோர் என வந்தார். வள்ளியோர் என்றது கொடையாளிகளை.

உள்ளன எல்லாம் உவந்து உதவிய வள்ளல்கள் எல்லார்க்கும் கொடுத்து வந்தாலும் புலவர்களை எதிர்கொண்டு கண்டு போற்றி வழங்கினமையால் அவர் புகழை இவர் தூற்றி நின்றார்.

எள் என்னும் முன்னம் எண்ணெயா அளந்தது என்றது ஒன்று வேண்டும் என்று வாய் திறந்து சொல்லும் முன்னரே பலவும் வாரிக் கொடுத்த அந் நிலைமை கருதி.

சேர மன்னனிடம் ஒளவையார் ஒரு முறை சென்றிருந்த போது ஈன்ற ஆடு ஒன்று வேண்டும் என்று குறிப்பித்தார். உடனே அவ் வேந்தன் உவந்து தங்கத்தால் ஒரு ஆடு செய்து தந்தான். அவனது பெருந்தகைமையை வியந்து அப் பாட்டி புகழ்ந்து பாடிய பாட்டு அடியில் வருவது.

" சிரப்பால் மணிமவுலிச் சேரமான் தன்னைச்
சுரப்பாடு யான்கேட்கப் பொன்ஆடுஒன்று ஈந்தான்
இரப்பவர் என்பெறினும் கொள்வர் கொடுப்பவர்
தாமறிவார் தம்கொடையின் சீர். " (ஒளவையார்)

நாஞ்சில் வள்ளுவன் என்னும் குறுநில மன்னன் தன்பால் அரிசி வேண்டி வந்த எளிய பாவலர்க்கு மலைபோல் ஒரு பெரிய யானையைக் கொடுத்தான். அவன் கொடையையும் ஒளவைப் பாட்டி உவந்து பாராட்டி யுள்ளாள்.

" தடவுநிலைப் பலவின் நாஞ்சில் பொருநன்
மடவன் மன்ற செந்நாப் புலவீர்!
வளைக்கை விறலியர் படப்பைக் கொய்த
அடகின் கண்ணுறை யாக யாம் சில
அரிசி வேண்டினேம் ஆகத் தான்பிற
வரிசை அறிதலின் தன்னும் தூக்கி
இருங்கடறு வளைஇய குன்றத்து அன்னது ஓர்
பெருங்களிறு நல்கியோனே! அன்னதோர்
தேற்றா ஈகையும் உளதுகொல்?
போற்றார் அம்ம பெரியோர்தம் கடனே. " (புறம், 140)

இந்தப் பாட்டைக் கொஞ்சம் கவனித்து நோக்கின் பழங் காலப் பண்புகளை உளங் காணலாகும். மடவன் என்றது கொடை மடம் கொண்டுள்ள அவனது குணநலம் தெரிய வந்தது. இரும் கடறு வளைஇய=பெரிய காடு சூழ்ந்த. குன்றம் என்றது யானையின் உருவப் பொலிவும் பெருமிதமும் காண.

தம்நிலைமையை உணராமல் அள்ளிக்கொடுக்கும் வள்ளல்களை உல்லாசமாய் எள்ளி உரையாடி வருதலால் இவரது உள்ளப்

பெருமை உணரலாகும். செல்வக் கொடையாளரும் கல்வித் திருவாளரும் உறவுரிமை கொண்டு மருவி வருவது உலகிற்குப் பெரிய நன்மையாய்ப் பெருகி எழுகின்றது.

"இல் எனும் சொல் அறியாத சீகையில் வாழ்
  தானனைப்போய் யாழ்ப்பாணன் யான்
பல்லைவிரித்து இரந்தக்கால் வெண் சோறும்
  பழந்தூசும பாலியாமல்
கொல்ல நினைந்தே தனது நால்வாயைப்
  பரிசு என்று கொடுத்தான் பார்க்குள்
தொல்லைஎனது ஒருவாய்க்கு நால்வாய்க்கும்
  இரை எங்கே துரப்புவேனே?"

தானன் என்னும் சிற்றரசன் யானை வழங்கிய போது அந்தகக் கவி வீரராகவ முதலியார் இப்படிப் பாடியிருக்கிறார். நால்வாய் = யானை. என் ஒரு வாய்க்கே சோறு கிடையாமல் நான் திண்டாடுகின்றேனே! எனக்கு மேலும் நால்வாயைக் கொடுத்தானே இது என்ன கோலம்? என்று புன்னகையாடியிருக்கிறார்.

புலவரின் வறுமையும், அவரைப் புரவலர் போற்றி வந்திருக்கும் பெருமையும் ஒருங்கே புலனாய் உவகை தருகின்றன.

ஏகம்பவாணன் என்னும் வள்ளல் புலவர்கட்குத் தேரும் கரியும் பரியும் பொருளும் உடையும் பிறவும் வாரிக் கொடுத்திருக்கிறார். அவரது கொடைத் திறனை வியந்து கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பரும் வியந்து புகழ்ந்திருக்கிறார்.

உலைக்குரிய பண்டம் உவந்திரக்கச் சென்றால்
கொலைக்குரிய வேழம் கொடுத்தான்—தலைக்குரிய
வாணர்கோன் ஆறை மகதேவ னுக்கிந்தப்
பாணனோடு என்னே பகை? (1)

சேற்றுக் கமலவயல் தென்னாறை வாணனையான்
சோற்றுக் கரிசிதரச் சொன்னக்கால்—வேற்றுக்
களிக்குமா வைத்தந்தான் கற்றவர்க்குச் செம்பொன்
அளிக்குமா றெவ்வா றவன்? (2)

என்சிவிகை, என்கவிகை, என்துவசம், என்கவசம்,
என்பரிசது, என்கரிசது, என்பரே—மன்கவன
மாவேந்தன் வாணன் வரிசைப் பரிசுபெற்ற
பாவேந்தரை வேந்தர் பார்த்து. (3)

"தேருளைப்புரவி வாரணத் தொகுதி
திறை கொணர்ந்துவரு மன்ன நின்
தேசம் எது? உனது நாமம் எது? புகல்
செங்கையாழ் தடவு பாணரே!
வாரும் ஒத்தகுடி நீரும் நாமும்
மகதேவன் ஆறைநகர் காவலன்
வாணபூபதி மகிழ்ந்தளிக்க வெகு
வரிசை பெற்று வருபுலவன் யான்
நீரும் இப்பரிசு பெற்றுமீளவர லாகும்
ஏகும் அவன் முன்றில் வாய்
நித்திலச் சிகர மாட மாளிகை
நெருங்கு கோபுரம் மருங்கெலாம்
ஆரு நிற்கும்; உயர் வேம்பு நிற்கும்; வளர்
பனையும் நிற்கும்; அதன் அருகிலே
அரசு நிற்கும்; அரசைச் சுமந்த சில
அத்தி நிற்கும் அடையாளமே". (4)

வாணன் புலவர்களுக்கு உதவி வந்த உபகார நிலைகளைக் கம்பர் இவ்வாறு அன்புடன் உவந்து கொண்டாடியிருக்கிறார்.

பாடல்களைக் கண்ணூன்றி நோக்கினல் எண்ணூன்றியுள்ள உல்லாச வளங்களும் சல்லாப விநோதங்களும் எல்லார்க்கும் இனிது புலனும். குறிப்புகளைக் கூர்ந்து காண்க.

சோற்றுக்கு அரிசி தா என்றேன் களிக்கு மாவைத் தந்தான் என்றதில் இரு பொருள் மருவிய சிலேடையுள்ளது.

யானை குதிரை முதலிய அரிய பொருள்களை வாணனிடம் பெற்று வருகிற புலவனை மற்று ஒரு கவிஞன் வழியிடையே கண்டான்; அரச திருவுடன் அமர்ந்திருப்பதை நோக்கி "மன்னர் பெரும! நின் ஊர் யாது? பேர் என்ன?" என்று வினவினன். அதற்கு அவன், "நான் அரசன் அல்லன்; உன்போன்ற புலவனே; வாண பூபதி அளித்த வரிசைகள் இவை; நீரும் அவரிடம் போனல் இப்படியே பெற்று வரலாம்; அவருடைய அரண்மனை முன்றிலிலே சில அடையாளங்கள் உள்ளன; ஆத்தி, வேம்பு,

பணைகள் சூழ்ந்த மூன்று அரசுகள் அத்திகளில் நிற்கும் பார்த்துக் கொள்ளும்'' என்று வழிவகைகளை விளக்கி விடுத்த படியாய் இக் கவி இயற்றப் பட்டுள்ளது. ஆத்தி முதலிய மூவகை மாலைகள் சூடிய மூன்று வேந்தரைக் குறித்தது. அத்தி = யானை. அவர் தம் பட்டத்து யானைகளைச் சுட்டியது. அறிஞர்க்கு உதவுபவர் அரச ரினும் உயர்ந்தவராவர் என உணர்த்திய படியிது. கவிஞர் அறிவு நலம் கனியப்பேசும் இயல்பினராதலால் அவருடைய உரைகளைச் சுவையுணர்ந்து சுகிக்க வேண்டும்.

இந்நாட்டில் முன்னம் வேந்தரும் மாந்தரும் புலவரை ஏந்திப் போற்றி வந்த நிலைமைகளை இவற்றால் ஒருவாறு ஓர்ந்து கொள்ள லாம். அந்நாளில் அங்ஙனம் தலைமை எய்திநின்ற பரிசில்வாழ்க்கை இந்நாளில் அறவே பரிசு குலைந்து போயது.

உண்டியும் இன்று உண்டோ? என்றது அன்று தண்டிகை யூர்ந்து தனி ஆட்சி புரிந்த புலமை வாழ்வு இன்றுன்று அஞ்ஞாத வாசமாயுள்ள அஞ்ஞான நிலைமை தெரிய வந்தது.

அந்தப் பழைய வழி தூர்ந்து போயது ஆதலால் புதிய வழி யில் புகுந்து இனிதா ஒளி புரிந்து கொள்ளுக என்பது கருத்து.

---

227. தன்புலமை தன்னாலே தன்வாழ்வைத் தானடத்த
மன்புலவன் முன்புகுதல் வன்துயராம்—அன்பமைந்த
நல்லறிவு குன்றி நயந்தெரியா மாக்களிடைச்
செல்லலிழி வன்றோ தெளி. (எ)

இ. ள்.

தன்னுடைய அருமைப்புலமையினால் தன் குடி வாழ்க்கையை ஒரு புலவன் இக் காலத்தில் செய்யத் துணிதல் வெய்ய துயராம்; கல்வி நலம் தெரிந்து உரிமையுடன் உவந்து உதவாத புல்லியரிடம் போதல் மிகவும் இழிவாம் என்றவாறு.

புலமையாளர் ஏதேனும் ஒரு தொழிலைத் தலைமையாகக் கைக்கொண்டு தம் வாழ்க்கையை நடத்த வேண்டும் என்று முன்னம் கூறியதை நோக்கி, ''ஏன்? கற்ற வித்தையினாலேயே குடும்பத்தைப் பேணலாகாதோ?'' என எதிர் வினவுவார்க்குப் பதில் கூறிய படியாய் இப்பாடல் உருவாகி வந்துள்ளது.

புலமை உணர்வு நலம் உடையது; புனித நிலையது; புன்மை நிறைந்த உலக நிலைமைக்கும் அதன் தலைமைக்கும் வேறுபாடு அதிகம். ஞான ஒளி மிகுந்த அந்த அரிய அரதனத்தின் பெருமையை ஊனமான குருட்டு உலகம் அறிய முடியாது; ஆகவே கருதிய பலன் கைகூடாமல் சிறுமை அடைய நேரும்; அங்ஙனம் நேராமல் நேர்ந்த ஒரு தொழிலை ஓர்ந்து கொண்டு சார்ந்த மனை வாழ்க்கையைத் தகுதியாகப் பேணி வருதல் தேர்ந்த நலமாம்.

அருமைக் கல்வியை உள்ளே உயிர்மகிழ்ச்சிக்கு உரிமையாக்கி வெளியே உடலை ஓம்புதற்குத் தக்க ஒரு முயற்சியைத் தழுவிக் கொள்ளுக என வழி வகுத்த வகையிது.

இங்ஙனம் குறித்தது கால நிலைமையைக் கருதி நோக்கி.

புலவர்கள் எப்பொழுதும் நுணுகிய அறிவு ஆராய்ச்சிகளைச் செய்யும் இயல்பினர்; அகத்தே ஆழ்ந்திருத்தலால் புறத்தே வேறு முயற்சிகளைச் செய்ய முடியாதவர் ஆகின்றார். ஆகவே அவருடைய மனை வாழ்க்கைக்கு வேண்டிய வசதிகள் எல்லாவற்றையும் தேச அதிபதிகள் உவந்து உதவி வந்தனர். அரச சன்மானங்களாய் வருகின்ற அவ்வரவு நிலைகளை அறிந்து பலரும் புலமையை விழைந்து பயின்று தலைமை அடையலாயினர்.

வரிசையுடன் வந்தமையால் அது பரிசில் வாழ்க்கை என்று பாராட்ட நேர்ந்தது. அவ்வாழ்வைப் புலவர்கள் மிகவும் பெருமையாகக் கருதி உரிமையோடு மருவி நின்றனர்.

குடிகளிடம் அரசர் வரி வாங்குதல் போல் அரசரிடம் புலவர்கள் திறை வாங்கிய படியாய் இப்பரிசில் நிலை ஓங்கி வந்தது. இவ்வாறு பெருவரவு எளிதில் வரவே வெளியே யாதொரு கருமங்களையும் கருதாமல் கவி பாடுவதையே பொழுது போக்காகப் போற்றி வந்தனர். பாட்டருமை தெரிந்து மகிழ்கின்ற அறிவாளிகளை நாடித் தேடிப் பாடிக் களித்தனர். எவர் எவ்வளவு கொடுத்தாலும் அவ்வளவையும் அன்றே செலவழித்து விட்டு மறுநாள் வேறிடம் சென்று பாடி மகிழ்வர். உலக ஆசையின்றி உல்லாசப் பிரியராய்ப் புலவர்கள் வாழ்ந்து வந்துள்ள நிலைமையை நினைந்து பார்த்தால் எவர்க்கும் வியப்பும் உவப்பும் உளவாம்.

அவருடைய உள்ளங்களும் உரைகளும் செயல்களும் கள்ளம் கபடுகள் யாதும் இல்லாதன.

" வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி
நெடிய என்னாது சுரம்பல கடந்து
வடியா நாவின் வல்லாங்குப் பாடிப்
பெற்றது மகிழ்ந்து சுற்றம் அருத்தி
ஓம்பாது உண்டு கூம்பாது வீசி
வரிசைக்கு வருந்தும்இப் பரிசில் வாழ்க்கை
பிறர்க்குத் தீதறிந்தன்றோ? இன்றே; திறப்பட
நண்ணார் நாண அண்ணாந்து ஏகி
ஆங்கினிது ஒழுகின் அல்லது ஓங்கு புகழ்
மண்ணாள் செல்வம் எய்திய
நும்மோர் அன்ன செம்மலும் உடைத்தே. " (புறம், 47)

இது கோவூர்கிழார் என்னும் புலவர் நலங்கிள்ளி என்னும் சோழமன்னனை நோக்கிச் சொல்லியது. இளந்தத்தன் என்னும் புலவன் மறுபுல வேந்தனிடமிருந்து ஒற்று வந்துள்ளதாக அரசன் குற்றம் குறித்த போது அதனை மறுத்து அம் மன்னனுக்கு இம் மதிமான் இன்னவாறு அறிவுறுத்தியுள்ளார். கவியினைக் கவனமாகப் படித்துப் பாருங்கள்; பொருள்கள் யாவும் தெளிவாய் விளங்கி விடும். செம்மல் = தலைமை.

"பழுத்த மரங்களைத் தேடிச் செல்லும் பறவைகளைப்போல் உள்ளப் பண்புடையாரை நாடிப் போய்ப் பாடிப் பரிசில் பெற்று வந்து எல்லார்க்கும் உதவி யார்க்கும் யாதொரு தீதும் கருதாத புனித வாழ்க்கையர்; தம்மை அவமதித்து எதிர்த்தவரைக்கடுத்து அடக்கி யாண்டும் கம்பீரமாய்த் தலை நிமிர்ந்து நடப்பவர்; நிலம் ஆளும் உன்னைப் போலவே புலம் ஆளும் அவரும் அருந் திறலமைந்த பெருந்திருவினர்; அவரிடம் பிழைகாணல் உனக்குப் பிழையாம்; நிலைமையறிந்து தலையளி செய்துவிடுக" என அரசனை நோக்கி இப் புலவர் பெருந்தகை கூறியிருக்கும் அருமையை நோக்குக.

நண்ணார் நாண அண்ணாந்து ஏகுவது அல்லது பிறர்க்குத் தீது அறியாது புலவர் வாழ்க்கை என்றதனால் இவரது உள்ளத் திண்மையும் உயர் பெருந்தன்மையும் உணரலாகும்.

வரிசையறிந்து பேணுராயின் அரசையும் இவர் மதியார்.

"மன்னவனும் நீயேயோ மண்ணுலகும் நின்னளவோ
உன்னைநினைந் தோ தமிழை ஓதினேன்—என்னை
விரைந்தேற்றுக் கொள்ளாத வேந்துண்டோ உண்டோ
குரங்கேற்றுக் கொள்ளாத கொம்பு," (கம்பர்)

சோழமன்னன் மாறுபட்ட பொழுது கம்பர் அவனைச் சீறி உரைத்த வீர மொழி யிது. புவியரசும் தலைவணங்கக் கவியரசர் யாண்டும் நிலை நிமிர்ந்துள்ளனர்.

அறிவுடையார் எல்லாம் உடையார் என்றமையால் அவ்வுடைமையின் உயர்நிலை புலனும். மதிநலம் உள்ளத்திருவாய் உறுதி மிகச் செய்கின்றது. ஆகவே கவிவேந்தர் புவிவேந்தரையும் பொருள் செய்யாது போகின்ருர்.

" A true poet can never be so base; for, wherever there s genius there is pride. " (Goldsmith)

" உண்மைக் கவிஞன் யாண்டும் இழிந்து நில்லான்; எங்கே மதிநலம் மிகுந்துள்ளதோ அங்கே பெருமிதம் நிறைந்திருக்கும் " என்னும் இது ஈண்டு எண்ணத்தக்கது.

பரிசில் என்னும் வார்த்தையே புலவரது மேன்மையை விளக்கி நிற்கின்றது. பரிசு = வெகுமதி. மதிமாட்சியை மதித்து மதியுடையோர் தருவது பரிசில் என வந்தது. பரிசு தருவோர் இவரிடம் பரிசு மிகப் பெற்றுப் பயனடைந்து கொள்கின்ருர்.

"காவலர் ஈகை கருதுங்கால் காவலர்க்குப்
பாவலர் நல்கும் பரிசுஒவ்வா—பூவினிலை
ஆகாப் பொருளை அபயனளித் தான்புகழாம்
ஏகாப் பொருள்அளித்தேம் யாம்." (இரட்டையர்)

உலகில் நிலையாத பொருளை நீ கொடுத்தாய்; என்றும் நிலைத்த புகழை உனக்கு நான் கொடுத்தேன்; யாருடையது சிறுடையது? எனச்சோழனைநோக்கி இரட்டையர் இப்படி வினவியிருக்கின்ருர்.

நூற்றுப்பத் தாயிரம் பொன்பெறினும் நூற்சீலை
நாற்றிங்கள் நாளுக்குள் நைந்துவிடும்—மாற்றலர்கள்
பொன்றப் பொருதடக்கைப் போர்வேல் அகளங்கா!
என்றும் கிழியாதுஎன் பாட்டு. (ஔவையார்)

ஆயிரம் பொன் பெறும்படியான உயர்ந்த பட்டாடையை வழங்கியமன்னன் தன்னுடையகொடையைவியந்துகொண்டான்; அதுபொழுது அவனை நோக்கி ஔவை இவ்வாறு பாடலானாள்.

புலவரது நிலைமையும் தலைமையும் இவற்றால் ஒருவாறு அறியலாகும். முன்னாளில் இங்ஙனம் சீரும் சிறப்பும் பெற்றிருந்த புலமை வாழ்வுகள் பின்னாளில் சீரழிய நேர்ந்தன.

சன்மானங்களெல்லாம் அவமானங்களாய் மாறின.

"அடகெடுவாய் பலதொழிலும் இருக்கக் கல்வி
அதிகம் என்றே கற்றுவிட்டோம் அறிவில்லாமல்
திடமுள மோகனமாடக் கழைக்கூத் தாடச்
செப்பிடு வித்தைகள் ஆடத் தெரிந்தோம் இல்லை;
தடமுலை வேசையராகப் பிறந்தோம் இல்லை;
சனியான தமிழைவிட்டுத் தையலார்தம்
இடமிருந்து தூதுசென்று பிழைத்தோம் இல்லை;
என்ன சென்மம் எடுத்துலகில் இரக்கின்றோமே."

(படிக்காசுத்தம்பிரான்)

எவ்வளவு துன்பங்களும் அவமானங்களும் அடைந்திருந்தால் இந்தப் புலவர் இவ்வளவு மனம் நொந்து பாடியிருப்பார்! உள்ளக் கொதிப்புகளை உரைகள் வெளிப்படுத்தியுள்ளன. மேலெழுந்தபடி பாராமல் அக நிலைகளை ஆழ்ந்து நோக்குக. கவியின் ஒலி அனுநாதமாய் அனுதாபத்தை விளக்கின்றது.

கூத்திக்கும் கூத்துக்கும் குடிக்கும் விழைந்து கொடுப்பாரையன்றிக் கலைக்கு உவந்து உதவுவாரை இவர் காலத்தில் காணாமையால் அப் புலைநிலையை வயிற்றெரிச்சலோடு இப்படி வெளிப்படுத்தியிருக்கிறார்.

ஒரு புலவனது வாக்குமூலம் அவனது காலத்தை நோக்கச் செய்கின்றது. முன்னம் குறித்த புலவர் மொழிகளால் அவர் தம் கால நிலைமைகளையும் கம்பீரத்தையும் கண்டு மகிழ்ந்தோம். முந்தியதை எண்ணிச் சிந்தை களிக்கின்ற நாம் பிந்தியதை நினைந்து பெருந்துயர் அடைகின்றோம்.

பழங் காலத்தில் சிறந்திருந்த பரிசில் வாழ்க்கையைத் தொடர்ந்து சென்று பின்னால் பரிசு குலைந்த புலவர்கள் பலர்.

பக்குவ மாகக் கவி நூறு பாடிப் பரிசுபெற
முக்கரணம்எதிர் பல்காலும் போட்டு முயன்றிடினும்
அக்கட போவெனும் லோபனைப் பாடி அலுத்துவந்த
குக்கனை ஆண்டருள் வில்வ வனத்துக் குயிலம்மையே. (1)

வணக்கம் வருஞ் சில நேரம், குமரகண்ட
வலிப்புவரும் சில நேரம், வலியச் செய்யக்
கணக்குவரும் சில நேரம், வேட்டை நாய்போல்
கடிக்கவரும் சில நேரம், கயவர்க் கெல்லாம்
இணக்கம் வரும்படி தமிழைப் பாடிப் பாடி
எத்தனைநாள் திரிந்து திரிந்து இளைப்பேன் ஐயா!
குணக்கடலே அருட்கடலே அசுரரான
குரைகடலை வென்றபரங் குன்றுளானே. (1)

கல்லாத ஒருவனை நான் கற்றாய் என்றேன்
காடெறியுமவனை நாடாள்வாய் என்றேன்
பொல்லாத ஒருவனை நான் நல்லாய் என்றேன்
போர் முகத்தை அறியானைப் புலியேறு என்றேன்
மல்லாரும் புயம் என்றேன் சூம்பல் தோளை
வழங்காத கையனை நான் வள்ளல் என்றேன்
இல்லாது சொன்னேனுக்கு இல்லை என்றான்;
யானும் என்றன் குற்றத்தால் ஏகின்றேனே. (2)

(இராமச்சந்திர கவிராயர்)

வெண்பாச்சொல் கவிஞரே! வந்தது ஏது? உம்மீது
மெய்த்தமிழ்ப் பாடி வந்தோம்;
வெகு நேர்த்தி முன்னமே நானூறு கோவை ஒரு
வித்துவான் பாடி வந்தான்
நண்பாக மனம் வைத்து மூன்றுபடி பெருவரகு
நான்கொடுத்தேன் அதற்கு இந்
நாடெலாம் தெரியும் என் மனையாட்டி மூன்றுதரம்
நான்றுகொண் டுயிர் பிழைத்தாள்;
புண்பாடெலாம்அறிந் தின்னம் நீர் கவி சொலும்
புலவர் என்று இங்கு வந்தீர்
போம் போம் எனச் சொலிப் புலையாடு புலையரொடு
போராடவோ படைத்தாய்!

(சரவணப்பெருமாள் கவிராயர்)

தமிழருமை அறியாத உலோபிகளிடம் போய்ப் பாடல்களைப் பாடிப் புலவர்கள் சீரழிந்து வருந்தியுள்ள நிலைமைகள் இவ்வாறு பல உள்ளன. விரிவஞ்சி ஈண்டு ஒதுக்க நேர்ந்தன.

மேலே வந்துள்ள குறிப்புக்களால் பின்னாளில் இந்நாட்டு மக்கள் கலைச் சுவை யிழந்து புலைப்பட்டுள்ள மடமையும், அப் புல்லர்பால் அலைந்து அவமானம் அடைந்து கலைவாணர் அலமந்திருக்கும் கொடுமையும் அறிந்து கொள்ளலாம்.

நாட்டு நிலை இங்ஙனம் தலை மாறிப் போனமையால் பரிசில் வாழ்க்கை பரிதாபம் என வந்தது.

"நயம் தெரியா மாக்கள் இடைச் செல்லல் இழிவு அன்றோ தெளி" என்றது அவ்வழியை விட்டு விலகி உரிய ஒரு தொழிலைக் கைக் கொண்டு வாழுக எனப் பரிவுடன் வேண்டிய படியிது.

---

228. மெய்ப்பொருளாம் கல்வியுளம் மேவியுள்ளோர் மெய்ம்மறந்து
பொய்ப்பொருளை நாடிப் புலையாடி—எய்ப்புடைய
செல்வரிடைச் செல்லல் திறல்வீரன் பேடியிடம்
பல்லிளித்து நின்ற படி. (அ)

இ-ள்.

என்றும் அழியாத மெய்ப் பொருளாகிய கல்வியைப் பெற்றுள்ளவர் பொன்றி ஒழியும் பொய்ப் பொருளை நாடிப் புல்லிய செல்வரிடம் போதல் நல்ல உயர்ந்த சுத்த வீரன் இழிந்த பேடியிடம் போய்ப் பல்இளித்து நின்றது போல்வதோர் பரிதாபமாம்.

இது புலவர் நிலைமையின் தலைமை கூறுகின்றது.

கல்வியை மெய்ப்பொருள் என்றது நித்தியமாய் நிலைத்து நிற்றல் கருதி. உயிர் புக்குழி எல்லாம் புகுந்து உணர்வு மயமாய யாண்டும் உயிர்க்கு உறுதி புரிந்து வருதலால் கல்வி அழியாச் செல்வமாய் வழிபாடு செய்ய வந்தது.

"கேடில் விழுச் செல்வம் கல்வி" என்ற தேவர் வாக்கையும் நோக்கி அதன் பானமை மேன்மைகளை உணர்ந்து கொள்க.

இத்தகைய விழுமிய தெய்வத்திருவுடையார் தம்நிலைமையை உண்மையாக உணராமையால் புன்மையாளரிடம் போய்ப் புலையாய் இழிந்து வறிதே உழல நேர்கின்றார்.

எய்ப்புடைய செல்வர் என்றது அறிவு நலங் குன்றி வறிது செருக்கி நிற்பாரை. எய்ப்பு=மெலிவு, தேய்வு. உணர்வு நலங் கண்டு உவந்து உபசரிக்கும் தகுதியில்லாத புல்லரிடம் நல்ல கல்விமான்கள் செல்லலாகாது. சென்றால் அல்லலும்அவமதிப்பும் இருவருக்கும் முறையே நேர்கின்றன.

" அவிச்சுவையே அன்றி அறிவு நலமார்
கவிச்சுவையைக் கண்டு களியார்—செவிச்சுவையும்
காணார் புவிக்குக் கடுஞ்சுமையாய் நின்றுபலர்
வீணே கழிவர் விளிந்து "

என்றபடி வளர்ந்திருப்பவரிடம் கலைச்சுவையாளர் சென்றால் அவர்க்குப் புலைச் சுவையாகின்றது; ஆகவே போனவர் மானம் மரியாதைகளை இழந்து மறுகி மீள்கின்றார்.

நல்ல கல்விமான் புல்லிய செல்வரிடம் போய் ஒன்று வேண்டி இரந்து நிற்றல் கலைக்கும் நிலைக்கும் என்றும் ஈனமாம். அந்த இழி நிலையை விளக்க உவமானம் வந்தது.

" திறல் வீரன் பேடியிடம் பல் இளித்து நின்றபடி "

இருவகை நிலையும் ஒரு முகமாய்த் தெளிய இஃது உணர்த்தி நின்றது. புலவனை வீரன் எனக் குறித்தது, பகை யகத்து அஞ்சாது புகுந்து அவன் அடலாண்மை புரிதல் போல் அவை யகத்துள் எஞ்சாமல் எதிர்ந்து இவன் மிடலாண்மை செய்து வருதல் கருதி.

கல்வி அறிவு அருந்திறலினது ஆதலால் அதனைத் தலைமை யாகவுடைய புலவர் பெருந்திறலாளராய்ப் பேசநின்றார். வில்லே ருழவர் என வீரரையும், சொல்லேருழவர் எனப் புலவரையும் சொல்லியுள்ளமையால் அவர்தம் செயலும் இயலும் அறியலாகும்.

போர்முகம் புகுந்து எல்லாரையும் வெல்ல வல்ல வீரன் ஒரு புல்லிய கோழை எதிரே பல்லிளித்து நிற்பனா? யாண்டும் நில்லான்; அங்ஙனம் நிற்கக் காணின் அது எவ்வளவு மாயவியப் போ அவ்வளவு அதிசயமாம் கல்விமான் புல்லரிடம் புகுந்து நிற்றல். அப் புலைநிலையை ஒழித்துக் கலை நலம் காணுக.

தம் சீர்மை சிதையாமல் நீர்மை குலையாமல் புலவர்கள் யாண்டும் தலைமையாக வாழ வேண்டும்; அங்ஙனம் வாழின் உலகமும் நலமாய் ஒளி செய்து நிலவும்.

வறுமையும் சிறுமையும் களைந்து பெருமையை விளைத்து இருமையும் இன்புறப் புலமையை உரிமை செய்து கொள்ளுக.

---

229. சாலப் பலநூல் சதுரோடு தாமறிந்தும்,
மூலப் பொருளின் முடிவுணர்ந்தும்—காலநிலை
கண்டு தெளியாமல் கண்டவர்பால் புன்பொருட்கா
அண்டுவரேல் அந்தோ அவம். (௯)

இ. ள்.

அறிவு நலம் நிறைந்த நூல்கள் பலவும் நுணுகி உணர்ந்து, மேலான பரம்பொருள் நிலைமையையும் தெளிந்தும் காலநிலையைக் கண்டு தெளியாமல் கண்டவரிடம் எல்லாம் பொருள் விழைந்து போதல் மருளான பிழையாம் என்றவாறு.

சிறந்த மதிநலமுடைய புலவர்கள் தம் நிலைமையை மறந்து இழிந்து படாமல் உரிமையை உணர்ந்து இனிது வாழ வேண்டும் என இஃது உணர்த்துகின்றது.

சதுரோடு அறிதலாவது இலக்கணம் முதலிய கருவி நூல்களைக் கசடறக் கற்று அறிவு நூல்களை ஆராய்ந்து தெளிதல்.

நூலறிவால் பண்பட்டுத் தெளிந்தமைக்குப் பயன், வாலறிவனை உணர்ந்து போற்றுதலேயாம்; ஆகவே அதன் நிலைமையும் பலனும் தெரிய அடுத்து வந்தது. மூலப் பொருளின் முடிவு உணர்தல் நூலறிவுடையார்க்கே தனியுரிமை யாகின்றது.

"கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியை" (திருவிசைப்பா)

"கற்றவர் வளைத்துத் திரிபுரம் எரித்தோன்,
கற்றவர் கருத்தினுல் காண்போன்" (வில்லிபாரதம்)

கல்வியாளருக்கும் கடவுளுக்கும் உள்ள உறவுரிமை இதனால் அறியலாகும். கல் என்றது மேருமலையை. தவர் = வில்.

இங்ஙனம் அரிய கலையறிவும், பெரிய மகிமையுமுடைய புலமையை அடைந்திருந்தும் தன் தலைமையை இழந்து தவறுபடு தல் புலவனது புலமைக்குப் புலையாம்.

கால நிலை கண்டு தெளிதலாவது தன் வாழ்நாளில் அயலே சூழ்ந்துள்ள மக்களது மனப் பான்மைகளையும், தேட்டின் இயக்கத்தையும், நாட்டின் இயக்கத்தையும் நன்கு தெரிதல்.

முற்காலத்தில் அரசர்களும், அதிகாரிகளும், செல்வர்களும் புலவர்களை மிகவும் நன்கு மதித்து உரிமையுடன் உவந்து போற்றி வந்தனர்; நாளடைவில் அரசு மாறியதால் அப்போற்றுதல் குறைய நேர்ந்தது; வரவரத் தூற்றுதலாய்வந்தது; வந்தும் பழைய வழக்கமாகிய பரிசில் நாடிப் பலரிடமும் சென்று புலவர்கள் பரிசு குலைந்தனர். அக்குலைவு கலைக்கு இழுக்காய்க்கவிக்கநேர்ந்தது.

இழுக்கமான அவ் வழக்கத்தை அறவே ஒழித்து இனிய ஒரு முயற்சியைக் கைக் கொள்ளுதலே இனிமேல் நலமாம்.

*" தேனென்னத் தித்திக்கும் தீந்தமிழை ஆய்ந்தொருவர்*
*வானென்ன நீண்டபுகழ் வாய்ந்துறினும்—ஏனென்று*
*கேட்டருமை செய்யார் கெடுநிலையர் இந்நாளில்*
*பாட்டருமை தேறார் பலர்."*

இந் நாட்டு நிலை இஞ்ஞான்று இங்ஙனம் அஞ்ஞானமாய்க் கோட்டி கொண்டு மாறியுள்ளமையால் உன் பாட்டு நிலையை மாற்றி வேறொரு தேட்டு நிலையைத் தேர்ந்து கொள்க.

காலத்தின் மாறுதலையும் உலகநிலையையும் உணர்ந்து பாராமல் கலையறிவை வீணே பாழ்படுத்துதல் பரிதாபம் ஆதலால் அப்பழி வழியில் இழியலாகாது.

கல்வியருமை அறியாமலும், உபகரிக்கும் தன்மையில்லாமலும் உள்ள புல்லியரிடம் பொருள் விழைந்து செல்லல் அல்லலே ஆதலால் "கண்டவர்பால் அண்டுவரேல் அவம்" என வந்தது.

புன்பொருள் என்றது புன்மையாளர்பால் உள்ளதும், புல்லிய வழியில் பெறுவதுமாகிய புன்மை தெரிய. அந்தோ! என நொந்து புலம்பியது அருமைக் கவிஞர் அநியாயமாய்ச் சிறுமைப் படுதலை நினைந்து.

*" கல்லடிக்கும் உளிஇரண்டு காதடிக்குள்*
*அடிப்பதெனக் கவிதை கேட்டுப்*
*பல்லடிக்கக் கிடுகிடெனப் பறையடிக்கும்*
*நெஞ்சர்தமைப் பாடு வேனோ?*
*வில்லடிக்கும் பிரம்படிக்கும் கல்லடிக்கும்*
*விரும்பிநின்ற மெய்யன் ஈன்ற*
*செல்லடிக்கும் தடவரையில் சேறடிக்க*
*அலையடிக்கும் செந்திலானே.!"* (படிக்காசு)

"ஏட்டைக்கட்டி எழுத்தோடு எழுத்தை வைத்து
இணைத்துக்கட்டி இசைகட்டி லோபர்மேல்
பாட்டைக் கட்டிஎன் தொண்டையும் கட்டிய
பாவம் தானினி என்றைக்குத் தீருமோ?
தோட்டைக் கட்டும் குழலே! நினதடித்
துணையைக் கட்டிய பேர்க்குப் பரகதி
வீட்டைக் கட்டிய தாயே சவுந்தர
மீனவன் பங்கின் மீனாட்சி அம்மையே!"

(பொன்னம்பலக் கவிராயர்)

புன் பொருளுக்காகப் புல்லரிடம் போய் இப் புலவர்கள் பட்டிருக்கும் பாட்டை இப் பாட்டுகள் காட்டி நிற்கின்றன.

அவமாய் இவ்வாறு அல்லலுழுமல் நவமாக நல்ல ஒரு தொழிலை நயந்து கொண்டு செல்வ நிலையில் சிறந்து வாழுக. கால நிலைக்கு ஏற்ப அறிவைப் பயன் படுத்துக என்பது கருத்து.

---

230. ஆழ்கடலுள் முத்தும் அடவிதனில் நன்மலரும்
வீழ்நலங்கள் வீணாய் விளிதல்போல்—கேழ்கிளரும்
பாவலரும் அந்தோ பயனறியா மக்களிடை
மேவி மறைகின்றார் மேல். (ம)

இ. ள்.

ஆழமான கடல் உள்ளே நல்ல முத்துக்களும், பாழான காட்டிலே இனிய மலரும் பயன் இன்றி வீணே கழிந்து ஒழிதல் போல் புன்மையான மக்களிடையே புனிதமான புலவர்கள் வறிதே இழிந்து மறைகின்றார் என்றவாறு.

அரிய கலைகள் பயின்று இனிய கவிகள் இயற்றும் பெரிய கவிஞரே யாயினும் அருமை தெரியாத மனிதரிடையே படின் அவர் பெருமை யடையார்; அவரது அறிவொளி வெளியே ஒளி வீசாமல் உள்ளேயே மழுங்கி உலைந்து போகின்றது.

விலை யுயர்ந்த நன்முத்தை அரசர் காணின், அதனை அவர் விழைந்து பெற்றுத் தம் மணி முடியில் புனைந்து போற்றுவர்; மலை வேடர் அதன் நிலை காணாது போவர். அதுபோல் கலை வாணரும் அறிவுடையார் சூழலில் உயர் மதிப்புடையாராய் நலம் மிகப் பெறுகின்றார்; அறிவிலிகளிடையே படின், ஒரு பயனுமின்றி அவமதிப்பாளராய் அவமே மறைகின்றார்.

உயர்ந்த வாசமுடைய நல்ல பூக்கள் புலி காடிகள் உள்ள காட்டில் பூத்து வீணே வீதல்போல் சிறந்த மதி நலமுடைய புலவர்கள் நாட்டில் உதித்தும் மாட்டுமதியான மாக்கள் கூட்டத்தில் அகப்பட்டு மாட்சி யிழந்து போகின்றார்.

தேசு மிகுந்த முத்தும், வாச மலரும், கடலிலும் காட்டிலும் பயனின்றி மறைந்து படுதலை எடுத்துக் காட்டி நலமறியாத மாக்கள் மாட்டுப் புலவர்கள் பொலிவு குன்றி நிற்றலை இஃது உணர்த்தியருளியது.

முத்தையும் மலரையும் புலவருக்கு ஒப்ப வைத்தது அருமையும் இனிமையும் கருதி. அருவிலைமுத்தும் பரிமளமலரும் போல அருமையான இனிய மதிமான்கள் உரிமையான இடத்தை அடைந்தபோதுதான் உலகம் அறியப்பெருமை அடைகின்றனர்.

"பூவினது இயல்பே பொருந்தக் கூறின்
மங்கலம் ஆதலும் நாறுதல் உடைமையும்
காலத்தில் மலர்தலும் வண்டிற்கு நெகிழ்தலும்
கண்டோர் உவத்தலும் விழையப் படுதலும்
உவமத்து இயல்பின் உணரக் காட்டுப." (தொல்-கோள்)

கல்வி நிறைந்த புலவருக்கு வாசம் நிறைந்த மலரை உவமை காட்டி அதன் இயல் நலங்களை இதில் விளக்கி யிருத்தல் அறிக.

மென்மையும் நன்மையும் மேன்மையும் உடைய இவர் பான்மை தெரிந்தவரிடம் பயன் மிகப்பெற்று நயனடைகின்றனர்; தெரியாதவரிடை வறிதே கழிகின்றனர்.

"பாட்டின் சுவையைப் படித்தார் பரிந்துரைத்தும்
கேட்டு மகிழார் கெடுமதியர்—மாட்டுப்
பிறப்பாய்ச் செருக்கிப் பிழையே பெருக்கி
இறப்பார் அவமே இவண்."

என்றபடி இடர் மண்டியுள்ளவரிடம் புலமைச் சுவையைக் கொண்டு போய்ப் புலையாட லாகாது; அப் போக்கை நீக்கி ஆக்கமான வழியை நோக்கி மகிழ்க.

தகுதியில்லார் முன்புகுதல் மிகுதியும் பிழையாம்.

"வாலிழையார் முன்னர் வனப்பிலான் பாடிலன்;
சாலும் அவைப்படின் கல்லாதான் பாடிலன்;
கற்றான் ஒருவனும் பாடுஇலனே கல்லாத
பேதையார் முன்னர்ப் படின்." (நான்மணிக்கடிகை)

மபதைகள் குழுவில் மேதைகள் பீடுபெறுமல் பிழைபடுதலே இது விளக்கி யிருக்கும் அழகைப்பார்க்க. வால் இழையார் என்றது நல்ல அணிகளேயுடைய விழுமிய தருண மங்கையரை.

அழகிய இளங்குமரிகள் அவலட்சணமானவரை விழையார்; நல்ல கல்வியாளர் புல்லரை மதியார். தக்க இணைப்புகள் அமைந்த பொழுதுதான் உயர்ந்த பொருள்கள் சிறந்த மதிப்பும் மாட்சியும் பெறுகின்றன. கல்வி நலம் மிக்க புலவரைப் பேணுபவர் உலகில் தக்கவராய் உயர்ந்து மிக்க புகழை அடைகின்றனர்.

"புலவரைப் பேணும் புலனுடையார் என்றும்
உலவா ஒளியாய் ஒளிர்வர்—புலவரைப்
பேணு தொழிவார் பிறந்தும் பெறுநலனைக்
காணு திழிவார் கழிந்து."

என்றமையால் கலைஞரின் மதிப்பைப் பெற்றவரது பெருமையும், பெறுதவரது சிறுமையும் ஒருங்கே காணலாகும்.

கலைமதி நாணுறச்சகல கலைபடைத்துப் பிறர்க்கு நல்கும் கவிசிரேட்டர்
தலைமையுறு மவர்மிகுந்த புலமையாம் தனதான சம்பத் துள்ளார்
இலைஎனஒன் றிரக்கினந்தக் குறைஅரசர்க் கல்லதிவர்க் கில்லே; நல்ல
விலைமதியா மணிதெரியா தவர்மதியா விடினுமது மேன்மை தானே.

(பத்திரகிரி)

---

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

புலவர் தெய்வீக நிலையினர்.
உலகம் நலமுற ஒளி செய்கின்றனர்.
இறைவனது உரிமையை எய்தியுள்ளனர்.
அருளேயே பொருளாகக் கருதுகின்றனர்.
பரிசில் வாழ்க்கையை உரிமையாக உடையவர்.
அரசர் பேணும் அமைதியாளர்.
தந் நலம் கருதா நன்னய சீலர்.
யாருக்கும் அஞ்சா வீரத் திறலினர்.
மூலப் பொருளின் முடிவுணர்ந்தவர்.
அருமையும் இனிமையும் பெருமையும் மிக்கவர்

உ௬ வது புலவர்நிலை முற்றிற்று.

---

# இருபத்து நான்காம் அதிகாரம்.

## கரும நலன்.

அஃதாவது தொழிலின் நன்மை. கல்வியறிவு அக நிலையில் ஒளி புரிதல் போல் கரும நலன் புற நிலையில் வளம் தருகின்றது. உயிர்க்கு இனிய கலையுணர்வைப் பேணுவதோடு அமையாமல் உடலுக்குரிய தொழில் முயற்சியையும் செய்து கொள்ள வேண்டும் என உணர்த்துகின்றமையால் உலக வுயர்வின் உரிமை கருதிப் புலவர் நிலையின் பின் இது வைக்கப் பட்டது.

231. கரும வுலகில் கருமம் புரிந்தார்
இருமை நலனும் இனிதா—உரிமையுடன்
பெற்று மகிழ்வார் பிறழின் பிழைமலிந்
திற்று விழுவார் இழிந்து. (க)

இ. ள்.

இங்கே கருமங்களை உரிமையாகச் செய்தவர் இம்மை மறுமை என்னும் இருமை நலன்களும் எய்தி இன்பம் உறுவார்; செய்யாதவர் இழிந்துபடுவார்; இவ்வுண்மையை ஊன்றி உணர்ந்து தொழில் புரிந்து உயர்க என்றவாறு.

இது கருமத்தின் பெருமை கூறுகின்றது.

கைத்தொழில், உழவு, வாணிகம் முதலிய செயல் வகைகள் எல்லாம் கருமம் என வந்தன. கருவி காரணங்களால் கருதிச் செய்வது என்னும் காரண நிலையால் அதன் பூரண உருவம் புலனும். காரியங்களின் சீரிய நலனை அது காட்டியுள்ளது.

புண்ணியம் புரிந்தோர் எண்ணியபடியே யாதொரு உழைப்புமின்றி இனிய இன்ப நலன்களை அனுபவிக்கும் தலத்திற்குப் போக பூமி என்று பெயர். தருமங்களைச் செய்த நல்ல இனங்கள் குழுமியுள்ளமையான் அது சுவர்க்கம் என நின்றது. சுவர்க்கம் என்னும் சொல்லுக்கு நல்ல வருக்கங்கள் கூடியிருப்பது என்பது பொருள். தரும நிலையமான அதன் எதிர் இது கரும நிலையமாயது.

நாளும் முயன்று தொழில் புரிந்து தம் வாழ்நாளை மனிதர் இனிது கழிக்கும் இயல்பினை யுடைமையால் இந்நிலம் கரும பூமி என வந்தது. எய்திய பெயரால் செய்தியை அறிகின்றோம்.

முன் செய்த கரும பலன்களை உயிரினங்கள் அனுபவிக்க வந்துள்ள இடம் ஆதலால் இது கருமபூமி என நேர்ந்தது என வேறு பொருளும் கூறுவராயினும் அதனினும் இதுவே மிகுதியும் தகுதியுடையது. உண்மையான உரிமை அமைந்தது.

கருமம் செய்து வாழ்வதே இப் பூமியின் தருமமாகும்.

"உழவு தொழிலே வரைவு வாணிபம்
வித்தை சிற்பமென்று இத்திறத்து அறுதொழில்
கற்கும் நடையது கரும பூமி." (திவாகரம்)

ஆதி திவாகரர் இவ்வாறு இலக்கணம் விதித்துள்ளமையால் நம் முன்னோர் இந் நிலத்தைக் குறித்தும் கரும நலங்களைப் பற்றியும் கருதி வந்துள்ள உண்மைகள் தெரிய நின்றன. இந்த மனித வுலகம் தொழிலாலேயே எழில் பெற்றுள்ளது என்பது இதனால் இனிது புலனும்.

ஆடை செய்தல், அணி அமைத்தல், ஓவியம் வரைதல், சிற்பம் புரிதல், கலை கற்பித்தல், முதலாகப் பல தொழில்கள் உளவாயினும் அவற்றை ஆறு வகையுள் அடக்கி மேலோர் சீர்மை செய்துள்ளனர்.

கருமம் செய்தலே தருமமாக மருவி வந்துள்ள நாம் அது செய்யாதிருப்பின் எய்துமு பயன் எளிது தெளிவாம்.

தொழில் செய்யாமல் சோம்பியிருந்தால் மனம் தீய வழிகளில செல்லும்; அதனுல் பழியும் வறுமையும் பாவமும் வரும்; வரவே இருமையும் இலனுய் மனிதன் இழிந்து பட நேர்கின்றான். அந்த இழிவு யாதும் நேராமல் வந்த மரபும் வழியும் தெரிந்து தொழில் புரிந்து உயர்க.

இருமை நலன் என்றது கருமங்களையும் தருமங்களையும் செய்து இம்மையிலும் மறுமையிலும் நன்மை எய்தி யிருத்தலை.

அறிவு நலம் கனிந்த அருமைப் பிறவியை அடைந்து வந்துள்ள நீ உரிமையான கருமங்களை உறுதியுடன் செய்து இருமை நலங்களையும் மருவி மகிழ வேண்டும்.

"கருமஞ் செயவொருவன் கைதூவேன் என்னும்
பெருமையிற் பீடுடைய தில்." (குறள், 1021)

கருமம் செய்வதைக் கைவிடேன் என்னும் உறுதியுடைமை போல் மனிதனுக்குப் பெருமையுடையது வேறு இல்லை எனச் சொல்லியுள்ள இதன் உள்ள நிலையை ஊன்றி உணர்ந்து கொள்க.

---

232. உற்றகை கால்கள் உழைக்கவே பெற்றுள்ளோம்
மற்றவற்றை மாட்சி யுறச்செய்து—பெற்ற
உருவ நலனை உலகடையச் செய்யின்
திருவடைந்து நிற்கும் செறிந்து. (உ)

இ. ள்.

மனிதனுடைய கைகளும் கால்களும் உழைக்கவே தோன்றி யுள்ளன; அவற்றை நன்கு பயன் படுத்தி நீ பிறந்த பலனை உலகு அடையச் செய்க; அங்ஙனம் செய்யின் திருவும் சீரும் உன்பால் பெருகி வந்து இன்பம் தரும் என்றவாறு.

நாம் பிறந்துள்ள இந் நிலத்தின் நிலை உழைத்து வாழும் தகையது என்பது முன்பு உணர்த்தப்பட்டது; நம் உறுப்புக்களும் அவ் வுழைப்பிற்கே உரியன என்பதை இஃது உணர்த்துகின்றது.

மனிதனது அவயவ அமைப்பு தொழில் செய்ய வந்தது என்பதைத் துலக்கி நிற்கின்றது. அவற்றை இனிது பயன் படுத்தின் எய்திய பிறவியை உய்தி பெறச் செய்ததாம்.

உற்ற என்றது பெற்ற வகை உணர. கையை முதலில் குறித்தது எல்லா வேலைகளையும் செய்தருளும் சீர்மை கருதி.

மாட்சி உறச் செய்து என்றது தக்க தொழில்களில் உறுப் புக்களை உபயோகித்து அவற்றை மிக்க மதிப்புடையனவாகச் செய்தலை. உற்ற கடமைகளைச் செய்த வழிதான் பெற்ற பிறவிகள் பெருமை அடைகின்றன.

சும்மா கிடக்கும் இரும்பு துருப்பிடித்துத் தொலைதல் போல் வினை செய்யாத உறுப்பு வெறுப்புக்கு இடமாய் வீணே இழிந்து படுகின்றது. "தொழில் செய்யாத கை பழி செய்யும்; பணி புரியாத கால் பாவம் புரியும்" என்னும் பழமொழியால் வினை யாட்சி இல் வழி விளையும் தீமைகள் தெளிவாகின்றன.

மடி மண்டியிருக்கும் சோம்பேறிகள் உலகிற்குக் கொடிய துயரப் பூண்டுகள் ஆகின்றனர். அவரை உள்ளினும் உள்ளம் எள்ளி வெறுக்கின்றது. காணினும் கடுத்து விடுக்கின்றது.

"The idle people we will put out of our thoughts ; They are mere nuisances" (Ruskin) "சோம்பேறிகளை நினைத்தாலும் நெஞ்சம் எள்ளுகின்றது; சன சமூகத்திற்கு அவர் ஓர் நோய்" என ரஸ்கின் என்னும் ஆங்கில ஆசிரியர் கூறியிருக்கிறார்.

மடியுரைக் குடி கேடர் என எந்நாடும் அடியோடு வெறுத்து வருகின்றது. இந்த இளிவில் வீழ்ந்து இழிந்து தொலையாமல் தொழில் புரிந்து மதிப்பும் மாண்பும் அடைய வேண்டும்.

பெற்ற உருவ நலனை உலகு அடையச் செய் என்றது உற்ற பிறப்பின் அருமையும் அதன் உரிமையும் உணர வந்தது. உருவம் எடுத்த பயனை உலகிற்கு உதவியருள் என்பதாம்.

கை கால் முதலிய அவயவங்களுக்குக் கரும இந்திரியங்கள் என்று பெயர். இதனால் அவற்றின் செயல் இயல்புகள் தெளிவாம். உற்ற உறுப்புக்கள் தம் கடமையைச் செய்யின் அது உலக உயிர்களுக்கு உபகரித்த படியாம்.

நெறி முறையே தன் தொழில்களைச் செய்கின்ற மனிதன் கரும யோகி என்னும் பெருமையை அடைகின்றான். உலகத்தைத் துறந்தவரினும் அவன் சிறந்தவனாய் உயர்ந்து நிற்கின்றான்.

"கர்மேந்திரியை: கர்மயோகம் அஸக்த: ஸ விசிஷ்யதே"

(கீதை, 3-7)

"உடலுறுப்புக்களால் உண்மையாகக் கருமம் செய்கின்றவன் எவனோ அவன் யாண்டும் உயர்ந்தவனாகின்றான்" எனக் கண்ணன் அருச்சுனனை நோக்கிக் கூறியுள்ளதும் ஈண்டு எண்ணத் தக்கது.

மனத்தை ஒருமுகப் படுத்தி உழைக்கவே அது பலர்க்கும் பயனாய் விரிகின்றது; தனக்குப் பொருளும் அருளும் பெருகி வருகின்றன. அவ் வரவால் இருமையும் இன்பம் ஆகின்றது.

உழைப்பாளி கருவடைந்த பயனைக் கைக்கொண்டமையால் அவனிடம் திருவடைந்து நின்றது. கருமம் புரியும் தருமவானைப் பெருமகிழ்வுடன் விழைந்து திருமகள் பேரருள் புரிகின்றாள். சேறிந்து நிற்கும் என்றது அத் திருவின் நிலைமை தெரிந்து கொள்ள வந்தது. செய்யவள் ஆதலால் செய் தொழிலாளிகளிடம் மெய்யருள் செய்து சீர்மையை உதவுகின்றாள்.

வினையாளன் செல்வச் சீமானாய்ச் சிறந்து எல்லா மேன்மைகளையும் எய்தி விளங்குவான் என்பது கருத்து.

---

233. கருதிய கைவினையைக் கண்ணூன்றிச் செய்யின்
வருதொழில் யாவும் வளமாய்— ஒருநிலையே
செய்ய எளிதாம் சிதையினோ யாவுமே
வெய்ய நிலையில் விழும். (௩)

இ. ள்,

உரிமையாகக் கருதி மேற்கொண்ட தொழிலை மிகவும் கவனமாய்த் திருத்தமுடன் செய்க; அவ்வாறு புரியின் யாவும் எளியனவாய் இனிமை கனியும்; செய்கையில் தவறு நேரின் எல்லாம் வெய்யனவாய் வீணே இழிந்து படும் என்றவாறு.

இது, வினை செய்யும் விதம் கூறுகின்றது.

கைவினை என்றது தான் செய்து கொள்ள உரிமையாக வரைந்து கொண்ட காரியங்களை.

கண்ணூன்றிச் செய்தலாவது கருமமே கண்ணாய் யாண்டும் எண் ஊன்றி ஆற்றுதல். மன ஒருமையுடன் கருதிச் செய்த பொழுதுதான் காரியங்கள் இனிது முடியும்; வீரியமான சீரிய பயன்களும் விரைந்து பெருகும். கருதிச் செய்யாவழி, காலம் வீணே கழியும்; பணியும் இனிதாகாது; பயனும் பழுதாம்.

"சிறிது செயினுமே சீர்பெற ஊன்றி
உறுதி பெறவே உறுக— வறிதே
கருத்தொன்றிச் செய்யாக் கருமம் கடையாய்
விருத்தன்கைக் கல்லாய் விழும்."

என்றமையால் கருதிச் செய்வதே எவ்வழியும் செவ்விதாய்ச் சிறந்து திகழும் என்பது தெளிவாம். கருதாமல் செய்வது விருதாவாய் விளிதலால் அவ் வினையாளர் காரியக் கேடராய்ச் சீரழிந்து படுகின்றார்.

கருத்து ஒருமித்துச் செய்யும் தொழிலே எவ் வகையினும் திருத்தமுறப் பெற்றுச் சிறந்த இன்பம் சுரந்து வருகின்றது.

"The cook with concentration will cook a meal all the better." "உள்ளம் ஊன்றிச் சமைப்பவரே நல்ல உணவுகளை

ஆக்குகின்றார்" என விவேகானந்தர் கூறியிருக்கிறார். மன ஒருமைக்குத் தக்க அளவே வினைகள் இனிது நிறைவுறுகின்றன என்பதைச் சொல்லி வருங்கால் இதனை இங்ஙனம் சொல்லி யுள்ளார்.

உணர்வு விளைகின்ற கலைத் தொழிலே மட்டும் அன்றி உணவு தருகின்ற மடைத் தொழிலிலும் மன ஒருமை வேண்டும் என அம் மதிமான் அறிவுறுத்தியருளியது நம் நாட்டவர் பாடுபடுவதில் பீடு பெற்று உயர வேண்டும் என்று கருதி.

எத் தொழிலுக்கும் சித்தத்தின் ஒத்துழைப்பே உயிராதார மாய் உறுதி புரிந்துள்ளது. அதனை ஒருமுகப் படுத்திச் செய்க.

"Work is only done well when it is done with a will" (Ruskin) "கருத்துடன் கருதிச் செய்த போதுதான் காரியம் நன்றாக முடிகின்றது" என்னும் இது ஈண்டு அறிய வுரியது.

எந்தக் காரியத்தையும் மனம் குவிந்து ஊக்கமுடன் செய்க; பராமுகமாய் யாதும் செய்யாதே; ஊன்றி ஒருநிமிடம் செய்வதை உலைந்து ஒரு நாழிகை செய்யினும் அது இனிது முடியாது.

அரிய பொருள் வளங்கள் யாவும் தொழிலில் மருவியுள்ளன; அதனைக் கருத்துடன் கவனமாகச் செய்யின் இனிது முடிந்து எல்லா இன்ப நலங்களையும் ஒருங்கே பயக்கும். செயல் இயல் தெரிந்து உறு பயன் உணர்ந்து உயர்வினை புரிந்து வியனிலை அடைக.

---

234. செய்யும் தொழிலைநீ செவ்வையாய்ச் செய்துவரின்
எய்யும் பொருள்கள் எளிதாயுன்—கையின்கண்
வந்து குவியுமே வாராத பேரெல்லாம்
முந்து பணிவர் முதல். (௪)

இ. ள்.

செய்ய உரிய தொழிலைச் செவ்வையாகச் செய்துவரின் அரிய பொருள்கள் யாவும் எளிதே வந்து குவியும்; பெரிய மனிதர் எல் லாரும் எதிர் வந்து பணிவர் என்றவாறு.

செவ்வையாவது நேர்மையும் சீர்மையும் நிறைந்து நிற்பது.

செய்வினை திருந்தச் செய் என்றபடி செயல் ஆற்றும் இயல் பினையுடையவன் உயர்நலம் அடைகின்றான்.

தொழில் செம்மையுடையது ஆயின் அதில் பல நன்மைகள் விளைகின்றன. அவ் வினையாளன் வியன் பயன் எய்தி நயன் மிகப் பெறுகின்றான்.

எய்யும் பொருள் என்றது தாம் எய்த விரும்பி எவரும் ஏங்கி நிற்கின்ற அரிய செல்வங்களை. அரும் பெறலான பெரிய செல்வங்கள் எல்லாம் திருந்திய தொழிலாளியிடம் வலிந்து வந்து சேரும் என்றமையால் திருவுக்கும் தொழிலுக்கும் உள்ள உறவுரிமை அறியலாகும்.

மடியிலான் தாள் உளாள் தாமரையினாள் (குறள், 617)

என்னும் இந்த அமுத வாக்கில் தாளின் ஆழம் காண்க. முயற்சியில் திரு உள்ளது என்ற பொருளோடு ஆள்வினையாளனது கையிலும் காலிலும் அது தழுவி மிளிர்கின்றது எனவும் ஒளி புரிகின்றது. வினையாளன் திருவாளன் ஆகின்றான்.

உண்மையான உழைப்பில் தெய்வத் தன்மை உறைந்துள்ளது; அதனால் அது திவ்விய பலன்களை விளைத்தருள்கின்றது.

"All true work is sacred. In all true work, were it but true hand-labour, there is something of devineness." (Carlyle)

"மெய்யாகச் செய்யும் தொழில்கள் யாவும் புனிதமானவை; அவற்றுள் நல்ல கையால் செய்வதில் புதிய ஒரு தெய்வத் தன்மை புகுந்துளது" எனக் கார்லேயில் என்னும் மேல் நாட்டுப் பேரறிஞர் கூறியிருப்பது ஈண்டுக் கூர்ந்து சிந்திக்கத் தக்கது.

சீதேவி பெற்ற திருமகளாம் செய்தொழிலார்
பூதேவ ராவர் பொலிந்து.

தொழில் திருவின் செல்லக் குழந்தை. அந்த அருமைத் திருமகளை உரிமையாக மணந்து கொண்டவர் அரிய செல்வங்களையெல்லாம் ஒருங்கே பெற்று உலகில் உயர்ந்த தேவதைகளாய்ப் பொலிந்து விளங்குகின்றனர்.

"பொருள்கள் வந்து குவியுமே; வாராத பேரெல்லாம் மூந்து பணிவர்." என்றது செல்வ நலங்கள், தேசமதிப்பு, வேந்தரும் விழைந்து வந்து பார்க்கும் வியத்தகு மேன்மை முதலிய உயர்ந்த மாட்சிகள் எல்லாம் இனிது பெருகி ஒளி செய்து நிற்கின்ற அரிய காட்சி நிலைகள் தெரிய வந்தது.

கருமமே கருதி நிற்பவரிடம் பெருமைகள் யாவும் பேணி வருகின்றன; அவ் வுரிமையை உணர்ந்து உயர்நலம் பெறுக.

---

235. பருவம் தெரிந்து பயனுணர்ந்து செய்யும்
கரும நிலையின் கதியால்—இருமையும்
இன்பம் பயக்கும் இனிய வினைசெய்வார்
என்பயன் எய்தார் இவண். (ரு)

இ. ள்.

பருவ காலம் தெரிந்து பயன் உணர்ந்து செய்யும் கரும நலனால் இருமையும் இன்பம் விளையும்; உறுதியுடன் வினை செய்வார்க்கு இவ வுலகில் எல்லா நலங்களும் உளவாம் என்றவாறு.

பருவம் தெரிதலாவது காரியம் இனிது முடிதற்குரிய காலம் அறிந்து இடம் கண்டு இதமாக ஓர்ந்து செய்தலே.

"உரிய பருவம் உணரா துறினே
பெரிய வலியும் பிழையாம"

ஆதலால் கருமம் செய்பவர் அதற்கு உரிமையான பருவ நிலைகளை நன்கு தெரிந்து கொள்ள வேண்டும்.

பயன் உணர்தலாவது தான் செய்கின்ற தொழில் நிலைமையயும் அதற்குச் செலவாகும் உழைப்பையும், பொருளையும், அதனால் உளவாகும் ஊதியத்தையும் ஆராய்ந்து தெளிதல்.

தொழில் வகைகள் பல துறைகளையும் முறைகளையும் உடையன; அந் நிலைகளை யெல்லாம் நுணுகி உணர்ந்து வினை புரிந்த போதுதான் அவை இனிது முடிந்து பெரிய பயன்கள் சுரந்தருளுகின்றன.

பருவம் தெரியாமலும் பயன் உணராமலும் கண் மூடித் தனமாய்ச் செய்யும் கருமம் வீண் உழைப்பாய் விரிந்து படுமே யன்றி மேன்மையான பலனை விளைத்தருளாது ஆதலால் தெரிந்து உணர்ந்து செய்க எனக் கரும நிலையை வரைந்து காட்ட நேர்ந்தது.

இனிய வினை செய்வார் என்பயன் எய்தார்?

என்றது அரிய பெரிய பயன்கள் யாவும் வினையாளர்பால் எளிது வந்து அடையும் என்பது தெரிய வந்தது.

"உழப்பின் வாரா உறுதிகள் உளவோ?
கழப்பின் வாராக் கையறவு உளவோ?"

எனப் பட்டினத்து அடிகள் வினவகையில் சுட்டி உரைத்துள்ள இவ் வாக்கியங்கள் உய்த்துநோக்கி உணரத் தக்கன. கழப்புதல்=வேலை செய்யாமல் வீணே காலம் கழித்தல். உழைப்பாளி பிழைப்பாளி ஆகின்றான்; கழப்பன் இழப்பனாய் இழிந்து படுகின்றான். ஈனமாய் இழிவில் வீழாதே; ஞானமாய் உயர்வில் ஓங்குக என உறுதிநலனை உணர்த்தியவாறிது.

முயற்சி எல்லாச் செல்வங்களையும் அள்ளிக் கொடுத்து மனிதனைப் பெருமைப் படுத்தி மாட்சிமிகச் செய்கின்றது; சோம்பல் சிறுமை பல தந்து சீரழிக்கின்றது.

இருமையும் இன்பம் பயக்கின்ற கரும நலனை உரிமையாகச் செய்பவர் மனித சமூகத்துள் அருமையாளராய்ப் பெருமை மிகப் பெறுகின்றார். அப் பேற்றை ஏற்றமாகப் போற்றிக் கொள்ளுக.

---

236. வைகறையில் ஓர்கடிகை வாய்ந்துசெயின் நாள்முழுதும்
செய்வினைவந் தெய்தும் சிறப்பினால்—உய்தியுடன்
காலமுண் டாகக் கருதி வினைசெய்க
மூலமுண் டாகும் முதல். (சு)

இ, ள்.

அதி காலையில் ஒரு நாழிகை தொழில் செய்யின், அது பகல் முழுவதும் செய்யும் வினை நலனை இனிது அருளும்; பருவம் கழிந்து படாமல் தொழில்களை விரைந்து செய்க; அதனால் பெரும் பொருள்கள் விளைந்து வரும் என்றவாறு.

இது, காரியம் செய்யும் கால நிலையைக் காட்டுகின்றது.

வைகறை=விடியற்காலம். கடிகை=ஒருநாழிகைப்பொழுது.

சூரியன் உதித்தற்கு மூன்று நாழிகைக்கு முன்னரே எழுந்து அன்று செய்ய உரிய காரியங்களைச் சிந்தித்து மன ஒருமையுடன் வினை செய்துவரின், அது பெரிய பலனுடையதாய் அரிய நிலையில் தனியே இனிமை சுரந்தருளுகின்றது.

உதய காலத்தில் கருத்தூன்றி ஒரு நாழிகை செய்யும் தொழில் அன்று நாள் முழுதும் செய்யும் காரிய நலனைச் சீரிய

முறையில் நேரிய பலனை நேரே தருகின்றது. இதனை அனுபவத்தால் அறிந்து கொள்ளலாம்.

உயிர்களின் முயற்சிக்கு அதிகமான ஓர் ஊக்கமும் உயர்ச்சியும் கதிரவன் எழுச்சியில் புதுமையாய்க் கலந்திருக்கின்றது. அந்த அருமைப் பொழுதைப் பழுது படுத்தாமல் உரிமையாகப் பயன் படுத்திக் கொள்ள வேண்டும்.

ஆன்ம சிந்தனையுடன் தியான சமாதிகள் புரிகின்ற மேன்மையான தவ யோகிகள் பலரும் இந்த வைகறைப் பொழுதைத் தமக்கு உய்தியாக உபயோகித்து உயர் நலம் அடைந்துள்ளனர். ஞான யோகிகளும் காலத்தைக் கடைப்பிடித்துக் கதி பெற்றுள்ளமையால் கருமயோகிகளுக்கு அது எவ்வளவு உரிமையுடையது என்பது உணரலாகும்.

காலையில் ஒரு நாழிகையைக் கருதாது கைவிடின் பின்பு மாலை வரையில் ஓடி முயன்றாலும் அவ் வினை இழுபறியாய் வழுவினை அடையும்; அக் கரும நலனை நீ மருவ முடியாது.

"விடியல் ஒருகடிகை வீணாயின் அந்நாள்
கொடிய மடியாய்க் குலவி—நெடிய
பகலெல்லாம் பார்த்தாலும் பாடுபெறாய் காலம்
தொகல்வல்லார் துய்ப்பார் சுகம்."

உதய காலத்தின் அருமை இதனால் அறியலாகும். இதனை இதயம் வைத்துப் பருவ வுரிமையுடன் கருமங்களைச் செய்து கொள்க. கால உதவி சாலவும் சிறந்தது.

கருதி வினை செய்க என்றது எடுத்த காரியத்தைக் கண்ணும் கருத்துமாய் ஒரே நோக்குடன் ஊக்கி நின்று முடித்துக் கொள்க என வினை ஆட்சியை விளக்கி யருளியது.

பருவம் தவறாமல் காரியங்களைச் செய்துவரின் பொருள்கள் பெருகி வரும்; வரவே பெரிய தனவானாய் ஞாலம் காண அவன் மேல்ஓங்கி யாருக்கும் ஆதரவு செய்யும் அமைதியை அடைவான்; ஆதலால் வினையின் விளைவை இறுதி அடி நினைவுறுத்தி நின்றது.

மூல முதல் என்றது பெரிய தொழில்களை யெல்லாம் இனிது நடத்தவல்ல மூல தனங்களை. அறம் முதலிய எல்லா இன்ப

நலங்களுக்கும், மூல முதலாய் மருவி ஞாலம் புகழ உள்ள பொருளைக் காலம் கருதி வினை செய்து கருத்துடன் பெறுக.

---

237. தந்நிலைமைக் கேற்ற தகவாம் தொழில்நிலையை
மன்னி மனமூன்றி மாறாமல்—எந்நிலையும்
ஊக்கி முயல்வார் உலகம் வியந்தேத்த
ஆக்கம் பெறுவார் அமர்ந்து. (எ)

இ. ள்.

தம் கருதிக்கு ஏற்ற கருமங்களை உரிமையாகக் கைக்கொண்டு உறுதியுடன் முயல்பவர் உலகம் வியக்கும் படியான அரிய செல்வங்களைப் பெறுவார் என்றவாறு.

இது தொழிலைத் தேர்ந்து கொள்ளும் வழியைக்கூறுகின்றது.

மனித இயல்புகள் பலவகை நிலையின. அந்த இயற்கைகளுக்கு இசைந்த முயற்சிகளே எங்கும் இனிமையுடையனவாய்ப் பொங்கி வரும் ஆதலால் அதனை ஓர்ந்து கொள்க என முதலில் உரைக்க நேர்ந்தது.

தகவாம் தொழில் ஆவது தன்னை உரிமையாக உடையவர்க்குச் சிறப்பும் செல்வமும் பெருமையாகத் தருவது.

மன்னி, மனம்ஊன்றி, மாறாமல் என்றது வினையாற்றுந் திறங்களை விளக்கி நின்றது. மன்னுதல் = நிலைத்தல்.

கருதி இறங்கிய கருமத்தில் உறுதியாக நிற்றலும், ஊன்றி முயலலும், எவ்வழியும் நிலை திரியாமல் நேர்ந்து புரிதலும் தேர்ந்த வினைமாட்சிகளாம். இவ்வாறு செய்துவரின் எவ்வகையும் செவ்விதாய்த் திவ்விய பயன்கள் விளைந்து வரும்.

எந் நிலையும் என்றது வருவாய் குறையினும், தளர்ச்சி நேரினும், பிறர் இகழ்ச்சி புரியினும், இடர் அடரினும் கருமத்தில் தன் கிளர்ச்சி குன்றலாகாது என்றவாறு.

முயற்சியில் யாதும் அயர்ச்சி நேராமல் எவ்வழியும் உயர்ச்சி புரிவது உள்ளத்தின் ஊக்கமே ஆதலால் ஊக்கி முயல்வார் என அதன் உண்மை புணர வந்தது.

"உள்ளம் உடையான்முயற்சி செய்ய ஒருநாளே
வெள்ளநிதி வீழும்விளை யாததனின் இல்லை;
தொள்ளையுணர் வின்னவர்கள் சொல்லின் மடிகிற்பின்
எள்ளுநர்கட்கு ஏக்கழுத்தம் போல இனிதன்றே."
(சிந்தாமணி)

சோம்பி இராதே; அது இகழ்ச்சிக்கு ஏதுவாம்; எதிரிக்கு ஏற்றமாம்; ஊக்கி முயல், ஒருநாள் இல்லாவிடின் மறுநாள் பெரு வெள்ளம் போல் உனக்குப் பொருள் வந்து சேரும் என இஃது உணர்த்தியிருக்கும் குறிப்பை ஊன்றிப் பார்க்க.

உலகத்தில் பல தொழில்கள் உள்ளன; உன் நிலைமைக்கு மாறுனதை மேற்கொண்டால் அது சீராகாது; உனது சுபாவத் தோடு இசைந்ததைச் சூழ்ந்து கொண்டு அதனை ஆழ்ந்த கவனத் துடன் ஆற்றிவருக; அவ்வரவால் உயர்ந்த ஆக்கங்கள் உளவாம்; அதனால் இருமையும் இன்பநலன்களை எய்தி மகிழ்வாய்.

"They are happy men whose natures sort with their vocations" (Bacon)

"தம் இயல்புக்கு இயைந்த தொழில்களையுடையவர் இன்ப வாழ்வினர்" என்னும் இது ஈண்டு எண்ணத் தக்கது.

காலமும் கோலமும் கருதிக் கருமம் புரிக என்பது கருத்து.

---

238. ஊற்றில் சுரக்கும் உயர்நீர் எனஒருவன்
ஆற்றும் வினையில் அரும்பொருள்—ஏற்ற
வகையில் சுரக்கும் மரபால் வரவின்
தொகையைத் துணிந்து தொடர். (அ)

இ. ள்.

ஊற்றிலிருந்து நீர் சுரந்து வருதல் போல் மனிதனது முயற்சியிலிருந்து பொருள் விளைந்து வருகின்றது; அவ்விளைவினை நீ விழைந்து பெறுக என்றவாறு.

ஊக்கி முயலின் ஆக்கம் வரும் என முன்னர் அறிந்தோம்; அவ் வரவு நிலையை ஓர் உவமக் காட்சியால் இதில் உணர்ந்து கொள்ளுகின்றோம்.

பொருளை நீர் ஓடு ஒப்ப வைத்தது அதன் நீர்மை கருதி.

உயிர்களுக்குத் தண்ணீர்போல் பொருளும் இனிய ஆதாரமாய் நண்ணியிருத்தலை எண்ணியறிக. உயர்நீர் என்றது உவர் யாதுமின்றிச் சுவை மிகுந்து உதவி நிலையில் உயர்ந்துள்ள அதன் இயல்புணர வந்தது. பொருளும் பழி வழியில் அன்றி விழுமிய தொழில் நெறி தோய்ந்துவரின் எழுமையும் இனிதாம்.

தோண்டிய அளவுக்கு நீர் ஊறிவரும்; முயன்ற அளவுக்குப் பொருள் பெருகி வரும். தோண்டுதல் இன்றேல் நீர் வரவு குன்றும்; முயற்சியை விடின் பொருள் வரவு ஒழியும்.

நிலத்தில் யாண்டும் நீர் நிறைந்திருத்தல் போல், உலகில் எங்கணும் பொருள்கள் நிறைந்திருக்கின்றன. விரும்பி முயல்வார்க்கு அவை பெரும் பயன் தருகின்றன; முயலாதவர்க்கு அயலாய் விடுகின்றன.

> வானம் உளதால் மழையுளதால் மண்ணுலகில்
> தானம் உளதால் தடம்உளதால்—ஆனபொழுது
> எய்த்தோம் இளைத்தோம்என்று ஏமாந் திருப்பாரை
> எற்றோமற் றெற்றோமற் றெற்று. (ஔவையார்)

இயற்கை அன்னை எல்லாப் பொருள்களையும் கையில் ஏந்திக் கொண்டிருக்கிறாள்; அவற்றை உரிமையுடன் விரைந்து பெறாமல் மடிந்து நின்று இழிந்து படுகின்றாரே என வினை புரியா மக்களின் நிலைமையை நினைந்து பரிந்து ஔவையார் இவ்வாறு இரங்கியிருக்கிறார்.

மணலில் கிளைக்க நீர் வரும்; உலகில் உழைக்கப் பொருள் வரும். அவ்வுண்மையைத் தெளிவுபடுத்தி உரிமையுடன் இங்ஙனம் எடுத்துக் காட்டியது அடுத்து முயன்று ஆக்கம் பெற என்க.

அரிய நலங்களை எல்லாம் எளிதின் உளவாக்கித் தன்னையுடையார்க்குப் பெரு மேன்மை தந்தருளும் பெற்றியது ஆதலால் அரும் பொருள் என வந்தது.

பொருள் ஒன்று உளதேல் அவன் எந்நிலையனுயினும் எல்லாம் உடையன் என யாரும் அவனைப் பெருமை பாராட்டி அருமையாகப் போற்றி வருதலை நாளும் நாம் பார்த்து வருகின்றோம்.

இத்தகைய அருமைப் பொருள் கருமத்தின்கண் உறைந்

திருக்கிறது; அதனை உணர்ந்து தோண்டி விரைந்து எடுத்து நிரந்தரமாக உனக்கு உரிமை செய்து கொள்க.

ஊக்கி முயல்பவன் கையிலேயே ஆக்கம் எல்லாம் உள்ளன.

"The secret of fortune is joy in our hands" (Emerson)

"முயற்சியுடைய நம் கையின்கண் உயர்ச்சியான திரு மருமமாய் உறைந்துள்ளது" என்னும் இது ஈண்டு கூறிய வுரியது.

---

239. உன்னி முயலா துளமடிந்து நின்றேயேல்
இன்னல்மீக் கூரும் இளிவுமாம்—முன்னைத்
தன்கையால் தானுயர்ந்த தன்மையனை வானுமண்ணும்
பொன்கையால் ஏந்தும் புகழ்ந்து. (கூ)

இ-ள்.

மனம் துணிந்து முயலாமல் மடிந்திருந்தால் அல்லலும் இளிவும் அடர்ந்து வரும்; முனைந்து முயன்றால் வானும் வையமும் உன்னைப் போற்றி உவந்து கொள்ளும் என்றவாறு.

செய்யும் வினையைச் செவ்வையாகத் தெரிந்து கொண்டு ஊக்கமுடன் உறுதியாய் ஆற்றுதலே ஆக்கம் பயக்கும் ஆதலால் மன்னிய முயற்சிக்கு உன்னுதல் ஈண்டு உரிய அடையாய் மருவி வந்தது. உன்னல் = நினைத்தல், கருதல்.

கருத்தே எல்லா விருத்திக்கும் காரணம். முயற்சியின் உயர்வும் அயர்ச்சியின் இழிவும் கருதி யுணர்ந்து உயர்ச்சிக்கு உரியதை உவந்து செய்க.

ஒரு தொழிலும் செய்யாமல் உள்ளம் மடிந்து இருந்தால் வறுமைத் துயரோடு பல இழிவுகளும் வெள்ளம் என விரைந்து வரும் ஆதலால் இன்னல் மீக் கூரும், இளிவும் ஆம் என மடியின் கேடுகள் வரைந்து காட்டப் பட்டன.

இன்னல் = துன்பம். இளிவு = அவமதிப்பு.

இன்னலையும் இளிவையும் எந்த மனிதனும் விரும்பான்; இன்பத்தையும் உயர்வையுமே யாண்டும் எவரும் விரும்பி வருகின்றனர். ஆன்ம இயல்பான இந்த மேன்மைகளை இழிந்த சோம்பலினால் வீணே இழந்து நிற்பது பெரிதும் பரிதாபமாம்.

மடியில் குடிகேடான ஈனங்கள் மருவி யுள்ளன; அதனை மான மனிதர் மருவலாகாது.

தன் கையால் தான் உயர்ந்த தன்மையன் என்றது தானாகவே முயன்று முன்னுக்கு வந்த மேன்மையான பான்மையாளனை.

முன்னோர்கள் ஈட்டி வைத்துள்ளதைக் காட்டிக் கொண்டு பிலுக்கி நிற்பது பெருமையாகாது; தன் முயற்சியினால் உயர்ந்தவனே உண்மையான உயர்ச்சிக்கு உரியவனாகின்றான். அவனே அருந்திறலும் பெருந்தகவும் நிறைந்த ஆண்மையாளன். அவனது பண்பும் பயனும் இன்ப நிலையமாய் இனிமை சுரந்தருளுதலால் மண்டலம் மகிழ்ந்து புகழ நேர்ந்தது.

பாட்டாளனாய் உழைத்துத் தேட்டாளனாய்ச் செழித்து வந்த அந்த ஈட்டாளனையே தலைமையாக உலகம் எடுத்துக்காட்டி நிலைமையை வியந்து எங்கும் உவந்து கொண்டாடுகின்றது.

மனிதனுக்கு ஆள் என்று ஒரு பெயர். வினையை ஆள்பவன்; ஆண்மையுடையவன் என்னும் பொருள்களை அப்பெயர் மருவியுள்ளது. அப்பேராளன் ஆள்வினையால் உயர்ந்தபோது உண்மையான மனிதனாய் ஒளி பெற்று நிற்கின்றான்.

ஒளி மிகுந்து வெளிவந்த அவனை மக்களும் தேவரும் ஒக்க நோக்கி உரிமையுடன் புகழ்ந்து உவந்து கொள்ளுகின்றார்.

"Welcome evermore to gods and men is the self-helping man." (Self-reliance) "தானே முயன்று உயர்ந்தவன மனிதருக்கும் தெய்வங்களுக்கும் நல்ல செல்ல விருந்தாய்ச் சிறந்து நிற்கின்றான்" என்னும் இது ஈண்டு எண்ணத்தக்கது.

மண்ணினும் வானை முன்னுறக் குறித்தது தன்மை அறிந்து போற்றும் தகுதியில் மானவரினும் வானவர் தலைமையாய் நிற்கும் நிலைமை நோக்கி.

"தன் கையால் உயர்ந்தவனை வானும் மண்ணும் பொன் கையால் ஏந்தும்" என்றது வினையாண்மையின் வியன் தெரிய வந்தது. மனிதன் மனவலி உடையவன்; எல்லா வினைகளையும் இனிது செய்ய உரியவன; அவ்வுரிமையை அடையவே எவரும் போற்றும் உயர்வுடையவனாய் ஒளி பெற்று நிற்கின்றான்.

கரும நிலையால் சிறந்த அருமையாளனை இருமை உலகமும் விழைந்து புகழ்ந்து மகிழ்ந்து கொள்ளும் என்றமையால் அவனது பெருமையும் பேறும் அறியலாகும்.

---

240. ஊக்கி முயலும் உழைப்பில் ஒளிமிருந்த
பாக்கியங்கள் எல்லாம் படிந்துள — நோக்கியதைக்
கண்ணூன்றிச் செய்க கருதாத இன்பநலம்
எண்ணூன்றி எய்தும் இனிது (ம)

இ. ள்.

உறுதியான உழைப்பில் அரிய பாக்கியங்கள் அமர்ந்திருக்கின்றன; அதனைக் கருதிச் செய்து பெரிய இன்ப நலங்களைப் பெறுக என்றவாறு.

செல்வம், அதிகாரம், உபகாரம், மதிப்பு, போக போக்கியங்கள் யாவும் வினை செயலால் விளைந்து வெளியுறிய வருதலால் "பாக்கியங்கள் எல்லாம் உழைப்பில் உள" என வந்தது.

அவ் வுண்மை நிலையை உணர்ந்து ஊக்கி முயலுக.

உயர்ந்த உறுதி நலங்கள் எல்லாம் உழைப்பின் கண்ணேயே உள்ளன என்றது அதனை உலையாது செய்து நிலையான பயனைத் தலையாக அடைக என நினைவுறுத்தியவாறும்.

பிறரிடம் எதையும் எதிர்பாராதே; தனிமையை நினைந்து தளராதே; எல்லாவலிமைகளும் எல்லாச் செல்வங்களும் உன்னிடமே உறைந்துள்ளன; மறைந்து கிடப்பதை மறந்து மயங்காதே; நிலைமையை நினைந்து வினைகளை விழைந்து செய்; நிறைந்த திருவும் சிறந்த பெருமையும் உன் கண் எதிரே விரைந்து பெருகி வரும்; உறவுரிமையுடைய அவ் வரவினை விரைவில் உறுதி செய்து கொள்க. இனைந்து கவலாதே; முனைந்து முயன்று உயர்ந்து வருக என்பதாம்.

இனியாரும் இல்லாதார் எம்மிற் பிறர்யார்
தனியெம்யாம என்றொருவர் தாமடியல் வேண்டா;
முனிவில ராகி முயல்க முனியாதார்
முன்னியது எய்தாத தில். (பழமொழி)

விடாது தனுவிற் செயுமுயற்சி மேன்மேல் பொருளை மிக வளர்க்கும்;
கெடாது சுற்ற நட்பினர்தம் கிளையும் தாங்கும் யாவர்க்கும்
தடாத உபகாரமும் புரியும் தடந்தாமரையாளையும் சேர்க்கும்
படாத ஊழ்வந் திடுகாறும் பயனேவிளைக்கும் பழியின்றும்.

(விநாயக புராணம்)

முயற்சியாளர்க்கு உளவாகும் உயர்ச்சி நிலைகளையும், உறுதி நலங்களையும் இன்னவாறு நூல்கள் பல கூறியுள்ளன

ஊக்கி முயலாமல் உளம் மடிந்திருந்தால் பாக்கியங்கள் இலவாம்; பழி வறுமைகள் உளவாம்; ஆதலால் அவ்விழி நிலையை அறவே ஒழித்துத் தொழில் நலனைத் தொடர்ந்து செய்க.

வையத்தின் வாழ்வெல்லாம் செய்வினையிலேயே செறிந்திருக்கின்றன; அதனைச் செய்யாவழி உய்வினை இல்லை.

செய்யான் தொழிலெனின் செய்யாளும் யாதுமே
செய்யாள்; கரியாளே சேருவாள்—ஐயோபின்
இல்லாமை ஒன்றோ இடர்பலவும் ஏறுமே
பொல்லாமை எல்லாம் புகும்'

தொழில் செய்யாவழி உளவாம் இழி துயரங்களை இதனால் அறிந்துகொள்ளலாம். செய்யாள் = திருமகள். கரியாள் = மூதேவி. செய்யாள் இரண்டனுள் முன்னது பண்புப் பெயர்; பின்னது வினைப் பெயர். தொழிலாளி சீதேவியாய்ச் சிறந்து விளங்குகின்றான்; சோம்பேறி மூதேவியாய் இழிந்து கழிகின்றான்.

கருத்துடன் முயன்று வாழாத வாழ்வு பாழாகின்றமையால் அவ் வாழ்வினர் தாழ்வினராய்த் தளர்ந்து தொலைகின்றார்.

" A purposeless life is a life of fatigue." (Hadfield)

"குறிக்கோளுடன் எண்ணி ஒழுகா வாழ்வு இழிவாழ்வாம்" என்னும் இது ஈண்டு எண்ணத் தக்கது. அறிவுடைய மனிதன் குறியுடன் நின்று தன் குடியை நெறியே உயர்த்தி நிலை நிறுத்துகின்றான். அந் நிலைமை தலைமையாய் மிளிர்கின்றது.

எவ்வழியும் யாண்டும் நல்ல கருமங்களைச் செய்து செல்வ நலங்களை எய்திச் சிறந்த நிலைகளில் மக்கள் உயர்ந்து கொள்ள வேண்டும் என்பது இதன் திரண்ட பொருளாம்.

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

கருமம் பிறப்புரிமை யானது.
அதனைச் செய்வதே உறுப்பின் பயனும்.
செய்யாதவர் சிறப்பு அழிகின்றார்.
செய்தவர் சீர்பல பெறுகின்றார்.
எல்லா இன்ப நலங்களையும் எய்தி மகிழ்கின்றார்.
காலம் கருதிக் கருமம் செய்க.
தக்க தொழில் மிக்க இன்பமாம்.
உரிய தொழிலில் பொருள் வளம் பெருகி வருகின்றது.
தானாக முயன்று உயர்ந்தவன் மேன்மைமிகப்பெறுகின்றான்.
திருவும் தேசும் உடையனாய் அவன் சிறந்து திகழ்கின்றான்.

உச அது கரும நலன் முற்றிற்று.

# இருபத்தைந்தாம் அதிகாரம்.

## வாழ்க்கை நிலை.

அஃதாவது குடி வாழ்க்கையின் நிலைமை. உலகில் தோன்றிய மனிதன் தன் வாழ்நாள் முழுவதும் இனிது வாழ ஒரு மனைவியை மணந்து கொள்ளுகின்றான். அந்த இனிய துணைவியுடன் அமர்ந்து மனை வாழ்க்கை புரியும் மாட்சியை இஃது உணர்த்துகின்றது. வாழ்க்கை நிலை கருமநலனால் பெருமை அடைகின்றமையின் அவ் வுரிமை கருதி அதன்பின் இது வைக்கப் பட்டது.

241. அன்பு கனிந்த அருமை மனைவியுடன்
இன்பு கனிய இனிதமர்ந்து—முன்பு
குறித்த அறத்தைக் குறிக்கொண்டு பேணிச்
செறித்த மனைவாழ்க்கை செய். (க)

இ. ள்.

அன்பு நிறைந்த அருமை மனைவியுடன் அமர்ந்து தலைமையான அறத்தை நாளும் குறிக் கொண்டு பேணி இனிய மனை வாழ்க்கையை இன்புறச் செய்க என்றவாறு.

மனை வாழ்க்கையின் இன்ப நலங்களுக்கெல்லாம் மனைவியின் அன்புரிமையே மூல காரணம் ஆதலால் அது முதலில் வந்தது.

அந்த அன்பின் கனிவே எல்லா இன்பங்களையும் நன்கு கனியச் செய்து மனித வுலகத்தை இனிமைப்படுத்தி வருகின்றது.

மனிதன் பெறத் தக்க பொருள்கள் எவற்றினும் மிகவும் அருமையான பொருள் இனிய மனைவியே ஆதலின் அத் தனி மகிமையை அடை உணர்த்தி நின்றது.

கணவனைப் பேணல், கற்பு நெறி நிற்றல், வாழ்க்கையை நடத்தல், வருபொருள் புரத்தல், அதிதிகளை ஆதரித்தல் முதலிய பண்பாடுகள் எல்லாம் நன்கு அமைந்த பாக்கியவதியை அடைந்தவன் பெரிய பாக்கியவானாகின்றான். நெறியுடைய மனைவி அரிய திருவாய் மருவி யுள்ளாள்.

"House and riches are the inheritance of fathers; and a prudent wife is from the Lord." "Solomon"

"வீடு மாடு முதலிய செல்வங்களை வழி முறையில் அடையலாம்; அறிவுடைய மனைவி இறைவன் அருளால் கிடைக்கின்றாள்" என்னும் இப் பொருள் மொழி ஈண்டு எண்ணத் தக்கது.

முன்பு குறித்த அறம் = மேலோராலும் நூலோராலும் முதன்மையாகக் கருதிக் குறித்துள்ள தருமம். என்றது இல்லறத்தை. "இல்லறம் அல்லது நல்லறம் அன்று" என ஔவையார் உரைத்துள்ள குறிப்பைக் கூர்ந்து நோக்கி இதன் செவ்வியையும், சிறப்பையும் தேர்ந்து கொள்க.

துறவறம் முதலிய எல்லா அறநெறிகளுக்கும் இல்லறம் இனிய ஆதாரமாய்த் தலைமை எய்தி நிற்றலால் அதன் நிலைமையும் பொறுப்பும் அறியலாகும்.

அன்புறு மனைவியும் அறிவுயர் கணவனும் பண்புடன் மருவிப் பணிபுரிந்த போது தான் தரும நிலையமான இம் மனை வாழ்க்கை இன்பம் மிகப் பெற்று இனிது நடந்து வரும்.

தருமமெனும் பண்டம்இடும் சகடமாம் மனைவாழ்க்கை
கருமநுகம் பிணித்துமனைக் காதலியும் தானுமென
இருவராய் முறைசெலுத்தின் எத்துணைத்தூரமும் செல்லும்
ஒருவராய்ப் பூண்டிழுப்பின் ஓரிறையும் செல்லாதால்.

(திருக்குறளப் புராணம்)

மனை வாழ்க்கையை இங்ஙனம் உருவகம் செய்திருக்கிறார். பல வகையான புண்ணியங்களைத் தாங்கி யுள்ளமையால் மனை வாழ்வு தருமச் சரக்குகள் ஏற்றிய வண்டி என வந்தது. கருமம் புரியாவழி தருமம் நடவாது ஆதலால் அதனை நுகம் என்றார். தருமத்திற்கு ஆதாரம் கருமம் என்பது இங்கே நன்கு தெரிய நின்றது. இந்த வாழ்க்கை நிலைக்கு முன் வந்துள்ள அதிகாரத்தையும் வைப்பு முறையையும் நுட்பமாக நோக்கி உறவுரிமையை ஓர்ந்து உறுதி நலனை உணர்ந்து கொள்க.

புண்ணியங்களுக்கெல்லாம் விளை நிலமான இத்தகைய குடி வாழ்க்கையைக் கண்ணியமுடன் நடத்தின் எண்ணிய இன்ப நலங்கள் யாவும் எளிதின் எய்துகின்றார்; இருமையும் பெருமையாய் இசைமிகப் பெறுகின்றார்.

காதல் மனைவியுடன் கருத்து ஒத்து அமர்ந்து சீவர்களுக்கு ஆதரவு புரிந்து அறமும் புகழும் எவ்வழியும் இனிது பெருகி வர உன் வாழ்க்கையைச் செவ்விதாகச் செய்க என்பது கருத்து.

242. இல்வாழ்க்கை என்றும் இனிய அறங்களுக்கு
நல்வாழ்க்கை யாக நவிலலால்—பல்வாழ்க்கை
நின்றார் பலர்க்கும் நிழலுதவி முத்திநலம்
ஒன்றாக நல்கும் உவந்து. (உ)

இ. ள்.

இனிய பல தருமங்களுக்கு நல்ல ஆதாரமாய் நின்று எல்லாருக்கும் இதம் புரிந்து முடிவில் முத்திப் பேற்றையும் இல்வாழ்க்கை நல்கியருளும் என்றவாறு.

இல்லில் இருந்து வாழும் வாழ்க்கை இல் வாழ்க்கை என வந்தது. இல்=மனை, வீடு. இம் மனை வாழ்வு தரும நிலையமாக் கருதப் பட்டுள்ளது.

மனிதன் பிறந்து வளர்ந்து பருவம் அடைந்தவுடன் ஒரு மங்கையை மணந்து கொள்கின்றான். இருவரும் கூடி ஒருமனையில் வாழ்கின்றார். மணமக்கள் மருவி வாழ்கின்ற இந்த இனிய வாழ்வு இல் வாழ்க்கை என நேர்ந்தது.

உலக இயற்கையாய் உலாவி மனித சமூகத்துள் இனிது நடந்து வருகிற இந் நிலைமையை முன்னோர் தலைமையாகக் கருதி வைத்துள்ளனர்.

மணம் ஆகாத பிரமச்சாரி தனி நிலையில் நிற்கின்றான்; துறவி உலக நிலைக்கு வேறு ஆகின்றான். மணம் உடையவனே மனை வாழ்க்கையில் அமர்ந்து எல்லாருக்கும் இனிய ஆதாரமாய் இதம் புரிகின்றான்.

பலர்க்கும் நிழல் உதவி என்றது இல் வாழ்பவன் தவம் முதலிய பலவகை நிலைகளில் உள்ளார்க்கும் உணவு முதலியன உதவி உபகரித்துவரும் உரிமை தெரிய வந்தது.

இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை. (குறள், 41)

என்றமையால் கிரகத்தனது நிலைமையும் தலைமையும் புலனும்.

"பேதையர்பால் முகம்பாராது ஓதல் பிரமச்சரியம்;
காதலியை மணம்புணர்ந்து வாழ்தல் காருகத்தியமாம்;
மாதரொடு வனத்துறைந்து நோற்பது வானப்பிரத்தம்;
ஓதும்இவை மூன்றும்ஒழித்து ஒன்றுணர்தல் சந்யாசம்.

இத்தகைய நால்வர்களில் மூவருக்கும், இறந்தார்க்கும்,
அத்தமுதல் அற்றார்க்கும் ஆதாரம் ஆதலினால்
உத்தமமாம் இல்லறமே வாழ்வினுக்கும் உயர்கதிக்கும்
வித்துமாம் துறவறத்தின் வேருமாம் எனும் வேதம்,''
(திருக்குற்றாலப் புராணம்)

''பிச்சையும் ஐயமும் இட்டுப் பிறன்தாரம்
நிச்சலும் நோக்காது பொய்யொரீஇ—நிச்சலும்
கொல்லாமை காத்துக் கொடுத்துண்டு வாழ்வதே
இல்வாழ்க்கை என்னும் இயல்பு.'' (அறநெறிச்சாரம்)

மனைவாழ்க்கையின் மகிமையையும் வகைமையையும் இவ்வாறு நூல்கள் பல கூறியுள்ளன. எல்லார்க்கும் இனிய துணையாய் எவ்வழியும் இதமே புரிந்து உன் குடி வாழ்க்கையைக் குணமாகப் பேணி வருக. அவ் வரவு இருமையும் பெருமையாம்.

முத்திநலம் நல்கும் என்றது பேரின்ப நிலையின் பேறு கருதி. அரிய தவத்தால் அடைய வுரிய அந்த வீட்டின்பத்தை இந்த வீட்டிலிருந்தே இனிது பெறலாம் என்பது கருத்து.

---

243. ஈனம் படியாமல் இல்வாழ்வில் நல்லருள்சேர்
ஞானம் படிய நயந்துநீ—ஆன
வகையறிந்து காத்து வருக வரிசை
தொகையாம் பெருமை தொடர்ந்து. (௩)

இ. ள்.

இழிவான பழிகள் யாதும் படியாமல் நீக்கி உயர்ந்த புகழ் நலங்களைப் பொருந்தச் செய்து மனைவாழ்க்கையை நன்கு பேணி வரின் சிறந்த மேன்மைகள் எங்கும் பொங்கி வரும் என்றவாறு.

இது, வாழ்க்கையை நடத்தும் வகைமை கூறுகின்றது.

ஈனம் என்றது இழிந்த வசைகளை. அவை படியின் வாழ்வு தாழ்வு ஆம் ஆதலால் அவற்றை யாதும் படிய விடாமல் பாது காப்பது குடி உயர்ச்சிக்கு முதல்படி யாயது.

நல் அருள் சேர் ஞானம் படிய என்றது மனை வாழ்க்கையின் உண்மையான உறுதி நலனை உணர்த்தி நின்றது.

வந்த விருந்தினரை உபசரித்து எவ்வுயிர்க்கும் இரங்கி உதவி யாண்டும் கருணை நலம் கனிய இனிது ஒழுகி வாழ்வதே மனிதனது பரிபூரணமான புனித வாழ்க்கையாம்.

அரிய தருமங்கள் எல்லாம் அருளால் உள்வாம் ஆதலால் அதனை எவ்வழியும் பொருளாகப் போற்றி வாழ்க.

"பொருளுடையான் கண்ணதே போகம்; அறனும்
அருளுடையான் கண்ணதே யாகும்; அருளுடையான்
செய்யான் பழிபாவம்; சேரான் புறமொழியும்
உய்யான் பிறர்செவிக் குய்த்து." (சிறுபஞ்சமூலம்)

தேக போகங்களைப் பொருள் தருகின்றது; புண்ணியத்தை அருள் அருள்கின்றது; இவ் வுண்மையை எண்ணி யுணர்ந்து இரண்டையும் கண்ணியமாகப் பேணி நண்ணிய மனை வாழ்க்கையை நயந்து செய்க.

பொருளும் அருளும் உடலுக்கும் உயிருக்கும் உறவுரிமைகளாய் இம்மை மறுமை என்னும் இருமைகளிலும் பெருமைகள் பல சுரந்து இன்பம் புரிந்தருள்கின்றன.

அருள் இல்லாத வாழ்வு இருள் சூழ்ந்த காடுபோல் இழிந்து படுகின்றது. ஒருவன் நெஞ்சில் அருள் இல்லையாயின் அவனது செயலும் வாழ்க்கையும் கடுமையாய்க் கொடுமை மண்டியிருக்கும். அருளுடையனாயின் யாதொரு தீமையும் நேராமல் எவ்வுயிர்க்கும் இனிய நீரனாய் இதம் புரிந்து வருவன். வரவே, புகழும் புண்ணியமும் பொங்கி யெழும். அதனால் அவன் குடி வாழ்க்கை விழுமிய சந்திகளையுடையதாய் நெடிதோங்கி நிற்கும்.

பட்டி மாடுகளால் பழுது படாதபடி உழவன் பயிரைக் காத்தல்போல் கெட்ட காரியங்களால் இளிவு நேராதபடி தலைவன் குடியைப் பேண வேண்டும்.

பெருமை தொடர்ந்து தொகையாம் என்றது மானம் மரியாதைகள் படிந்து ஞானமணம் கமழ்ந்து வாழ்வு நடந்து வரவே உலகம் அதனை உவந்து நோக்கிப் புகழ்ந்து கொண்டாடும் ஆதலால் அப்பயன்களின் வியன் தெரிய நின்றது.

வாழ்க்கையைப் புனிதப் படுத்தி எவ்வழியும் செவ்விதாக் கருணை நலம் கனிய உரிமையுடன் செய்க என்பது கருத்து.

244. கல்விநலம் மிக்கிருந்தும் கைப்பொருளொன் றில்லையெனின்
ஒல்லுமவன் இல்வாழ்க்கை ஊனமாம்—நல்லுயிர்
புல்லி யிருந்தாலும் பூண்டவுடல் காலிரண்டும்
இல்லையெனில் செல்லுமோ எண். (ச)

இ. ள்.

உள்ளத்தே கல்வி நிறைந்திருந்தாலும் கையிலே பொருள் இல்லை ஆயின் அவனது இல்வாழ்க்கை நன்கு செல்லாது; அரிய உயிர் உடையதாயினும் கால்கள் இலவேல் உடல் இனிது நடவாது என்றவாறு.

இது, பொருள் இல்லாத வாழ்வு புலையாம் என்கின்றது.

கருத்தைத் தெளிவாகக் காட்சிப் படுத்தி உவமானம் இனிது விளக்க வந்தது. இது எடுத்துக் காட்டும் உவமையாம். ஒல்லும் அவன் என்றது கல்வியறிவில் சிறந்த அவனது இயல்பான ஆற்றலையும் ஆண்மையையும் உணர்த்தி நின்றது. ஒல்லுதல் = கூடுதல், பொறுத்தல்.

கலை உணர்வில் எவ்வளவு தலை சிறந்து நின்றாலும் பொருள் இலனாயின் உலக நிலையில் அவன் வாழ்வு ஒளிபெற்று நில்லாது என்றதனால் அதன் நிலைமையும் நீர்மையும் தெளிவாம்.

கல்விக்கு உயிரும், பொருளுக்கு உடலும், வாழ்க்கைக்குக் காலும் ஒப்பாம். உவமான நுட்பங்கள் உய்த்துணர வுரியன.

அறிவுமயமாய் ஆனந்த நிலையமா யுள்ள உயிர் உடலோடு மருவிய பொழுதுதான் உருவாய் வெளியே உலாவுகின்றது. அரிய இனிய கல்வியும் பொருளோடு கலந்து நின்ற வழிதான் தெளிவாய்ப் பெருமை மிகப் பெறுகின்றது.

அருவமான கல்வியும் உருவமான செல்வமும் ஒரு முகமாய் மருவிய பொழுது குணமும் அழகும் நிறைந்த ஒரு குலமகன் போல் கலை தலை சிறந்து திகழ்கின்றது.

அழகிய உடல் காலால் இயங்குவது போல் விழுமிய வாழ்க்கை பொருளால் பொலிந்து விளங்குகின்றது.

தேகத்திற்குக் கால் போல் வாழ்க்கைக்குப் பொருள்.

பொருள் இலதேல் வாழ்க்கை முடமாய் மழுங்கிக் கிடக்கும் என்பது பெற்றும். தானுடையது நீளிடை நிலவுகின்றது.

வாழ்வு ஊனம் அடையின் மானம் அழியும்; ஞானமுடைய மனிதன் அந்த ஈன நிலையை அடையலாகாது.

உனது மனைவாழ்க்கை இன்ப நலமுடையதாய் உயர்ந்து திகழ வேண்டுமாயின் விரைந்து பொருளைத் தேடிக் கொள். நீ உயர்ந்த கலைஞானியாய் இருந்தாலும் பொருள் இல்லையாயின் அது சிறந்து விளங்காது.

கால் இல்லை எனில் உடல் செல்லுமோ? என்றது உடல் வாழ்க்கையோடு குடிவாழ்க்கையை எண்ணியறிந்து கண்ணியம் செய்து கொள்ள. உயிர் வாழ்வுக்கு உயிராதாரமா யுள்ளதை உணர்த்திய படியிது.

கால் இரண்டு என்றதற்கு ஏற்பத் தாவர சங்கமங்களாகிய பொருள் வகைகளை உரிமையாகக் கருதிக் கொள்க.

கல்வி மனிதனைத் தெய்வம் என மாண்புறுத்த வல்லது; ஆயினும் மனை வாழ்க்கையை இனிது நடத்தச் செல்வம் அவசிய மாயுள்ளது; ஆதலின் அதனை ஈட்டிக் கொண்டு இல்லறம் புரிக.

பொருள்வளத்தால் உனது குடிவாழ்க்கை எழில் மிகுந்து இனிது இயங்குகின்றது; அருள் நலங்கள் வளர்கின்றது; இந்த உண்மையை உணர்ந்து விரைந்து உறுதி செய்து கொள்ளுக.

---

245. வருவாய் அளவறிந்த வாழ்விவ் இரண்டும்
இருகண்ணும் வாழ்க்கைக்கொன் றின்றேல்—ஒருகண்
உடையான்போல் உட்கும்அவ் ஒன்றும் இலதேல்
அடியோ டழிந்து விடும். (ரு)

இ-ள்.

பொருள் வருவாயும் அவ் வரவுக்குத் தகுந்த வாழ்வும் மனை வாழ்க்கைக்கு இரண்டு கண்களாம்; அவற்றுள் ஒன்று மட்டும் இருந்தால் அது ஒரு கண் உடையதாம்; இருவகையும் இலையாயின் அக்குடி முழுதும் குருடாய் இருளடைந்து போம் என்றவாறு.

மனை வாழ்க்கைக்குப் பொருள் அவசியம் என்பதை மேலே கண்டோம்; இதில் அதனைப் பேணி ஒழுகும் முறைமையைக் காண வருகின்றோம். வருவாய் = வருகின்ற பொருள் நிலை.

அளவு அறிந்த வாழ்வு என்றது தம் செல்வ நிலைமையைச் சீர்தூக்கி நோக்கி அதற்குத் தக்கவாறு பக்குவமாகக் குடித்தனம் செய்தலை. அளவு அறியாவழி இளிவு பல நேரும்.

வரவும்செலவும் மழையும்வெயிலும்போல் குடிவாழ்க்கையில் இயற்கை நியமங்களாய் இசைந்திருக்கின்றன.

பண்பாடுடைய இவை வாழ்க்கையை நல்ல நிலையில் செல்லமாக நடத்தி வருதலால் கண்கள் என வந்தன. வாழ்க்கை மனிதனுக்கும், வரவும் செட்டும் விழிகளுக்கும் ஒப்பாயின.

பொருள் வரவு தொழில் முயற்சிகளால் பெருகிவருகின்றது; அது பல வழிகளிலும் பரவி வாழ்வை வளம் படுத்தியருள்கின்றது. நிலப் பயிருக்கு நீர் வரவு போல் குலக்கிளைக்குப் பொருள் வரவு. வந்த நீரை வகையாய்ப் பாய்ச்சின் விளைவு வளமாம்; வரவை அறிவோடு பயன் படுத்தின் வாழ்வு பெருமையாம்.

வருவாய் கணவன் மேலது; அதனை அளவாகச்செலவழித்து வாழ்க்கையை நடத்துதல் மனைவியின் பாலது.

ஆடவன் வெளியிலிருந்து பொருள்ஈட்டி வருகிறான்; அரிவை வீட்டிலிருந்து அவ் வரவை வகையுடன் வளம் படுத்துகின்றாள்.

நறிய உணவுகளை உளவாக்கி உரிய கணவனையும் உற்ற மக்களையும் பேணி அதிதிகளை ஆதரித்து வருதலால் அறமும் இன்பமும் வளர்ந்துவர மனைவி அன்பாற்றி அருள்கின்றாள்.

தன் நாயகனுடைய வரவினையறிந்து செலவு செய்யும் நீர்மையே நாயகிக்குச் சிறந்த சீர்மையாம்.

"தற்கொண்டான் வளத்தக்காள் வாழ்க்கைத் துணை" (குறள் 51)

தன்னைக் கொண்டவனது வருவாய்க்குத் தக்கபடி வாழ்க்கையை நடத்துபவளே துணைவி என்றதனால் மனை வாழ்வில் அவளுக்குள்ள பொறுப்பும் உரிமையும் புலனும். வரவு நிலை தெரியாமல் கண்டபடி செலவு செய்பவள் துணைவியாகாள் என்பது குறிப்பு.

கொழுநன் சிறிது கொணர்ந்தாலும் அதனை நெறியோடு பயன்படுத்தின் குடி வாழ்க்கை பெரிதும் இன்பமாய் நெடிது நின்று நிலவும் ஆதலால் அந் நிலைமையே தலைவிக்குத் தலைமையான தன்மையாயது. குடிமூலத்தின் அடிமூலம் அறிய வந்தது.

வருவாய்க்குத் தக்க வழக்கறிந்து சுற்றம்
வெருவாமை வீழ்விருந் தோம்பித்—திருவாக்கும்
தெய்வதையும் எஞ்ஞான்றும் தேற்ற வழிபாடு
செய்வதே பெண்டீர் சிறப்பு. (சிறு பஞ்ச மூலம்)

"வருவாய்க்கு இயைய வாழ்தலுறு மறுவில்
கற்பின் மனையாள்போல் பொருள்யாவுளவாம்?
அதுவன்றிப் புகழும் பயனும் மிக வுண்டாம்"

(விநாயக புராணம்)

இவை ஈண்டு எண்ணத்தக்கன. வரவறிந்து வாழ்வதைக் கணவனும் கருதி வர வேண்டும்.

கருதாவழி வாழ்வு விருதாவாய் விளிந்து படும். உட்கும் = நிலை குலையும். வரவையும் செட்டையும் இரண்டு கண்களைப் போல் நாளும் கருதிப் பேண வேண்டும் என்பது கருத்து.

---

246. சேர்ந்த வரவில் செலவு நிலைகுறைய
ஓர்ந்து குடிவாழ்வார் ஓங்குவார்—நேர்ந்த
வரவறிந்து வாழார் மதியிழந்து வீழ்வார்
இரவில் கடனில் இழிந்து. (சு)

இ. ள்.

தமக்கு வருகின்ற பொருள் வரவினும் செலவு குறையும்படி கருதி ஒழுகுபவர் குடியே பெருகி வளரும்; அவ்வாறு வரவறிந்து வாழாராயின் இரப்பிலும் கிரப்பிலும் இழிந்து விழுந்து அவர் ஒழிந்து போவர் என்றவாறு.

வருவாயின் அளவறிந்து வாழ்வதே வாழ்வாம் என முன்னர் அறிந்தோம்; அங்ஙனம் வாழாவழி உளவாம் இழவுகளை இதில் அறிய நேர்கின்றோம்.

ஓர்ந்து வாழ்தலாவது வரவையும் செலவையும் நன்கு கவனித்து யாண்டும் அயராமல் எவ்வழியும் தன் குடி வாழ்க்கை நீண்டு நிலைத்து வர நெறி புரிந்து வருதல். ஓர்தல் = கூர்ந்து ஆராய்தல். பாதுகாப்பின் பான்மை தெரிய வந்தது.

முன்னும் பின்னும் எண்ணி நோக்கித் தம் வாழ்க்கையைக் கண்ணியமாகப் பேணி வருவோர் திண்ணிய சீர்மையில் சிறந்து

திகழ்கின்றார்; அங்ஙனம் பேணாதவர் கண்ணியம் குறைந்து தாழ்ந்து படுகின்றார்.

ஓர்ந்து வாழ்வார் ஓங்குவார் என்றதனால் ஓராதவர் தூங்கி வீழ்வார் என்பதாயிற்று. வந்த பொருளையெல்லாம் ஒருங்கே செலவழித்து விடலாகாது; வருவாயுள் பாதியைத்தான் செலவழிக்க வேண்டும்; மீதம் உள்ளதை இரு கூறாக்கி ஒருபாகத்தை ஏழைகளுக்கு உதவியருளுதல், மற்றப்பாதியைச் சந்ததிகளுக்குச் சேமநிதியாகச் சேர்த்து வைத்தல் என்னும் இந் நெறிமுறைகளில் உரிமையோடு வரம்பு செய்ய வேண்டும்.

"வருவாயுள் கால்வழங்கி வாழ்தல்" (திரிகடுகம், 21) என்றதனால் தன் பொருள் வரவில் நாலில் ஒரு பாகத்தைத் தருமமாக இல் வாழ்வான் பிறர்க்கு உதவியருள வேண்டும் என்பது உணரலாகும்.

உற்ற பொருள் முற்றும் ஒருவன் உண்டு ஒழிக்காமல் புகழ் புண்ணியங்களையும் அதனால் பெற்றுக் கொள்ளும்படி மேலோர் பேணி விதித்துள்ளனர் மனித சமுதாயம் மாண்புற வந்துள்ள அப் புனித உண்மையை உறுதியாக உணர்ந்து கொள்ள வேண்டும்.

"செலவு நிலை குறைய" என்றது இயன்ற வரையும் செட்டாக முயன்று வருக என்றவாறு வரவைப் பெருக்குக; செலவைச் சுருக்குக. வரவில் கண்ணும் கருத்துமாய் இருத்தல் போல் செலவையும் எண்ணிச் செய்க.

"ஆகா றளவிட்டி தாயினும் கேடில்லை
போகா றகலாக் கடை." (குறள். 478)

வரவு செலவுகளை நுணுகி உணரும்படி இஃது உணர்த்தியுள்ளமை காண்க. இட்டிது = சிறிது. போகுஆறு = பொருள் போகின்ற நெறி; என்றது செலவை. செலவு விரியாதாயின் அக் குடி வாழ்க்கை எவ் வழியும் தளராது என்பதாம்.

வரவினும் செலவு சுருங்கல் உத்தமம்; ஒத்து நிற்றல் மத்திமம்; விரிதல் அதமமாம். வரவுக்கு மிஞ்சிச் செலவு செய்யின் அவ் வாழ்வு பலவகை இளிவுகளையும் அடைந்து பாழாம் என்க.

"ஆன முதலில் அதிகம் செலவானால்
மானம் அழிந்து மதிகெட்டுப்—போனதிசை
எல்லார்க்கும் கள்ளனாய் ஏழ்பிறப்பும் தீயனாய்
நல்லார்க்கும் பொல்லனாம் நாடு." (நல்வழி, 25)

வரவு மீறிய செலவால் இவ்வாறு குடிகேடுகள் வருகின்றன.

வரவு அறிந்து வாழார் மதி அழிந்து வீழ்வார் என்றது அவரது இழிவு நிலைகளை எதிரறிய வந்தது. யோசனையின்றிச் செலவழித்தவர் பின்பு யாசகம் கடன் என்னும் நீச நிலைகளில் புலையாடி நிலை குலைந்து போவர். "அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உள போல இல்லாகித் தோன்றாக் கெடும்" என்பது பொய்யாமொழி ஆதலால் அங்ஙனம் கெட்டு ஒழிந்து போகாமல் செட்டாக வாழ்ந்து சேமம் செய்து கொள்க.

---

247. தன்னைத் தலைவனாச் சார்ந்த குடிவாழ்வைப்
பொன்னைப்போல் போற்றிப் புரந்துவரின் — அன்னவனை
ஞாலம் நயந்து துதிக்கும் நலமுடைய
சீலனென நிற்பன் சிறந்து. (எ)

இ. ள்.

தன்னைத் தலைவனாகச் சார்ந்திருக்கின்ற குடி வாழ்க்கையைப் பலவகையிலும் உயர்த்தி ஒருவன் பாதுகாத்துவரின் அவனை உலகம் உவந்து துதிக்கும்; எவரினும் அவன் உயர்ந்து திகழ்வன் என்றவாறு.

குடியில் உள்ளவர் எல்லாரும் தன்னை முதல்வனாக மதித்துப் போற்றும் நிலைமை எய்தி நிற்றலால் தலைவன் என வந்தான்.

தன்னையே எதிர்பார்த்து நம்பித் தன்பால் அன்பாகச் சார்ந்துள்ள மனைவி மக்களை இனிது பாதுகாத்து வர வேண்டிய கடமையும்பொறுப்பும் தலைவனிடம் நிலையாகநிலைத்திருக்கின்றன.

தனது உரிமையை உணர்ந்து உற்ற குடியை எவ் வழியும் குற்றமறப் புரந்து வர வேண்டும். சார்ந்தவர் ஆர்ந்த நலம் உற ஓர்ந்து புரத்தல் உரிய கடமையை உதவிய படியாம்.

பொன்னைப் போல் போற்றுதல் என்றது பரிபாலனத்தின் அருமையும் இனிமையும் கவனமும் காப்பும் அறிய வந்தது.

உரிமையாளரை இவ்வாறு அன்பாக ஆதரித்துவரின் அவனது பண்பையும் பாட்டையும் வியந்து எல்லாரும் புகழ்ந்து போற்றுவர்.

"ஞாலம் நயந்து துதிக்கும்" என்றது அவனது சீலமும் சிறப்பும் தெரிய வந்தது. கருமவீரனை உயிரினங்கள் உயர்வாகக் கருதிப் புகழ்கின்றன. தருமமும் அவனை மருவுகின்றது

கடமையை உணர்ந்து கருமங்களைக் கருதிச் செய்யும் மனிதன் இருமையிலும் பெருமை அடைகின்றான்.

வீட்டிலுள்ளவர்களை விழைந்து பேணுகின்றவனை நாட்டிலுள்ளவர்கள் புகழ்ந்து காணுகின்றார் என்றது அவனது வினைமாட்சியை நினைவூட்டி நின்றது.

எய்திய மனை வாழ்க்கையை இன்பமுறச் செய்; உய்திகள் பல உளவாம் என்பது கருத்து.

---

248. தீய வழியில் சிறிதும் செலவின்றித்
தூய வழியே தொடர்ந்தருளி—நேயம்
புரிந்து குடியைப் புரப்போனைத் தெய்வம்
பரிந்து புரக்கும் பயந்து. (அ)

இ, ள்,

தீமையான வழிகளில் சிறிதும் செல்லாமல் என்றும் நன்மையான நெறிகளிலே நடந்து யாண்டும் அன்பு புரிந்து குடியைப் பண்புடன் பேணி வருபவனைத் தெய்வம் நண்பு புரிந்து நலம் பல சுரந்து நயந்து காக்கும் என்றவாறு.

தீயவழி என்றது குடி சூது முதலிய கொடிய பழக்கங்களை.

இத் தீமைகளை முதலில் குறித்தது உலகில் நெடிது பரவியிருக்கும் நிலைமை கருதி. இழிந்த வழிகளில் யாதும் இறங்காமல் உயர்ந்த நெறிகளில் உள்ளம் பழகி வருதல் யாண்டும் நல்லதாம்.

பழக்கத்தின் படியே மனிதர் உருவாகி வருதலால் அதன் நலம்தீங்குகளை முதலிலேயே நாடியறிந்து நன்மைகளில் தோய்ந்து கொள்ள வேண்டும்.

சத்தியம் கருணை முதலிய உத்தம நீர்மைகள் இங்கே தூய வழி என வந்தன. மனிதனைப் புனிதப் படுத்தி எல்லா இன்ப

நலங்களையும் இம்மையில் ஊட்டி அம்மையில் முத்தி நிலையையும் நல்கி அருளுதலால் சித்தத்தின் தூய்மையை எவரும் புகழ்ந்து போற்றி வருகின்றார்.

வாயுவினை நோக்கியுள மாண்டவய நாவாய்
ஆயுவினை நோக்கியுள யாக்கை அவையேபோல்
தீயவினை நோக்குமியல் சிந்தனையும் இல்லாத்
தூயவனை நோக்கியுள துப்புரவும் எல்லாம், (குண்டலகேசி)

தோணி காற்றையும், உடல் ஆயுளையும் எதிர்நோக்கி இயங்குகின்றன; அது போல் இன்ப நலங்கள் தூயவனை விழைந்து நோக்கி வருகின்றன என்னும் இது ஈண்டு எண்ணத்தக்கது.

நேயம் புரிந்து என்றது யாவர் மாட்டும் அன்பு செய்து என்றவாறு. நேயம் = அன்பு, இரக்கம்.

மனத்தைப் புனிதப் படுத்தி, இனத்தைப் பேணி, எவ்வுயிர்க்கும் இதம் புரிந்து வருவதே ஒருவன் தனது வாழ்க்கையை இனிது நடத்திய படியாம்.

நீக்கரும் அவாவறுக்க, நிலையாமை முழுதும் காண்க,
வாக்கினை வருந்திக் காக்க, மன்னுயிர்க்கு இதமே செய்க,
தாக்கிய தனக்கின்னாத தான் பிறர்க்கு ஒழிக; என்றும்
ஆக்கமும் அறிவும் சேரும் அழகுறும் நெறியீ தன்றே.
(தத்துவ தரிசனம்)

வணங்கி வழிஒழுகி மாண்டார்சொற் கொண்டு
நுணங்கியநூல் நோக்கி நுழையா—இணங்கிய
பால்நோக்கி வாழ்வான் பழியில்லா மன்னனாய்
நூல்நோக்கி வாழ்வான் நுனித்து, (ஏலாதி)

தன் வாழ்வை மனிதன் நெறி முறைகளில் செலுத்தி நிறை பேறுகள் எய்தும்படி இவ்வாறு வழிகள் பல கூறியுள்ளன.

புனித நெஞ்சனாய் இனிது வாழ்ந்து வருபவன் புண்ணிய சீலனாய்ப் பொலிந்து விளங்கி எண்ணிய நலங்கள் யாவும் எய்தி மகிழ்கின்றான். சித்த சுத்தி தெய்வ சித்தியாகின்றது.

"தெய்வம் பரிந்து புரக்கும் பயந்து" என்றது திருந்திய தூய வாழ்க்கையாளன்பால் தெய்வ கிருபை சுரந்து நிற்கும் திறம் தெரிய வந்தது. பயந்து = அஞ்சி அருளி.

கடமையைக் கருதிச் செய்பவனுக்கு எல்லா நலங்களையும் இனிது உதவி தருமதேவதை அவனை உவந்து காத்தருளுகின்றது.

---

249. மக்கள் மனைவி மருவி அயலமர்ந்த
ஒக்கலிவர் எல்லாரும் உள்மகிழப்—பக்கமெங்கும்
அன்போ டறம்வளர ஆள்வானே என்றென்றும்
இன்போ டுயர்வன் இனிது. (கூ)

இ. ள்.

மனைவி மக்கள் ஒக்கல் முதலிய உறவினங்கள் எல்லாம் உள்ளம் மகிழ அயல் எங்கும் தருமம் வளர மனை வாழ்க்கையை ஆண்டு வருபவனே என்றும் இன்ப நிலையில் நீண்டு திகழ்வன் என்றவாறு.

சிறந்த ஆண் மகனைப் பிறந்தவன் தான் புரந்து வர வேண்டிய உரிமைகளையும்கடமைகளையும்இஃது உணர்த்துகின்றது.

தனது மனைவிமக்களோடு மட்டும் அமையாமல் உறவினரையும் பிற இனங்களையும் விரிந்த நோக்குடன் பேண நேர்ந்த பொழுதுதான் ஒருவனுடைய அருந்திறலாண்மையும் பெருந்தகைமையும் திருந்திய பண்பும் சிறந்து திகழ்கின்றன.

எல்லாரும் உள்மகிழ ஆளுதலாவது தன்னைச் சார்ந்தவர் யாவரும் யாதொரு கவலையும் இன்றிச் சுக சீவிகளாய் வாழ்ந்து வரும்படி சூழ்ந்து பேணுதல்.

உரிமையாளரைப் பாதுகாப்பதில் அன்பு வளர்கின்றது; அயலவரைப் பேணுவதில் அறம் விளைகின்றது.

ஒருவன் தாளாண்மை தன் வீட்டிற்கும் ஊருக்கும் நாட்டுக்கும் பயனைப் பரந்து விரியின் அவனது ஈட்டமும் தேட்டமும் சிறந்த பண்பாடுடையனவாய் உயர்ந்து யாண்டும இன்பம் மிகப் பெறுகின்றன.

மனிதன் இன்பத்தையும் உயர்வையுமே எங்கும் விரும்பி நிற்கின்றான். அவை புண்ணிய கருமங்களால் போதருகின்றமையால் அவ் வினை நலங்களைச் செய்து வந்த போதுதான் அவன் எண்ணியபடியே உயர் நலங்களை எய்த நேர்கின்றான்.

ஒருவனது மனை வாழ்க்கை பலர்க்கும் உபகாரமாய்ச் சிறந்த குறிக்கோளுடன் உயர்ந்து வர வேண்டும்; அவ்வாறு வரின் எவ்வாற்றானும் அவன் திவ்விய நிலைமையை அடைந்து திகழ்வான்.

ஆள்வானே உயர்வான் என்றதனால் ஆளாதவன் இழிவான் என்பது பெறப் பட்டது. மனிதன் செய்வினையால் சிறந்து திகழ்கின்றான். அச் செயல் வழுவின் அவன் உயர்வு அழிகின்றான்.

உரிமையை உணர்ந்து உற்ற கடமையைச் செய்யாதவன் வேறு வழிகளில் வெற்றியாளனாய்த் தோன்றினாலும் அவனை உலகம் குற்றமே கூறும்.

"இல்லாளல் செய்யா இயல்பினான் எவ்வளவு
வல்லாள னாக வளர்ந்தாலும்—தொல்லுலகம்
எள்ளி அவனை இகழும் இழிபழியை
அள்ளி விழுவன் அயர்ந்து."

என்னும் இது ஈண்டு உள்ளி உணர்ந்து கொள்ள வுரியது.

இல் ஆளல் செய்யான் என்பதில் இரு பொருள்கள் மருவி யுள்ளன. தன் மனைவியை மாண்புடன் ஆளாதவன்; மனை வாழ்க்கையை மாட்சியுறப் பேணாதவன் எனக் காணலாகும்.

அகத்தில் உள்ளதை அன்புடன் போற்றி ஆதரியாதவன் புறத்தில் பல காரியங்களுக்குத் தலைவனாய்ப் பிலுக்கித் திரிந்தாலும் அவன் பிழைபாடுடையனாய் இழிவே அடைவான்.

வீட்டை ஆளத் தெரியாதவன் வெளியே மேட்டிமைகள் காட்டி நாட்டில் கோட்டி கொண்டாடி வருதல் பெரிய கோட்டித்தனமே யாகும்; உன்னைத் தாரகமாக நம்பியுள்ள குடியை முன்பு அன்பு செய்து பேணுக; பின்பு ஊருக்கும் உலகுக்கும் உரிய கடமைகளைச் செய்க.

தெய்வம் நம் கையில் கொடுத்த காரியத்தைக் கண்ணும் கருத்துமாய்ச் செய்துவரின் எண்ணி எடுத்த புண்ணியங்கள் யாவும் இனிது செய்த படியாம். உரியது புரிய அரியன அமையும்.

தன்னைக் கருதியுள்ள குடும்பத்தை இடும்பைகள் யாதும் அணுகாதபடி உரிமையுடன் போற்றுக; உலக நலன்களையும் கவனித்து உயர்வினை ஆற்றுக என்பது கருத்து.

250. உற்ற குடியை உறுதி பெறவுயர்த்திக்
கொற்றமுடன் நிற்கும் குலமகனை—மற்றிந்த
ஞாலமெலாம் ஆளும் நலமருளி நல்லிறைவன்
மேலவனுச் செய்வன் விரைந்து. (ம)

இ. ள்.

தான் உரிமையாகப் பிறந்த குடியை உறுதிபெற உயர்த்தித் தலைமையாகச் செய்தருளும் குலமகனை இறைவன் உலகம் எல்லாம் ஆளும்படி பெருமை செய்தருளும் என்றவாறு.

இது, குடியை ஆள்பவன் படியை ஆள்வான் என்கின்றது.

உற்ற குடி என்றது தன்னைத் தலைவனுகப் பெற்ற குடும்பத்தை. உறுதி பெற உயர்த்தலாவது பொருள் புகழ்களால் தலைமையாக்கி என்றும்எவரும் மதித்து வரும்படி தன்குடியை நன்கு நிலை பெறச் செய்தல்.

கரும வீரனுய் நின்று யாண்டும் சலியாமல் முயன்று தன் குடியை உயர்த்திக் காரிய சித்தி பெற்றுள்ளமையால் வெற்றியாளனுய் அவன்வியந்து போற்றநேர்ந்தான். கொற்றம்=வெற்றி.

குலமகன் என்றது சிறந்த ஆண்மகன் என்றவாறு.

தான் பிறந்த குடி உயர்ந்து திகழ முயன்று வந்தவன் ஆதலால் குலமகனென உலகம்கொண்டாட அவன்உயர்ந்து நின்றுன்.

சேர்ந்த குடும்பத்தை நன்கு பேணி உயர் நிலையில் செய்த அவனை அனைவரும் உவந்து கொள்கின்றுர்; கொள்ளவே பதவியில் உயர்கின்றுன்; உதவிகள் வளர்கின்றன.

மனைவாழ்வை இனிது பேணினவன் பின்பு மாநிலம் ஆளவும் நேர்வன் என்றது அவனது மேனிலையை நினைந்து.

இறை என்பது கடவுளையும் அரசனையும் குறித்துவரும் இருபொருள் ஒரு சொல். தரம் தெரிந்து எல்லார்க்கும் நன்மை செய்யும் தன்மையே இறைமையின் உரிமை ஆதலால் நல் இறை என வந்தது. முறை செய்பவனை இறைவன் நிறை செய்கின்றுன்.

தன் வீட்டை இனிது பேணி வந்தவன் நாட்டையும் நன்கு பாது காப்பன் என்று கருதித் தன் ஆட்சியில் சிறந்த பதவியை உதவி அரசன் அவனை விழைந்து ஆதரித்து வருவன்.

மனையாளனது வினை ஆண்மையை மதியுடையார் எவரும் மதித்து மகிழ்கின்றார். கரும நிலையில் உயர்ந்தவன் தரும நிலையிலும் உயர்ந்து பெருமை மிகப் பெறுகின்றான்.

இவ் வினையாளனைக் கடவுளும் கனிந்து நோக்கி உலகம் ஆளும் தலைமையை அவனுக்கு உவந்து அருளுகின்றார்.

"ஞாலம்எல்லாம் ஆளும் நலம்அருளி இறைவன் மேலவனுச் செய்வன்" என்றதனால் மனை வாழ்வைப் புனிதமாக நடத்தினவனது கண்ணியமும் புண்ணியப் பேறும் இனிது புலனும்.

உற்ற வாழ்வை எவ்வழியும் புனிதமாகப் பேணி மனிதன் மகிமையுடன் ஒழுக வேண்டும் என்பது கருத்து.

"உண்டா லம்மஇவ் வுலகம் இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்
தமியர் உண்டலும் இலரே; முனிவிலர்;
துஞ்சலும் இலர்பிறர் அஞ்சுவ தஞ்சிப்
புகழ்எனின் உயிரும் கொடுக்குவர்; பழி எனின்
உலகுடன் பெறினும் கொள்ளலர்; அயர்விலர்;
அன்ன மாட்சி அனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாட்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே."

(இளம்பெருவழுதி)

---

### இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

மனை வாழ்க்கையை மாண்புறச் செய்க.
இல் வாழ்க்கை எவர்க்கும் இதமானது.
ஞான நோக்குடன் அதனை நன்கு பேணுக.
பொருளால் வாழ்வு பொலிவுறுகின்றது.
அதனை அளவறிந்து பேணின் வளம் மிகப் பெறும்.
மனை வாழ்வு உயரின் மாநிலம் புகழும்.
தெய்வ அருளும் சேர வரும்.
புகழ் வளர்ந்து புண்ணியம் பெருகும்.
குடி புரந்தவன் படி புரந்தருளுவான்.

உறு வது வாழ்க்கை நிலை முற்றிற்று.

---

# இருபத்தாறும் அதிகாரம்.

## கடன்.

அஃதாவது பிறனுடைய பொருளை அவனிடம் இரவலாக வாங்குவது. திரும்பத் தருவதாக உறுதிமொழி தந்து பெறுவது ஆதலால் கடன் என வந்தது. மனிதனது வாழ்வைப் பலவகையிலும் இது பாழ்படுத்திக் கொடிய துயரங்களை நெடிது விளைத்து விடும்; இதனை யாண்டும் தீண்டலாகாது என்று உணர்த்துகின்றமையால் வாழ்க்கை நிலையின் பின் இது வைக்கப் பட்டது.

251. உள்ளபொருள் எல்லாம் ஒழிக்கும் உளக்கவலை
வெள்ளம் எனப்பெருக்கி வீழ்விக்கும்—எள்ளல்மீக்
கூட்டும் பெருமை குலைக்கும் கொடுந்தீமை
காட்டும் கடனும் கடு. (க)

இ-ள்.

கடன் என்னும் விடம் உன் கையில் உள்ள பொருள்களைக் கடிதின் ஒழிக்கும்; மனக் கவலையை விளைத்து மதிப்பைக் கெடுக்கும்; இகழ்ச்சிகளைப் பெருக்கி இடர்களை மடுத்து எங்கும் துன்பம் மிகச் செய்யும் என்றவாறு.

கடனால் விளையும் தீமைகளை எடுத்துக் காட்டி அதனை எவ்வகையினும் எய்தலாகாது என இஃது உணர்த்துகின்றது.

பொருள் பலவகை நிலைகளில் மருவியுளது. நன்செய், புன்செய், தோட்டம், வீடு, மாடு, அணி, மணி, பொன், நெல் எனப் பலபடியாகப் பரவி யுள்ளமையால் பொருள் எல்லாம் என அதன் பன்மையும் தன்மையும் காண வந்தது.

உரிமையான இந்த உடைமைகள் சிறுமையான கடனால் சீரழிய நேர்கின்றன. தூய குழுவுள் தீய வழுவாய் அது தீமை புரிகின்றது.

ஒரு செல்வக் குடியில் கடன் வந்து புகின் நல்ல பாலில் பிரை புகுந்தது போல் அது நிலைதிரிந்து பிழையாய் முடிகின்றது.

கடனாய் வந்தது வட்டிக்குமேல் வட்டியாய் வளர்ந்து பெருகி இருந்த பொருளை அருந்தி வருகின்றது. கடன் என்னும் பேய்க்கு வட்டி கொடிய பசியாம். அப்படு தீ பற்றிய குடி அடியோடு

பாழாம். "துட்டுக்கு எட்டுச் சட்டி வாங்கிச் சட்டி ஒன்று துட்டு எட்டு என்று விற்றலும் செட்டி வட்டிக்குக் கட்டாது" என வழங்கி வருதலால் அதன் கொடுமையும் குடி கேடும் ஒருவாறு அறிந்து கொள்ளலாம்.

"வட்டியே பெருக்கிக் கொட்டியே ஏழை
மனைகவர் கருத்தினேன்; ஓட்டைச்
சட்டியே எனினும் பிறர்கொளத் தரியேன்;
தயவிலேன்; சூதெலாம் அடைத்த
பெட்டியே நிகர்த்த மனத்தினேன்; உலகில்
பெரியவர் மனம்வெறுத் திடச்செய்
எட்டியே மண்ணுங் கட்டியே அனையேன்;
என்னினும் காத்தருள் எனையே." (அருட்பா)

வட்டிக்குக் கடன் கொடுப்போரது மனக் குறிப்புக்களையும் வன்கண்மைகளையும் சுட்டி வந்துள்ள இதனை உய்த்துணர்ந்து கொள்க. பொருள் ஆசையில் அருள் நாசம் ஆகின்றது.

பிறனிடம் பொருள் கடன் வாங்கத் தொடங்கிய பொழுதே தன் பொருள் கால் வாங்கத் தொடங்குகின்றது. கடன் கொள்ளுவதில் மடியும் மடமையும் உடன் கொண்டு எழுகின்றன.

வரவுணர்ந்து செலவு செய்து சீரும் செட்டுமாகக் குடித்தனத்தை நடத்தத்தெரியாத மடத்தனமே கடன்வாங்குவதற்குப் பெரும்பாலும் காரணம் ஆகின்றது. ஒரு முறை கடன் பட்டவன் அதிலிருந்து மீளுதல் மிகவும் அரிது. வருகின்ற வரவை வட்டி வாயில் கொட்டுகின்றான்; கட்டமுடியாமலும் கட்டம் அடைகின்றான். கடன் ஒரு ஈனச் சூனியம் போல் ஏறி விடுதலால் நிலமும் விளையாமல் நிலை திரிகின்றது.

"விளைநிலம் வெங்கடன் மேவின் விளைவு
விளையா விளையும் வினை."

என்றமையால் கடனாளியின் விளைவு நிலை காணலாகும். இவ்வாறு பல கேடுகளையும் விளைத்துக் குடியைக் கெடுத்து விடுதலால் "கடன் உள்ள பொருள் எல்லாம் ஒழிக்கும்" என வந்தது.

கடன் பட்டவன் அல்லும் பகலும் உள்ளம் கலங்கி உளைந்து உளைந்து தவிப்பன்; எல்லாரும் அவனை எள்ளி இகழ நேர்வர்; தலை நிமிர்ந்து வெளிவர அஞ்சித் தன் உள்ளேயே அவன் நிலை

குலைந்து தளர்வன்; இங்ஙனம் புலையான துயரங்கள் பலவும் விளைத்துப் பாடழித்து விடுதலால் "கவலை பெருக்கி, எள்ளல் கூட்டி, பெருமை குலைத்துத், தீமை காட்டும்" எனக் கடனின் தீங்குகள் எல்லாம் காண வந்தன.

உயிர்க்கேடு செய்யும் நஞ்சுபோல் கடன் குடிகேடு செய்தலால் அது கடு என நேர்ந்தது. கடு=விடம். கடுத்துக் கொல்வது என்னும் காரணம் பற்றி இப்பேர் விளைந்தது.

கொடிய துன்பங்களுக்கெல்லாம் நெடிய காரணமாயுள்ளமையால் கடனை ஒரு கடிய விடமாகக் கருதி அருகு அணுகாது ஒழித்து விடுக. ஒழியாதுவிடின் உன்னை அது ஒழித்து விடும். உண்மையை ஓர்ந்து நன்மையை நாடி நலம் செய்து கொள்ளுக.

---

252. மண்டு பெருநோயும் வன்கடனும் வெந்துயரம்
உண்டு படுத்துவதில் ஒப்பெனினும்—கொண்டநோய்
ஊனுடலை வாட்டும் உறுகடனே உள்ளுயிரை
ஈன முறவழிக்கும் ஈர்த்து. (உ)

இ. ள்.

பெரும் பிணியும் கொடுங்கடனும் துன்ப நிலைகளில் சமம் ஆயினும் நோய் உடம்பை மட்டும் வாட்டும்; கடன் உயிரை இழிவுபடுத்தி அழிவு செய்யும் என்றவாறு.

பெருநோய் என்றது குட்டநோய் முதலிய கொடிய வியாதிகளை. உடம்புகளைப் பிணித்து நின்று துன்பங்களை உறுத்துதலால் பிணி எனவும் நோய் எனவும் அது பெயர் பெற்று நின்றது.

அந்த நோயை இணைத்துக் காட்டி கடனின் தீமையை இது உணர்த்துகின்றது. வன் கடன் என்றது எளிதில் தீர்க்க முடியாத வலிய கடனை. தன்னைத் தொட்டவனைக் கெட்டவன் ஆக்கிக் குடிகேடு செய்து விடும் கொடுமையுடைமையால் வன்மை அடை பெற்று வந்தது. கடிய நோயினும் கடன் கொடியதாம்.

நோய் துயரம் செய்யுமாயினும் உடல் அளவில் நின்று வெளியே ஒழியும்; கடன் உள்ளே உயிரைப் பற்றி நின்று கொள்ளித் தீ போல் அல்லும் பகலும் துள்ளத் துடிக்க உள்ளத்தைச் சுட்டு வருத்தும். அச் சுடு தீ படு தீமையாம்.

கடன் ஈனம் மிகவுடையது; மானக்கேடு ஆனது; ஆதலின் அதனை அடைந்தவன் அவலக் கவலைகளில் ஆழ்ந்து அல்லலுழந்து அலமந்தயர்கின்றான்.

> "உண்ட உணவும் உடலோடு சேராதே!
> கண்டவிடம் எல்லாம் கடுவிடமாய்—கொண்டவனை
> ஈனப் படுத்தும் இழிகடன்போல் எந்நரகம்
> ஊனப் படுத்தும்? உரை."

நரக துன்பத்தினும் கடன் கொடிய துயரமாம் என்பது இதனால் அறியலாகும் கடன் நெஞ்சில் நிலைத்து நஞ்சமாக் கொதிக்கும்; அதனைக் கொடுத்தவனைக் கண்ட போதெல்லாம் உயிருணர்ச்சி குன்றும்; உயர்ச்சி பொன்றும்; உள்ளக் கிளர்ச்சி யாவும் ஒருங்கே ஒழியும்; இங்ஙனம் தலைமையான மனிதத் தன்மையைக் கொலை செய்து வருதலால் அதன் நிலைமை புலனும்.

"உயிரை ஈனம் உற ஈர்த்து அழிக்கும்" என்றது புலையான கடனின் கொலை பாதகத்தைக் கூர்ந்து உணர்ந்து கொள்ள வந்தது.

மானம் மரியாதைகளை இம்மையில் அழிப்பதோடு தொலையாமல் வரு பிறவிகளிலும் உயிர்களைச் சிறுமைப் படுத்திக் கடன் துயர்களை விளைக்கும்.

> "பட்ட வெங்கடன் பாரில் ஒழிக்கவே
> ஒட்டி மாடுக ளாகி உழைப்பன;
> கெட்ட தீமை கெடாமல் உயிர்களைக்
> கட்டி நின்று கடுந்துயர் செய்யுமே."

என்றமையால் உயிர்களை விடாமல் தொடர்ந்து பற்றிக் கடன் துயருறுத்தும் கடுமையும் கொடுமையும் காணலாகும்.

> "கடங்கொண்டு பின்னைக் கொடாது கழிப்பின்
> இடங்கொண்டு நிற்கும் இகழ்ச்சி; அதா அன்று
> மடங்கொள் விலங்கா உழைப்பர்பின் வந்தே
> தொடங்கற்க இத்தீத் தொழில்." (இன்னிசை இருநூறு)

இங்ஙனம் கொடிய துயரங்களுக் கெல்லாம் கடன் நெடிய நிலையமா யுள்ளமையால் அதனை அயலணுகாமல் பாதுகாத்து உயர் நிலையில் ஒழுகி உறுதி நலம் பெறுக.

---

253. கடன்வாங்கச் செல்வனைப்போய்க் காணின் உயிரை
உடன்வாங்க அன்னான் உபாயம்—திடனாக
அப்பொழுதே செய்துகொள்வன் ஆயபின் நீயவனுக்
கெப்பொழுது மேயடிமை எண். (ரு)

இ. ள்.

செல்வனிடம் நீ கடன் வாங்கப் போனால் உன் உயிரை அவன் உடன் வாங்கிக் கொள்வான்; அதன்பின் அவனுக்கு ஈன அடிமையாகவே நீ இருந்து தொலைவாய்! அந்த ஊன நிலையை உணர்ந்து உறுதி தெளிக என்றவாறு.

பொருளுடையவனிடம் ஒருவன் கடன் வாங்க நேர்ந்தால் அவனுக்கு உயிராதாரமாயுள்ள வீடு நிலம் முதலிய உடைமைகளை எல்லாம் தனக்கு உரிமையாக அவன் எழுதி வாங்கிக் கொள்ளுகின்றான். ஆயிரம் வெண்பொன் பெறுவதற்கு பதினாயிரம் நன்பொன் பெறும்படியான சொத்துப் பதியப் படுகின்றது. அந்தப் பதிவிலிருந்து பின்பு மீளுவது அரிதாம். அந்த எழுத்தைக் கொடுத்த பொழுதே தன் கழுத்தைக் கொடுத்த படியாய் அவனுக்கு இவன் கட்டுப் பட்டு நிற்கின்றான். அவனைக் கண்ட பொழுதெல்லாம் அஞ்சி வணங்கி அடங்கி ஒடுங்கி நிற்க வேண்டிய நெஞ்சு நிலை தானாகவே இவனுக்கு நேர்ந்து விடுகின்றது. அவன் ஆண்டவனாய் ஆள்கின்றான்; இவன் அடிமையாய்த் தாழ்கின்றான்.

"The rich ruleth over the poor, and the borrower is servant to the lender." (Solomon)

"செல்வர் ஏழைகளை அடக்கி ஆள்கின்றார்; கடன் வாங்கினவன் கடன் கொடுத்தவன் முன் தானாகவே அடிமையாய் அடங்கி நிற்கின்றான்" எனச் சாலோமோன் என்னும் மேல் நாட்டு நீதிமான் கூறியுள்ளது ஈண்டு நினைக்கத் தக்கது.

கையில் யாதும்இல்லாத ஏழையினும் கடனாளி பேதையாய்ப் பீழை யடைகின்றான். அவனுடைய நிலை மிகவும் பரிதாப மானது.

உயர்வையும் உரிமையையும் மானத்தையும் இங்ஙனம் ஒருங்கே ஒழித்துப் பெருங்கேடு செய்து விடுதலால் கடனின் ஈனக் கொடுமை எளிது தெளிவாம்.

கடன் வாங்கச் செல்கின்ற உன் உயிரை உடன் வாங்கிக் கொள்வர் என்றது அக் கேட்டை உணர்ந்து ஒதுங்குக என உணர்த்திய படியாம். மானக் கேடான அந்த ஈனத்தை மருவற்க.

மனிதனது தலைமையையும் நிலைமையையும் கடன் பாழ் படுத்தி விடுகின்றது; அப் பாழில் வீழாமல் நீ வாழ வேண்டும்.

எப்பொழுதுமே அடிமை என்றது கடனின் கொடுமை தெரிய வந்தது. ஒரு முறை பட்ட கடன் தீர்ந்து போனாலும் அவ் வடு தீரா வசையாய்ச் சேர்ந்து நிற்கின்றது. அவ் வசையுட் படாமல் அசைவில் ஆண்மையுடன் முயன்று இசை புரிந்து வாழ்க. இளிவும் இன்னலும் கடனால் விளைதலால் அதனை எவ் வகையினும் தீண்டலாகாது.

கடன் உள்ளத்தை அரித்து உயிரைத் துயருறுத்துகின்றது. கடன் கொடுத்தவனை வெளியே காணும் போதெல்லாம் உள்ளே நாணம் அழிகின்றது. மானம் மரியாதைகளை ஈனப் படுத்தி வருதலால் அது இன்னா நிலையமாய் ஓங்கி மனிதனைச் சின்னபின்னம் செய்கின்றது.

உடம்பா டிலாத மனைவிதோள் இன்னா;
இடனில் சிறியாரோடு யாத்தநண்பு இன்னா;
இடங்கழியாளர் தொடர்பு இன்னா; இன்னா
கடனுடையார் காணப் புகல். (இன்னா நாற்பது, 12)

துன்ப நிலைகளைத் தொடுத்துச் சொல்லி வரும் பொழுது கடனுடையார் காணப்புகல் இன்னா எனக் கபிலர் இவ்வாறு குறித்திருக்கிறார். நாணக் கேடு ஆதலால் இது காணச் செய்தது.

கடனாளி தலை நிமிர்ந்து செல்ல முடியாது; செல்வம் உடையவனாயினும் கடன் கொண்டால் அவன் உள்ளம் உடைந்து படுகின்றது. "கடன்காரன் கடன் விடான்; பழிகாரன் பழி விடான்." என்னும் பழமொழியால் கடன் ஒரு கொலைபாதகம் போல்வது; தொலையாத துயரமானது என்பன எளிது புலனாம்.

பொள்ளல் உடைபோல் கடன் வாழ்வு எள்ளல் மிக அடைகின்றது. "கடன் இல்லாச் சோறு கால் வயிறு" என்னும் வழக்கு பட்டினி கிடந்தாலும் கடன் படலாகாது என்பதை விளக்கி நிற்கின்றது. கடும் பசியினும் கடன் கொடும் பழி யுடையது.

கடமுண்டு வாழாமை காணடல் இனிதே;
நிறைமாண்பில் பெண்டிரை நீக்கல் இனிதே;
மனமாண்பி லாதவரை அஞ்சி அகறல்
எனைமாண்பும் தானினிது நன்கு. (இனியவை நாற்பது, 11)

வாழ்க்கையின் இனிமைகளைக் குறித்து இசைத்து வருங்கால் பூதஞ்சேந்தனார் என்னும் சங்கப்புலவர் இங்ஙனம் உரைத்திருக்கிறார். கடன் கொண்டு உண்டு வாழாமை காண்டற்கு இன்பமாம் என இதில் தலைமையாகச் சொல்லி யிருத்தலால் அதன் நிலைமை காணலாம்.

---

254. வெய்யபகை தீநோய் வினைகடனுள் எச்சமின்றிச்
செய்ய வகையாகத் தீர்த்தொழிக—நொய்யதென
எண்ணி யிருந்தால் இருங்கறையான் கொண்டழிந்த
வண்ணமரம் போல வரும். (௪)

இ. ள்.

பகை தீ பிணி வினை கடன் என்னும் இவற்றை அடியோடு தீர்த்து விடுக; மிச்சம் வைத்தால் கறையான் பற்றிய மரம்போல் முழுதும் அழிவு நேரும் என்றவாறு.

கடன் வாங்கவே கூடாது; ஒரு வேளை அவசிய நிமித்தம் வாங்க நேர்ந்தால் அதனை விரைந்து தீர்த்து விட வேண்டும்; அங்ஙனம் தீர்க்குங்கால் மிச்சம் யாதும் வையாமல் முற்றும் துடைத்து விடுக. எச்சம் இருந்தால் அது உச்சமாய் வளர்ந்து இழிவும் அழிவும் விளைத்து விடும்.

கடன் எச்சம் தீதாம் என்னும் இதில் பிணி தீ வினை பகைகளும் உடன் இணைத்து உணர்த்தப்பட்டன.

களையை வேரோடு கல்லி எறிதல் போல் களையத்தொடங்கிய தீமைக் குழுவையும் எஞ்சாமல் களைந்து ஒழிக்க வேண்டும்; கொஞ்சம் தானே என்று மிஞ்சவிடின் அந்த எச்சம் நாச நிலையில் வளர்ந்து நீசம் விளைக்கும் என்க.

வினைபகை என்றிரண்டின் எச்சம் நினையுங்கால்
தீ எச்சம் போலத் தெறும். (குறள், 674)

என்னும் இந்த அருமைத் திருவாக்கை ஈண்டு உரிமையுடன் உணர்ந்து கொள்க. கடன் வாங்குவது எளிது; அதனைத்திரும்பத்

தீர்ப்பது கடினம்; தீர்த்தற்குரிய வசதி வாய்த்தாலும் அசதியே ஆழ்வதும் கொள்ளும் போது உள்ள உள்ளம் கொடுக்கும்போது இருப்பதில்லை.

'உண்கடன் வழிமொழிந்து இரக்குங்கால் முகனும்தாம்
கொண்டது கொடுக்குங்கால் முகனும்வேறு ஆகுதல்
பண்டும்இவ் வுலகத்து இயற்கை; அஃது இன்றும்
புதுவது அன்றே புலனுடை மாந்திர்!'' (பாலைக்கலி, 21)

கடன் தீர்ப்பதில் உள்ள அருமைப் பாட்டை இந்தப்பாட்டு எவ்வளவு அழகாக உணர்த்தியுள்ளது! பொருள் நிலைகளையும் அனுபவங்களையும் ஊன்றி உணர்ந்து கொள்ள வேண்டும்.

தருமர் ஒரு முறை அரிய யாகத்தின் பொருட்டு உரிய ஓர் மன்னனிடம் கடன் கேட்டார்; வேண்டிய பொருளை எடுத்துக் கொள்ளும்படி அவ் வேந்தன் நிதியறையைத் திறந்து காட்டித் ''தேவையானதை எடுத்துக் கொள்ளுங்கள்; தாங்கள் திரும்பக் கொடுக்கும் பொழுது இது சமயம் உள்ளது போல் உங்கள் உள்ளம் இருக்க வேண்டும்'' என்று வணக்கமுடன் வேண்டினன். அவ்வுரையைக்கேட்டதும் தருமர் திகைத்தார்; கருதி நோக்கினர்; அவ்வாறு நெஞ்சம் இருக்க முடியாது என்று யூகித்து அக்கடனை வாங்காமல் அத் தரும சீலர் மீண்டு வந்தார்.

இயற்கை விநோதமான இந்த அனுபவத்தை மீறி மனிதன் கடன் வாங்குவது செயற்கை விரோதமாம். சிறுமையான அத் தீமை அறியாமையால் நேர்ந்து விடின் அதனை அடியோடு தீர்த்து ஒதுங்கி விடுக; ஒதுங்காது ஒட்டி நின்றால் குடி கெட்டு ஒழியும். கறையான் மண்டிய மரத்தைக் கடன் கொண்ட குடிக்கு ஒப்புக் காட்டியது அழிவு கண்ணுக்குத்தெரியாமல் நிகழும் நிலைமை கருதி.

---

255. சேயா ரிடம்கொளினும் சிறிநிதம் தொந்தரிக்கும்
பேயார் இடம்கடனைப் பேணற்க—சாயாத
மெய்யினுறு புண்ணினுமே மிக்கதுயர் செய்வருளங்
கையிற் சிரங்குபோற் காண். (ரு)

இ. ள்.

அயலகன்றுள்ள பெரியாரிடம் கொண்டாலும் அடுத்துள்ள சிறியாரிடம் கடனைக் கொள்ளற்க; கொள்ளின் உள்ளங்கைச் சிரங்குபோல் நாளும் மிகவும் அல்லலைச் செய்வர் என்றவாறு.

பேயார் என்றது பெருளாசை மண்டி மருள் கொண்டுள்ள புல்லரை. அவரிடம் ஏதேனும் ஒன்று பெறுதல் மிகவும் துயரமாம்.

கடன் கோடல் எவரிடமும் இழிந்தது; அதிலும் தரம் தெரியாத அற்பரிடம் கொண்டால் அல்லலும் அவமானமும் ஒல்லையில் எழும் ஆதலால் அத் தொல்லையில் விழாதே எனக் கொள்ளும் நிலைமையை உள்ளம் தெளிய இஃது உணர்த்துகின்றது.

கடனைப் புண் என்று குறித்தது அரிப்பு அருவருப்பு வெறுப்பு முதலிய துயரக் கூறுகள் தோய்ந்து நாளும் துன்பம் புரிந்து வருதல் கருதி.

தக்கவரிடம் கொண்ட கடன் முதுகில் உள்ள புண் போலாம்; தகாதவரிடம் கொண்டது உள்ளங்கைச் சிரங்கு போல் அல்லலும் எரிச்சலும் பெருக்கித் தொல்லைகள் மிகச் செய்யும்.

உணவை எடுத்து உண்ணவும் விடாமல் உறு துயராய் அது பெருகியுள்ளது போல் அச் சிறியவர் முறுகி வருத்துவர்.

"கடனைக் கொடுத்துவிட்டு மறுவேலை பார்; அடுப்பில் உலை ஏற்ற விடேன்; வில்லாததை விற்றுக் கொடு" என்று இன்னவாறு சொல்லாதன எல்லாம் சொல்லித் துயரப் படுத்துவர் ஆதலால் அப் புல்லர் கடன் பொல்லாதது என வந்தது.

யாரிடமும் எவ்வகையிலும் யாதும் கடன் படாது வாழ்பவனே கண்ணியவான் ஆவன்; அவ் வாழ்வே புண்ணியம் உடையதாய்ப் புகழ் மலிந்து பொலிந்து விளங்கும்.

"தாளாளன் என்பான் கடன்படா வாழ்பவன்;
வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணாதான்;
கோளாளன் என்பான் மறவாதான்; இம்மூவர்
கேளாக வாழ்தல் இனிது." (திரிகடுகம், 12)

தாள் ஆளன் என்றது முயற்சியாளனை. தாள் = முயற்சி. வேளாளன் = உபகாரி. கோளாளன் = ஞாபக சத்தியுடையவன். கடன்படாமல் முயன்று வாழ்பவனே உயர்ந்தவன். அவ்வாழ்வே சிறந்தது; அவனது உறவையே அறிவுலகம் உவந்து கொள்ளும் என இஃது உணர்த்தியுள்ளமை காண்க.

256 தாய்போல் வளைந்து தழுவிக் கடன்கொடுத்துப்
பேய்போல் முனைந்து பிடுங்குவார்—நோயினுமே
தீயதனை எவ்வகையும் தீண்டற்க தேர்ந்துமுயன்
றுயதையே கொள்க அமர்ந்து. (சா)

இ. ள்.

முதலில் தாய்போல் இனியராய் வளைந்து கடன் கொடுத்தவர் பின்பு பேய்போல் கொடியராய் முனைந்து பிடுங்குவார்; தீய நோயினும் தீய அதனை எவ்வகையினும் தீண்டாதே; தெளிந்து முயன்று உய்தியை உணர்ந்து கொள்க என்றவாறு.

தம் பொருளைப் பெருக்கிக் கொள்வதில் செல்வர்க்கு ஒரு பெரிய விருப்பம். அதனை வேறு துறைகளில் விரித்துப் பயன் படுத்த மாட்டாமல் வட்டிக்குக் கொடுப்பதில் வாஞ்சை மீக் கொள்கின்றனர். அதிகமான வட்டிக்குப் பணத்தைப் பிறரிடம் விட்டு வைக்க வேட்கை மீதூர்ந்துள்ளமையால் கடன் வாங்க வருபவரிடம் அவர் கனிவு காட்ட நேர்கின்றார்.

அன்புடையவர் போல் நடித்து நண்பு பாராட்டி இன்புடன் வசப் படுத்திக் கொள்ளுதலால் “தாய்போல் வளைந்து” என அவர் வழங்கி வரும் உளவுகள் உணர்ந்து கொள வந்தது.

இங்ஙனம் முன்பு இனியராய்க் கடன் கொடுத்தவர் பின்பு கொடியராய் மாறி அடு துயர் புரிய மூள்கின்றனர்.

பேய் போல் என்றது அவரது கடுமையும் கொடுமையும் கருதி யுணர வந்தது பேய் உயிர்க்கேடு செய்யும்; அவர் குடி கேடு செய்கின்றார். கெடு நிலையில் ஓரளவு ஒப்பாயினும் பேரிழவு புரிவதில் அவர்க்கு நேரளவாகப் பாரளவில் வேறு அளவு கூற முடியாது. பொருளை உயிரினும்அருமையாகக்கருதி உரிமையுடன் அவர் உருகி யுள்ளவர். முதலினும் வட்டியின் மீதே அவருக்கு அதிக ஆசை. நாளும் பெருக்கி நீள எண்ணி நெடிது நிற்றலால் அவ்வாவு தாமத மாய போது பசி கொண்ட பேய் போல் விசை மண்டி எழுந்து வெந்துயர் புரிகின்றார்.

கடன் வாங்குங்கால் இன்பமும் திரும்பச் செலுத்துங்கால் துன்பமும் கொண்டவர்க்கு உண்டாகின்றன. கொடுக்கின்றவர்க்கு அவ்வாறு இல்லையாயினும் சில இடங்களில் அல்லல்கள் அடுத்து

வருகின்றன. இங்ஙனம் தொல்லைகளும் துயரங்களும் சூழ்ந்து நிற்றலால் வட்டிக்குக் கடன் கொடுப்பது கெட்டது; அது பாப மான செயல்களுள் ஒன்றும் என மேலோரும் நூலோரும் அதனை வெறுத்திருக்கின்றனர்.

வட்டி தீது என்பது மகமது நபியின் மத விதிகளுள் ஒன்று.

"The worst thing he can generally do is to lend it."
(Ruskin)

"மனிதன் செய்யும் கேடுகளுள் வட்டிக்குப் பணம் கொடுப்பது மிகவும் கெட்டது" என ரஸ்கின் என்பவர் கூறி யிருக்கிறார்.

"Neither a borrower, nor a lender be;
For loan oft loses both itself and friend,
And borrowing dulls the edge of husbandry."
(Hamlet, 1-3)

"கடன் கொடுப்பதும் கொள்வதும் கூடாது; கடனால் நட்பு ஒழியும்; பொருளும் அழியும்; சீரான குடிவாழ்க்கையின் நீர்மை யை அது சீரழித்து விடும்" என பொலோனியஸ் என்னும் மந்திரி தன் மகனுக்கு இவ்வாறு அறிவுறுத்தி யிருக்கிறான். ஆங்கிலக் கவிஞராகிய ஷேக்ஸ்பியர் கடனை விடம் என வெறுத்திருக்கிறார்.

எல்லா நாடுகளும் கடன் கோடலை இங்ஙனம் இகழ்ந்துள்ள மையால் அதன் பொல்லா நிலைமையை உணர்ந்து கொள்ளலாம். "முயன்று ஆயதையே கொள்க" என்றது உன் முயற்சியால் வந்த பொருளைக் கொண்டே குடிவாழ்க்கை செய்க; கடனை எவ்வகை யானும் யாண்டும் யாதும் தீண்டாதே என வேண்டிய வாறும்.

---

257. கடன்கொண்ட அன்றே கடுந்துயரம் எல்லாம்
உடன்கொண் டுறுமி உறுமால்—விடம்கொண்ட
மீனே அதனை விழையல் விழையினே
ஆனு தவலம் அறி. (எ)

இ. ள்.

கடன் கொண்ட அப்பொழுதே கொடிய துயரங்கள் எல்லாம் உடன் மண்டி உறுமி எழுகின்றன; அதனை நீ கொண்டாயேல் விடம் உண்ட மீன்போல் விளிந்து ஒழிந்தாய் என்றவாறு.

துயரம் உழமி உறும் என்றது துன்பங்கள் அடர்ந்து தொடர்ந்து ஆர்த்து வருதலை நோக்க வந்தது. உறுதல்=உள்ளே கறுவு கொண்டு குமுறுதல். உயிர்க்கேடு செய்யும் கொடிய மிருகங்கள் போல் துயர்க் கேடுகள் சீறி மீறி அடர்தலை நேரில் விளக்கி நின்றது.

கடன் வாங்க ஒருவன் இறங்குதல் துயரக் கடலில் வீழ்ந்தது போன்ற ஓர் அவலச் செயலாம். அவலம் ஆனுது என்றது ஓயாத கவலைகள் ஓங்கி வருதல் கருதி. ஆனல்=நீங்கல், ஓய்தல்.

மடி மிடி மடமை மானக்கேடு ஈனச் செலவு முயற்சிக் குறைவு என்னும் இவைகள் கடன் கோடலுக்குக் காரணங்கள் ஆகின்றன. ஒருவன் கடன் படின் இந்த இகழ்ச்சிகளுள் ஏதாவது ஒன்றை அவன் உடையவனுகின்ருன்; ஆகவே திருந்தி முயன்று பின்பு அவன் உயர்ந்து வர முடியாதவனுய் முடிந்து படுகின்ருன்.

இங்ஙனம் படாமல் ஒதுங்கிப் பாடறிந்து முயன்று பீடு பெறுகின்றவன் நாட்டுக்கும் மனித சமூகத்திற்கும் நன்மை செய்தவனுகின்ருன்.

நாங்கள் யாண்டும் எவ்வழியும் யாரிடமும் கடன் படோம் என ஒரு நாட்டு மக்கள் ஒருமுகமாய் ஊக்கி நின்ருல் அந் நாடு எவ்வளவு பெருமிதமாய்ப் பெருகி விளங்கும்!

கடன் பல வகைக் கேடுகளை விளைத்து வருதலால் அருளு டையார் அம் மருள் வழியில் புகாமல் தம் பொருளை நல்ல துறைகளில் பரப்பி நயன் புரிந்து வருகின்ருர்.

கடன் கொடுக்கும் சமூகத்தைக் கொடியது என உலகம் வெறுக்கின்றது; அதனைக் கொள்ளுவோரை மிடியர் என்று எள்ளி இகழுகின்றது. இருவகைகளும் இளிவுறுகின்றன.

கடன் கொண்டவரை விடம் கொண்ட மீனேடு ஒப்ப வைத்தது பதைத்துத் துடித்துப்பரிந்து அழியும் பாடறிய வந்தது.

விடம்கொண்ட மீனைப் போலும், வெந்தழல் மெழுகு போலும்,
படம்கொண்ட பாந்தள் வாயில் பற்றிய தேரை போலும்,
திடம்கொண்ட ராமபாணம் செருக்களத் துற்ற போது
கடன் கொண்ட நெஞ்சம் போலும் கலங்கினன் இலங்கைவேந்தன்.

இந்தப் பாடல் இந்நாட்டில் பலபேர்க்கு மனப் பாடமா யுள்ளது. இதனைப் பாடினவர் யார் என்று தெரியவில்லை. கம்பர் பாட்டு என்றே பலரும் நம்பி யிருக்கின்றனர். இதன் சுவை அந்தக் கவிச் சக்கரவர்த்திக்குத் தன்னைச் சொந்தமாக்கச் செய் திருக்கின்றது. கடன் கொண்ட நெஞ்சத்தை அனுபவ சாரமாய் இனிது காட்டி யிருத்தலினாலேதான் இந்தக் கவியை இவ்வளவு உரிமையோடு பாடம் செய்து அனைவரும் வெளியே சொல்லி வருகின்றனர். உண்மையான உறுதி நலனை மனித வுள்ளம் உரிமையுடன் பற்றி அருமையாகப் போற்றிக் கொள்கின்றது.

பாம்பின் வாய்த் தேரை, விடம் உண்ட மீன், அழலில் இட்ட மெழுகு, கடன் கொண்ட நெஞ்சுடன் உறவாய் வந்தன. தேரையும் மீனும் உயிர்ப் பிராணிகள். கடனாளியின் உள்ளப் பதைப்புகளையும் பரிதபிப்புகளையும் அவை உணர்த்தி நின்றன. நிலை குலைந்துபடும் நிலைமை தெரிய மெழுகு வந்தது. அழிவுபடு சிந்தையராய் இழிவு படுதலை எளிது தெளிய விழி எதிரே இவை வெளி செய்துள்ளன. விடம், தீ, பாம்பு என நினைந்து கடனை யாதும் அணுகாமல் பாதுகாத்து ஒழுகுபவர் தீது நீங்கினவராய்ச் சிறந்து செவ்விய நிலையில் உயர்ந்து விளங்குகின்றார்.

---

258. பிடிமானம் போக்கும் பிழைகள் பெருக்கும்
குடிமானம் நீக்கிக் குலைக்கும்—கெடுமாறே
எல்லாம் கடிதின் இயற்றும் கடனென்னும்
பொல்லான் குடியுட் புகின். (அ)

இ. ள்.

கடன் என்னும் தீயவன் குடியுள் புகுந்தால், பிடிமானம் போம்; பிழைகள் பெருகும்; குடிமானம் ஒழியும்; குல வாழ்வு குலையும்; பல கேடுகளும் விரைந்து விளையும் என்றவாறு.

கடனைப் பொல்லான் என்றது எல்லாத் தீங்குகளையும் விளைக்கின்ற அதன் பொல்லாத் தீமை கருதி. உயர்திணை ஆண்பாலாக உருவகம் செய்தது செயலாற்றும் ஆற்றல் தெரிய. உயர்ந்த நல்ல குடியையும் இழிந்ததாக்கி விரைந்து கெடுத்து விடும் வினைப் பூடாக நினைப் பூட்டியது அதனை வெறுத்து நீங்க வேண்டி.

உடல் வருந்தி உழைத்து ஈட்டினவனுக்குப் பொருளின் அருமை தெரியும்; அதனை அவன் வீண் ஆக்கான்; தக்க வழிகளில் மிக்க கவனமாகப் பயன் படுத்துவான்; கடன் வாங்குகின்றவன் கருதி உணரும் நிலைமை இன்மையால் பொருளைக் கண்டபடி வீணாகச் செலவு செய்து விடுகின்றான்.

"Borrowers are nearly always ill-spenders" (Ruskin)

"கடன் வாங்குபவர் பெரும்பாலும் தீய வழிகளில் செல வழிக்கின்றனர்" என ரஸ்கின் என்னும் ஆங்கில ஆசிரியர் சொல்லி யிருக்கிறார். ஊதாரிகளுக்கு ஆதாரமாய் அது தீது ஏறியுளது.

குடிபேண உரிய மான மனிதனை வீணச் செலவனு மாற்றி வெறியனாக்கி விடுதலால் "பிடிமானம் போக்கும்" எனக் கடனின் கெடுமானம் நோக்க வந்தது

பிடிமானம் = செட்டு. நெறி முறையே பிடித்துச் செலவு செய்பவர் மானம் மரியாதைகளில் நெடிது நிலைத்து வருகிறார். குடியும் தழைத்து வருகின்றது. செட்டு இல்லையாயின் அது சீர் அற்ற குடி வாழ்க்கையாய்ப் பேரழிய நேர்கின்றது. சீர் அற்ற குடி நீர் அற்ற நிலம் போல் பேர் அற்று விடும் என்றமையால் சீர்மையின் நீர்மையும் மேன்மையும் உணரலாகும்.

கடையில் சாக்கு வாங்குபவர் உடனே பொருள் கொடுத்து வாங்கின் தம் கையிருப்புக்குத் தக்கபடி அவசியமானதை அளவறிந்து கொள்ளுகின்றார்; கடனுக்கு ஆயின் கண்டதை எல்லாம் வாங்கிக் கடைக் கணக்கில் தம் பேரையும் சீரையும் கடைப்படுத்தி வருகின்றார். இது உலக அனுபவமாய் உலாவி வருகின்றது. சீர்மையுடன் செட்டாகச் செலவு செய்யும் நீர்மை கடன் வாங்கும் இயல்பினரிடம் காண முடியாது. ஆகவே அவர் பிடிமானம் இல்லாதவராய்ப் பிழைபட நேர்கின்றார்.

"செட்டென்னும் சீர்மையைச் சேதித்துத் தீங்குபல
கட்டி வளர்க்கும் கடன்"

என்னும் உறுதி மொழியை உள்ளம் கொண்டு அதனை விட்டொழிக்க வேண்டும். குடி வாழ்வின் கொடிய பகையைக் கடிது கடிக.

வறுமை பொய் அச்சம் இளிவு முதலிய பிழைகள் எல்லாம் கடனால் விளைகின்றன; அதனால் அது பிழைகள் பெருக்கும் என வந்தது. கடன் வாங்கினவனுக்கு மதிப்புக் குறையும்; குறையவே

அவனது குடியின் மேன்மை குன்றும்; தலைமுறையாகத் தலை சிறந்து வந்த குடி புலையான கடனால் நிலை தாழ்கின்றது. அத் தாழ்வில் வீழ்ந்து ஒழியாமல் வாழ்வை ஓர்ந்து கொள்ளுக.

"கெடுமாறே எல்லாம் இயற்றும்" என்றது பலவகையான அல்லல்களையும், அவமானங்களையும் ஒல்லையில் வளர்த்து நல்ல குடி வாழ்க்கையை நாசப்படுத்தி விடும் ஆதலால் அந்த மோசம் தெரிய வந்தது. நாச நிலையமான நீசக் கடனை யாண்டும் தீண்டாதே; கொடிய குடி கேடனாகக் கருதி எவ்வழியும் அதனை அருகு அணுகாவகை உறுதி செய்து ஒழுகுக.

---

259. வறுமை வருத்தின் வருந்தி முயன்று
பொறுமை யொடுபொழுது போக்க—சிறுமைமிகச்
செய்யும் கடனருகே சேரற்க சேர்ந்தாயேல்
ஐயோ கெடுவை அறி. (௬௯)

இ. ள்.

பொருள் இல்லையானால் வருந்தி முயன்று இருந்த அளவில் அமைதியாய்த் திருந்தி வாழ்க; சிறுமை மிகச் செய்கின்ற கடன் அருகே செல்லாதே; சென்றால் அந்தோ! அழிந்து படுவாய்.

இது வறுமையினும் கடன் கொடிது என்கின்றது.

கடன் வாங்குதல் பலவகை நிலைகளில் தழுவி எழுகின்றது. வியாபாரம் விவசாயம் முதலிய தொழில்களை வளமாக நடத்தும் பொருட்டுச் சிலர் கடன் வாங்குகின்றனர்; கலியாணம் முதலிய காரியங்களை உலக ஆடம்பரமாகச் செய்யக் கருதிச் சிலர் கடன் கொள்ளுகின்றனர்; சிலர் குடும்ப வாழ்க்கையின் செலவுக்காகக் கடன் படுகின்றனர். இங்ஙனம் பல வழிகள் கடன் நுழைவுக்குக் காரணங்களாய் இடம் பெற்று நிற்கின்றன.

தொழில் முறையில் வாங்குவதை ஓரளவு பொறுத்துக் கொள்ளலாம்; அதையும் விரைவில் ஒழித்து விட வேண்டும்; ஆபத்துக் காலத்தில் அவசிய சகாயமாய்த் தழுவி உடனே அவ் வழுவினை நழுவ விட்டுத் தனது சுய நிலையில் முழு வலியுடன் நிற்றலே விழுமிய தகைமையாம்.

இவ்வாறன் தொழில் வகையிலன்றி வேறு எவ்வாற்றானும் கடன் கோடல் தீதேயாகும்.

இல்லாமை எல்லாத் துயரங்களுக்கும் இடமாம்; அப் பொல்லா வறுமை புகுந்து வருத்தினும் புலையான கடனில் புகலாகாது என்றது அதன் அல்லலையும் அவமானத்தையும் நினைந்து. வறுமை துன்பத்தை மாத்திரம் காட்டும்; கடனோ இளிவு அவமதிப்பு முதலிய கொடிய பழிகளையெல்லாம் ஒருங்கே கூட்டி விடும் ஆதலால் அக் கொடும் பாவியை உயிரழிய நேர்ந் தாலும் அருகு அணுகலாகாது.

"வருந்தி முயன்று பொறுமையொடு பொழுது போக்க" ஒருவனுக்குத் தரித்திரம் நேர்ந்து விட்டால் அவன் உணர்ந்து ஒழுக வேண்டிய உணர்ச்சி நிலைகளை உரைத்த படியிது.

இல்லை என்று சொல்லிப் பிறரிடம் பல்லைக் காட்டிக் கடன் கேளாதே; அது கொடிய தொல்லையாம்; இயன்ற அளவு முயன்று வாழ்; எல்லா நலங்களும் அதில் விளைந்து வரும். முயலாமல் நின்று அயலை நாடுவோர் செயலிழந்த பேடிகளாய்ச் சீரழிய நேர்கின்றார்; அந்த அழிவில் வீழ்தல் அழியாத் துயரமாய்ப் பழி மிகப் பெருக்கிப் படுதுயர் செய்யும்.

பிழைப்பு உழைப்பில் உள்ளது; அதனைப் பிழையறச் செய்; வேறு பிழை வழிகளில் இறங்காதே.

ஏழையாய் இருந்தாலும் இருக்கலாம்; கடனாளியாய் இருக்கக் கூடாது. அதனால் சுயமதிப்பு அழிந்துபோம்.

வறியனான ஒருவன் ஒரு நாள் உணவு இலனாயினன்; நல்ல மானி ஆதலால யாரிடமும் யாதும் கேளாமல் அன்று பட்டினி கிடந்து கழித்தான். மறுநாள் எழுந்தான்; மதிப்புடன் முயன்று மாண்புடன் வந்தான். இரவு நேர்ந்த பசிக்கு அஞ்சிப் பிறரிடம் அவன் கடன் வாங்கியிருந்தால் கடன் கொடுத்தவன் உடல் உள்ள அளவும் அவனை இளிவாகவே எண்ண நேர்வான்; அந்த ஈனம் யாதும் நேராமல் தன் மானம் பேணி வந்த அவன் யாண்டும் தாழ்வுறாமல் மூண்டு முயன்று முதன்மை அடைந்தான். அந்த ஆண்டகையின ஆளவினை ஆண்மைகள் வாழ்வினையாளர்கள் யாவருக்கும் உயர்ந்த வழிகாட்டிகளாய் ஒளி நீட்டி நின்றன.

கடனால் உயர் மானங்கள் ஒழியும் ஆதலால் மானிகள் அதனை மருவலாகாது. "கடன் அருகே சேரற்க" என்றது அதனை ஒரு கொடிய விடமாகக் கருதி ஒதுங்க வேண்டும் என்றவாறு. மயிர் ஊடு ஆடாத, உறவு பொருள் ஊடாடக் கெடும் என்னும் பழமொழியால் கொடுப்போர் கொள்வோர் ஆகிய இருவகை நிலையாரையும் பரிசு குலைத்துக் கடன் பரிபவம் விளைத்தலை அறியலாகும்.

---

260. கடனும் இரப்பும் கடுவறுமை ஈன்ற
உடனுறை மக்களா ஓர்க—மடமிகுந்து
தொட்டாய் அவற்றைத் தொலைந்தாய் துயரத்துட்
பட்டாய் பரிந்து பதைத்து. (ம)

இ. ள்.

கடனும் யாசகமும் கொடிய வறுமையின் குட்டிகளாம்; கெட்ட அவற்றின் கிட்ட நெருங்கவும் கூடாது; நெருங்கி நீ தொட்டாயானால், அல்லல் மீப்பட்டு அடியோடு கெட்டாய்.

கடன் கோடல் மிகவும் இளிவானது; அதனால் பிழைகள் பல உளவாம்; அப் பழி நிலையில் எவ்வழியும் இழியலாகாது என இதுவரை உரைத்து வந்து, இதில் அதனோடு இரப்பின் இளிவையும் இணைத்து உணர்த்துகின்றார். கடன் என்னும் அதிகாரத்தில் இரவைச் சேர்த்தது உறவை நோக்கி.

பிறரிடம் திரும்பத் தருவதாகப் பொருள்களை இரவலாக வாங்கிக் கொள்வது கடன். மீண்டு தராதபடி யாசகமாய் வேண்டிக் கொள்ளுதல் இரப்பு. இந்த இரண்டிற்கும் உள்ள வேறுபாட்டை ஈண்டு அறிந்து கொள்ளவேண்டும். பொருள் இல்லாமை காரணமாக இம் மருள் நிலைகள் மருவி எழுகின்றன; எழவே இந்த இழவுகள் வறுமையின் குழவிகளாய் உருவகம் செய்ய வந்தன.

சிறுமையான வறுமையின் அருமைப் பிள்ளைகள் என்றது அவற்றின் உருவங்களையும் பருவங்களையும் செயல்களையும் இயல்களையும் ஓர்ந்து உணர்ந்து கொள்ள வந்தது.

கடனும் இரப்பும் அண்ணனும் தம்பியுமாய் வண்ணம் அமைந்துள்ளன. தரித்திரத்தின் தலை மகனாகக் கடனைக் குறித்திருத்தலால் அதன் நிலைமைகளை எல்லாம் நினைந்து கொள்ளலாம்.

தாயினும் பிள்ளைகள் மிகவும் தீயவர்கள்.

வறுமை ஓரளவு இடர் செய்யும் ஆயினும் சில நன்மைகள் அதனால் உளவாம். அறியாதன பல அறிய நேர்கின்றன.

"கேட்டினும் உண்டுஓர் உறுதி கிளைஞரை
நீட்டி அளப்பதோர் கோல்." (குறள்)

என்றபடி சில உண்மை உணர்ச்சிகளும் உலக அனுபவங்களும் வறுமையில் கிடைக்கின்றன. செல்வ நிலையில் காண முடியாத உறுதி நலங்களை வறுமை நேரே காட்டி அருளுதலால் அஃது ஓர் இனிய உறுதித் துணையாய் மருவி நிற்கின்றது.

"Sweet are the uses of adversity" (Shekespeare)

"வறுமையின் உபயோகங்கள் இனிமையுடையன" என மேல் நாட்டுக் கவிஞரும் கூறியிருக்கிறார்.

"Prosperity doth best discover vice, but adversity doth best discover virtue" (Bacon)

"செல்வம் தீமையைக் கொண்டாடிச் செருக்குகின்றது; வறுமை நன்மையைக் கண்டு நயந்து நிறகின்றது" என்னும் இது ஈண்டு எண்ணத் தக்கது.

வறுமையில் பல அனுகூலங்களை மனிதன் புதிதாகக் கண்டு கொள்கின்றான். அதனால் அது ஒருவகையில் இனியதாகின்றது. வறுமையைக் குறித்து வடமொழிக் கவிஞர் ஒருவர் பாடிய சுலோகம் ஒன்று அடியில் வருகின்றது.

"ஹே தாரித்ரய நமஸ்த்துப்யம் ஸித்தோகம் த்வத்ப்ரஸாததா:
பச்யாம்யகம் ஜகத்ஸர்வம் நமாம் பச்யதி கச்சந."

"ஏ தரித்திரமே! உலகத்தில் உள்ள எல்லாரையும் நான் பார்க்கின்றேன்; என்னை ஒருவரும் பார்ப்பதில்லை; இது உன் கிருபையால் கிடைத்தது; ஆதலால் உன்னை நான் உவந்து வணங்குகின்றேன்" என்பது இதன் பொருள். கவியின் இருதயத்தை இதில் கொஞ்சம் கவனித்துப் பார்க்க வேண்டும்.

தான் உலகம் முழுவதையும் ஒருங்கே பார்ப்பதும், தன்னை யாரும் பாராமல் இருப்பதும் கடவுளுக்குரிய தன்மையாம். அந்த அற்புத நிலைமையைத் தனக்குத் தந்து தன்னை ஒரு தனிமுதல் தலைவனாக வறுமை செய்து வைத்துள்ளது; அதன் மகிமை பெரிது; அதனை நன்றியறிவுடன் போற்றுகின்றேன் என்பது குறிப்பு.

வறுமையால் வாடிச் சென்று எல்லாரிடமும் நாடி நோக்கி நயந்து நின்ற இவரை ஒருவரும் உவந்து நோக்கி உதவி செய்ய வில்லை என்பதை இவ்வாறு உல்லாச விநோதமாய்ச் சொல்லி யிருக்கிறார். மிடி இரவுகளின் கொடுமைகள் இதில் வெளியாயின.

புலவர்களுடைய கருத்துக்களும், தம் எண்ணங்களை அவர் வெளியிடும் திறங்களும் உணர்வுநலன் மலிந்து உவகைசுரந்து சுவை நிறைந்துள்ளன. இனியவை உயர்வா ஒளிசெய்து காட்டுகின்றார்.

வறுமை கொடியது எனினும் சில இதங்களும் அதனிடம் மருவி யிருக்கின்றன. அடக்கம் ஒடுக்கம் அமைதி பணிவு தெய்வ சிந்தனை முதலியன அதனால் எய்த நேர்கின்றன.

கடன் இரவுகளிலோ, யாதொரு நலனும் இல்லை. இளிவு கவலை பழி பாவங்களே அவற்றுள் பதிந்து கிடக்கின்றன.

ஏழையாயினும் ஒருவேளை உய்யலாம்; கடனாளி விடனாளி யாய் விளிந்தே தொலைகின்றான்.

கடன் மானத்தைக் கெடுக்கும்; மரபைக் குலைக்கும். இரவு ஈனத்தை விளைக்கும்; இழிவைக் கொடுக்கும். இழிவான இந் நீசங்களை எவ் வழியும் யாதும் அணுகாமல் உய்வழி தெளிக.

யானைபோல் வாரும் அயலே கடன்கொண்டால்
பூனைபோல் ஒல்கிப் புகுவரே—மானம்
அழிய வருகின்ற அவ்வழியை யாண்டும்
ஒழிய விடுக உணர்ந்து.

---

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

கடன் கொடிய விடம்.
அது நோயினும் தீயது.
அடுத்தவரை அழித்து விடும்.
அதனைத் தீ என ஒழித்து விடுக.
ஒழியாது நின்றால் ஊனம் பலவாம்.
ஈனங்கள் விளையும்.
ஓயாக் கவலைகள் உள்ளே பெருகும்.
குடி கேடு கூடும்.
அக் கேடு கூடாமல் பாடு படுக.
பிறரிடம் இழியாமல் பீடு பெறுக.

உகூ வது கடன் முற்றிற்று.

---

# இருபத்தேழாம் அதிகாரம்.

## இரப்பு.

அஃதாவது யாசகத்தின் நீச நிலைமை. மானத்தை அழித்து ஈனத்தை விளைக்கும் தீனமான இதனை மனிதன் எவ்வழியும் அணுகலாகாது என இஃது உணர்த்துகின்றது. கடனும் இரப்பும் மடி மிடிகளின் படிகளாய்க் கடிது கடிய உரியன ஆதலால் உடன் நெருங்கிய முறை கருதி அதன் பின் இது வைக்கப் பட்டது.

261. உள்ள தொழில்கள் உலகில் பலஇருப்ப
எள்ளலுறுமிரவை ஏன்றலைதல்—தள்ளரிய
தாயடைந்து நில்லாமல் தாங்குமென நம்பியொரு
பேயடைந்த தாமே பிழை. (க)

இ. ள்.

இந் நிலவுலகில் பல தொழில்கள் பரந்து விரிந்திருக்கின்றன. அவற்றுள் எதையாவது ஒன்றைக் கைக் கொள்ளாமல் இரப்பை மேற்கொண்டு ஒருவன் அலைதல் உரிய தாயினை அடையாமல் கொடிய பேயினை அடைந்தது போல் பெரிய தவறும் என்றவாறு.

இது இரவு தீது என அறிவு கூறுகின்றது.

உள்ள தொழில் என்றது வரவு நலம் உடையனவாய் மருவி யுள்ள கருமங்களை. உண்மை அவற்றின் தன்மை உணர வந்தது. தொழில் என்னும் சொல் அவயவங்களால் செய்வது என்னும் பொருளினது.

தெய்வம் தொழுதல் போல் செய் தொழில் உய்தி நலம் உடையது. கருமம் செய்வதே தருமம் செய்த படியாம். அளவிட லரியன ஆதலின் தொழில்கள் பல என வந்தன.

உழுதல், நெய்தல், பண்டமாற்றல், கொண்டு விற்றல், உலோகங்களை உருப்படுத்தல், சித்திரம் வரைதல், சிற்பம் புனைதல் முதலாகக் கண்ணுக்குத் தெரிந்தனவேயன்றி எண்ணிறந்தன எவ்வளவோ இருக்கின்றன. மனிதனுடைய எண்ணங்களின் அளவே தொழில்கள் வண்ணங்களாய் வருகின்றன.

செல்வமும் சீர்மையும் யாண்டும் நல்கி வருதலால் சன சமுதாயத்துக்குத் தொழில்கள் உய்தி புரிந்து உறுதி சுரந்தருள்கின்றன. உலகம் அவற்றால் ஒளி மிகுந்து திகழ்கின்றது.

இத் தகைய கருமங்களைக் கைக் கொண்டவர் பெருமை பெறுகின்றார்; கொள்ளாதவர் சிறுமை அடைகின்றார்.

எவரும் என்றும் இகழ்ந்து வெறுக்கும் இயல்பினது ஆகலான் எள்ளல் உறும் என இரவின் இளிவு தெரிய வந்தது. ஏன்றல்—பொருந்தல். அலைதல்—இழிந்து திரிதல்.

தொழிலைத் தாய் என்றது எல்லா நலங்களையும் இனிது உதவி யாண்டும் இதம் புரிந்தருளும் உரிமை கருதி.

பெற்றதாய் பிள்ளைகளைப் பேணி வருதல் போல் உற்ற தொழில் மக்களை ஆதரித்து வருகின்றது; அந்த அருமை மாதாவை அகலாமல் உள்ளவர் இருமையும் பெருமையாளராய் இசை மிகுந்து நிற்கின்றார். தொழிலைக் கைவிட்டவர் தாயிழந்த பிள்ளை போல் நோயுழந்து படுகின்றார்; அப் பாடு தெரிந்து பீடு பெறுக.

அல்லலும் இழிவும் அழிவும் தருதலால் இரவு பேய் என நேர்ந்தது. உயிர்க்கேடாவதை உணர்ந்து ஒதுங்குக.

பசித்த பிள்ளை தாயை அடையின் பால் குடித்து மகிழும்; பேயிடம் போனால் செத்துத் தொலையும். இதனை உய்த்துணர்ந்து உண்மை தெரிக. தொழில் தாய், இரவு பேய் என உருவக நிலையில் உணர்த்தியது அவ் இருவகை நிலைகளையும் கருதி ஆராய்ந்து உறுதி நலனை ஓர்ந்து கொள்ள.

அருமைத் தாய் போல் உரிமை சுரந்தருளும் கருமநலனை மருவிப் பெருமை அடைக; சிறுமைத்தீமையான இரவினில் இறங்கி இழிந்து படாதே.

தன்தொழிலால் வருவது நேரே உலையிலிருந்து வடித்துவந்த இனிய உணவு போல் புனிதம் மிகவுடையது; இரப்பால் உறுவது எச்சில் இலையின் மிச்சில் போல்வது. மானம் உடைய மனிதன் அந்த ஈனத்தை எவ் வழியிலும் இச்சிக்கலாகாது.

எழிலி பொழியும் இனியநீர் போலத்
தொழில்வழி வந்தது தூய்தாம்—இழிவான
யாசகத்தால் ஆனதுதான் அங்கணநீர் என்னவே
நீசமே யாகும் நினை.

யாசகத்தின் இளிவு இதனால் எளிது தெளியலாம். எழிலி—மேகம். தொழில் வரவை வானநீர் என்றது இடையறாது சுரந்து வரும் தகைமையும், தூய்மையும், இனிமையும் கருதி.

இரவின் இளி வரவு விழி தெரியக் கழிவுநீர் வந்தது. பிறர் இளித்துக் கழித்து விட்டது இழிக்கப் பட்டது.

யாசகம் மிகவும் ஈனமானது; இடர் நிறைந்தது; நீசமான அந்த நாசத்தை யாதும் நணுகாதே என்பது கருத்து.

---

262. இல்லாமை சொல்லி இரவாப் பெருந்தகவும்
கொல்லாமை சூழும் குணமாண்பும்—நில்லாமை
கண்டு தெளியும் கருத்தும் கதிநிலையைக்
கொண்டு மகிழ்வார் குணம். (உ)

இ. ள்.

இல்லை என்று சொல்லி இரவாத பெரிய தகைமையும், எதையும் கொல்லாத குண நலனும், நிலையாமையை நினைந்து தெளியும் உணர்வும் மூத்திநலனை யுடையவரது உத்தம இயல்பு களாம் என்றவாறு.

இரவாமையைக் குறித்து வரும் இந்த அதிகாரத்தில் கொல்லாமை நிலையாமைகளை உடன் இணைத்தது அவற்றின் குண நலங்களை விழைந்து. குற்றம் களைந்து குணம் புரத்தலில் உற்ற வுரிமைகள் உறவாய் வந்தன.

இரவு இளிவு; தீது; என நூலோரும் மேலோரும் உணர்த்தி யுள்ளனர். இரவுள்ள உள்ளம் உருகும் என்று வள்ளுவப் பெருந் தகை சொல்லியிருத்தலால் அதன் பரிதாப நிலைமையை உணர்ந்து கொள்ளலாம்.

இரப்பு இறப்பினும் கொடியது; இழி துயரமானது; அதனால் மானம் அழிகின்றது; மரியாதை ஒழிகின்றது. உயிரிருந்தும் நடைப்பிணமாக மனிதனை அது கெடுத்து விடுகின்றது; இங்ஙனம் படு கேடுகளை யுடைமையால் பழி பாவம் என இழிக்கப்பட்டது. இரவை எண்ணினும் உள்ளம் வேம் என்றமையால் அதன் பொல்லாத் துயரங்களை எல்லாம் எவ்வாறு சொல்ல முடியும்?

"பல்எலாம் தெரியக் காட்டிப், பருவரல் முகத்தில் கூட்டி,
சொல்எலாம் சொல்லி நாட்டித், துணைக்கரம் விரித்து நீட்டி,
மல்எலாம் அகல ஓட்டி, மானம் என்பதனை வீட்டி,
இல்எலாம் இரத்தல் அந்தோ! இழிவு இழிவு எந்நாளும்."
(குசேலோபாக்கியானம்)

இரப்பாளனுடைய அல்லல் நிலைகளையும் அவமானங்களையும் உள்ளத் துயரங்களையும் உருப் படுத்திக் குறித்துள்ள இதனைக் கூர்ந்து சிந்திக்க வேண்டும்.

இந்த ஈன இழிவில் மான மனிதர் விழார்.

உயிர் போக நேரினும் தனது எளிமையைப் பிறரிடம் உரையாமல் தானாக முயன்று வாழ்தலே உயர்ந்த குலமகனது தலைமையான நிலைமை ஆதலால் இரவாமை பெருந்தகைமை என வந்தது. அந்த அரிய நீர்மை பெரிய சீர்மையாம்.

ஈதல் என்றும் உயர்ந்தது; இரத்தல் யாண்டும் இழிந்தது.

ஏற்பது இகழ்ச்சி என்றமையால் ஈவதின் புகழ்ச்சிநிலை புலனும்.

இயன்ற வரையும் முயன்று வாழ்; யாரிடமும் இரவாதே; உன்னால் இயன்றதைப் பிறர்க்கு உதவ வேண்டுமேயன்றி இரப்பை எவ்வகையிலும் எண்ணாதே.

"மறுமையும் இம்மையும் நோக்கி ஒருவற்கு
உறுமாறு இயைவ கொடுத்தல்—வறுமையால்
ஈதல் இசையா தெனினும் இரவாமை
ஈதல் இரட்டி யுறும." (நாலடியார்)

"எட்டுணை யானும் இரவாது தான்ஈதல்
எத்துணையும் ஆற்ற இனிது. (இனியவைநாற்பது)

"எள்ளுவ என்சில இன்னுயி ரேனும்
கொள்ளுதல் தீது கொடுப்பது நன்றால்." (இராமாயணம்)

"நல்லாறெனினும் கொளல் தீது; மேலுலகம்
இல்லெனினும் ஈதலே நன்று." (குறள்)

இரத்தல் எவ் வழியும் யாதும் கூடாது என இவை உணர்த்தியுள்ளமை காண்க.

கொடுத்துப் பழகு; எடுத்துக் கெடாதே. இரவாமை கொல்லாமை மெய்யுணர்வு என்னும் இவை முத்தர்கள் இயல்பாகக் குறித்துள்ளமையான் அவற்றின் உத்தம நிலைகளை உய்த்துணர்ந்து கொள்க உன்னை உயர்த்துக; உயிர்களைப் பேணுக; உண்மை தெளிந்து உய்திபெறுக என்னும் உணர்வுரைகள்முறையேவந்தன.

எவரிடமும் யாதும் இரவாதே; எவ்வுயிர்க்கும் இரங்கி அருள் செய்; ஒன்றும் நிலையில்லாத இவ்வுலகில் என்றும் நிலையான உறுதி நலனைக் கருதியுணர்ந்து உரிமை செய்து கொள்ளுக.

263. என்றும் எவரிடத்தும் ஏதேனும் ஓர்பொருளை
நின்று பெறநீ நினையாதே—நின்றுபெறின்
குன்றம்ஓர் குன்றியெனக் குன்றிஞய் கொள்ளாயேல்
நின்றுயர்ந்தாய் என்றும் நிலை. (௩)

இ-ள்.

எக்காலத்தும் எவரிடத்தும் யாதொரு பொருளையும் எவ்வகையினும் நீ வாங்க நினையாதே; வாங்கின் மலை என நின்ற நீ சிறு மண்ணுயிழிந்து நிலை குலைந்து படுவாய்; வாங்காயேல் யாண்டும் தலைமையுடன் தழைத்து ஓங்குவாய் என்றவாறு.

இரப்பாளன் ஈனமாய் இழிந்து படுதலை ஓர் உவமானக் காட்சியில் தெளிவு படுத்தி இஃது உணர்த்துகின்றது.

நின்று பெறுதல் என்றது பிறரை நாடிச் சென்று சமையம் எதிர்பார்த்து நின்று அரிதில் கண்டு புகழ்ந்து பேசி விழைந்து வந்ததை இழிந்து கூறி அவர் எள்ளி வீசலை உள்ளம் கூசி வாங்கும் இளிவு தெளிய வந்தது.

அயலை எதிர்பார்த்த போதே மனிதனது இயலும் செயலும் இழிந்து படுகின்றன. வியனும் நயனும் விளிந்து போகின்றன.

இல்லாரை எல்லாரும் எள்ளுவர் என வள்ளுவர் உள்ளம் உருகிச் சொன்னது உண்மை ஆயினும் அவர் பிறரிடம் செல்லார் ஆயின் அந்த எள்ளல் துள்ளி எழாது; சென்றபொழுது தான் இழிவு மண்டி எழுகின்றது.

வறுமை செய்யாத சிறுமையை இரவு விரைவில் செய்து விடுகின்றது. நிரப்பினும் இரப்பு நெடும்பழியாய்க் கடுந்துயர் புரிதலால் அது மிகவும் கொடுந் தீமையாய்க் குறிக்க நேர்ந்தது.

எளியன் என்பது அவ்வளவு இளிவு ஆகாது; யாசகன் என்ற போதுதான் நீசம் ஆகின்றது. வறியராயினும் இரவாராயின் அவரே பெரிய செல்வராய்ப் பெருமிதம் எய்தி நிற்கின்றார்.

''நல்கூர்ந்தும் செல்வர் இரவாதார்; செல்வரும்
நல்கூர்ந்தார் ஈயார் எனின்.'' (நாலடியார் 270)

இரவாமையின் பெருமையையும், ஈயாமையின் சிறுமையையும் ஒருங்கே இணைத்து உணர்த்தியுள்ள இது ஈண்டு நுனித்து உணரத்தக்கது. நல்குரவும் செல்வமாகும் செல்வம் தெளிக.

வறுமையால் ஒருவன் சிறுமை அடைந்து சீரழிய மாட்டான்; இரவினாலேதான் பேரிழி வடைகின்றான்.

"குன்றம் ஓர் குன்றி எனக் குன்றினாய்!" என்றது இரப்பால் எய்தும் இழிநிலையை விழிஎதிரே தெளிவாகவிளக்கிநின்றது.

குன்றம் = மலை. குன்றி = குன்றிமணி. மிளகு, மல்லி போல் உருண்டை வடிவமான இது அரை மஞ்சாடி நிறைக்கு ஓர் அளவு கருவியாயுள்ளது.

மலை அனைய உயர்ந்த தலை சிறந்த மனிதனும் இரவினைக் கைக் கொள்வானாயின் அவன் மிகவும் சிறியனாய் இழிந்து படுவன் என்பதை உணர்த்த இவ்வுவமைகள் வந்தன.

தலைமையான நிலைமையும் அசையாத ஆண்மையும் அதிசய மதிப்பும் அடியோடு அழியவரும் என்றமையால் இரவின் இழிவு நிலை தெளியலாகும்.

யாசகனை எல்லாரும் அவமதித்து விடுதலால் அவன்மெல்லிய துரும்பினும் புல்லியனாய் இழிவுறுகின்றான்.

நொய்தாம் திரணத்தின் நொய்தாகும் நுண்பஞ்சு
நொய்தாம் இரப்போன் நுவலுங்கால்—நொய்யசிறு
பஞ்சுதனின் நொய்யானைப் பற்றாதோ காற்றணுக
அஞ்சுமவன் கேட்ப தறிந்து. (நீதிவெண்பா.)

துரும்பினும் பஞ்சு நொய்யது; அதனினும் இரப்பவன் நொய்யன்; அப்படியாயின் அவனை ஏன் காற்று அடித்துக் கொண்டு போகவில்லை? எனின், அருகே அணுகினால் தன்னிடமும் ஏதேனும் கேட்பான் என்று பயந்தே அவன் கிட்ட நெருங்காமல் அது விட்டுப்போயது என நகைச்சுவை ததும்ப இரப்பின் சிறுமையை உணர்த்தியிருக்கும் இதன் அழகை ஊன்றிப்பார்க்க.

புல்லிய துரும்பினும் பூளை தன்னினும்
மெல்லிய தூசினும் மெலிய னாகியே
அல்லலில் யாசகன் அலையும் ஐயகோ
சொல்லிய இரவினும் துயரம் யாதரோ!

துன்ப நிலையமான இரவினை யாதும் நினையாதே. இரவாமல் முயல்பவரே உயர்வாக ஓங்கி ஒளிமிகப் பெறுகின்றார்.

264. ஈயெனப்போய் ஓர்பொருளை ஏற்றக்கால் அப்பொழுதே
நாயெனத்தான் கீழ்நிலையை நண்ணுகின்றான்-சீயெனவே
சீறப் படுகின்றான் சீசீ இரவினும்சா
ஏறப் படுதல் இனிது, (ச)

இ. ள்.

ஈ என்று பிறரிடம் போய் ஒரு பொருளை ஒருவன் ஏற்கத் துணிந்தால் அப்பொழுதே அவன் நாய் என்னும்படி இழி நிலையை அடைகின்றான்; சீ என்று சீறி வெறுக்கப்படுகின்றான்; அந்தோ! இரந்து வாழ்தலினும் இறந்துபோதல் இனிது என்றவாறு.

இது இரவலனது பரிதாப நிலைமையை உணர்த்துகின்றது. தானாக உழைத்து வாழாமல் யாசித்துப் பிழைக்க எண்ணுதல் பெரிய பிழை பாடாம். ஒருவன் ஈட்டி வைத்து உண்ணக் கருதி உவந்துகொண்டுள்ள உரிமைப் பொருளை அயலான் வந்து கேட்ட பொழுது அவன் உயிரைப் பறிப்பது போல் துயரப்படுகின்றான். உள்ளம் கடுத்து வெறுக்கிறான். எள்ளி இகழுகின்றான்; இளித்துப் பேசுகின்றான். இரத்தலில் அல்லல் மண்டியிருத்தலால் அதனைக் கைக்கொண்டவன் பொல்லாதவனாய்ப் புன்மை அடைகின்றான். எல்லாரும் இகழ்ந்து சொல்ல இழிந்து திரிகின்றான்.

ஈ கொசு எலி மூட்டை வேசி யாசகம் என்னும் இவை பர பீடனங்கள் என வடமொழியில் ஒரு சுலோகம் வரையப்பட்டுள்ளது. பிறருக்குப் பீடையாயிருத்தலால் யாசகத் தொழிலை மேற்கொண்டவன் இழிக்கப்படுகின்றான்.

ஈ என இரந்தவன் நாய் என இழிந்தான் என்றது இரப்பின் கொடுமையையும் அருவருப்பையும் எடுத்துக்காட்டியது.

சிறந்த மனிதனையும் இழிந்த நாயாக ஈனப்படுத்திவிடும் என்றதனால் யாசகத்தின் நீச நிலை நேரே தெரியலாகும். நாயைக் குறித்தது எச்சில் நச்சியும் ஊனை அவாவியும் உழன்று திரியும் அதன் ஈன நிலை கருதி.

சீ என்றது நாயைக் கடிந்து விரட்டும் இகழ்ச்சிக் குறிப்பு.

அரிய பிறவியை மருவி வந்துள்ள பெரிய மனிதன் சிறிய ஈனச் செயலால் சிறுமை அடைய நேர்ந்தான். இரப்பால் நேரும் அழிவுகளும் இழிவுகளும் பழி துயரங்களும் உரையிடலரியன.

"மானம் அழிய வருமிரவைப் போல் உலகில்
ஈனம் உடையது எது?"

என்றமையால் ஈனத்தின் முடிவான எல்லையாய் இரப்பு முடிந்துள்ளமையை அறிந்துகொள்கின்றோம்.

எமன் ஒருமுறை அதிசய நிலையில் மறைந்து வந்து தருமாது மதி நலத்தைப் பரிசோதனை செய்தான். அரிய பல கேள்விகளை விநயமாய் வினவினன். கேட்டவற்றிற் கெல்லாம் சரியான பதிலை இம் மதிமான் கோட்டமின்றி உரைத்தான். இறுதியாக "இவ் வுலகில் மிகவும் சிறுமையானது எது?" என்று அவன் உரிமையோடு கேட்டான். "இவ்வையத்தில் இழிந்தது கை ஏந்தி இரத்தலே" என்று இம் மெய்யன் இசைத்தான். அவன் வியந்து புகழ்ந்து உவந்து சென்றான்.

மேன்மையை அழித்து மனிதனைக்கீழ்மைப்படுத்தி விடுதலால் இரப்பு எவற்றினும் இளிவு என இங்ஙனம் குறிக்கப்பட்டது.

ஈ என இரத்தல் இழிந்தன்று; அதன் எதிர்
ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று. (புறம் 204)

இரத்தல் மிகவும் இளிவானது; அங்ஙனம் இரந்தவனுக்கு இல்லை என்று சொல்லுதல் அதனினும் இழிந்தது எனக் குறித திருக்கும் இதன் அழகைக் கூர்ந்து நோக்குக.

இரப்பும்கரப்பும் இறப்பவும் இழிந்தனஎன்பது பெறப்பட்டது.

யாசித்துப் பிழைப்பதினும் செத்து ஒழிவது இனிது என்றது மானம அழியாமல் அவ்வுயிர் மாண்புறுதல் கருதி.

---

265. ஒன்றும் உதவா உலோபர்பால் ஓராமல்
சென்று பொருளிரத்தல் சீரழிவே—அன்றியே
கண்டபயன் ஒன்றுமின்றாம் கல்லிற்போய் முட்டினல்
கொண்டபயன் என்னும் குறி. (ரு)

இ-ள்.

ஒன்றும் உதவாத உலோபிகளிடம் போய் யாசித்தல் என்றும இழிவே; யாதொரு பயனும் இன்றாம்; கல்லில் முட்டினல் அல்லலே அன்றி நல்லது உண்டோ? நலம் தெரிந்து கொள்க.

இரப்பு எவரிடமும் கூடாது; ஒருவேளை வறுமைத் துயரால் மறுகி ஏதேனும் பெற விரும்பினால் உபகாரிகளான கொடையாளிகளிடம் போய்க் கேள்; அதனால் மானம் கெடாது; கருதிய பலனும் கையில் கிடைக்கும்; இரு திறனும் இதம் மருவும்; அவனுக்குப் புகழ்; உனக்கு ஊதியம்

இத்தகைய உத்தமர்களைத் தவிர வேறு எவரிடத்தும் யாதும் கேட்கலாகாது; கேட்டால் அல்லலும் அவமானங்களுமேயாம்; நல்லது காண முடியாது. உள்ள வறுமைப் பிணியோடு இந்தச் சிறுமைத் துயரங்களும் சேர்ந்து உயிரைத் துடிக்கச் செய்யும்; அந்தக் கொடிய வேதனையில் அடிபிடாதே.

ஓர்தல் ஆவது காரியத்தில் இறங்குமுன் அதனால் வருவதைக் கருதிஉணர்தல். இடவகை தெரியாமல்புகின் இளிவாம்; எதையும் கூர்ந்து ஓர்ந்து தேர்ந்து செய்தலே யாண்டும் நலமாம்.

சீர் அழிவே என்றது வேறு ஒரு நலனும் பெறாய்; அவமானமே அடைந்து அழி துயருறுவாய் என அப் பழி வழியில் விளையும் பாடறிய வந்தது.

உலோபரைக் கல் என்று சுட்டியது யாதும் இரங்கியருளாமல் யாண்டும் வன்கண்ணராய் இருக்கும் அவரது கொடுமை கருதி.

இரக்கம் இல் கொடிய செல்வர் மருங்குபோய் இரப்பார் போல
உருப்ப மொண்டிறைக்கும் கள்ளி நீழல்புக்கு ஒதுங்கு வாரும்
தருக்கற நிரப்பால் எய்த்தோர் தம்மினும் வறியர் பால் சென்று
இரப்பர் போல் இலை இந்துக்க மரநிழல் எய்துவாரும்.

(திருவிளையாடற்புராணம்)

பாலைவனத்தில் புக்கவர் அங்கே வெயில் வெப்பம் பொறாமல் பட்டபாட்டை வருணித்த படியிது. இரக்கம் இல்லாத உலோபிகளிடம் போய் இரந்து நின்றவர் போல் கரிந்த கள்ளி நீழலில் ஒதுங்கிச் சிலர் கடுந்துயர் உழந்தனர்; இலை தழை இல்லாத மரங்களை அண்டினவர் வறியரிடம் யாசித்தவர் போல் மறுகலாயினர் எனப் புல்லிய இரப்பின் பொல்லா நிலைமையை இது இங்ஙனம் உணர்த்தியுள்ளது.

காப்பவரிடம் இரப்பது கடுந்துன்பமேயாம். செல்வம் ஈந்து துய்க்கவே இறைவன் அருளினான் என்னும் உணர்வு சிறிதும்

இல்லாத மருளரிடம் கேளாதே; கேட்பின் மானக் கேடாய் மாரண வேதனையே தரும்.

கல்லில் முட்டினால் மண்டை உடையுமே யன்றிக் கண்ட பயன் இன்றாம்; புல்லரிடம் இரந்தால் அல்லலும் அவமானமும் அடைந்து அழிவுறவே நேரும். அப்பழி துயரங்களில் போய் வீணே பட்டு மடியாமல் நல்ல வழி துறைகளை நாடிக் கொள்க.

---

266. செய்ய முயற்சித் திறந்தெரிந்து செய்யாமல்
ஐயோ இரந்துபொருள் ஆதரித்தல்—துய்யபால்
ஆவின் முலையில் அடையாமல் வால்கொம்மை
நீவுதல் போலாம் நினை. (சு)

இ. ள்.

இனிய முயற்சி செய்து பொருளை ஈட்டாமல் கொடிய இரத்தலைக் கொண்டு திரிதல் பசுவின் மடியில் பாலைக் கறவாமல் வாலையும் கொம்பையும் தடவி உருவுதல் போல் மடமையான இழி செயலாம் என்றவாறு.

செய்ய முயற்சி என்றது நேர்மையான நல்ல தொழில்களை. பொருளோடு அறமும் புகழும் மருவி வருகின்ற கரும நிலைகளை உரிமையுடன் கருதிக் கொள்ளின் அவை இருமைக்கும் இதமாம்.

கருதிய பொருள்கள் யாவும் விரைவில் ஊறி வருகின்ற இனிய ஊற்றுக்களாய்த் தொழில்கள் மேவிநிருக்கின்றன. வாவு நிலையங்களான அந்தக் கருவூலங்களைக் காணியாகப்பேணிக் கொள்ளாமல் வீணே விட்டு விலகிப் போதல் வெய்ய துயராம். இரவில் வீழ்கின்ற மனிதனது பரிதாப நிலைகளை எண்ணி இரங்கி ஐயோ! என்னும் பரிவுரை வந்தது.

உலகில் முயற்சியைத்தொட்டவன் பொருள்வளமுடையனாய் உயர்ச்சி யடைகின்றான்; விட்டவன் அயர்ச்சியில் ஆழ்ந்து அலமருகின்றான்.

பசுவின் முலைக் காம்பில் கைவைத்துக் கறந்தால் பால் வரும்; பருகி மகிழலாம் வாலையும் கொம்மையும் நீவினால் யாது வரும்? வருவதை எண்ணிப் பார். நீவுதல் = தடவுதல், உருவுதல்.

தொழில் வழி முயன்றால் பொருள் சுரந்து வரும்; பழியான இரப்பால் இழிவே உறும் என்பதை உணர்த்துதற்கு இவ் வுவமானங்கள் வந்தன.

பசு, இயற்கை அன்னைக்கும்; முலை, பலன் சுரக்கும் கரும நிலைக்கும்; கறத்தல், தொழில் முயற்சிக்கும் ஒப்பாம்.

வறுமைத் துன்பத்தை முயன்று நீக்காமல் இரந்து தீர்க்கத் துணிவது இழிந்த மடமையேயாம். எவரும் இகழ்ந்து நகைக்கத் தக்க அந்த இழிவழிகளில் புகாமல் தொழில் முறையில் புகுந்து உயர்ந்து கொள்க.

இன்மை இடும்பை இரந்துதீர் வாம்என்னும்
வன்மையின் வன்பாட்ட தில். (குறள், 1063)

யாசகத்தால் பொருள் சம்பாதித்து வாழலாம் என எண்ணுவது மதிகேடான ஓர் அதிசயத்துணிவாம் என இரப்பாளனது இழி நிலைக்கு இரங்கி வருந்தியிருக்கும் இதன் பொருள் நிலையை நுணுகி உணர்ந்து கொள்க. இரவை நச்சி எழுகின்ற வன்மையைக் காட்டிலும் வன்பாட்டது வேறு இல்லை என்றது இகழ்ச்சிக் குறிப்பு. வன்பாடு=வலியது, முரட்டுத்தனம். புண்பாடான அவ் வன் பாட்டில் புகாமல் பண்பாடுறுக என அறிவுறித்தியது.

இரந்து கொண்டு ஒண்பொருள் செய்வல் என்பானும்,
பரந்தொழுகும் பெண்பாலைப் பாசம்என் பானும்,
விரிகடல் ஊடுசெல்வானும், இம்மூவர்
அரிய துணிந்து வாழ்வார். (திரிகடுகம், 73)

யாசித்துப் பொருள் சம்பாதிக்கலாம் என்று எண்ணுவதும், வேசியைப் பாசம் என்று நம்புவதும் கடல் நடுவே நடந்து செல்ல முயன்றது போன்ற ஓர் அறிவீனமான அதிசயத் துணிச்சலாம் என இஃது உணர்த்தியுள்ளமை காண்க. இரப்பு மிகவும் அபாயமானது; அல்லல் மிக வுடையது; அழிவு தருவது; வாழ்வைப் பாழ் ஆக்குவது; அதில் வீழ்ந்து விளியாதே.

இன்று இரப்பை இதமாக எண்ணினான்
அன்றே இறந்தான் அவன்.

என்னும் இதனால் இரவு சாவு என்பது புலனும்.

267. தாவென்று நீயொன்றைத் தான்கேட்டாய் ஆனாலுடனே
வாவென்ற சொல்லும்போம் மானம்போம்—போவென்று
கூறும் கொடுமொழியும் கூடுமே யாதுறினும்
ஏறாதே யீனவிரவு. (எ)

இ-ள்.

ஒருவனிடம் போய் ஏதாவது கொடு என்று நீ கேட்டாயானால் உடனே வா என்ற சொல்லும் போம்; மானம் போம்; இனிமேல் இங்கே வராதே என்னும் கொடிய மொழியும் உண்டாம்; ஆதலால் என்ன நேர்ந்தாலும் ஈனமான இரவில் ஏறாதே என்க.

கூடுமே என்றதில் ஏகாரம் பரிதாப நிலையில் படிந்து வந்திருக்கும் ஒலிக் குறிப்பை நுனித்து உணர்ந்து கொள்க. உலகம் பொருளால் இயங்குகின்றது; வாழ்க்கையை அது வளம்படுத்தி மாண்புறுத்தி வருதலால் மக்கள் அதனை மிக்க உரிமையுடன் விரும்பிப் போற்றி வருகின்றனர். தன் உயிர் வாழ்க்கைக்கு இனிய ஆதாரமாயுள்ள பொருளை அயலான் வந்து கேட்குங்கால் இயல்பாகவே மனிதன் மருள்கின்றான். மறுக்கின்றான்; வெறுக்கின்றான். அல்லலான அப்பொல்லாத வழியில் செல்லலாகாது; செல்லின் எவனும் சீரழிந்து சிறுமையடைந்து போவான்.

இரப்பில் மூவகை நிலைகள் உள்ளன. தா, கொடு, ஈ என்னும் இம் மூன்று மொழிகளும் இரப்பாளர் வாயிலிருந்து வருவன. தா என்பவன் ஒத்த நிலையினன். கொடு என்பவன் உயர்ந்த வகையினன். ஈ என்பவன் இழிந்த படியினன்.

"ஈ தா கொடு எனக் கிளக்கு மூன்றும்
இரவின் கிளவி யாகிடன் உடைய;

அவற்றுள்,

ஈ என் கிளவி இழிந்தோன் கூற்றே.
தாஎன் கிளவி ஒப்போன் கூற்றே.
கொடுஎன் கிளவி உயர்ந்தோன் கூற்றே." (தொல்காப்பியம்)

இரவலர் நிலைமை இங்ஙனம் வரையறை செய்யப்பட்டுள்ளது.

இழிவான இரவிலும் வழிவகைகள் வாய்ந்துள்ளன. எந்த நிலையிலும் யாரிடமும் கேட்கலாகாது. தா என்று கேட்டால்

வா என்றது போம்; மானம் போம்; மரியாதை போம்; அவமானம் ஆம்; அந்த இழிவுக்கு நிகரான உவமானம் யாண்டும் இல்லை; அதனை வெறுத்து விலகுக.

பிறரை எதிர் பாராமல் வாழும் வாழ்விலேயே மனிதனுடைய மதிப்பெல்லாம் இனிதமைந்துள்ளது; ஒருவனிடம் ஒன்றை நாடிச் சென்றால் பீடு குன்றும்.

"ஒன்று வேண்டலராயினும் ஒருவர்பால் ஒருவர்
சென்று வேண்டுவரேல் அவர் சிறுமையில் தீரார்."

(இராமாயணம்)

மான வீரனான இராமன் வாக்காய் இது வந்துள்ளது. இந்த அருமை வாசகம் ஈண்டு ஆராய்ந்து சிந்திக்கத் தக்கது. ஈசனே எனினும் யாசகம் என நேர்ந்தால் அதில் நீசம் ஏற நேர்கின்றது.

"முன்னம் ஓர் கருமம் வேண்டி மொழிபவேல் மனிதர்தம்மால்
என்னவரேனுமாக இகழ்ந்திடப் படுப போலாம்
அன்னதே உலக வார்த்தையாவது; இன்று அறியும் வண்ணம்.
மின்னவின்றிலங்கும் வேலோய் நின்னுழை விளங்கிற்றன்றே."

(சூளாமணி)

எவ்வளவு பெரியவனாயினும் அயலிடம் ஏதேனும் ஓர் உதவியை நாடிவரின் அவனுடைய அருமை பெருமைகள் குறைய நேர்கின்றன என்றமையால் இரவின் சிறுமையும் தீமையும் அறியலாகும்.

"கற்றைக் குழலார் கவின்எல்லாம் ஓர்மகவைப்
பெற்றக் கணமே பிரியுமே—கற்றருளை
வேட்ட பெரியோர் பெருமையெலாம் வேறொன்றைக்
கேட்ட பொழுதே கெடும்."

(நீதி வெண்பா)

இப்பாட்டில் வந்துள்ள உவமையையும் பொருளையும் ஊன்றி நோக்குக. "கோடி ஒரு வெள்ளை; குமரி ஒரு பிள்ளை" என்னும் பழமொழியை மருவி வந்துள்ள இது இரவின் இளிவினைத் தெளிவாக விளக்கியுள்ளது. அரிய பெருமையும் சிறிய இரவால் அழிகின்றது.

வாய்திறந்து கேளாமல் இருக்கும் வரைதான் மதிப்பு; கேட்டாய்! கெட்டாய். கெடுநிலை தெளிந்து படுதுயர் ஒழிக.

யாது உறினும் இரவு ஏறாதே என்றது என்ன துன்பங்கள் நேர்ந்தாலும் இரந்துபட நினையாதே என நினைவுறுத்தியது.

வறுமைத் துயரங்கள் வாட்டினாலும் பொறுமையோடு சகித்துக்கொள்; கூடுமானவரை முயன்று வாழ முனைந்து நில்; உயர்ந்த திருவாய் அது வரும்; அயர்ந்தும் இரவை மருவாதே.

---

268. என்று பிறர்பால் இரந்திடநீ ஏகினாய்
அன்றே இறந்தபடி ஆயினாய்-நன்றான
மானம் அழிந்துயிர் வாழ்தலினும் மாண்டொழிதல்
ஞானமே யன்றோ நவில். (அ)

இ. ள்.

பிறரிடம்போய் இரந்துகொள்ள என்று நினைத்தாயோ அன்றே நீ இறந்துபட்டாய்; சிறந்த மானம் அழிந்து உயிர் வாழ்தலினும் மாண்டுபோதல் நல்லது என்றவாறு.

தன் முயற்சியைக் கைவிட்டு அயலாரிடம் வாங்கிப் பிழைக்கலாம் என்று ஒருவன் கருதுவானாயின் அப்பொழுதே அவன் உயர்ந்த மனிதத்தன்மையை இழந்தவனாகின்றான்.

உழைத்தால் மானம் அழியாமல் இருந்து வாழலாம்; இரவில் எழுந்தால் அவமானமும் இளிவுகளும் பெருகி அழிதுயர் செய்யும். விழி திறந்து வழிநிலை தெளிக.

மானம் என்பது மேன்மையான ஆன்ம வுணர்ச்சி. தலைமையான உயிரின் நிலைமையாய் நிலவுவது. அந்த உயர்ந்த தன்மை இழிந்த இரவினால் அழிந்துபடும். ஈனமான வழிகளில் இறங்காது நிற்பதே மானம் ஆதலால் இளிவான இரவிற்கும் அதற்கும் இருளும் ஒளியும் போன்ற மாறுபாடு மருவியுளது.

மான அருங்கலம் நீக்கி இரவென்னும்
ஈன இளிவினால் வாழ்வேன்மன்—ஈனத்தால்
ஊட்டியக் கண்ணும் உறுதிசேர்ந் திவ்வுடம்பு
நீட்டித்து நிற்கும் எனின். (நாலடியார், 40)

கொடிய வறுமையிலும் யாதும் இரவாமல் உறுதி கொண்டிருந்த ஒரு மானி கூறிய படியிது. நிலையின்றி விரைந்து அழிந்து போகின்ற இந்த உடம்பைப் பேணுதற்காக நிலையான சிறந்த

மானத்தைக் கைவிட்டு நான் இரந்து வாழேன் என அப் பெருந்தகை உரைத்துள்ள இதனை ஈண்டு உணர்ந்து சிந்திக்க வேண்டும்.

உயர்ந்த மானத்தை அழித்து, நல்ல மதிப்பைக் கெடுத்து, உயிர் இருந்தும் செத்த பிணமாக மனிதனை யாசகம் நீசப்படுத்தி விடுதலால் இரந்தான் இறந்தான் என நேர்ந்தான்.

மாய்ந்தவர் மாய்ந்தவர் அல்லர்கள்; மாயாது
ஏந்திய கைகொடு இரந்தவர் எந்தாய்!
வீந்தவர் என்பவர் வீந்தவ ரேனும்
ஈந்தவர் அல்லது இருந்தவர் யாரே? (இராமா, வேள்வி, 30)

உயிருடையராயினும் கை ஏந்தி யாசித்தவர் செத்தவரே; உடல் மறைந்து இறந்து போயினும் கொடையாளிகளான வள்ளல்கள் என்றும் இறவாமல் உள்ளவரே என உணர்த்தியிருக்கும் இதன் கருத்தையும் வேகத்தையும் நுனித்து நோக்குக.

இரவால் பழி இழிவுகளும், ஈகையால் புகழ் உயர்வுகளும் உளவாகின்றன. கொடிய பழியில் விழுந்து அழியாமல் இனிய வழியில் ஒழுகி மனிதன் புனிதமாக வாழ வேண்டும்.

யாசகம் மானத்தை அழித்து விடுதலால் அந்த ஈனத்தைத் தொடாதே. உயிரினும் இனிய அதனை உரிமையுடன் பேணுவதே உணர்வின் பயனும். மானம் அழிய நேரின் மாண்டுபோ என்றது செத்தாலும் யாசகத்தைத் தீண்டாதே என வேண்டியவாறும்.

பொல்லா வறுமை புகினும் இரவின்கண்
செல்லாதான் சீமானே யாகுவான்—எல்லாம்
உடையன் எனினும் உதவான் இழிந்து
கடையனே யாவன் கழிந்து.

எவ் வகையும் இரவாதவன் செல்வச் சீமானே என்றது அவனது சீர்மை தெரிய வந்தது. ஈயாதான் இழிந்தான்; இரவாதான் உயர்ந்தான். விதி விலக்குகளை உணர்ந்து கதி நலம் காண்க.

படுதுயர மான பழியிரவில் வீழல்
அடுநரக மாகும் அது.

என்பதை நெடிது சிந்தித்து நெறியுடன் வாழ்க.

[illegible] உள்ளம் குலைய உறுதி நலனழிய
எள்ளல் இளிவெல்லாம் ஏறிவரத்—தள்ளரிய
மானம் அழிய வருமிரவை யாவரே
ஞானமுறக் கொள்வர் இசைந்து. (கூ)

இ. ள்.

உள்ளம் நிலை குலைய, உறுதி நலன் ஒழிய, இழிவுகள் பல விளைய, அரிய மானம் அழிய வருகின்ற இரவினை ஞானமுடைய மனிதர் யாண்டும் கொள்ளார் என்றவாறு.

இது இரவால் நேரும் இளிவு நிலைகளை உணர்த்துகின்றது.

பிறரிடம் ஏதேனும் பெற விரும்பி ஒருவன் அவரை நாடிச் செல்லுங்கால் அவன் உள்ளம் துடிக்கும்: "அவர் வீட்டில் இருப்பாரா? இருந்தாலும் கேட்டதைக் கொடுப்பாரா? இல்லை என்று சொல்லி விடுவாரா? அவ்வாறு தள்ளிவிடின் அது எவ்வளவு இளிவு! வேறு எவரிடம் செல்வது? யாது செய்வது?" என இவ்வாறு பல பல எண்ணி நெஞ்சம் நிலை குலைவன் ஆதலால் உள்ளம் குலைய என இரவலனது அல்லல் நிலை அறிய வந்தது.

ஊக்கம் உறுதி முதலிய ஆண்மைத் தன்மைகளும் மேன்மை நிலைகளும் எரிபட்ட பஞ்சு போல் இரவால் அழிபட்டு ஒழியும்; ஒழியவே இரவலன் எளிய பஞ்சையாய் இழி மகனாகின்றான்.

ஈயேன் றிரவெழுந்தான் எண்சாணும் ஓர்சாணாய்ப்
போயிழிந்து புன்மை புகும்.

என்றமையால் இரவின் இளிவான புலை நிலை எளிது தெளிவாம்.

நெடிய திருமாலும் மாவலியிடம் இரவினை நச்சி வந்தமையினாலேதான் சிறிய குறள் வடிவாய்க் குறுக நேர்ந்தார் என்பர்.

ஈசனும் மாயனும் இரவை எண்ணவே
கூசியோர் குறள்எனக் குன்ற நேர்ந்தனன்;
யாசகம் என்பதை யாவர் தீண்டினும்
நீசமே செய்திழி நிலையில் ஆழ்த்துமே.

உள்ளம் குலைந்து உடல் குன்றி இரந்து நின்ற வாமனன் மாவலியின் தாரை நீர் கைபட்டவுடனே வானுற வளர்ந்தான்,

கருதிய பொருள் மானம் அழியாமல் வந்தமையால் அம் மகிழ்ச்சியால் உயர்ந்தான்; அதிலிருந்துதான் தானம் தருபவர் நீர் வார்த்து உதவுவது என்னும் நிலைமை நேர்ந்தது.

இரவால் கருகி மறுகிய உயிர்ப் பதைப்பை நீக்கவே அந்த ஈகை நீர் வாகை செய்து வந்துள்ளது எனக் கவிகள் ஓகை செய்துள்ளனர்.

ஒளிமுகம் இழப்பவந்து உற்ற நாணம்மீக்
கிளர்தர இல்லெனக் கிளர்க்கும் மூர்ச்சனை
தெளிதர முகத்தினில் தெளித்தற்கு அன்றுகொல்
நளிபுனல் பொருளொடு நல்கு கின்றதே? (நைடதம்)

இல்லை என்று சொல்லி இரக்குங்கால் மனிதன் உயிர் துடித்து மூர்ச்சித்து விழுகின்றான்; அந்த மயக்கத்தை நீக்கி அவனுக்குத் தெளிச்சல் உண்டாக்கவே அருளுடையார் பொருளோடு நீரையும் தெளிக்கின்றார் என அதி வீர ராம பாண்டியன் இதில் குறித்திருக்கும் அழகைக் கூர்ந்து நோக்குக. இரவின் பரிதாபக் கொடுமையை எவ்வளவு விநோதமாக இது விளக்கி யுள்ளது!

இரவு மானக்கேடு ஆனதால் அதனை நினைத்தாலும் நல்ல உயிர்களும் உள்ளங்களும் பரிந்து பதைக்க நேர்கின்றன. யாரிடமும் யாண்டும் யாதும் இராதீர்கள் என மேலோர்கள் வேண்டி நிற்கின்றார்.

கரவாது உவந்து ஈயும் கண்ணன்னார் கண்ணும்
இரவாமை கோடி உறும். (குறள், 1061)

கரவாத திண்ணன்பிற் கண்ணன்னார் கண்ணும்
இரவாது வாழ்வதாம் வாழ்க்கை—இரவினை
உள்ளுங்கால் உள்ளம் உருகுமால் என்கொலோ
கொள்ளுங்கால் கொள்வார் குறிப்பு. (நாலடியார், 305)

கண்ணிற் சிறந்தார் தம்மிடத்தும் காழ்த்தமானம் கெடநாவால்
பண்ணற்குரிய அறம் குறித்தும் படர்ந்தொன்றிரவார் பெருமையினால்
எண்ணிற் சிறந்தார் முயற்சியினால் ஏலா உப்பில் வறுமபுற்கை
உண்ணற்கு அமைந்தது அமைந்ததென உவப்பர் ஏமகண்டனே.
(விநாயக புராணம்)

"கண்ணினும் இனியர் ஆகிக் கரவிலா உள்ளத் தோடும்
எண்ணியது அளிப்பார் கண்ணும் இரவச்சம் உறுவர்,"
(மெய்ஞ்ஞான விளக்கம்)

கண் அனைய இனிய உரிமையாளரிடத்தும் யாதும் இரக்கலாகாது என இவை உணர்த்தியுள்ளன.

இரவாமை கோடி உறும் என்ற அருமைத் திருவாக்கின் உட்குறிப்பை ஊன்றி உணர வேண்டும். மானம் அழியாமல், மரியாதை குன்றாமல், மேன்மை குறையாமல் மேவி நிற்றலால் அந்த ஆன்ம ஊதியங்களையெல்லாம் கோடி என்னும் ஒரு சொல்லால் குறிப்பித்தருளினார். அற்பத்தை நாடி இரவாது கைவிடின் அநேக கோடிகள் உனக்கு உறவாகியுள்ளன.

> உரவோர் என்கை இரவாது இருத்தல்.
> தோழனோடும் ஏழைமை பேசேல்.

யாசகம் கூடாது என ஒளவையார் இவ்வாறு குறித்திருக்கிறார்.

இரத்தலின் ஊஉங்கு இளிவரவில்லை. (முதுமொழிக்காஞ்சி)

இரவைப் போல் இளிவானது யாதும் இல்லை எனக் கூடலூர்க்கிழார் என்னும் சங்கப் புலவர் இங்ஙனம் உரைத்துள்ளார்.

நளன் அரசிழந்து வனம் போக நேர்ந்தபொழுது தனது தந்தையினுடைய அரண்மனையில் வந்திருக்கும்படி தமயந்தி வேண்டினாள். அப்போது அந்த அருமைத் திருமனைவியை நோக்கி அம்மன்னன் சொன்னது அடியில் வருவது.

> "சினக்கதிர்வேல் கண்மடவாய்! செல்வர்பால் சென்றுஈ
> எனக்கென்னும் இம்மாற்றம் கண்டாய்—தனக்குரிய
> தானம் அழித்துத் தருமத்தை வேர்பறித்து
> மானம் அடைப்பதோர் வாள்." (நளவெண்பா)

என்ன துன்பம் நேர்ந்தாலும் பிறரிடம் இரந்து வாழாமை மேயுயர்ந்த மனிதத் தன்மையாம் என்பதை இதனால் அறிந்து கொள்கின்றோம். அருமை பெருமைகளை இரவு அறவே அழித்து விடுதலின் அச்சிறுமையை அறிஞர் இங்ஙனம் அஞ்சியிருக்கின்றார். பழியை விலகி நல்வழியில் நட.

---

270. மானம் கெடுக்கும் மரபழிக்கும் மாண்பொழிக்கும்
ஊனம் பெருக்கி இளிவுறுத்தும்—தீன
மொழியென் றுரைக்கும் இழிநரகை யாண்டும்
மருவார் உரவோர் மருண்டு. (ம)

இ. ள்.

மானத்தைக் கெடுத்து மரபினை அழித்து மாட்சியை ஒழித்து ஊனத்தைப் பெருக்கி இளிவு பல செய்யும் இரவு என்னும்

கொடிய நரகினை அறிவுடையார் எவ்வழியும் யாதும் அணுகார்.

குலமாட்சியும் குணநலங்களும் தலைமையான நிலைமைகளும் இரவால் இழிவுறும் ஆதலால் மரபு, மாண்பு, மானங்கள் ஈண்டு எடுத்துக் காட்டப்பட்டன.

மானத்தை முதலில் குறித்தது உயர்வுக்கு உயிராதாரமாய் உள்ளத்தில் உறுதியுற்றிருக்கும் அதன் இயல்பு கருதி. மனத்தின் மாண்பாய் மனிதனை மகிமைப்படுத்தி வருதலால் அது மானம் என வந்தது.

இரவு இளிவு ஆனதால் அதில் இழிய நேரின் உயர்வான மானம் அழிய நேரும். அகத்திலிருந்து அது குடிபோனால் ஒழியப் புறத்தில் இரவலனாய் ஒருவன் வெளியேற முடியாது.

மானம் உடையவர் என்ன துயரம் நேர்ந்தாலும் எவ்வளவு ஊதியங்கள் வந்தாலும் ஈன நிலையில் இறங்கமாட்டார்.

"வானகம் கையுறினும் வேண்டார் விழுமியோர்
மானம் அழுங்க வரின்." (நாலடியார்)

என்றமையால் மானிகளுடைய அதிமேன்மையானபான்மை விளங்கும். சுவர்க்க போகம் வருவதாயினும் மானம் கெட அவர் இசையார் என்க. எவரையும் நிலை குலைத்துவிடும் வறுமைப் பேயும் அவரிடம் தலையடங்கி நிற்கும்.

"செல்வப் பெரும்புனல் மருங்கற வைகலும்
நல்கூர் கட்டழல் நலிந்து கையறுப்ப
மானம் வீடல் அஞ்சித் தானம்
தளராக் கொள்கையொடு சால்பகத் தடக்கிக்
கன்னி காமம் போல உள்ள
இன்மை உரையா இடுக்கணாளிர்." (பெருங்கதை, 4, 2)

வறுமைத் தீ வாட்டினும் மானிகள் பிறரிடம் தம் இல்லாமையைச் சொல்லார் என இது உரைத்திருத்தலறிக. உவமானமாய் வந்துள்ள கன்னி காமம் உன்னி உணர வுரியது.

ஈனம் பெருக்கி இளிவுறுத்தும் என்றது இரவால் நேரும் பழி தீமைகளைத் தெளிவுறுத்தி விழி துலக்கி நின்றது.

கோற்றொடி செல்வர்பால் குறையிரந்து நின்று
பற்றயின்று உயிர்சுமந் திருத்தல் ஈறிலா
ஆற்றலும் மானமும் அறிவும் கல்வியும்
மாற்றரும் சீர்த்தியும் மாற்றும் என்பவே. (நைடதம்)

அறிவு ஆண்மை ஆற்றல் கீர்த்தி முதலிய உயர்நலங்கள் எல்லாம் இரப்பால் இழிவுறும் என இதில் தெளிவுறுகின்றோம்.

பிறரிடம் ஒன்றை வேண்ட நேர்ந்த போது உள்ளம் உட்குகின்றது; உணர்வு தளர்கின்றது; உயிர் குலைகின்றது. நெருப்புக்கு அஞ்சினவன் போல் வறுமைக் கொடுமையால் மறுகிப் போய் அயலே செயலிழந்து வீழ்கின்றான் ஆதலால் மனிதனது இயல்பு இரப்பில் இவ்வளவு துயரம் அடைகின்றது.

"உரவுத்தகை மழுங்கித்தன் இடும்பையால் ஒருவனை
இரப்பவன் நெஞ்சம்போல் புல்என்று புறம்மாறிக்
கரப்பவன் நெஞ்சம்போல் மரம் எல்லாம் இலை கூம்ப."
(கலி, 120)

இராக் காலத்தில் மரங்கள் பொலிவிழந்து இலைகள் கூம்பியுள்ள நிலையை இவ்வாறு வருணித்திருக்கிறார். உரவுத்தகை = அறிவு நலம், மனவலி. மான மனம் இரவால் ஊனமுறுகின்றது.

"நலம்பாடு இன்றி நாண் துறந்து ஓரீஇ
இலம்பாடு அலைப்ப ஏற்குநர்." (திருவாரூர்நான்மணிமாலை,9)

"புறத்துத்தன் இன்மை நலிய அகத்துத்தன்
நன்ஞானம் நீக்கி நிறீஇ ஒருவனை
ஈயாய் எனக்கு என்று இரப்பானேல் அந்நிலையே
மாயானோ மாற்றி விடின்." (நாலடியார், 308)

இரப்பவர்க்கு உளவாகும் அவல நிலைகளை நூல்கள் இங்ஙனம் விளக்கியிருக்கின்றன. அறிவு நாணங்களை இழந்து பரிதாப நிலையில் இழிந்து இரந்து வருந்தாமல் ஒதுங்கி வாழுதல் நலம்.

இரவை நரகு என்றது கொடிய துன்ப நிலையமாயுள்ள அதன் நிலைமை கருதி. யாண்டும் இளி வரவுகளைக் காட்டிப், பழி துயரங்களை நீட்டி உயிரைப் பல வகையிலும் வாட்டி வதைக்கும் அதன் அருகே மறந்தும் போகலாகாது.

தன் சொந்த முயற்சியால் வாழ்வதே எந்த நாளும் நல்லது.

தெண்ணீர் அடுபுற்கை ஆயினும் தாள்தந்தது
உண்ணலின் ஊங்கினியது இல். (குறள், 1065)

ஒழுங்கான தனது உழைப்பினால் வந்தது கூழே ஆயினும் அது அமிழ்தம் ஆம் என்னும் இதன் உட்கருத்தை உணர வேண்டும். தாள்=முயற்சி. பிறரிடம் ஏற்பது பிழையாதலோடு பல நலங்களையும் பழுதாக்கி விடுகின்றது. அதனால் மேலோர் இரவைக் கீழாக வெறுத்திருக்கிறார்.

"மா க்ரத: கஸ்யஸ்வித்தனம்"

எவனுடைய பொருளையும் விரும்பாதே என ஈசாவாசிய உபநிடதமும் விதித்திருக்கிறது. இரவு வழி வருவது எவ்வழியும் இழிவே ஆதலால் அதனை ஒழிய விடுதல் நலம்.

"ஈ என்று நான் ஒருவர் இடம் நின்று கேளாத
இயல்பும், என்னிடம் ஒருவர் ஈது
இடு என்ற போதவர்க்கு இலைஎன்று சொல்லாமல்
இடுகின்ற திறமும்"

எனக்கு அருள வேண்டும் என இராமலிங்க அடிகள் இறைவனை நோக்கி இங்ஙனம் வேண்டியிருக்கிறார்.

உழைப்பது உயர்வு; இரப்பது இழிவு; கொடுப்பது நல்லது; கொள்வது தீது; அடுப்பதை உணர்ந்து ஆண்மையுடன் வாழ்க.

---

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

இரப்பு அல்லலும் சிறுமையும் உடையது.
இரவாமையே பெரிய தகைமையாம்.
இரந்தவன் உடனே இழிந்து படுகின்றான்.
எள்ளல் அடைகின்றான்.
உள்ளம் உடைந்து தொல்லையே காண்கின்றான்.
முயலாது இரத்தல் மயலான செயலாம்.
தா என்று கேட்டால் வா என்றது போம்.
இரந்தவன் இறந்தவனே யாவன்.
ஈன இரவால் மானம் அழியும்.
இழிவான அதனை யாதும் அணுகலாகாது.

உ௯ வது இரப்பு முற்றிற்று.

---

# இருபத்தெட்டாம் அதிகாரம்

## தன்னம்பிக்கை.

அஃதாவது தனது உண்மை நிலையை உணர்ந்து மனிதன உறுதி கொள்ளுதல். பிறர்பால் இழிந்து நில்லாமலும் எவரிடமும் இரந்துகொள்ளாமலும் தன் சொந்த முயற்சியினாலேயே ஒவ்வொரு மனிதனும் உயர்ந்துகொள்ளவேண்டும் என உணர்த்துகின்றமையால் இரப்பினை அடுத்து இது வைக்கப்பட்டது.

271. உற்ற உனையே உறுதியாய் நம்பிநிற்க
மற்றவரை நம்பி மருளற்க—மற்றவரைச்
சார்ந்துநீ வாழத் தலைப்பட்டாய் அப்பொழுதே
வீழ்ந்தாய் இழிவில் விரைந்து. (க)

இ-ள்.

உன்னையே உறுதியாக நம்பி உயர்ந்துகொள்ளுக; பிறரை உரிமையாக எண்ணி மருளாதே; அயலாரைச் சார்ந்து வாழலாம் என்று தலைப்படின் அப்பொழுதே நீ இழிநிலையில் வீழ்ந்து உழல நேர்ந்தாய் என்றவாறு.

இது, மேன்மை மேவிவரும் பான்மை கூறுகின்றது.

உலக வாழ்க்கையில் மனிதர் பலவகையாகப் பரந்து விரிந்துள்ளனர். அவரவருடைய வாசனையின்படியே யோசனைகளும் செயல்களும் தொடர்ந்து நடந்து வருகின்றன. ஒவ்வொரு மனிதனும் தனக்கு இதத்தை நாடியே தவித்து உழல்கின்றான். தன் அளவில் கருத்தூன்றி நிற்றல்போல் அன்னியத்தில் அவன் அவ்வளவு செவ்வையாய் அவாவி நில்லான்.

இந்த இயல்பு குலையாத நிலையில் சமுதாயம் சமூகமாய் ஓங்கநேர்கின்றது. தன்னலங் கருதியே மனித மரபு தழைத்து வருகின்றது. அத் தழைவில் விழைவு மீறி விளைகின்றது.

எவரினும் யாவினும் தன் உயிரே தனக்கு உரிமை மிக உடையது ஆதலால் உற்ற என வந்தது. ஆன்மாவாயுள்ள அரிய மனிதனுடைய மேவியுள்ள மேன்மையை விளக்கி [illegible] உணர்த்தியது. உற்றது உயர்வாய் உய்தி அருளுகின்றது.

தான் முயன்ற பொழுதுதான் தன்னுடைய ஆற்றல்கள் வளர்ந்து வருகின்றன. அயர்ந்து நின்றால் அவை ஒழிந்து போகின்றன. ஒழியவே இழிவு நிலைகள் வெளி எழுகின்றன, அயலை நாட வழி புரிகின்றன.

பிறரை எதிர்பார்ப்பதில் தன் இயல்வலியும் உயர் மதிப்பும் இழிவுறுதலால் அது வழு என நேர்ந்தது. மருள்ல் = மயங்கல். வியங்கோளின் தலைமையான ககர விகுதி அவனுடைய நிலைமையின் வியனையும் நயனையும் விழைந்து காண வந்தது.

பொருள் வரும் என்று கருதி இருள்வழியில் இறங்காதே; உன் இயல்பான தகுதியில் தெருளுடையனாய்ப் பொருள்செய்து கொள்க. அதுவே எவ்வழியும் உயர்வாய் இனிமை அருளும்.

தான் ஆக முயன்று வாழ்பவன் தன் வேர் நேரே நிலத்தில் ஊன்றிய கனிமரம் போல் தழைத்துச் செழித்து நிலைத்து நிற்கின்றான்; ஒட்டி வாழப் புக்கவன் சட்டி தொட்டிகளில் வைத்து நீர் வார்க்கும் ஒட்டுச் செடிபோல் உள் அழிந்துள்ளான்.

ஆள்வந்து நீர் விட்டால் உண்டு; இல்லையாயின் அது பட்டுப் போம்; பிறர் உவந்து இதம்புரியும் அளவே வாழ்வு; அன்றேல் வீழ்வாம். தட்டழிந்த அந்த வாழ்வில் மனிதன் பட்டழியலாகாது; அதனை விட்டொழிக்க வேண்டும்.

அயலாரை ஒருவன் சார்ந்து வாழ நேர்ந்தால் அவனது இயல்பான வன்மைகளும் தன்மைகளும் புன்மையடைய நேர்கின்றன. நேரவே நன்மைகளும் பேர்கின்றன.

அன்னியரை நச்சி நின்றால் தன்னுடைய உச்ச நிலை குன்றி உறுதி நலங்களும் குறையும் ஆதலால் "அப்பொழுதே வீழ்ந்தாய்!" என அவ் வீழ்ச்சி விளக்கிக் காட்டப்பட்டது. உன் காலால் நட; பிறருடைய ஒக்கல் பிள்ளையாய்ப் பக்கம் சாராதே.

உன்னுள் இருக்கும் ஒளியை விழிதிறந்து
பன்னி நீ பாராமல் பாழ்பட்டாய்—அன்னியத்தை
நச்சி யுழலும் வரையும் நலனுன்னைக்
கச்சி யழலும் கலுழ்ந்து.

272. எல்லாம் உடைய இறைவன்றன் பிள்ளைநீ
பொல்லா உலகம் புகுந்துள்ளாய்—இல்லான்என்று
எண்ணி இனையல் இனிது முயன்றெழுக
விண்ணும் விழையும் வியந்து. (உ)

இ-ள்.

யாவும் தனக்கு என்றும் உரிமையாகவுள்ள இறைவனுடைய இனிய மகனாய் நீ உலகில் வந்துள்ளாய்; கையில் யாதும் இல்லையே என்று கருதி வருந்தாதே; உறுதியுடன் முயன்று ஊக்கி எழுக; தேவரும் உன்னை வியந்து நோக்கி விழைந்து கொள்வர்.

இது, மனிதனது உண்மை நிலையை உணர்த்துகின்றது.

படைப்பில் எல்லாப்பொருள்களையும் இயற்கை உரிமையாக் கொண்டு தனிமுதல் தலைவனாய் நிலவி நிற்றலால் இறைவன் எல்லாம் உடையான் என வந்து நின்றான்.

அருந்தலைமை உடையவனுக்கு உத்தமப் பிள்ளையாய் நீ உதித்திருக் கின்றாய் என்றது மனிதனது தத்துவத்தை உய்த்துணர வந்தது.

பரமான்மாவாகிய சோதிச் சுடர்ப் பிழம்பிலிருந்து தெறித்து வந்த ஒரு சிறு பொறியே சீவான்மாவாய்ச் சொலித்து நிற்கின்றது. அவனே நீ அவனே நான் என்றபடி கடவுளும் மனிதனும் அநாதியாகவே தொடர்பமைந்துள்ளனர். பழியான புலன் வழிகளில் இழியாமல் மனிதன் புனிதனாய் நின்றால் அவன் தனியான தெய்வத் தேசுடன் சிறந்து திகழ்கின்றான். தன்னை மறந்து நின்ற அளவே அவன் பிறந்து இறந்து உழல்கின்றான். உண்மை தெளிந்தான், முத்தி அடைந்தான்.

இயல்பாகவே தெய்வ சம்பத்துடைய மனிதன் உலக மையலில் அழுந்தி நிலை மயங்கினான். பழம் பெருமை இங்ஙனம் வளம் பொதிந்திருப்பினும் உற்ற பிறப்புக்குத் தக்கபடி உறுதி நலனை உளம் பொதிந்து கொள்ள வேண்டும்.

"இல்லான் என்று எண்ணி இனையல்" என்றது கையில் யாதும் இல்லையே என்று கருதி வருந்தாதே; எல்லாம் உடையவனுடைய சந்ததி என்பதைச் சிந்தனை செய்து உறுதியுடன் முயல்க என ஊக்கியவாறு. இனைதல் = வருந்தல், கவலல்.

உலகப் பொருள்கள் யாவும் மனிதனது உடைமைகள்; அவன் கருதி முயன்ற அளவு அவை உரிமையாய் மருவி வருகின்றன. முயலாவழி அவை அயலாகின்றன.

நீ உயர்ந்த மனிதனுய் பிறந்திருக்கின்றாய்; எல்லா ஆற்றல் களும் உன்பால் நிறைந்திருக்கின்றன; எந்த நிலையிலும் யாதும் கவலாமல் கருமம் புரிந்து வருக; அரிய மேன்மைகள் யாவும் விரைந்து பெருகும். வினை விளைவை நினைந்து செய்க.

"விண்ணும் வியந்து விழையும்" என்றது தனது சுய முயற்சியால் உயர்ந்தவனை இயல்பாகவே உயர்ந்துள்ளவர் உவந்து கொள்ளும் உரிமை உணர வந்தது

விண்ணும் வியக்கும் என்றதனால் மண்ணின் வியப்பும் மதிப்பும் விளக்கப்பட்டன.

தேவர்களும் வியந்து புகழும் படியான உயர்ந்த மகிமைகள் மனிதனிடம் மறைந்திருக்கின்றன. இவ் வுண்மையை உணர்ந்து தன் தன்மையை அவன் தெளிந்து கொள்ளின் நன்மைகள் பல உளவாம். பின்பு புன்மைகள் புகா; புனிதங்கள் புகும்.

இல்லை என்று சொல்லி யாண்டும் தளராதே; எல்லாப் பாக்கியங்களும் உன்னை நோக்கி நிற்கின்றன; ஊக்கி உயர்ந்து அவற்றை உரிமை செய்து கொள்க.

---

273. உலகமெலாம் ஆளும் உயர்தலைமை உன்னுள்
உலவா துறைந்துள் உளதால்—புலனூரன்றி
உன்னைநீ உண்மையா ஓர்ந்துணரின் யாதுமே
பின்னைநீ செய்யாய் பிழை. (௩)

இ-ள்.

உலகம் முழுவதையும் ஆளும்படியான தலைமைத் தன்மை உன்பால் நிலையாக உறைந்துள்ளது; உன்னை உண்மையாக ஓர்ந்து நீ உணர்ந்து கொண்டால் பின்பு யாண்டும் இழியாது உயர்ந்து திகழ்வாய் என்றவாறு.

அரிய செல்வங்கள் யாவும் அடைய உரியனாய் மனிதன் இனிதமைந்துள்ளான் என்பதை முன்னம் கண்டோம்; மன்னர் மன்னவனாய் அவன் மன்னி வீற்றிருக்கவும், எண்ணியதை ஆற்றவும் இயைந்தவன் என்பதை இங்கே காண்கின்றோம்.

274. மற்றவர் ஏவ மனமழிந்து வாழ்வதினும்
உற்ற ஒருதொழிலை ஓம்பியே—பெற்ற
பிறப்பின் பெருமை பிழையா தொழுகின்
சிறப்பின் படையும் சிறந்து. (௪)

இ-ள்.

பிறர் ஏவல் கேட்டு மனம் மழுங்கி வாழ்வதினும் சொந்தமாக ஒரு தொழிலைக் கைக்கொண்டு நெறிமுறை வாழ்வதே நல்லது; அதனால் உயர்ந்த நன்மைகள் பல நிறைந்து வரும் என்க.

இது தலைமையான வாழ்வின் நிலைமை கூறுகின்றது.

மனிதன் பெருமையை விரும்புகின்றான்; சிறுமையை வெறுக்கின்றான். யாரும் யாண்டும் மேன்மையான நிலைமையையே வேண்டிவருதலால் சீவனது இயல்பான சுபாவம் வெளியாகின்றது. உயர்வுடையது அயர்வடையினும் உயர்வையே நாடுகின்றது.

ஒருவன் சுயமதிப்புடன் வாழவேண்டுமாயின் அதற்குரிய தொழிலையும் துறையையும் முதலில் நன்கு கவனித்துக்கொள்ள வேண்டும். சாதனங்கள் ஆதனங்கள் ஆகின்றன.

பிறருடைய ஏவலைக்கேட்டு நடப்பது அடிமைத்தனமாம்; அதில் ஆண்மை குலையும்; மதிப்பு மறையும்; மாண்பு குறையும்; உள்ளத் தெளிவும் உணர்வும் ஒழியும்; முனை மழுங்கிய வாள் போல் மனம் மழுங்கவே மதியின் கூர்மையும் நீர்மையும் குன்றுகின்றன; குன்றவே மனிதன் சீர்மையும் நேர்மையும் இன்றிச் சிதைந்து படுகின்றான்.

இங்ஙனம் அருமை குலைந்து சிறுமை பல அடைந்து சீரழிதலால் மற்றவர் ஏவ வாழ்வது குற்றம் என நேர்ந்தது.

ஓவா வறுமை உழந்தாலும் மற்றொருவர்
ஏவாது உயிர்வாழ்ந் திருத்தலே நன்றாகும்;
தாவாத செல்வம தருமேனும் குற்றேவல்
ஆவா கொடிது கொடிது என்பாரும் ஆயினார்.

(சீகாளத்திப்புராணம்)

ஆ! ஆ! என்றது இரக்கக் குறிப்பு. மானம் குன்றி மனம் மறுக நேர்கின்ற ஊனம் கருதி இங்ஙனம் இது உருகி யுரைத்துள்ளது. ஏவல்வாழ்வு ஈனம்; அதனை விலகி மானமுடன் வாழ்க.